91-2

# தைத்திரீய உபநிஷத்தின் மூலமந்திரங்களின் வரிசைப்படி விஷயங்களைக் காட்டும்

# அட்டவணை.






## I. சிக்ஷாவல்லி.

### கர்ம உபாசனைகளாகிற பஹிரங்க சாதனங்கள்.

## II. பிரம்மவல்லி.



## I. சிரவணப்பிரகரணம்.

## II. மன்னப்பிரகரணம்

## III. பிருகுவல்லி.

### விசாரரூப அந்தரங்கசாதனம்.

## IV. நாராயணவல்லி.



## 2. பிரம்மவித்தியாசாதனங்கள்.

பக்கம்.

12 காயத்திரி மந்திரங்களால் பலதேவதைகளின் பிரார்த்தனை.



3. ஸ்நாநாங்க மந்திரங்கள்.

## 4. இதரகர்ம மந்திரங்கள்.

## 4. போஜனப் பிரகரணம் (738-748)



## 5. சன்னியாசப் பிரகரணம்

# முகவுரை.

கிரமப்பிராப்தமான தைத்திரீய உபநிஷத்து இப்போது மொழி பெயர்க்கப்படுகின்றது.

இந்தப்பிரதேசங்களில் விசேஷப் பிரசித்தியை அடைந்திருக்கும் உபநிஷத்து இதுவே. இதைத்தான் பிராமணர்களுக்குள், வெகு பேர்கள் அத்தியயனம் செய்திருக்கிறார்கள். சுவரத்துடன் அத்தியயனம் செய்யத்தக்க உபநிஷத்துகளே வெகு ஸ்வல்பம். அவைகளுக்குள் இது ஒன்று. அந்த ஸ்வரம் இந்த கிரந்தத்திலும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இந்த உபநிஷத்தின் பெயர் தித்திரீ என்னும் ரிஷியின் பெயரினின்றும் கிடைத்தது. வேதவியாச ருடைய சிஷ்யரான வைசம்பாயன ரிஷியிடம் யாஞ்ஞவல்கியர் முதலான ரிஷிகள் வித்தியார்த்திகளாய் யஜுர்வேதத்தைப் படனம் செய்தார்கள். அப்போது ஏதோ ஒருகாரணத்தால் வைசம்பாயனருக்கு பிரம்மஹத்திதோஷம் கிடைத்தது. அதை நிவர்த்திக்கும் பொருட்டு வைசம்பாயனர் யாஞ்ஞவல்கியரை விட வேறும் வாலிபராயிருந்த ஒரு வித்தியார்த்திக்கு சில நியமங்களை ஆசரிக்கும்படி உபதேசம் செய்தார். அப்போது உத்தமாதிகாரியாயும் வயது சென்றவராயு மிருக்கிறயாஞ்ஞவல்கியர் வைசம்பாயனரைப் பார்த்து சுவாமியே இந்த வாலிபனால் உங்களுடைய கடின நியமத்தை ஆசரிக்க முடியாது ; நான் திருட சரீரமுள்ளவனாயிருக்கிறேன். அந்த நியமத்தை நானும் ஆசரிக்கும்படி உத்தரவு கொடுக்கவேண்டும் என்று சொன்னார். இதைக்கேட்டு பிரம்மஹத்தி தோஷத்தால் விபரீத புத்தி அடைந்த வைசம்பாயனர் யாஞ்வல்கியரைப்பார்த்து ஓய் யாஞ்ஞவல்கியரே, நீர் அத்தியந்தம் கர்விஷ்டரா யிருக்கிறீர். இந்தப் பிராமண வாலிபனைத்திரஸ்காரம் செய்கிறீர். ஆகையால் என்னிடத்தில் கற்றவித்தையை கக்கிவிடும், இல்லாவிடின் நீர் உடனே மரிக்கும்படி சாபம் கொடுப்பேன் என்றுசொன்னார். அப்போது யாஞ்ஞவல்கியர் சாபத்துக்குப் பயந்து அத்தியயனம் செய்த வித்தையை யோகபலத்தால் கக்கிவிட்டார். அப்படி கக்கப்பட்ட வித்தையை வேறு ஒரு பிராமண

வாலிபன் குருவின் ஆஞ்ஞைப்படி தித்திரீ (மணிப்புறு) என்கிறபக்ஷி ஸ்வரூபத்தைத்தரித்துக் கிரகித்துவிட்டான். ஆகையால் இந்த வித்தைக்கு தைத்திரீயம் என்று பெயர் கிடைத்தது. இதைக் கிரகித்தவர்கள் தைத்திரீய சாகைக்காரர்கள் எனப்படுகிறார்கள். இந்த சாகையின் உபநிஷத்தும் தைத்திரீயம் எனப்படுகிறது.

இந்த தைத்திரீயம் கிருஷ்ணயஜுர்வேதத்தைச் சேர்ந்தது. இந்த உபநிஷத்து தைத்திரீய ஆரண்ணியகத்தில் அடங்கினது. இந்த ஆரண்ணியகம் 10-பிரபாடகங்கள் என்கிற அத்தியாயங்களுள்ளது. முதலாறு பிரபாடகங்கள் கர்மகாண்டத்தைச் சேர்ந்தன. 7-வது 8-வது 9-வது பிரபாடகங்கள் ஞானகாண்டத்தைச்சேர்ந்த உபநிஷத்து பாகமாகின்றன. 10-வது பிரபாடகம் खिल விஒ என்று சொல்லப்பட்ட உபநிஷத்து ரூபமாயிருக்கிறது. அதாவது கர்மகாண்டம், உபாசனகாண்டம், ஞானகாண்டம் இவைகளில் சொல்லப்படாததை எது சொல்லுகிறதோ அது கிலம் எனப்படும். சிலர் இந்த கடைசியான பாகத்தை இந்த உபநிஷத்துடன் சேர்க்கக்கூடாது என்கிறார்கள். அதை நாம் ஒப்புக்கொள்ளவில்லை.

பிருஹதாரணியகத்தில் 7-வது 8-வது அத்தியாயங்கள் खिल விஒ காண்டமாயிருப்பதால் ஆசாரிய ரவர்களால் வியாக்கியானம் செய்யப்பட்டன.

பிரஹதாரண்யகத்தில் 7-வது அத்தியாயத்தில் पूर्णमदः पूर्णमिद பூர்ணமத: பூர்ணமிதம் முதலியதால் பிரம்மதத்துவம் சொல்லப்பட்டது.

ॐ खंब्रह्म ஓம் கம் ப்ரஹ்ம முதலிய வாக்கியங்களாலும் 8-வது அத்தியாயத்திலுள்ள योहवैज्येष्ठंचश्रेष्ठंचवेद யோ ஹவை ஜ்யேஷ்டம் ச ச்ரேஷ்டம் ச வேத முதலிய வாக்கியங்களாலும் அநேகவித உபாசனைகள் கூறப்பட்டன.

सयः कामयेतमहत्प्राप्नुयात् ஸ ய: காமயேத மஹத் ப்ராப்நுயாத் முதலியதால் மந்தா என்கிற கர்மம் கூறப்பட்டது. அப்படி புத்திராதிகளை இச்சிக்கிரவர்களுக்குக் கர்மங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. அப்படியே இந்த கடைசியான அத்தியாயத்திலும்

(1) अम्भस्यपारे அம்பஸ்யபாரே முதலியதால் பிரம்மதத்துவம் சொல்லப்படுகிறது.

(2) आदित्योवा एष एतन्मण्डलम् ஆதித்யோவா ஏஷ ஏதந்மண்டலம் முதலியதால் உபாசனை சொல்லப்படுகிறது.

(3) भूरन्नमग्नये पृथिव्यै स्वाहा பூரன்னமக்னயே ப்ருதிவ்யை ஸ்வாஹா முதலியதால் கர்மங்கள் கூறப்படுகின்றன.

முதலில் பிரம்மதத்துவத்தைச் சொல்லுவதினாலும் கடைசியில் பிரம்மஞான சாதனங்களான சத்தியம் முதல் சன்னியாசம் வரையிலுள்ளவைகளைச் சொல்லுவதாலும் இது கில என்ற உபநிஷத்து ரூபமாக இருக்கிறது. பிரஹதாரணியகத்தின் 7-வது 8-வது அத்தியாயங்கள் கிலரூபமாயிருந்து உபநிஷத்து பாகத்துடன் சேர்க்கப்பட்டிருப்பதுபோல் தைத்திரிய ஆரணியகத்தின் 10-வது அத்தியாயமும் கில ரூபமாயிருப்பதால் இதை உபநிஷத்து பாகத்துடன் சேர்ப்பதில் தோஷமில்லை. இதற்கு ஸ்ரீசங்கராசாரியர் அவர்கள் பாஷ்யம் எழுதவில்லை என்கிற காரணத்தைக்கொண்டு இதை உபநிஷத்துபாகத்துடன் சேர்க்கக் கூடாது என்று சொல்லுவது உசிதமன்று. இதில் கர்மப் பிரதிபாதகமந்திரங்கள் விசேஷமாயிருப்பதால் அவர்கள் விட்டிருந்தாலும் விட்டிருக்கலாம். அல்லது வேறு காரணத்தால் விட்டிருந்தாலும்விட்டிருக்கலாம். அவர்கள் விட்டதைக் கொண்டு நாமும் விட்டுவிடுகிறது சரியன்று. மேலும் ஸ்ரீவித்தியாரண்ய சுவாமிகள் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். மேலும் ஸ்ரீசங்கராசாரியர் அவர்களே உபநிஷத்தாக ஒப்புக்கொண்டிருக்கிற முதலாவது அத்தியாயத்தில் (1) தேவதைகளால் ஏற்படக் கூடிய விக்கினநாசத்துக்கு பிரார்த்தனை (2) பிரஜை, பசு, அன்னம், கீர்த்தி, ஸ்வர்க்கம் முதலியவைகளை அடைய பிரார்த்தனை (3) கற்ற வித்தை மறக்காமலிருக்கும்படி புத்திகொடுக்கும்படி பிரார்த்தனை (4) ரோகாதிகள் நீங்கப் பிரார்த்தனை, (5) பிரம்மோபாஸனை, (6) சமதம சத்தியாதி குணங்களின் சேர்க்கை இவை முதலியவைகள் சொல்லியிருப்பதுபோல் 4-வது அத்தியாயத்திலும் இவைகளே சொல்லி யிருப்பதாலும், இரண்டாவது அத்தியாயத்தில் சொல்லிய பிரம்மஞானமும் மூன்றுவது அத்தியாயத்தில் சொல்லிய இதிஹாசமும் 4-வது அத்தியாயத்திலும் சொல்லியிருப்பதாலும், முதல் மூன்று அத்தியாயங்கள் போலவே 4-வது அத்தியாயமு மிருப்பதால் இதைத் தள்ளிவிடுவது யுக்தமல்ல. மேலும் கர்மமந்திரங்களின் விஷயங்களைக் கவனித்துப் பார்க்கும்போது (1)-ஸ்நானம் (2) விபூதி கோபிசந்தன தாரணம் (3) ஸந்தியாவந்தனம் (4) ஜபம் (5)

சூரிய நமஸ்காரம் (6) ருத்திரம் (7) புருஷசூக்தம் (8) ஔபாச
னம் (9) பூஜை (10) வைசுவதேவம் (11) போஜனவிதி (12) சிரா
வணம் முதலியவைதிககர்மங்கள் இவைகளில் உபயோகப்படும்மந்
திரங்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. கேவலம் பிரம்மதத்து
வத்தையும் அதின் சாதகங்களையும் போதிக்கும் மந்திரங்கள் மட்
டும் ஸ்வல்பமா யிருந்தாலும் ஸ்னான சந்தியாவந்தனாதி நித்தியகர்
மங்களில் உபயோகப்படும் மந்திரங்களின் அர்த்தம் தெரிந்துகொ
ள்ளவேண்டியது அவசியமாயிருப்பதாலும் இந்த உபநிடத்திலடங்
கிய 262 மந்திரங்களுக்குள் 217 மந்திரங்களின் விநியோகம் தெ
ரியவருவதாலும் இந்த உபநிஷத்தை வெகு பெயர்கள் அத்தியயனம்
செய்திருப்பதாலும், இவைகளை விட்டுவிடுவதினால் பாராயணக் கிர
மத்துக்குக் குறைவுவருகிறதாயிருப்பதாலும் இந்த வல்லிமுழுமை
யும் இந்த மொழிபெயர்ப்பில் சேர்த்து கொள்ளப்பட்டிருக்கிறது.
ஆகவே இந்த உபநிஷத்து நான்கு அத்தியாயங்களுள்ளது என்று
ஏற்படுகிறது.

## அத்தியாயங்களின் பெயர்கள்.

பிரம்மஞான உபதேசத்தைப் பெற்றுக்கொள்வதற்கு சிஷ்
யன் எந்த யோக்கியதையைச் சம்பாதித்துக்கொள்ள வேண்டியதோ
அவ்விஷயத்தில் அவன் முதலில் சிக்ஷிக்கப்படுவதால் முதலாவது
அத்தியாயத்திற்கு சிக்ஷாவல்லி என்று பெயர்வந்தது. இந்த அத்
தியாயத்தின் இரண்டாவது அனுவாகத்தால் இந்த பெயர் தெரிய
வருகிறது. வேதாத்தியயனம், வேதவிஹித கர்மானுஷ்டானம், சத்
தியாதிதர்மாநுஷ்டானம், இவைகள் சிஷ்யனுக்கு அவசியம் வேண்
டியவைகளானதால் இவைகள் முதலில் உபதேசிக்கப்படுகின்றன.
இந்த அத்தியாயங்களுக்கு வல்லிகள் என்றும்பெயர்.

இவைகளைப் பெற்றுக்கொண்டவன் தான் இரண்டாவது வல்
லியில் செய்யப்படும் உபதேசத்தைப் பெற்றுக்கொள்ள சமர்த்த
னாகிறான். இந்த வல்லியின் ஆரம்பத்தில் பிரம்மம் என்கிறபதம் உப
யோகிக்கப்பட்டிருக்கிறது. ஆநந்த ஸ்வரூபம் இதில் விவரிக்கப்படு
கிறது. ஆகையால் இந்த வல்லியை பிரம்மவல்லி என்று சிலரும்
ஆநந்தவல்லி என்று சிலரும் பிரம்மாநந்தவல்லி என்று வேறு சில
ரும் சொல்லுகிறார்கள்.

மூன்றாவது வல்லியின் ஆரம்பத்தில் பிருகு என்னும்பதம் உப
யோகிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மவித்தியாவிஷயமாய் பிருகுவுக்கு

வருணனால் செய்யப்பட்ட உபதேசம் இந்த வல்லியில் கொடுக்கப் பட்டிருக்கிறது. ஆகையால் இந்தபாகத்துக்கு பிருகுவல்லி என்று பெயர் கிடைத்தது.

நான்காவது வல்லிக்கு நாராயண வல்லி என்று பெயர். நாராயணன் என்ற ஈசுவரனால் அல்லது முனியால் இந்த வல்லியிலுள்ள மந்திரங்கள் பார்க்கப்பட்டவைகளானதால் இப்பெயர் கிடைத்தது என்று ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகள் இந்தவல்லியின் 2-வது அனுவாகத்தின்வியாக்கியானத்தில்சொல்லுகிறார்கள். இந்த ஒருவல்லியிலேயே முன் சொன்ன மூன்று அம்சங்களும் அதாவது (1) பிரம்ம ஞானோபதேசம் (2) அதற்குப் பூர்வாங்கம் (3) இதிஹாசம் ஆகிய மூன்று அம்சங்களும் அடங்கியிருக்கின்றன.

ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகள் இந்த உபநிஷத்தை சாம்ஹிதீ என்றும், வாருணீ என்றும், யாஞ்ஞிகீ என்றும் பிரித்திருக்கிறார். 7-வது பிரபாடகத்தில் சம்ஹிதாத்தியாயம் சொல்லப்பட்டிருப்பதால் முதலாவது பாகம் சாம்ஹிதி எனகிற பெயரை அடைந்தது. இந்தபாகத்தையே அவர் சீக்ஷோபநிஷத்து என்றும் சொல்லுகிறார். 8-வது 9-வது பிரபாடகங்களில் பிரம்மவித்தை சொல்லப்பட்டிருக்கிறது. இதின் சம்பிரதாயப்பிரவர்த்தகர் வருணன், ஆனதால் இந்த இரண்டு பிரபாடகங்களும் வாருணி என்ற பெயரை அடைந்தன. கடைசியான 10-வது பிரபாடகம் யாஞ்ஞிகீ என்கிற பெயரை அடைந்த காரணமென்னவெனின், இதில் கர்மங்களில் உபயோகப் படும்படியான மந்திரங்கள் விசேஷமாய்க் கூறப்பட்டிருக்கின்றன.

இந்த மூன்று பிரிவுகளிலும் வாருணீ என்பதுதான் முக்கியம். ஏனெனின், பிரம்மத்தை அடைய சாக்ஷாத்சாதகமான பிரம்மவித்தை இதில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

வாருணிபாகம் முக்கியமானால் அதையே முதலில் படிக்க வேண்டுமென்று சொல்லக்கூடாது. ஏனெனின், அதைப்படிக்க அதிகாரம் சித்திக்கும்பொருட்டு சம்ஹிதையை முதலில் படிக்க வேண்டியது. ஞானத்தைத் தேடுகிறவனுக்குத்தான் வித்தையில் அதிகாரம் ஏற்படுமானதாலும், இந்த வித்தையில் இச்சையானது கர்மத்தால் உண்டானாலும், சித்தமானது ஏகாக்கிரியத்தை கர்மங்களால் அடையமாட்டாது. பின்னேயோவெனின் பிரவிர்த்திகள் வெகுவாயிருப்பதினால் விக்ஷேபமே அடிக்கடி சம்பவிக்கும். दृश्यतेत्वग्र्यया बुद्ध्या

सूक्ष्मयासूक्ष्मदर्शिभिः த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்த்யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மதர்ஶிபி: என்கிறகடோபநிஷத்தின் III-12-வது மந்திரத்தில்சாக்ஷாத்காரத்துக்குஏகாக்கிரசித்தம்வேண்டியதுஎன்றுசொல்லியிருக்கிறது இந்த ஐகாக்கிரியம் தியானஅப்பியாசத்தால்சித்திக்கிறது. ஆகையாலேயே பதஞ்சலி பகவான், யோகஸ்வரூபம் योगश्चित्तवृत्तिनिरोधः யோகஶ்சித்தவ்ருத்திநிரோத: என்கிற I-வது சூத்திரத்தில் சித்தத்தினுடைய விருத்திகளைத் தடுத்தல் என்றும் அதின் சாதனம் अभ्यासवैराग्याभ्यां तन्निरोधः அப்யாஸவைராக்யாப்யாம் தந்நிரோத: என்கிற I-12-வது சூத்திரத்தில் அப்பியாசமும் வைராக்கியமும் என்றும் சொல்லியிருக்கிறார். ஆகையால் தியானத்தின் அப்பியாசத்தின்பொருட்டு சம்ஹிதாபாகம் முதலில் கூறினது யுக்தமே.

## அநுவாகங்கள்.

இந்த நான்கு வல்லிகளிலும் அநுவாகங்கள் என்கிறபிரிவினை ஏற்பட்டிருக்கிறது. அவைகளின் சங்கியை அடியிற் கொடுக்கப்பட்டிருக்கிறது.

| வல்லி. | அத்வைதப்படி. | விசிஷ்டாத்வைதப் படி. | துவைதப்படி. | |
|---|---|---|---|---|
| | | | பூறு. | கண்டார்த்தம். |
| 1. சிக்ஷாவல்லி. | 12 | 12 | 12 | 24 |
| 2. பிரம்மவல்லி. | 9 (வி:—2) | 9 | 9 | 22 |
| 3. பிருகுவல்லி. | 10 (வி:—1) | 10 | 10 | 11 |
| 4. நாராயணவல்லி | 80 | 52 | 80 | தெரியவில்லை. |

அச்சிடப்பட்ட துவைத கிரந்தங்களினால் அநுவாக சங்கியை நிச்சயமாகத் தெரியவில்லை, பூறு புஸ்தகத்தில் ஒருவிதமாயும் கண்டார்த்தத்தில் ஒருவிதமாயும் இலக்கம் ஏற்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் இரண்டும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

சிக்ஷாவல்லியில் 12 அநுவாகங்கள் அடங்கியிருப்பதாக எல்லாரும் ஒப்புக்கொண்டிருப்பதுபோல் வித்தியாரணியசுவாமிகளும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். பிரம்மவல்லியில் சாந்தி மந்திரத்தை முதலாவது அநுவாகமாகவும் பாக்கியான கிரந்த முழுமையையும்

இரண்டாவது அனுவாகமாகவும் அவர் ஒப்புக்கொண்டிருக்கிறார். இதற்குக்காரணம் அவர் சொல்லுவது யாதெனின் :—

சிலர் இந்த வல்லியை 9-அனுவாகங்களாகப் பிரிக்கிறார்கள். இந்தப் பிரிவினையானது அத்தியாபகர்களால் பாட சௌகரியத்தின் பொருட்டு கற்பிக்கப்பட்டிருக்கிறதே தவிர அர்த்தத்தை அனுசரித்து கற்பிக்கப்படவில்லை. तदप्येषश्लोको भवति ததப்யேஷ ஶ்லோகோ பவதி அதாவது சொன்ன விஷயத்தில் உதாஹரண சுலோகம் இருக்கிறது என்று செய்த பிரிதிஞ்ஞைக்கும் சுலோகத்துக்கும் நடுவில் அந்த அந்த அனுவாகத்தை அவர்கள் முடிக்கிறார்கள். இந்தப் பிரிவினை சரியல்ல. ஏனெனின், அனுவாக முடிவால் விஷயம் பூர்த்தியாகாது. ஆகையால் வேறுசில அத்தியாபகர்களின் சம்பிரதாயத்தை அனுசரித்து பிரம்மவித்து என்பது முதல் உபநிஷத்து வரையில் உள்ள முழுக் கிரந்தத்தையும் ஒரே அனுவாகமாகப் பாவிக்கவேண்டியது. எவர்கள் 9-அனுவாகங்களைக் கற்பிக்கிறார்களோ அவர்கள்கூட இந்தக் கிரந்தத்தை ஒரு வல்லியாக ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஒரு கொடியில் அநேக பாகங்கள் சேர்ந்திருப்பதுபோல் இந்தக் கிரந்தமும் அநேக பாட வித்தியாசங்களுடன் கூடியிருந்தாலும் ஒரு அனுவாக ரூபமாகவேயிருக்கிறது. சிக்ஷாவல்லியில் அந்த அந்த அனுவாகத்தின் முடிவில் அந்த அந்த விஷயமாய் விசாரம் ஏற்பட்டிருக்கிறது. பிரம்மவல்லியில் ஒரு பெரிய அனுவாகம் ஏற்பட்டிருப்பதாலும், அதில் விசாரிக்கவேண்டிய விஷயங்கள் அநேகங்களாயிருப்பதாலும், புத்தி சௌகரியத்தின் பொருட்டு அதாவது புத்தியில் கலக்கம் உண்டாகாமலிருக்கும்பொருட்டு அந்த அந்த வாக்கியத்துக்குச் சமீபத்திலேயே அந்த அந்த விஷயம் விசாரிக்கப்படுகிறது. முந்தின வல்லியில்போல் இதில்விசாரம் கடைசியில் ஏற்படவில்லை.

முன் சொல்லிய காரணத்துக்குச் சமானமான காரணத்தைக் கொண்டு 2-வதான பிருகுவல்லியையும் வித்தியாரணிய சுவாமிகள் ஒரு அனுவாகமாகப் பாவிக்கிறார்கள். பாரத்வாஜ சூத்திரத்தில்

ब्रह्मविदाप्नोतिपरं भृगुर्वैवारुणिः रित्येतावनुवाकौ ब्रह्मविदोदक्षिणे कर्णेजपन्ति

ப்ரஹ்மவிதாப்னோதிபரம் ப்ருகுர்வைவாருணி ரித்யேதாவநுவாகௌ ப்ரஹ்மவிதோதக்ஷிணே கர்ணேஜபந்தி॥

அதாவது :—சாகிறவனுடைய வலது காதில் (1) பிரம்மவித் ஆப்நோதிபரம்.

(2) பிருகுர் வைவாருணி: என்கிற இரண்டு அனுவாகங்களைப் பிரம்மவித்துக்கள் ஜபிக்கவேண்டியது, என்று சொல்லியிருப்பதாலும் இரண்டு வல்லிகளும் இரண்டு அனுவாகங்கள் என்றே தெரியவருகிறது.

| நாராயணவல்லியில் | | அத்வைதப்படி |
|---|---|---|
| (1) | ஆந்திர பாடத்தில் | 80 அனுவாகங்களும். |
| (2) | திராவிடபாடத்தில் | 64 ,, |
| (3) | சில கர்ணாடகபாடத்தில் | 74 ,, |
| (4) | வேறு சில ,, | 89 ,, |
| (5) | இன்னும் வேறு சில | 80 ,, |
| (6) | விசிஷ்டாத்வைத பாடத்தில் | 52 ,, |

கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீவிஞ்ஞானாத்மா முதலான பெரியோர்கள் திராவிடபாடத்தையே ஆதரித்தபடியால் தானும் அந்தப்பாடத்தையே ஒப்புக்கொண்டிருப்பதாக ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகள் முதலாவது அனுவாகத்தின் 22-வது மந்திரத்தின் வியாக்கியானத்தில் எழுதியிருக்கிறார்கள். இது வரையில் பாடங்களின்வித்தியாசமில்லை என்றும் இதற்குமேல் தான் பலதேசங்களில் பலவித பாடங்கள் ஏற்பட்டிருக்கின்றனவென்றும் அவர்கள் எழுதியிருக்கிறார்கள்.

இந்தப் பிரதேசத்தில் 80-அனுவாகங்களுள்ள பாடந்தான் வியவஹாரத்தில் ஏற்பட்டிருப்பதால் இந்த பாடமே இந்த மொழிபெயர்ப்பில் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. விசிஷ்டாத்வைவத்தில் 52-அனுவாகங்கள் தான் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அத்வைத பாடத்திலிருந்து விடுபட்ட அனுவாகங்களும் மந்திரங்களும் எவையெனின்.

1-வது அனுவாகத்தில் 26, 27, 29, 31, 32, 33, 36, 37, 40 ல் (2-வது வாக்கியம்) 41, 42, 43, 44, 45, 46, 47, 49, 50, 51, 52, 53, 55, 61, 69ல்(4, 5-வது வாக்கியங்கள்) வது மந்திரங்கள்.

2-வது ,, 7-வது மந்திரம்.

7-வது அனுவாகம்.

13 ,, ,, 9-வது மந்திரத்தில் 3-வது வாக்கியம்

16 ,, அனுவாகம்
33 ,,
34 ,, அனுவாகத்தில் 3, 4, 5-வது வாக்கியங்கள்
35 ,, ,, சாவித்திரி என்கிற பதம் முதல் வீணி யோக முடிய
36 ,, ,, 2-வது மந்திரம்
39 ,, ,, 1 (4முதல் 10-முடியவாக்கியங்கள்), 2-வது மந்திரங்கள்.
43 ,, அனுவாகம்
44 முதல் 64-வது முடிய அனுவாகங்கள்
66 ,, அனுவாகத்தில் 3-வது மந்திரம் முதல் 9-வது மந்திரம் முடிய, 11, 13-வது மந்திரங்கள்.
67 ,, அனுவாகம்
69 ,, அனுவாகத்தில் 1-வது மந்திரம்
72 ,, அனுவாகம் முதல் 77-வது அனுவாகம் முடிய

ஆக பூராவாக விடப்பட்ட அனுவாகங்கள் 32
ஸ்வல்பமாக ,, அனுவாகங்கள் 9

ஆகவே விசிஷ்டாத்வைதத்தில் அத்வைதத்தில் கண்டபடி 39-முழு அனுவாகங்களும் ஸ்வல்பவித்தியாசத்துடன் 9-அனுவாகங்களும் ஏற்பட்டிருக்கின்றன. அத்வைதபாடத்தில் ஏற்பட்டிருக்கிற 35, 68, 69, 79-வது அனுவாகங்கள் ஒவ்வொன்றும் இந்த விசிஷ்டாத்வைத பாடத்தில் இரண்டு இரண்டாகப் படிக்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, விசிஷ்டாத்வைதபாடப்படி 52-அனுவாகங்கள் சித்திக்கின்றன. பூனாபுஸ்தகப்படி த்வைதபாடத்தில் 80-அனுவாகங்களிருக்கிறதாகத் தெரியவருகிறது. கண்டார்த்தம் பார்க்கப்படாததால் இதின் இலக்கம் தெரியவில்லை.

## மந்திரங்கள்.

இந்த நான்கு வல்லிகளிலுமுள்ள அனுவாகங்களில் ஒன்று முதல் அநேக மந்திரங்களிருக்கின்றன. இந்த மந்திரங்களின் பிரிவினை உபநிஷத்தின் மூலத்தில் தெரியவில்லை. ஒவ்வொரு அனுவாகத்திலும் ஒன்று முதல் பல விஷயங்களிருப்பதைக் கண்டு, இந்த விஷயங்களை அனுசரித்து அனுவாகங்களைப் பிரித்து ஸ்ரீவித்தியாரண்ய சுவாமிகள் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். இந்தப் பிரிவினையால் அனுவாகங்களில் அடங்கிய மந்திரங்களின் சங்கியைத் தெரியவருகிறது. இந்தப் பிரிவினையை அனுசரித்துத்தான் பிரகிருத மொழிபெயர்ப்பில் சௌகரியத்தின்பொருட்டு அனுவாகங்களும் மந்திரங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன.

நாராயண வல்லியின் 35-வது அனுவாகத்தை வித்தியாரண்ய சுவாமிகள் இரண்டு மந்திரங்களாகப் பிரித்திருந்தாலும், முதல் மந்திரத்திலுள்ள விஷயபேதத்தை அனுசரித்து தத்தாத்ரேயதிகம்பர சிஷ்யர் இதை ஐந்து பாகமாகப் பிரிப்பதால் இவ்விடத்திலும் இந்த அனுவாகம் 5-மந்திரங்களுள்ளதாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

விசிஷ்டாத்வைதத்துவைத அச்சு கிரந்தங்களின் பிரிவினையை அனுசரித்து இந்தப் பாடங்களால் தெரியவரும் லக்கமும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

மந்திரத்தின் இலக்கம் அதின் முடிவில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த மந்திரங்களின் சங்கியை

| | | அத். | விசி. | துவை. |
|---|---|---|---|---|
| 1-வது வல்லியில் | ... | 63 | 12 | 24 |
| 2 ,, ,, | ... | 62 | 9 | 22 |
| 3 ,, ,, | ... | 35 | 10 | 11 |
| 4 ,, ,, | ... | 262 | 124 | 219 |

ஆக இருக்கிறது. ...

## வாக்கியங்கள்.

ஒவ்வொரு அனுவாகத்திலும் அநேக வாக்கியங்களிருக்கின்றன. இந்த வாக்கியங்களின் சங்கியை காண்பிவிக்கும்படியான அனுக்கிரமணிகை முதலாவது வல்லியில் ஒவ்வொரு அனுவாகத்தின் கடைசியிலும், மற்றவல்லிகளில் அவைகளின் முடிவிலும் கொடுக்கப்பட்டிருக்கிறது. நான்காவது வல்லியில் சில அனுவாகங்களில் தனி அனுக்கிரமணிகையும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

இந்த வாக்கியங்களில் பவ்வத்து வாக்கியங்கள் ஒரு வர்க்கமாகின்றன. முதலாவது வல்லியில் ஒவ்வொரு வர்க்கத்தின் முதல் பதமும் அல்லது கடைசியான பதமும், மிச்சப்படும் வாக்கியங்களின் சங்கியையும் கிரந்தத்திலேயே கொடுக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது மூன்றாவது வல்லிகளில் அனுக்கிரமணிகையானது ஒவ்வொரு அனுவாகத்திலுள்ள வாக்கியங்களின் மொத்தமான சங்கியையும் சில பதங்களையும் கொடுக்கிறது. நாலாவது வல்லியிலிருக்கிற அனுக்கிரமணிகையானது அனுவாகத்தின் ஆரம்பத்தையும் அதிலிருக்கிற வாக்கியங்களின் சங்கியையும் கடைசியில் கொடுக்கிறது.

இந்த மொழிபெயர்ப்பில் வாக்கியத்தின் இலக்கமும் வர்க்கத்தின் இலக்கமும் வாக்கியாரம்பத்திலும் வர்க்காரம்பத்திலும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

| | அத். | வி. | து. |
|---|---|---|---|
| முதலாவது வல்லியில் அடங்கிய வாக்கியங்கள் | 259 | 259 | 259 |
| இரண்டாவது ,, ,, ,, | 215 | 215 | 215 |
| மூன்றாவது ,, ,, ,, | 165 | 165 | 165 |
| நான்காவது ,, ,, ,, | 619 | 362 | 619 |

ஒவ்வொரு அநுவாகத்திலுள்ள மந்திரங்களின் சங்கியையும் வாக்கியங்களின் சங்கியையும் அடியிற்கண்ட பதகத்தில் பார்த்துக் கொள்ளலாம். முதல் மூன்று வல்லிகளிலும் மூன்று பாஷ்யங்களின்படி வாக்கிய சங்கியையில் வித்தியாசமில்லை.

| சிக்ஷாவல்லி. | | | ஆனந்தவல்லி. | | | பிருகுவல்லி. | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| அநு. | மந்தி. | வாக்கி. | அநு. | மந்தி. | வாக்கி. | அநு. | மந்தி. | வாக்கி. |
| 1 | 3 | 15 | 1 | 6 | 21 | 1 | 4 | 13 |
| 2 | 1 | 5 | 2 | 4 | 26 | 2 | 2 | 12 |
| 3 | 9 | 40 | 3 | 5 | 22 | 3 | 2 | 12 |
| 4 | 15 | 41 | 4 | 5 | 18 | 4 | 2 | 12 |
| 5 | 9 | 32 | 5 | 5 | 22 | 5 | 2 | 12 |
| 6 | 4 | 21 | 6 | 9 | 28 | 6 | 3 | 10 |
| 7 | 3 | 11 | 7 | 7 | 16 | 7 | 3 | 11 |
| 8 | 4 | 10 | 3 | 16 | 51 | 8 | 3 | 11 |
| 9 | 2 | 16 | 9 | 5 | 11 | 9 | 2 | 11 |
| 10 | 1 | 6 | | | | 10 | 11 | 61 |
| 11 | 11 | 47 | | | | | | |
| 12 | 1 | 15 | | | | | | |
| ஆக12க்கு | 63 | 259 | 9க்கு | 62 | 215 | 10க்கு | 35 | 165 |

நாராயணவல்லியில் விசிஷ்டாத்வைதத்தில் அநுவாகங்கள் குறைந்துவிட்ட படியால் மந்திர சங்கியையும் வாக்கியசங்கியையும் வித்தியாசப்படுகின்றது. அடியிற்கண்ட பதகத்தில் அநுவாகங்களின் மந்திரங்கள் வாக்கியங்கள் இவைகளன்றியில் அத்வைதத்துக்குச் சரியான விசிஷ்டாத்வைத அநுவாகமும் தெரியப்படுத்தப்பட்டிருக்கிறது.

| அத்வைதம். | | | விசிஷ்டாத்வைதம். | | | த்வைதம். | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| அனு. | மந்தி. | வாக்கி. | அனு. | மந்தி. | வாக்கி. | அனு. | மந்தி. | வாக்கி. |
| 1 | 72 | 151 | 1 | 50 | 109 | 1 | 66 | 151 |
| 2 | 7 | 14 | | | | 2 | 7 | 14 |
| 3 | 1 | 1 | 3 | 1 | 5 | 3 | 1 | 1 |
| 4 | 1 | 1 | 2 | 1 | 5 | 4 | 1 | 1 |
| 5 | 1 | 1 | 4 | 1 | 5 | 5 | 1 | 1 |
| 6 | 1 | 4 | 5 | 1 | 4 | 6 | 1 | 4 |
| 7 | 1 | 4 | ... | ... | ... | 7 | 1 | 4 |
| 8 | 1 | 2 | 6 | 1 | 2 | 8 | 1 | 3 |
| 9 | 1 | 1 | 7 | 1 | 1 | 9 | 1 | 1 |
| 10 | 1 | 1 | 8 | 1 | 1 | 10 | 1 | 1 |
| 11 | 1 | 1 | 9 | 1 | 3 | 11 | 1 | 1 |
| 12 | 17 | 34 | 10 | 24 | 48 | 12 | 17 | 34 |
| 13 | 12 | 26 | 11 | 1 | 24 | 13 | 12 | 26 |
| 14 | 1 | 1 | 13 | 1 | 1 | 14 | 1 | 1 |
| 15 | 1 | 1 | 14 | 1 | 2 | 15 | 1 | 1 |
| 16 | 1 | 23 | ... | ... | ... | 16 | 1 | 23 |
| 17 | 1 | 3 | 39 | 1 | 1 | 17 | 1 | 3 |
| | | | 40 | 1 | 1 | | | |
| 18 | 1 | 1 | 41 | 1 | 1 | 18 | 1 | 1 |
| 19 | 1 | 2 | 42 | 1 | 1 | 19 | 1 | 2 |
| 20 | 1 | 2 | 43 | 1 | 1 | 20 | 1 | 2 |
| 21 | 1 | 1 | 44 | 1 | 1 | 21 | 1 | 1 |
| 22 | 1 | 1 | 18 | 1 | 1 | 22 | 1 | 1 |
| 23 | 1 | 2 | 12 | 1 | 2 | 23 | 1 | 2 |
| 24 | 1 | 4 | 16 | 1 | 4 | 24 | 1 | 4 |
| 25 | 1 | 3 | 17 | 1 | 4 | 22 | 1 | 3 |
| 26 | 1 | 1 | 19 | 1 | 1 | 26 | 1 | 1 |
| 27 | 1 | 1 | 20 | 1 | 1 | 27 | 1 | 1 |
| 28 | 1 | 1 | 21 | 1 | 1 | 28 | 1 | 1 |
| 29 | 1 | 1 | 22 | 1 | 1 | 29 | 1 | 1 |
| 30 | 1 | 4 | 23 | 1 | 4 | 30 | 1 | 4 |
| 31 | 1 | 9 | 24 | 1 | 4 | 31 | 1 | 9 |
| 32 | 1 | 9 | 25 | 1 | 1 | 32 | 1 | 9 |
| 33 | 1 | 4 | ... | ... | ... | 33 | 1 | 4 |
| 34 | 1 | 5 | 26 | 1 | 4 | 34 | 3 | 5 |
| | | | 27 | 1 | 9 | | | |
| 35 | 6 | 11 | 28 | 1 | 1 | 35 | 1 | 11 |
| 36 | 2 | 4 | 30 | 1 | 2 | 36 | 1 | 4 |
| 37 | 1 | 3 | 15 | 1 | 1 | 37 | 1 | 3 |
| 38 | 2 | 12 | 45 | 1 | 11 | 38 | 1 | 11 |
| 39 | 2 | 19 | 46 | 1 | 3 | 30 | 3 | 19 |
| 40 | 4 | 19 | 47 | 1 | 5 | 40 | 2 | 19 |
| 41 | 2 | 4 | 37 | 1 | 4 | 41 | 1 | 4 |
| 42 | 2 | 4 | 38 | 1 | 3 | 42 | 2 | 4 |
| 43 | 1 | 2 | ... | ... | ... | 43 | 1 | 2 |
| 44 | 1 | 1 | ... | ... | ... | 44 | 1 | 1 |
| 45 | 1 | 2 | ... | ... | ... | 45 | 1 | 2 |

| அத்வைதம். | | | விசிஷ்டாத்வைதம். | | | த்வைதம். | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| அனு. | மந்தி. | வாக்கி. | அனு. | மந்தி. | வாக்கி. | அனு. | மந்தி. | வாக்கி. |
| 46 | 1 | 2 | ... | ... | ... | 46 | 1 | 2 |
| 47 | 1 | 2 | ... | ... | ... | 47 | 1 | 2 |
| 48 | 1 | 2 | ... | ... | ... | 48 | 1 | 2 |
| 49 | 1 | 2 | ... | ... | ... | 49 | 1 | 2 |
| 50 | 1 | 2 | ... | ... | ... | 50 | 1 | 2 |
| 51 | 1 | 2 | ... | ... | ... | 51 | 1 | 2 |
| 52 | 1 | 2 | ... | ... | ... | 52 | 1 | 2 |
| 53 | 1 | 2 | ... | ... | ... | 53 | 1 | 2 |
| 54 | 1 | 2 | ... | ... | ... | 54 | 1 | 2 |
| 55 | 1 | 2 | ... | ... | ... | 55 | 1 | 2 |
| 56 | 1 | 2 | ... | ... | ... | 56 | 1 | 2 |
| 57 | 1 | 2 | ... | ... | ... | 57 | 1 | 2 |
| 58 | 1 | 1 | ... | ... | ... | 58 | 1 | 1 |
| 59 | 1 | 11 | ... | ... | ... | 59 | 1 | 11 |
| 60 | 1 | 2 | ... | ... | ... | 60 | 1 | 2 |
| 61 | 1 | 2 | ... | ... | ... | 61 | 1 | 2 |
| 62 | 1 | 2 | ... | ... | ... | 62 | 1 | 2 |
| 63 | 3 | 5 | ... | ... | ... | 63 | 1 | 5 |
| 64 | 3 | 7 | ... | ... | ... | 64 | 1 | 7 |
| 65 | 5 | 5 } | 48 | 1 | 11 | 65 | 5 | 5 |
| 66 | 14 | 15 } | | | | 66 | 8 | 15 |
| 67 | 4 | 42 | | | | 67 | 4 | 42 |
| 68 | 1 | 9 | { 29<br>{ 31 | 1<br>1 | 6<br>2 | 68 | 1 | 9 |
| 69 | 4 | 24 | { 32<br>{ 33 | 1<br>1 | 7<br>7 | 69 | 1 | 24 |
| 70 | 1 | 10 | 34 | 1 | 6 | 70 | 1 | 10 |
| 71 | 1 | 2 | 36 | 1 | 2 | 71 | 1 | 2 |
| 72 | 1 | 8 | ... | ... | ... | 72 | 1 | 8 |
| 73 | 1 | 2 | ... | ... | ... | 73 | 1 | 2 |
| 74 | 1 | 2 | 35 | 1 | 1 | 74 | 1 | 2 |
| 75 | 1 | 1 | ... | ... | ... | 75 | 1 | 1 |
| 76 | 1 | 2 | ... | ... | ... | 76 | 1 | 2 |
| 77 | 1 | 1 | ... | ... | ... | 77 | 1 | 1 |
| 78 | 13 | 13 | 49 | 1 | 10 | 78 | 5 | 13 |
| 79 | 24 | 24 | 50<br>51 | 1<br>1 | 14<br>4 | 79 | 17 | 24 |
| 80 | 4 | 4 | 52 | 1 | 10 | 80 | 3 | 4 |
| ஆக80க்கு 262 | | 6·9 | 52 | 124 | 362 | 80 | 219 | 619 |

## கோசங்களின் உற்பத்தி பிரயோஜனங்கள்.

இந்த உபநிஷத்தில் பஞ்சகோசங்களின் விசாரம் முக்கியம். அத்வைதமதப்படி பிரம்மம் பஞ்சகோசங்களையும் அதிக்கிரமித்தது. வசிஷ்டாத்வைதப்படி பிரம்மம் ஆநந்தமயம். துவைதப்படி எல்லா கோசங்களும் பிரம்மஸ்வரூபங்கள். பஞ்சகோச ஞானம் முக்திக்குச் சாதகமானதால் அதைச் செவ்வையாகச் சம்பாதிக்கவேண்டியது அவசியம். (பின்வருவது அனிபிஜண்டு அம்மாளவர்களின் பஞ்கோச உபநியாசத்தின் சுருக்கம்.)

1 பிரம்மம்:— காரியத்தினால் காரணத்தை ஊஹிப்பது போல் சகல பிரபஞ்சத்துக்கும் காரணம் ஒன்று இருக்கவேண்டும். பிரபஞ்சவாசனைக்குள் அகப்பட்டவர்கள் பிரபஞ்சாதீதமான காரணத்தை அறியமாட்டார்கள். ஆகையால், அது வாக்குக்கும் மனதிற்கும் எட்டாதது என்று சுருதி சொல்லுகிறது. பிரபஞ்சம் வியக்தம், ஸ்பஷ்டம் என்று சொல்லுவதாலேயே காரணம் அவ்யக்தம் என்றும், அஸ்பஷ்டம் என்றும், அது இருக்கவேண்டும் என்றும் ஏற்படுகிறது. ஆகையால் அது சத் ரூபம் என்றும், ஒன்றுதான் என்றும் सदेव सोम्येदमग्र आसीत् एकमेवाद्वितीयम् 𑌸𑌦𑍇𑌵 𑌸𑍋𑌮𑍍𑌯𑍇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍 𑌏𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍍 என்கிற சாந்தோக்கிய (VI-1-1) சுருதி சொல்லுகிறது. இந்தக்காரணம் இப்படிப்பட்டதென்று ஊகிகர்களுக்குத் தெரியாவிட்டாலும், சகல பிரபஞ்சத்துக்கும் காரணமாயிருப்பதால் அது எல்லாவற்றையும்விட பெரியதாயிருக்கவேண்டுமென்று தோன்றுவதால் அதைப் பிரம்மம் அதாவது அளவில் அகப்படாத பெரியவஸ்துவென்று சொல்லுகிறார்கள். இப்படிப்பட்ட பிரம்மம் வாக்குக்கும் மனதிற்கும் எட்டாததாயிருந்தாலும், பிரம்மம் என்பதாய் வியக்தமாயிருப்பதால் இதற்கும் முன் அவ்வியக்தம் ஒன்று இருக்கவேண்டும். இதற்குப் பெயர் கொடுக்கமுடியாமல் இதைப் பரப்பிர்ம்மம் அதாவது பிர்ம்மத்துக்குப் பரம் அதாவது முன்னிருப்பது என்று சொல்லுகிறார்கள்.

இந்த பிரம்மம் முண்டகோபநிஷத்திற் (II-1-2) சொல்லியபடி दिव्यः अमूर्तः अजः अप्राणः अमनाः 𑌦𑌿𑌵𑍍𑌯𑌃 𑌅𑌮𑍂𑌰𑍍𑌤𑌃 𑌅𑌜𑌃 𑌅𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌅𑌮𑌨𑌾𑌃 : ஆகாரமற்ற தேஜோரூபம், பிறப்பற்றது, பிராணனற்றது, மனதற்றது.

2. சிருஷ்டிக்குக்காரணமான சங்கல்பம்:—சாந்தோக்கிய உபநிஷத்தில் (VI-2-3) तदैक्षतबहुस्यां प्रजायेय ததைக்ஷதபஹுஸ்யாம் ப்ரஜாயேய. அதாவது இந்தபிர்ம்மம் தான் வெகுவாக ஆகவேண்டுமென்பதாய் இச்சித்ததாகச் சொல்லியிருக்கிறது. இதனால் இதைவிட நூதனமான அதிகபதார்த்தங்கள் உண்டாகவில்லை என்று தெரியவருகிறது. ஏகரூபமாயிருந்த இதனிடத்தில் அனேகபேதங்கள் காணப்படுகின்றன வென்பது கருத்து. இந்த பேதங்களுக்கு பிர்ம்மத்தின் சங்கற்பமே காரணம். சதாசிவப் பிர்ம்ம சுவாமிகளின் அத்வைதம் ரஸமஞ்சரியில் பிரபஞ்சம் பிரம்மத்தின் சங்கற்பஸ்வரூபம்தான் என்று சொல்லியிருக்கிறது.

3. சிருஷ்டிக்குமுன் வியக்தமானவைகள்: முண்டகம் II-1-3 ல் एतस्माज्जायतेप्राणो मनःसर्वेन्द्रियाणिच खंवायुः ज्योतिरापः पृथिवी ஏதஸ்மாஜ்ஜாயதே ப்ராணோ மந: ஸர்வேந்த்ரியாணிச கம்வாயு: ஜ்யோதிராப: ப்ருதிவீ அதாவது இந்தபிர்ம்மத்தினின்றும் பிராணன், மனது, சகல இந்திரியங்கள், ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பிரிதிவீ இவைகள் உண்டானதாகச் சொல்லியிருக்கிறது. இந்த பிர்ம்மத்தினிடத்தில் தோன்றினமுதலாவது பேதம்பிராணன். இதுவே பிரதான புருஷரூபமாக விளங்குகிறது. அதாவது, இனி உண்டாகப்போகிறபிரபஞ்சமாகிறஉபாதிக்குக்காரணமானது பிரதானம். இந்த உபாதியில் விளங்குகிறவன் புருஷன், சேதனஸ்வரூபம். இவைகளே பீஜங்கள். இந்த பிராணனிடமிருந்து மனது உண்டாகிறது, இந்த மனதேமஹத்தத்துவம் ஸ்ரீகிருஷ்ணன்பகவத்கீதையின் 11 வது அத்தியாயத்தில்தன்னுடையயோனியாகச்சொன்னது இதுவே. உண்டாகப்போகிற பிரபஞ்சத்தின் ஆகாரம் இதில் அடங்கியிருக்கிறது.

பிரதானம், புருஷன், மனது (அதாவது சிருஷ்டிக்குச் சாதகமானவைகள் இன்னவிதமாய் சிருஷ்டிக்கிறதுஎன்கிறபாவனை இவைகள்) இம்மூன்றும் ஸ்பஷ்டமானவுடன் ஸ்ருஷ்டி ஆரம்பமாகிறது; இந்தசிருஷ்டிமுழுமையிலும் பிரம்மம் வியாபித்திருக்கிறது. பிரம்மத்தைவிட்டு விலகி ஒன்றுமில்லை. இதுவே சகலத்துக்கும் ஆத்மா.

4. பிரம்மம் ஆத்மா:—இந்த பிரம்மம் ஹிருதயகமலத்தில் மறைந்திருக்கிறது. இதைக்காண்பதால் ஆத்மாவும் காணப்பட்டதாக ஆகும். ஏனெனின், பிரம்மமும் ஆத்மாவும் ஒன்று. சாஸ்திரத்தால்மட்டும் தெரியக்கூடிய அப்பிரத்தியக்ஷமான வஸ்து பிரம்மம் எனப்படுகிறது. அதுவே மனதினால் பிரத்தியக்ஷமாகப் படும்

போது ஆத்மாவெனப்படுகிறது. ஆகையால் இரண்டும் ஒன்றே. இந்த ஆத்மாவை அறிவதால் பிரம்மமும் அறியப்பட்டதாகும்.

5. சிருஷ்டி:—இந்த பிரம்மம் தன்னுடைய மாயா சக்தியால் ஆகாசாதி பிரபஞ்சத்தை சிருஷ்டித்தது அதாவது பிரம்மமே ஆகாசாதி ஆகாரங்களுடன் விளங்குகிறது என்று அர்த்தம். இந்த ஆகாசாதிகளே பரமாத்மாவுக்குக் கோசங்கள். அதாவது உபாதி யன்றியல் ஒன்றும் விளங்குகிறதில்லை, ஆகையால் இவைகள் உபாதிகளாக இருக்கின்றன,

तत्सृष्ट्वा तदेवानु प्राविशत् தத்ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிசத் என்கிற சுருதி (தை-II-6) ப்படி இவைகளை சிருஷ்டித்து இவைகளில் விளங்குகிறதும் பிரம்மமே.

6. பிரம்மத்தின் கர்த்திருத்வாதிகள் ;—நிஷ்கிரியமாயிருந்த பிரம்மத்தினிடத்தில் எப்படி கிரியை கூடுமெனில் அதின் இச்சையேகாரணம். தான் ஸ்பஷ்டமாய்விளங்கவேண்டியதற்காகவே தன்னை பலவிதமாகச் செய்துகொண்டது. ஸ்வயம் அகர்த்தாவாயிருந்தாலும் தன்னுடைய உபாதிகளால்தான் கர்த்தாவாகலாம். சாந்தோக்கிய VIII-12-1 ல் சொல்லியபடி சரீரமானது (உபாதியானது) மிருத்தியுவால் பிடிக்கப்பட்டதாக இருந்தாலும் அமிருதனான ஆத்மாவுக்கு அது அதிஷ்டானமாக விருக்கிறது அசரீரனான ஆத்மாவுக்குபிரியம், அப்பிரியம் என்பதில்லை. ஆயினும் ஆசிரயமான ஆத்மாவுக்கு பிரியாப் பிரியங்களுடன் சம்பந்தம் ஏற்படுகிறது. சரீரத்திலிருக்கும்போதுதான் ஆத்மா மற்றபிரபஞ்சத்துடன் சம்பந்தப்படுகிறான். அதினால் இவன் பிரியம்முதலியவைகளுக்குட்படுகிறான்.

7. ஏழு பூமிகைகள் :—முண்டகம் II - 1 - 3 ல் இந்த பிரம்மத்தினின்றும் பிராணன் பிறகு ஆகாசம், வாயு, ஜோதிஸ், ஜலம், பிருதிவீ இவைகள் உண்டாயினவென்று சொல்லியிருக்கிறது. இவைகள் பிரம்மாண்டத்தின் ஏழுபூமிகள், ஏழு பாகங்கள். இவைகளுடன் ஆத்மா சம்பந்தப்படும்பொருட்டு தனக்கு இன்மையாதி கோசங்களைச் செய்து கொள்ளுகிறான்.

ஒருமனிதன் பூமியில் சஞ்சரித்து பூமண்டலத்திலுள்ள வைகளைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு வண்டி என்னும் உபாதியை அபேக்ஷிக்கிறான் அப்படியே ஜலத்தில் சஞ்சரிப்பதற்கு அவன் கப்பல் ஓடம் முதலிய உபாதிகளை அபேக்ஷிக்கிறான். அப்படி ஆகாசத்

தில் சஞ்சரிப்பதற்கு அவன் பலூன் என்னும் புகைக்கூடை அபே க்ஷிக்கிறான். இவ்விதமாக அவன் பிருதிவி, அப்பு, ஆகாசங்களில் சஞ்சரித்து அவைகளின் விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு அவையவைகளுக்குத் தக்கபடி உபாதிகளைத் தேடுகிறான். இவன் அந்தவண்டிமுதலிய உபாதிகளாகிறதில்லை. தன்னுடைய காரியத்துக்காக அவைகளை உபயோகித்துக் கொள்ளுகிறானே தவிர இவன் அவைகளாகிறதில்லை. இதுபோல் ஆத்மாவும் பிரம்மாண்டத்தின் ஏழுபூமிகைகளில் சஞ்சரித்து அவைகளின் விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் பொருட்டு அவையவைகளுக்குத் தக்கபடியான அன்னமயாதி கோசங்களாகிற உபாதிகளைச் செய்துகொள்ளுகிறான். இவனே அந்த உபாதிகளன்று.

8. அன்னமயம்:—இந்த கோசங்களில் முதலாவது அன்னமயம்:— (1) இதின் உற்பத்தி:—இது அணுக்களால் ஏற்படுகிறது. இதுதான் நாம் பார்க்கிற, உபயோகப்படுத்துகிற சரீரம். இது நாம் அன்று என்று சொல்லவேண்டுமோ? இது என்னுடையது, என் உபயோகத்திற்காக இது ஏற்பட்டது: நான்தான் இதை உபயோகிக்கிறேன், நான்வேறு. என்னுடைய அன்னமயகோசமாகிறஸ்தூல சரீரம் வேறு.

(2) இதின் பிரவிர்த்தி:—அணுமுதல் அணுக்களின் கூட்டமாகிற சரீரம்வரையில் ஒவ்வொன்றிலும் ஆத்மா இருந்துகொண்டு வியவஹரிப்பதினால், நாம் இந்த சரீரத்தை புத்திபூர்வமாக உபயோகிப்பதற்குமுன்னும் அதில் அடங்கிய அணுக்கள் ஆத்மபலத்தால் வியவஹரிக்கின்றன. திருஷ்டாந்தம்:—கத்திபட்ட இடத்தில் இடைவெளி உண்டாகிறது. நம்முடை தாகலா அன்றியிலேயே அணுக்கள் புது அணுக்களைச்சேர்த்து அந்தவெளியைமூடிவிடுகின்றன. இப்படி கோசத்தின் வியவஹாரம் நடக்கும்போதே அணுக்களின் தனிவியவஹாரம் நடந்துகொண்டே யிருக்கிறது. ஆனால் பெரிய வியவஹாரத்துக்குள் இந்த சின்னவியவஹாரம் அடங்கிப்போகிறது.

(3) இதற்கும்பிராணனுக்கும் உள்ளசம்பந்தம்:—இந்த அன்னமய சரீரத்துக்கே உணர்ச்சியில்லை; சரீரத்தில் ஒரு பதார்த்தத்தின் ஸ்பர்ச முண்டானால் அதனாலுண்டாகும் சுகதுக்கம் சரீரத்துக்குத் தெரியவருகிறதில்லை. மனதினால்தான் அவைகளை ஒருவன் அறிகிறான். இந்த ஸ்பர்சத்தை மனதிற்குத் தெரியப்

படுத்துகிறது பிராணன். பிறகுதான் சுகதுக்கஞானமுண்டாகிறது. ஆகவே பாஹியப்ரபஞ்சத்துக்கும் ஆத்மாவுக்கும் சம்மந்தம் உண்டாகவேண்டியதற்காகமட்டும் இந்த அன்னமய கோசம் வேண்டியதாக விருக்கிறது. இப்படி சம்பந்தம் உண்டாயிற்றென்று தெரியப்படுத்துவது பிராணன்.

9. பிராணமயகோசம்:–(1) பிராணனுடைய உற்பத்தி:–கௌஷீதகி உபநிஷத்து III–2-ஞல் இந்த பிராணன் ஆத்மாவின் கிரியா சத்தியென்றுதெரியவருகிறது. ப்ரச்னோபநிஷத்தின் आत्मनएषप्राणो जायते ஆத்மநஏஷப்ராணோஜாயதே என்கிற III-3 வதுசுருதியில் ஆத்மாவினின்றும் பிராணன் உண்டாவதாகச் சொல்லியிருக்கிறது. ஆத்மாவே பிராணன். பிராணன் ஆத்மாவின் கிரியாசக்தி. ஆத்மா ஸ்வத: ஒன்றையும் செய்யமாட்டாது. அது சத்ரூபம், நிச்சயம், அதின் வியவஹாரிக்கும் சக்தி பிராணன், ஆகையால் பிராணன் ஆத்மாவினிட மிருந்து உண்டானதாகச் சொல்லியிருக்கிறது.

(2) பிராணனுடைய பிரவிர்த்தி:—இது காரியத்தைச் செய்வதற்காக ஏற்பட்ட சக்தியேதவிர ஞானசக்தியன்று. அன்னமயகோசத்தில் பாஹியஸ்பர்சத்தாலுண்டாகும் அனுபவங்களை ஆத்மா அறியும்படி அவைகளை உள்ளே கொண்டுபோவதே இந்த பிராணமய கோசத்தின் காரியம், இதுவே அவைகளை அறியவில்லை. இது ஆத்மாவின் கிரியாசக்தியேதவிர ஞானசக்தியன்று. இந்த கிரியா சக்தியால் அன்னமய கோசத்திலிருக்கிற அணுக்கள் ஒரு வரம்பில் அடங்கி ஆத்மாவுக்குக் கோசம் உபயோகப்படும்படி செய்கின்றன. இந்த பிராணனுடைய வியாபாரமில்லாவிடின் அணுக்கள் ஸ்வயம் இஷ்டப்படி வியவஹரித்து ஆத்மாவுக்குக் கோசம் உபயோகமாகும்படி செய்யமாட்டா. சரீரம் கட்டிலிருந்து அவிழ்ந்துவிடும், மரணம் சம்பவிக்கும்.

(3) பிராணமயகோசம் உற்பத்தி:—ஆத்மாவின் கிரியாசக்தியும் உபாதியன்றியில் விளங்கமாட்டாதாகையால் இந்த பிராணன் உபயோகப்படுத்தும் உபாதிக்கு பிராணமயகோசம் என்றுபெயர். இது சூட்சுமாணுக்களின் சமுதாயமாகிற சூட்சும பிரகிருதி.

(4) பிராணமய கோசத்தின் பிரவிர்த்தி:—இந்த அன்னமய பிராணமயங்களின் ஸ்தூல சூட்சம அம்சங்கள் சேர்ந்து ஆத்மாவுக்குஸ்தூலோபாதி யாகின்றன. இந்திரியாதிகள் வியவஹரிப்பதற்குக்

காரணங்கள். ஆத்மாவின் சக்தி வெளியில் விளங்கும்படிச் செய்கிறதும், வெளியிலுள்ள அனுபவங்களை உள்ளேகொண்டுபோவதும் பிராணமயகோசமே. சகல கோசங்களின் கிரியைக்கும் பிராணமய கோசத்தின் சாதகம் வேண்டியது. கௌஷீதகி உபநிஷத்தில் III-3 4-வது சுருதிகளில் பிராணன் மரணகாலத்தில சகலத்தையும் ஒன்றாகச் சேர்த்து ஆத்மாவிடம் சேர்ப்பிவிக்கிறது என்று சொல்லியிருக்கிறது.

(5) ஸ்தூல உபாதி:—இந்த இரண்டு கோசங்களும் சேர்ந்து ஸ்தூலோபாதி ஆகின்றன. கோசங்கள் ஐந்தானலும் உபாதிகள் மூன்றுதான். இராஜயோக அப்பியாசத்தில் உபாதிகளைப் பிரித்து ஒருவன் ஒவ்வொன்றிலும் வியவஹரிக்க முடியும், கோசங்களைப் பிரித்து வியவஹரிக்கமுடியாது. இந்திரியகோசரமான பிரத்தியக்ஷ பிரபஞ்சத்தையும் புத்திகோசரமானபிரபஞ்சத்தையும், ஆத்மாவின் ஞானதிருஷ்டிக்குக் கோசரமான பிரபஞ்சத்தையும்ஸ்தூலாதி உபாதிகளிலிருந்து அறியலாம். கோசங்களால் பிரகிருதி விசேஷங்களைமட்டும் அறியமுடியும்.

10. மனோமய கோசம்:---(1) முந்தின கோசங்களுக்கும் இதற்கும் சம்பந்தம்:—இந்த ஸ்தூல உபாதியையே மனு (XII-12,13 14,)பூதாத்மாவென்று சொல்லியிருக்கிறர். அதாவது, இதில் அடங்கிய இரண்டு கோசங்களைக் கொண்டு பாஹ்ய பிரபஞ்சத்தின் பூதங்களுடன் ஆத்மா சம்பந்தப்படக்கூடும். இனிவரும் கோசங்களின் வியவஹாரம் சரீரத்துக்குள்ளேயே ஏற்படுகிறது. பாஹிய பிரபஞ்சத்துடன் அன்னமய பிராணமய கோசங்கள் சம்பந்தப் படுவதால் ஏற்படும் அனுபவங்களை ஆதாரமாக வைத்துக்கொண்டு மனோமயாதி கோசங்கள் வியவஹரிக்கின்றன. இந்த மனோமய கோசத்தை மனு ஜீவாத்மா வென்கிறர். அதாவது, இவைகளில்தான்ஜீவன் சுகதுக்கங்களை அனுபவிக்கிறன், அவைகளை அறிகிறன், இந்த மனோமயகோசம் தேவலோகத்துடன் சம்பந்தப்பட்டது அதாவது ஐதரேயஉபநிஷத்தில்தேவதைகளின் சிருஷ்டிக்குப்பிறகு மிருகங்களின் சிருஷ்டியும் மனுஷ்யனுடைய சிருஷ்டியும் சொல்லப் பட்டிருக்கிறது. இந்ததேவதைகள் தங்களுக்கு வாசஸ்தானம் கேட்க பிரம்மாவானவர் முதலில் மிருகசரீரத்தைக்காட்ட அது தங்களுக்கு போதாது என்று அவர்கள்சொல்ல, பிறகு மனுஷிய சரீரத்தைக்காட்ட அது சரிதான் என்று அவர்கள் ஒப்புக்கொண்டு அக்கினிமுதலிய பூதங்களின் அதிஷ்டான தேவதைகள் மானிடசரீரத்

தில் பிரவேசித்து வாக்குமுதலிய இந்திரியங்களாக ஆனார்கள் என்று சொல்லியிருக்கிறது. இந்திரியங்கள் பாஹ்ய பிரபஞ்சஸம்பந்தத்தால் ஏற்படும் அனுபவங்களை சுகதுக்க ஆகாரமாகச் செய்கின்றன. சுகதுக்கமயமான இந்த மனோமயகோசத்தைச் செய்வது இந்த தேவதைகளே;

(2) மனோமயத்தின் உற்பத்தி:—இந்த சுகதுக்கானுபவம் மிருகசரீரத்திலில்லாமலில்லை: அவர்களுடைய சுகதுக்கானுபவம் ஸ்தூலமாயும் அற்பமாயுமிருக்கிறது. அதுவே மனிதனிடத்தில் பரிபாகத்தை அடைந்து சூட்சுமமாயும் நீடித்தும் விளங்குகிறது. இச்சக்தியால் மிருகம் பாஹ்ய விஷயத்தை அடையும்போது சுகத்தையாவது துக்கத்தையாவது அடைகிறது. இந்த அனுபவம் அடிக்கடி ஏற்படுவதினால் பாஹ்ய பதார்த்தத்துக்கும் அந்தர அனுபவத்துக்கும் ஒருசம்பந்தம் ஏற்பட்டு சில பதார்த்தங்கள் சுகத்தைத்தரும் என்றும் சிலது துக்கத்தைத்தரும் என்றும் ஞானம் உண்டாக ஆரம்பமாகிறது. இந்த சுகதுக்கங்களும் அவைகளில் ஞானமும் சேர்ந்து மனோமய கோசத்தை உண்டுபண்ணுகின்றன. இந்த இரண்டுவித சேர்க்கை மனோமய கோசத்திலிருக்கிறது என்பது प्राणैश्चित्तं सर्वमोतं ப்ராணைச்சித்தம் ஸர்வமோதம் அதாவது மனனம் செய்கிற சங்கற்பிக்கிற கருவி இந்திரியங்களால் வியாபிக்கப்பட்டிருக்கிறது என்கிற முண்டக (III-9) சுருதியால்ஸ்பஷ்டமாயிருக்கிறது.

11. விஞ்ஞானமயகோசம்:—மனோமயகோசத்தால் சேர்த்துக்கொடுக்கப்பட்ட சங்கற்பாதிகளை விவேசனை செய்வதே விஞ்ஞானமயகோசத்தின் காரியம். அவைகளை ஒழுங்குபடுத்தி, அவைகளை யுக்தியால் பரிசோதிப்பதே இந்த கோசத்தின் முக்கியமான காரியம். ஆத்மா இதில் வியவஹரிக்கும்போது இந்திரியசம்பந்தமேயில்லை.

12-ஆநந்தமயகோசம்:—ஆநந்தமயகோசம் என்பது ஆத்மாவின் கடைசியான கோசம். உபாதியன்றியில்விளங்குதல் ஏற்படாததால் ஆத்மா விளங்குகிறதற்கு ஒரு உபாதி வேண்டியதாக இருக்கிறது. அதுவே இந்த ஆநந்தமயகோசம். இது இல்லாவிடில் ஆத்மாபிரம்மம் என்கிறவியவஹாரமே யில்லாமற்போய்விடும். எல்லாம் ஒன்றுயிருந்தால் வியவஹாரம் ஏது. இது கேவலம் ஆநந்த ஸ்வரூபம். இதின் மஹிமையை முண்டக II-2-7-

வது சுருதியில் பார்க்க. இந்திரியங்கள் அடங்கிப்போகின்றன. மனது சாந்தமாகிறது. இந்த பிரம்ம நிஷ்டையில் ததேகத்தியானம் சித்திக்கிறது. மற்றதெல்லாம் சூன்யமாகிற சமயத்தில் ஞானஸ்வரூபம் ஆநந்த ஸ்வரூபமே விளங்குகிறது. இது இன்னமாதிரியென்று சொல்லமுடியாது. அநுபவத்தால் தான் தெரியத்தக்கது. தன்னைத்தான் அறிதல் என்பது அப்போது சித்திக்கிறது. முண்டகம் III-1-5-ல்சொல்லியபடி சுந்தாந்தக்கரணமுள்ள பக்தர்களே அதை அடையக் கூடும். ஹிருதயத்துக்கு வெளியில் எவ்வளவு சலனம் ஏற்பட்டாலும் ஹிருதயத்துக்குள் ஆத்மாவின் அசலமானஸ்திதியே அநுபவிக்கப் படுகின்றது. ஆநந்தமே முடிவான அவஸ்தை.

13. ஒவ்வொரு கோசத்திலும நான் என்னும் பாவனை:—இவ்விதமாக ஆத்மாவின் வியவஹாரம் இந்த கோசங்களில் விவரிக்கப் பட்டது. ஆத்மா அதாவது நான் என்பது ஒன்றுனாலும் கண்ணுடியில் ஏற்படும் பிரதிபிம்பம்போல் ஆத்மாவின் பிரதிபிம்பம் அன்னமயாதிகோசங்களில்ஏற்பட்டு அன்னமயமே நான், பிராணமயமே நான், மனோமயமே நான், விஞ்ஞானமயமே நான், ஆநந்தமயமே நான், என்கிற பிராந்திஞானம் ஏற்படுகிறது. அன்னமயாதிகோசங்கள் தனித்தனியே நானாக இருந்தால் அவைகள் ஆத்மாபோல் இருக்கவேண்டுமே. அப்படியிராதபடியால் அவைகளில் தோன்றும் நான் என்கிற ஞானமும் பிராந்திரூபமே. ஆத்ம சம்பந்தமிருப்பதால்தான் நான் என்கிற பிராந்தி உண்டாகிறது.

14. உபசம்ஹாரம்:—அன்னமய கோசத்தில் பாஹ்ய பிரபஞ்சத்தின் சம்பந்தம் ஏற்பட்டு, பிராணமயத்தால் அந்த அநுபவங்கள் உள்ளே கொண்டு போகப்பட்டு, மனோமயகோசத்தால் அவைகள் சுகரூபம் அல்லது துக்கரூபம் என்கிற ஞானமுண்டாகி, விஞ்ஞானமயகோசத்தால் இந்த சுகதுக்கானுபவங்கள் விவேசனை செய்யப்பட்டு, தனக்கு எது உபயோகம் என்பது தீர்மானிக்கப் படுகிறது. பிறகு ஜீவன் ஆநந்தமயகோசத்தில் சகல வியவஹாரமற்ற ஆநந்தஸ்வரூபபிரம்மம் தான் தான் என்று அறிகிறான். ஜீவன் ஸ்வத: ஞானஸ்வரூபமாயிருந்தாலும் உபாதியில் அகப்பட்ட பிறகு உபாதிகள் மூலமாக பிராபஞ்சிக அநுபவங்களைச் சம்பாதித்து, அவைகளை நிஷேதித்து தன்னுடைய ஸ்வரூபத்தை அறிய வேண்டியதாக இருக்கிறது.

15. இந்த விசாரத்தின் பிரயோசனங்கள்:-இவ்விதமாக கோசங்களை விசாரிப்பதின் பிரயோசனமானது சுகதுக்கானுபவங்க

ளைத்தேடி ஞானத்தைக் கொடுப்பதுமன்றியில், இச்சையின் நாசத்திலுமிருக்கிறது. விஷயசுகத்தைக் கொடுக்கிறதையே ஜீவன் தேடினாலும் இந்தசுகம் அல்பமாக இருப்பதைக்கண்டு ஜீவன் வெறுப்பு அடைந்து நாசமாகாத நிரதிசயமான சுகத்தையே அடைய இச்சிக்கிறான். இதனால் பிரபஞ்சவிஷய இச்சை நசித்துப்போகிறது. மேலும் இன்னும் ஒருபிரயோசனமுமிருக்கிறது. நம்முடைய சுகானுபவங்களால் பிறருடைய சுகதுக்கங்களை அறிந்து, நாம் ஆத்மா, நாம் கேவலம் ஞானஸ்வரூபம், சுகதுக்கானுபவங்கள் கோசங்களைச் சேர்ந்தவை, இப்படிபிறருக்கும் உபதேசிக்கும்படி சாமார்த்தியம் ஏற்படுகிறது. ஆகையால், இந்த பிரயோசனம் வெகு முக்கியமானது.

இவ்விதமாக கோசங்களின் உற்பத்தியும் பிரயோசனமும் விவரிக்கப்பட்டன.

## அத்வைதம்.

இந்த உபநிஷத்தின் முதல் மூன்று வல்லிகளுக்கு ஸ்ரீ சங்கராசாரியார் அவர்கள் பாஷ்யம் எழுதி யிருக்கிறார்கள். ஸ்ரீசுரேசுவராசாரியார் அவர்கள் வார்த்திகம் என்னும் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். ஸ்ரீ ஆநந்தகிரிசுவாமிகள். பாஷ்யத்துக்கும் வார்த்திகத்துக்கும் டீகைகள் எழுதியிருக்கிறார்கள். ஸ்ரீ சங்கரானந்தர் தீபிகை என்னும் வியாக்கியானம் செய்திருக்கிறார். ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகள். நான்கு அத்தியாயங்களுக்கும் 'தீபிகை என்னும் வியாக்கியானம்செய்திருக்கிறார்கள்.

ஸ்ரீ வித்தியாரணியசுவாமிகளுடைய வியாக்கியானம் வெகு சம்பூரணமாயும் தெளிவாயு மிருக்கிறது. சிலவிடங்களில் அவர்சொல்லும் அர்த்தம்பாஷ்யகாரருடைய அர்த்தத்தினின்றும் வித்தியாசப்பட்டாலும் பெரும்பான்மையாய் ஆசாரியருடைய அபிப்பிராயத்தை அனுசரித்தே அவர் எழுதியிருக்கிறார். மேலும் வேதாந்தசூத்திரங்களின்பேரில் தான் எழுதிய அதிகரணமாலையிலிருந்து அநேக விசாரங்களை இந்த டீகையில் உசிதமான இடங்களில் அவர் எழுதியிருக்கிறார். கிரந்தத்தின் விஸ்தாரபயத்தால் தீபிகையின் முக்கியபாகங்களும் அதிகரணமாலையின் தீர்மானங்களும் மாத்திரம் இந்த மொழிபெயர்ப்பில் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. சுரேசுவராசாரியாருடைய வார்த்திகத்திலிருந்தும் ஆநந்தகிரி டீகையிலிருந்தும் சிலவிஷயங்கள் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன) .ச-பா=சங்

கரபாஷ்யம்; வி-வி=வித்தியாரணிய வியாக்கியானம்; சு-வா=சுரேசுவராசாரியாருடைய வார்த்திகம் ; ஆ=ஆநந்தகிரி இப்படி அக்ஷரங்களின் சங்கேதங்களை அறியவும்.)

வேதாந்தங்களின் முக்கியமான கருத்து ஜீவப்பிரம்ம ஐக்கியம். இந்த உபநிஷத்தின் இரண்டாவது வல்லியில் பிரம்மஞானம் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. வேதார்த்தத்தின் எல்லாப் பிரக்கிரிகைகளும் இந்த உபநிஷத்தில் அடங்கி யிருக்கின்றனவா இல்லையா வென்பதைத் தெரிந்துகொள்ளும்பொருட்டு வேதாந்தத்தின் சாராம்சமும் இந்த உபநிஷத்தினுபதேசத்தின்சுருக்கமும் அடியிற் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

வேதாந்தசாரம்:—பிரபஞ்சத்தின் கர்த்தாபிர்ம்மம். இது நிர்குணம், அதாவது நாம் அறியும் எந்தக்குணமும் அதினிடமில்லை, அது சத்சித் ஆநந்தஸ்வரூபம். இதைத்தவிர மற்றதெல்லாம் அசத், அஞ்ஞானம். ஆகவே பிரபஞ்சம் அஞ்ஞான (அவித்தியா) ஸ்வரூபம். பிரம்மத்தை விட்டுவிட்டால் அதற்கு சத்தை ஏற்படமாட்டாது. இந்த அஞ்ஞானம் சத்வ இரஜஸ் தமஸ் ஆகிய முக்குணங்களுள்ளது. இது இரண்டுவிதம்(1)சமஷ்டி (2) வியஷ்டி சமஷ்டிப்பிரதிபிம்பிதன் சர்வஞ்ஞசர்வசக்திமானை ஈசுவரன். வியஷ்டியில் பிரதிபிம்பிதன் பிராஞ்ஞன். சமஷ்டி அவித்தை ஈசுவரனுடைய கர்ரணசரீரம் அதாவது சகல வஸ்துக்களின் காரணம். வியஷ்டி அவித்தையால் ஜீவர்களின் சரீரம் ஏற்படுகிறது. காரண சரீரம் ஆநந்தமயகோச மென்றும் சொல்லப்படும். இந்த அவித்தையினின்றும் ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், பிருதிவீ ஆக பஞ்சபூதங்கள் உண்டாயின. இவைகளின் குணங்கள் சப்த ஸ்பர்ச ரூப ரஸ கந்தங்களாம். இவைகள் முக்குணங்களுடன் கூடியிருக்கின்றன. இந்த ஐந்து சூட்சும பூதங்களினின்றும் புத்தி, மனசு, ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், பஞ்சப் பிராணன்கள், இவைகளுண்டாகின்றன. புத்தியும் ஞானேந்திரியங்களும் சேர்ந்து விஞ்ஞானமய கோசமாகின்றது. மனதும் கர்மேந்திரியங்களும் சேர்ந்து மனோமய கோசமாகின்றது. பிராணன்களும் கர்மேந்திரியங்களும் சேர்ந்து பிராணமய கோசமாகின்றது. இந்த மூன்று கோசங்களும் ஜீவனுடைய சூட்சும உபாதியாகின்றன. இந்த சூட்சம உபாதியும் சமஷ்டியில் வியவஹரிக்கிற பரமாத்மாவுக்கு சூத்ராத்மா அல்லது ஹிரணியகர்ப்பன் என்று பெயர்.

இவனையே தைஜஸனென்றும் சொல்லுவார்கள். ஜாக்கிரத்தில்போல் ஸ்வப்னத்திலும் இந்த 3 கோசங்கள் வியவஹரிக்கின்றன.

சூட்சும ஆகாசத்தினின்றும் ஸ்தூல ஆகாசாதிகள் உண்டாகின்றன. இவைகளின்றும் பிருதுவிமுதலிய லோகங்களும் மனிதன் முதலானவர்களின் சரீரங்களும் உண்டாகின்றன. சமஷ்டி ஸ்தூல சரீராபிமானி வைசுவாநரன் அல்லது விராட், வியஷ்டிஸ்தூலசரீராபிமானி விசுவன். இந்த ஸ்தூலசரீரம் அன்னமய கோசமெனப்படும். இதின் அவஸ்தை ஜாக்கிராவஸ்தை எனப்படும். இதில் ஸ்தூல சப்தாதிகளை ஆத்மா அறிகிறுன். இந்த ஸ்தூலசூட்சுமகாரணசரீரங்கள் எல்லாம் சேர்ந்து ஒருபிரபஞ்சமாகின்றது. விசுவன் முதல் ஈசுவரன் வரையில் வியவஹரிக்கிற ஆத்மாவும் ஒருவனே.

இது வேதாந்தத்தின்சாரம். இனி இந்த தைத்திரிய உபநிஷத்தில்சொல்லிய விவரத்தையும் கவனிப்போம். இரண்டாவது வல்லியின் ஆரம்பத்தில் ரிக் (வேதமந்திரம்) கொடுக்கப்பட்டிருக்கிறது. இது இந்த உபநிஷத்தின் சாரத்தைக் கொடுக்கிறது. இந்த மந்திரமானது—"பிரம்மத்தை அறிந்தவன் பரத்தை அறிகிறுன். பிரம்மம் சத்தியம், ஞானம், அநந்தம். ஹிருதயகுஹையிலிருக்கிற இதை அறிகிறவன் பிரம்மத்துடன் சகல இச்சைகளையும் அடைகிறுன்.

இந்த அநந்தத்தினின்றும் ஆகாசம் உண்டாகிறது. ஆகாசத்தினின்றும் வாயு, வாயுவினின்றும் ஜலம், ஜலத்தினின்றும் பிருதுவி, பிருதுவியினின்றும் ஓஷதிகள், ஓஷதிகளினின்றும் அன்னம் அன்னத்தினின்றும் வீரியம், வீரியத்தினின்றும் புருஷன், இவைகள் உண்டாகின்றன. சகலபிராணிகளும் அன்னத்தினின்றும் உண்டாகி அன்னத்திலேயே லயமாகின்றன. இந்த அன்னத்தை பிரம்மமாக பாவிப்பதே ஞானத்தின் ஆரம்பம். அடுத்தபடியில் அன்னத்துக்கு ஆதாரமாயும் அதற்கு ஆத்மாவாயுமிருக்கிற பிராணனை பிரம்மமாக பாவிக்கவேண்டும். இதற்கும் ஆத்மாவான மனதை பிரம்மமாக பாவித்தல்; இதை மனதிற்கும் ஆத்மாவான விஞ்ஞானத்தை பிரம்மமாக பாவித்தல்; அந்த விஞ்ஞானத்திற்கும் ஆத்மாவான ஆநந்தத்தை பிரம்மஸ்வரூபமாக பாவித்தல், இவைக ளெல்லாம் பிரம்ம பாவனைக்குச் சாதகங்களாம்.

பிரம்மம் சகலத்தையும் சிருஷ்டித்து அதில் பிரவேசித்தது. சிருஷ்டிக்குமுன் சகலமும் பிரம்மஸ்வரூபமாகவே யிருந்தது. பிரம்மமன்றியில் யாதொன்றிற்கும் சத்தையில்லை, ஜீவபிரம்ம ஐக்கி

யத்தை அறிந்தவனுக்கு யாதொருபயமுமில்லை. இந்த ஞானத்தின் தாரதம்மியத்தினால் ஆநந்தத்தில்தாரதம்மியங்கள் ஏற்படுகிறது. அந்தப் பிரம்மத்தை அறிவதினால் பிரம்மாநந்தமே அடையப்படுகிறது.

மூன்றாவது வல்லியில் இந்த உபதேசமே ஒருகதைமூலமாக ஸ்திரப்படுத்தப்படுகின்றது.

இதனால் பிரம்மஞானம்ஜடிதியில்கிடைக்கமாட்டாதென்றும், தபஸால் தான் அதை அடையலாம் என்றும் தெரியவருகிறது. முந்தின வல்லியிற்சொல்லிய விஷயமே இதில் வேறு விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. நூதன உபதேசம் ஒன்றுமில்லை.

இந்த தைத்திரியத்தில் வேதாந்தத்தின் முக்கியமான கொள்கைகள் கொடுக்கப்பட்டிருக்கிறன. பிரம்மம் சகலத்துக்கும் ஆதாரமென்பதும் அது ஸ்வயம் யாதொரு பற்றுதலன்றியிலுமிருக்கிறதென்பதும் தெளிவாய் இதில் கூறப்பட்டிருக்கிறது. பிரமம் சத்ருபம், சகலத்தின் சிருஷ்டிக்கும், ஸ்திதிக்கும் காரணம் என்பதையும், பிரம்மத்தினின்றும் ஐந்து பூதங்கள் உண்டாகிறதையும், ஆத்மாவின் ஐந்து கோசங்களையும் இந்த உபநிஷத்தில் நன்றாய் அறிகிறோம்.

சில குறைவுகளுமிருக்கின்றன. ஸ்தூல சூட்சும பூதங்களின் வித்தியாசம் இதில் கொடுக்கப்படவில்லை. மனது, புத்தி, ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள், பிராணங்கள் இவைகள் எப்படி உண்டாயினவென்பதும் இதில் தெரியவில்லை. இந்த ஐந்து கோசங்களுக்கும் பஞ்ச பூதங்களுக்கும் ஆத்மாவுக்கு மிருக்கிற சம்பந்தம் இப்படிப்பட்டது என்பதும் தெரியவில்லை. தைத்திரீயத்திலுள்ள சிருஷ்டிக்கிரமத்தைக் கவனித்துப் பார்த்தால் இந்த கோசங்கள் பிருதிவியின் விகாரங்கள் என்று தோன்றுகின்றன. இந்தகோசங்கள் பஞ்சபூதங்களின் சம்பந்த மன்றி உண்டானதாகச் சொல்லியிராததால் இவைகள் விகாரங்களாகவே யிருக்கலாம் என்று தோன்றுகிறது.

முதலாவதுபாகத்துக்கும்இரண்டாவதுபாகத்துக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை என்று சிலர் சொல்லுவது யுக்தமல்ல. பிரம்ம ஞானத்தைத் தேடுகிறவன் வேண்டிய யோக்கியதையை அவசியம் சம்பாதித்துக் கொள்ளவேண்டியது. இது முதலாவது வல்லி

யில்உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இது இரண்டாவது வல்லிக்குச் சக்கமாயிருக்கிறது.

இதர உபநிஷத்துக்களில் சொல்லிய விஷயங்களே இவ்விடத்திலும் சொல்லப்பட்டிருந்தாலும் இவைகள் மற்ற இடங்களைவிட்டு இவ்விடத்தில் ஏற்பாடாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்த கிரந்தத்தில் அடங்கிய முக்கியமான விஷயங்கள் :—

முதலாவது வல்லியில் (பிரம்ம வித்தையின் பஹிரங்கசாதனங்கள்.)

1. ஸ்ரீசங்கராசாரியாருடைய (a) மங்களாசரண சுலோகங்கள்
   (b) ஷையாருடைய உபோத்காதம் (பூர்வபீடிகை)

2. ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகளுடைய
   (a) மங்களாசரண சுலோகம்
   (b) உபநிஷத்தின் (1) அர்த்தம், (2) அதிகாரி, (3) விஷயம் (4) சம்பந்தம் (5) பிரயோஜனம் இவைகள் விஷயமாய் விசாரம்.

3 சாந்தி மந்திரம்.

4. 1-வது அனுவாகம்
   (a) தேவதைகளால் ஏற்படக்கூடிய விக்கினங்கள்
   (b) விக்கின நிவிர்த்தியின்பொருட்டு பிரார்த்தனைகள்.

5. 2-வது அனுவாகம் :—மந்திரங்களை உச்சரிக்கவேண்டிய விஷயத்தில் கவனிக்கவேண்டிய விஷயங்கள்.

6. 3-வது அனுவாகம் :—இஹபரலோக பலசித்திக்காகப் பிரார்த்தனை.
   (a) யசஸின் பொருட்டு பிரார்த்தனை
   (b) லோகம், ஜோதிஸ், வித்தை, பிரஜை, ஆத்மா இவைகளில் சம்ஹிதோபாசனை
   (c) உபாசனைக்கு வேண்டிய சரீரஸ்திதி, தேசகால விசேஷங்கள்
   (d) உபாசியத்தின் ஸ்வரூபம்
   (e) உபாசனையின் லக்ஷணம்

7. 4-வது அனுவாகம் :—புத்திமுதலியவைகள் விஷயமாய் பிரார்த்தனை

(a) புத்தி தீக்ஷ்ணியத்தின் பொருட்டு ஜபம்
(b) சரீர தார்ட்டியத்தின் பொருட்டு ஜபம்
(c) அன்னபான வஸ்திரங்களுக்காக ஹோமம்
(d) தகுந்த சிஷ்யர்களை அடைய ஹோமம்

8. 5-வது அனுவாகம் :—மத்தியமாதிகாரியை உத்தேசித்து தேவதைகளின் பிரார்த்தனை

(a) மூன்று தேவதைகளுக்குப் பிரதீகங்களான வியாஹிருதிகள்
(b) நான்காவது வியாஹிருதியாகிய பிரதீகம்
(c) வியாஹிருதிகளை லோகாதிகளாகத் தியானித்தல்

9. 6-வது அனுவாகம் :—மத்தியமாதிகாரிக்கு மனது முதலிய உபாதியுடைய பிரம்மோபாசனை.

(a) உபாசிய ஸ்வரூபம், மார்க்கம், பலன், விதி
(b) உபாசனா விஷயமாய் பிரம்ம சூத்திரச்சுருக்கம்

10. 7-வது அனுவாகம் :—மந்தாதிகாரியின்பொருட்டு பிருதிவியாதிகளை உபாதியாயுடைய பிரம்மோபாசனை.

(a) ஆதிபௌதிக, ஆத்தியாத்மிக வகுப்புகள்
(b) இவைகளின் உபாசனை

11. 8-வது அனுவாகம் :—உத்தமாதிகாரிக்கு பிரணவோபாசனை

(a) உபாஸிய ஸ்வரூபம் பிரணவம், பிரம்மம்
(b) பிரணவஸ்துதி
(c) பிரணவ விஷயமாய் விசாரம்.

12. 9-வது அனுவாகம் :—தர்மவிசாரம்

(a) உபாசகன் அனுஷ்டிக்கவேண்டியதர்மங்கள்
(b) முக்கியமான விஷயங்களில் மதபேதங்கள்

13. 10-வது அனுவாகம் :—ஞானோதயத்துக்காக ஜபிக்கவேண்டிய மந்திரம் ; திருசங்கு உபதேசம்

14. 11-வது அனுவாகம் :—ஆசாரியரால் உபதேசிக்கப்பட்ட ஞானம்முதலிய இதர விஷயங்கள்

15. 12-வது அனுவாகம் :—சாந்தி மந்திரம்.

2 வது பிரம்மவல்லி (பிரம்ம வித்தியா நிருபணம்)

1. சாந்திமந்திரம் குருசிஷ்ய லக்ஷணங்கள்

I - சிரவணப் பிரகரணம்.

2. 1-வது அனுவாகம் :—

(1) உபநிஷத்தின் சாரம் பிரம்மஞானத்தால் முக்தி

(2) பிரம்மத்தின் சத்தியஞான ஆநந்த ஸ்வரூபம்

(3) பிரம்மத்தின் அநந்தத்தைக் காட்டும் ஆகாசாதிகளின் சிருஷ்டி

(4) பிரம்மத்தின் ஹிருதய வாசத்தைக்காட்டும் அன்னமயாதிகோச விசாரம். அன்னமயகோசம்

(5) உபாசனைக்காக இதின் அவயவவிசாரம்

3. 2-வது அனுவாகம் :—

(1) அன்னமயப் பிரம்ம விஷயமாய் சுலோகம். விராட்டு விராட்டின் தியானம், பலன், அன்னமயகோச ஞானத்தால் பிரம்மஞானம்

(2) பிராணமயகோசம் உபாசனை

(3) இதின் அவயவங்கள் உபாஸியஸ்வரூபம்

4. 3-வது அனுவாகம் :—

(1) பிராணமயப் பிரம்ம விஷயமாய் சுலோகம். பிராணமயத்தின் தாற்பரியம்

(2) மனோமயகோசம் உபாசனை

(3) இதின் அவயவங்கள் உபாஸியஸ்வரூபம்.

5. 4-வது அனுவாகம் :—

(1) மனோமயப் பிரம்ம விஷயமாய் சுலோகம் மனோ மயத்தின் தாற்பரியம்

(2) விஞ்ஞான மயகோசம் உபாசனை

(3) இதின் அவயவங்கள் உபாஸிய ஸ்வரூபம்

6. 5-வது அனுவாகம் :—

(1) விஞ்ஞானமய பிரம்ம விஷயமாய் சுலோகம். ஹிரணிய கர்ப்போபாசனை விஞ்ஞானமயத்தின் தாற்பரியம்

(2) ஆநந்தமயகோசம் உபாசனை

(3) இதின் அவயவங்கள் உபாஸியஸ்வரூபம்

7. 6-வது அனுவாகம் :—

(1) ஆநந்த மயப்பிரம்ம விஷயமாப் சுலோகம். ஆநந்த மயத்தின் தாற்பரியம்.

II-மனனப் பிரகரணம்.

(2) உபதேசித்த பிரம்மத்தின் சத்பாவ விஷயமாய் சிஷ்யனுடைய பிரச்னம்

(3) குருவின் உத்தரம் சத்பாவநிரூபணம்

(1) யுக்தியால்

(1) வித்வதனுபவத்தால்

8. 7-வது அனுவாகம் :—

(1) பிரம்ம சத்பாவவிஷயமாய் சுலோகம்

(2) வேறுவிதத்தால் நிருபணம்

(3) பய அபய ஸ்திதிகள்

9. 8-வது அனுவாகம் :—

(1) பிரம்மஞான மில்லாதவனுக்கு பயமுண்டென்கிற விஷயத்தில் சுலோகம்

(2) ஆநந்தத்தின் விசாரம், பலவிதங்கள்

(3) இந்த விசாரபலன்.

10. 9-வது அனுவாகம்

(1) பிரம்மாநந்தத்தை அறிந்தவன் விஷயமாய் சுலோகம்

21 அறிந்தவனுக்குப்பலன்

III-வது பிருகுவல்லி (அந்தரங்க சாதன நிரூபணம்)

சாந்திமந்திரம்

I. நிச்சல சித்த முள்ளவனுக்கு பிரம்ம வித்தியா பிராப்தி

2. 1-வது அனுவாகம் :—

(1) பிரம்மோபதேசம் செய்யும்படி சிஷ்யனுடைய (பிருகு வின்) கேள்வி,

(2) விசாரம் செய்யும்படி குருவின் (வருணனுடைய) உத்தரம்

(3) பிரம்ம லக்ஷணம்

(4) பிருகுவின் தபஸ்

3. 2-வது அனுவாகம் :—(1) அன்னம் பிரம்மம் என்பதை விசாரித்ததின் பேரில் பிருகுவின் சந்தேகம் கேள்வி

(2) பிராணனை பிரம்மமாக அறியும்படி உத்தரம்

4. 3-வது அனுவாகம் :—

(1) முன்போலவே சந்தேகம் கேள்வி

(2) மனதைப் பிரம்மமாக அறியும்படி உத்தரம்

5. 4 வது அனுவாகம் :—

(1) முன்போலவே சந்தேகம் கேள்வி

(2) விஞ்ஞானமே பிரம்மம் என்று அறியும்படி உத்தரம்

6. 5-வது அனுவாகம் :—

(1) முன்போலவே சந்தேகம் கேள்வி

(2) ஆநந்தத்தை பிரம்மமாக அறியும்படி உத்தரம்.

7. 6-வது அனுவாகம் :—

(1) ஆநந்தமே பிரம்மம் என்னும் நிச்சயஞானம்

II. சஞ்சல சித்த முள்ளவனுக்கு ஏகாக்கிரத்தை சித்திக்கும் பொருட்டு உபதேசம் :—

(2) ஆநந்தபிரம்மத்துக்குமேல் யாதொன்றுமில்லை

(3) இதை அடையசாதகம். பலன்

8. 7-வது அனுவாகம்

(1) அன்னத்தின் ஆதரவு

(2) பிராணத்தின் அன்னரூப உபாசனை பலன்

9. 8-வது அனுவாகம் :—அப்புவின் அன்னரூப உபாசனை

10. 9-வது அனுவாகம் :—பிருதிவியின் அன்னரூப உபாசனே
11. 10-வது அனுவாகம் :—
    (1) அதிதியை ஆதரித்தல்
    (2) தானவிதி
    (3) சில்லரை உபாசனேகள்
    (4) சகலமும் பிரம்மஸ்வரூபம் என்னும் பாவனே
    (5) சர்வாத்மக பிரகடனகானம்

4-வது நாராயணவல்லி.

1. பிரம் மதத்வம்—1-வது அனுவாகம் (1-19) மந்திரங்கள்-
2. ஸ்னை பிரகரணம்—1-வது அனுவாகத்தில் 35,37,39,41, 43—46, 49—51, 55. 56—62, 66—72-வது மந்திரங்கள்
3. விபூதி கோபீ சந்தன தாரணங்கள்—1-வது அனுவாகம் 40-வது மந்திரம் 56-வது அனுவாகம்.
4. சந்தியாவந்தனம்—1-வது அனுவாகத்தில் 54, 55, 63, 64, 65, வது மந்திரங்கள், 2-வது அனுவாகத்தில் 1-வது மந்திரம, 12-ல் 6-வது மந்திரம், 23, 30—36, 61-62-வது அனுவாகங்கள்.
5. ஜபம் ,, ,, 1-ல் 23—34, மந்திரங்கள், 47-வது மந்திரம்
6. சூரிய நமஸ்காரம் 14-வது அனுவாகம்
7. சூரிய உபாசனே 37, ,, ,, ,,
8. ருத்திரஜபம், 52, 53, 57, 58 ,,
9. புருஷசூக்தம், 13, ,,
10. ஔபாசனம்—1-வது அனுவாகத்தில் 13-14-வது மந்திரங்கள் 12-ல் 10-வது மந்திரம்
11. பூஜை 1-ல் 21, 48-வது மந்திரங்கள் 12-ல் 10. 12—17 மந்திரங்கள். 16, 19, 24, 25, 26-வது அனுவாகங்கள்
12. வைகவதேவகர்மம் 59, 60 ,, ,,
13. போஜன காலவிதிகள் 38-40, 51, 69—74 ,, ,,
14. சிராவணம் முதலிய வைதிக கர்மங்கள்—1-ல் 36, 42, 52-வது மந்திரங்கள், 6-ல் 1-வது மந்திரம் 7, 65, 66-வது அனுவாகங்கள்

15. பிரம்ம வித்தியா சாதகங்கள் 78-வது அனுவாகம்.

16 இதிஹாசம், 79, „ „

17 வித்தியாஸ்துதி, 80, „ „

இந்த நாராயண வல்லியின் 80 அனுவாகங்கள், 262 மந்திரங்கள் 961-வாக்கியஙகள் இவைகளில், 57 „ 211 „ 512, மேற் சொல்லிய விஷயங்களில் உபயோகப்படுவதாகத் தெரியவருகின்றன. முதலாவது அனுவாகத்தில் 33-வாக்கியங்களடங்கிய 14 மந்திரஙகளும், இரண்டாவது அனுவாகத்தில் 12 வாக்கியங்களடங்கிய 6 மந்திரக்களும், 60 வாக்கியங்களடங்கிய 25 மந்திரஙகளுள்ள (3, 4, 5, 6, 7, 26, 27, 28, 41—48, 51, 55, 70, 72, 73, 74, 77 ஆகிய) 23 அனுவாகங்களும் ஆக 107 வாக்கியங்களடங்கிய 51 மந்திரங்கள் மட்டும் இன்ன கர்மங்களில் உபயோகப் படுகின்றனவென்பது தெரியவில்லை. இவைகளில் பரப்பிரம்ம பிராப்தி விஷயமாய் சில மந்திரங்களுண்டு.

## விசிஷ்டாத்வைதம்.

இந்த உபநிஷத்துக்கு ரெங்கராமானுஜாசாரியார் அவர்கள் வியாக்கியானம் செய்திருக்கிறார்கள். பாஷ்யகாரராலும் பாஷ்ய வியாக்கியானகாரரான வியாசாரியராலும் சில பாகங்களுக்கு அர்த்தம் செய்யப்பட்டிருக்கிறது. இதின் முதலாவதான சிக்ஷாவல்லியில் 1-வது அனுவாகத்தில்:—பிரம்ம வித்தையை சிஷ்யன் விக்கினமன்றியில் அடையும்பொருட்டு அவன் தேவதைகளுக்குச் செய்யும் பிரார்த்தனை வேதாக்ஷரங்களை பிரகாசம்செய்யும் வாயுவின் பிரார்த்தனை கூறப்பட்டிருக்கின்றன.

2-பிரம்ம வித்தைக்கு சிக்ஷை என்னும் வேதாங்க வர்ணனை

3-வித்தியாபலத்தின் பொருட்டு குரு சிஷ்யர்களின் பிரார்த்தனை லோகம் முதலியவைகல் இரகசிய உபதேசஙகள்.

4-பிரம்ம ஞானத்துக்காக பிரணவப் பிரார்த்தனை இலக்ஷ்மியின் பிரார்த்தனை அனுகூல சிஷ்யன் வேண்டுமென்பதாய் குருவின் பிரார்த்தனை,

5. வியாஹ்ருதி உபாசனே
6. பரவத்தியோபதேசம்-அர்ச்சிராதிமார்க்கம்
7- அத்தியாத்மாதிகள்
8. பிரணவஸ்துதி
9. பிரம்மவித்தைக்கு அங்கமான கர்மோபதேசம்
10. வித்தைக்குச் சாதகமான ஜபமந்திரம்
11 குருசிஷ்யர்களின் பரஸ்பர தர்மங்கள்
12 முடிவில் செய்யவேண்டிய சாந்திமந்திரம்

## 2. பிரம்மவல்லி.

விக்கின நிவிர்த்தியின்பொருட்டு சாந்திமந்திரம் கூறப்படுகின்றது.

1. பிரம்மமே உபாசிக்கத்தக்கது; அதுவே அடையப்படுகின்றது. பிரம்மம், அதின் உபாசனே, அதை அடைதல், அடையத்தகுந்தவஸ்து இந்நான்கும் இதில் கூறப்படுகின்றன. பிரம்மத்தினின்றும் ஆகாசாதிகளின் உற்பத்தி· அன்னமயகோசம். இதை சுலபமாய் தெரிந்துகொள்ளும்பொருட்டு அவயவங்களின் வர்ணனே.

2· ஆகாசம் முதல் ஸ்தூலசரீரம் வரையிலுள்ள சகல பிரபஞ்சத்துக்கும் பிரம்மம் உபாதானகாரணம்; அந்தர்யாமி ஆத்மா.

இந்த ஆத்மா ஆநந்தமயன் என்று காட்டும்பொருட்டு பிராணயாமாதிகளின் விசாரம். பிராணமயம் என்பதினுல் பஞ்சவிர்த்திகளுடைய பிராணனேயே அறியவேண்டியது· பிராணனுல் ஸ்தூல சரீரம் பூரிக்கப்பட்டிருப்பதால் பிராணமயனுடைய புருஷாகிருதி இந்த பிராணமயனுடைய அவயவங்கள்·

3· அன்னமயனுக்கு பிராணமயன் ஆத்மாவல்ல; மனேமயன் அன்னமய பிராணமயங்களின் ஆத்மா.

4· இந்த அன்னமய பிராணமய மனேமயங்களுக்கு ஆத்மா ஒன்று· அது விஞ்ஞானமயம்=ஜீவன்.

5. ஆனந்தமயன்:—பிரம்மம்.

6. ஆநந்தமயனே சத் என்று அறிவதால் மோக்ஷமும், அசத் என்று அறிவதால் சம்சாரமும் ஏற்படுகின்றது. இந்த பிரம்மத்துக்கு அந்தராத்மா இல்லே, பிறகு வித்வான் பிரம்மத்தை அடை

கிறான் என்று சொன்னவிஷயத்தில் அவன் மரித்தபிறகு பரலோகத்தை அடைகிறானா? அல்லது இவ்விடத்திலேயே பிரம்மத்தை அடைகிறானா? பிரம்மத்தின் கதி என்ன, ஸ்வரூபமென்ன, சத்பாவம் யாது; அசத்பாவம் யாது என்பதாய் ஆறு கேள்விகள் ஏற்படுகின்றன. இவைகளுக்கு உத்தரமாக பிரம்மத்தின் ஸ்ருஷ்டி விஷயமாக சங்கற்பம், ஸிருஷ்டித்ததால் அநுப்பிரவேசம், சத், தியத் முதலிய ரூபங்களாக ஆகுதல் இவைகள் கூறப்பட்டிருக்கின்றன. சேதனா சேதன சகல பிரபஞ்சமும் பரமாத்ம ஸ்வரூபம்.

7. சிருஷ்டிக்குமுன் பிரம்மம் அசத்தாக இருக்கிறது, அதாவது நாமரூபங்களால் ஸ்பஷ்டமாயிருக்கவில்லை. இந்த பிரம்மம் ஆநந்தமாயிருப்பதால் உபாசிக்கத்தகுந்தது அடையத்தகுந்தது.

8. சகல தேவதைகளும் பரமாத்ம பயத்துடன் நடக்கிறார்கள். பரமாத்மபதமே பயமற்றதாகையால் பிர்ம்மஞானமே அப்பியசிக்கத்தக்கது.

ஆநந்த விசாரம்:—பிரம்மம் ஆநந்தரூபம் என்றும்நிரூபணம். பிரம்மம் திவ்விய சரீரமுள்ளது; நாராயணன் என்ற பெயருள்ளது. ஹிருதயத்திலிருக்கிற நாராயணனை தியானம் செய்யவேண்டியது. பிரம்ம வித்துக்களுக்கு அர்ச்சிராதிமார்க்கம் ஏற்பட்டிருக்கிறது. முக்தியில் ஜீவனும் பிரம்மமும் ஒன்றாகிறதில்லை.

9. பிரம்மோபாஸனையால் சகல துக்கநிவிர்த்தி.

## பிருகுவல்லி.

**1-6-சாந்திமந்திரம்:**

பிரம்மத்தின் வேறு லக்ஷணங்களும் பிரம்மஞானத்துக்குச் சாதகமான தபஸும் கூறப்படுகின்றன. அன்னம் முதலியவைகளெல்லாம் பிரம்மமா, அல்லது அவைகளில் ஒன்றுதான் பிரம்மமா, அப்படியானால் அது எது என்ற சந்தேகம் சிஷ்யனுக்குவர, சிஷ்யனுடைய மனதை சோதிக்கும்பொருட்டு அன்னம் முதலியவைகளை தனித்தனியே பிரம்மம் என்பதாகச்சொல்லி, இவைகள் பிரம்மம் ஆகமாட்டாவென்று சிஷ்யன் அனுபவத்தில் தெரிந்துகொண்டபின் ஆநந்தமே பிரம்மம், அது ஜகத்தின் உற்பத்தி ஸ்திதிலயங்களுக்குக் காரணம் என்று குரு உபதேசம் செய்கிறார். கடைசியில் இந்த வித்தையின் பலன் கூறப்படுகின்றது.

7. இந்த வித்தைக்கு அங்கமான விரதம், அன்னத்தை நிந்திக்கக்கூடாது.

8. அன்னத்தை நிராகரிக்கக்கூடாது.

9. அன்னத்தை விசேஷமாய் அதிதிகளின்பொருட்டுச் செய்துவைக்கவேண்டும்.

10. அதிதி பூஜைக்கு அத்தியாத்ம உபாசனை, தேவ உபாசனை; இவைகளின் பலன்.

நாராயணவல்லியின் விஷயம் முன்னமேயே கொடுத்தாய் விட்டதினால் இதில் கொடுக்கப்படவில்லை.

## துவைதம்.

இந்த உபநிஷத்துக்கு ஸ்ரீமத்வாசாரியாரவர்கள் பாஷ்யம் எழுதியிருக்கிறார்கள். ஜயதீர்த்தர் என்பவர் டீகையும், வியாசதீர்த்தர் என்பவர் வியாக்கியானமும் எழுதியிருக்கிறார்கள். ஸ்ரீராகவேந்திரசுவாமிகள் கண்டார்த்தம் என்னும் வியாக்கியானத்தை எழுதியிருக்கிறார்கள். முந்தின உபநிஷத்துக்களில்போலும் இதிலும் பல வியாக்கியானங்களிலிருக்கிற விஷயங்கள் கோர்வையாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. பாஷ்யகாரர் தான் செய்யும் அர்த்தத்துக்கு ஆதாரமாக யஜுஸ்ஸம்ஹிதை, ப்ரக்விருப்தம், வியாஹிருதத்த்வம், வியாஹிருதசாரம், பிரம்மசாரம், தத்வஸம்ஹிதை, சப்தநிர்ணயம், கர்மதத்வம், பாரதம், யஜுர்விவேதம் முதலிய கிரந்தங்களினின்றும் வசனங்களை எழுதியிருக்கிறார்.

### 1. சிக்ஷாவல்லியின் சுருக்கம்.

1. பிருகு ரிஷியானவர் விக்கினநாசத்தின்பொருட்டு மித்திரன், வருணன், முதலான தேவதைகளை உத்தேசித்து பிரார்த்தனைசெய்து, சகலத்துக்கும் ஆசிரியரான பரப்பிரம்மத்தையும் ஸ்துதிசெய்து பிரார்த்திக்கிறார்.

2. பிரம்மவித்தையை அப்பியசிக்கிறவன் முதலில் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயங்கள்:—அகராதிகளை உச்சரிக்கும் கண்டம் முதலிய ஸ்தானங்கள்; உதாத்தம் முதலிய ஸ்வரங்கள்; ஹிருஸ்வாதி மாத்திரைகள்; அக்ஷரங்களை உச்சரிக்கும் விவிருதம் முதலிய பிரயத்தினம்; அக்ஷரத்துக்கும் அக்ஷரத்துக்கும் இருக்கிற சந்தி; அக்ஷரங்களின் பரம்பரை; வர்ணிக்கத்தக்கவரானதால் பகவான் வர்ண என்று பெயருள்ளவர்; ஸ்வதந்திரமிக்கிறதினால், ஸ்வர என்று பெயருள்ளவர்; மான (பிரபஞ்ச) த்தினின்றும் இரக்ஷிக்கிறதினால், மாத்திரை என்ற பெயருள்ளவர்; பலத்திலிருக்கிற

வர்; சகலத்திலும் சமபுத்தியுள்ளவரானதால் சாம என்ற பெயருள்ளவர்; அநந்தகுணமுள்ளவரானதால் சந்தான என்ற பெயருள்ளவர். இப்படி அப்பியாசி முதலில் தெரிந்துகொள்ள வேண்டியது.

3. முன்சொன்ன தேவதைகள் குரு சிஷ்யர்களின் யசஸையும் பிரம்மதேஜஸையும் விருத்திசெய்யட்டும். எங்கும் சமரூபமாயிருப்பதால் சாம என்று பெயருள்ள பரமாத்மாவால் அதிஷ்டிதமான வர்ணம், சந்தி இவைகளிலிருக்கிற பிரம்மவித்தை; பூர்வரூபம் உத்தரரூபம், சந்தி, சந்தானம் என்கிற நான்குவிதமான சம்மதையின் இரகசியம் இவைகள் சொல்லப்படுகின்றன. உலகத்தில் நாராயணன் என்கிற பெயருள்ள பரமாத்மா, சூரியாதி ஜோதியில் பிரத்தியும்னன் என்று பெயருள்ள பரமாத்மா, வித்தையில் சங்கர்ஷண என்று பெயருள்ள பரமாத்மா, பிரஜைகளிடத்தில் வாசுதேவன் என்று பெயருள்ள பரமாத்மா, ஆத்மாவினிடத்தில் அநிருத்த என்று பெயருள்ள பரமாத்மா. இந்த பரமாத்மாவின் ஐந்து ரூபங்களும் சம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கின்றன. ஸம்ஹிதையின் நான்கு ரூபங்களிலும் இருக்கிற பரமாத்மாவின் ரூபங்கள் பரமாத்மாவைப் பிரதிபாதிக்கிறபடியால் மஹாசம்ஹிதை என்கிற பெயர்கிடைத்தது. பிறகு லோகாதி ஐந்திலும் பரமாத்மரூபம் விவரிக்கப்படுகின்றது.

4. வித்தியாப்பியாசம் செய்கிறவனுக்கு புத்தி கூடிவரும்பொருட்டு வித்தை உபதேசிக்கப்படுகின்றது. புத்தி, அன்னவஸ்திராதிகள் அநேக சிஷ்யர்கள், மதுரவாக்கு, யசஸ் உத்தமகுணங்களைக்கேட்குதல், சம்பாதித்த ஞானத்தின் இரக்ஷணை. இவைகளின்பொருட்டுப் பிரார்த்தனை.

5. பரமாத்மாவை அடையும்பொருட்டு பரமாத்மாவைப் பிரதிபாதிக்கும் வியாஹ்ருதிகளின் உபாசனை பரமாத்மா எப்போதும் இருக்கிறவரானதால் பூ: எனப்படுகிறார்; அனந்தவீரியமுள்ளவரானதால் புவ: எனப்படுகிறார்; உத்தமமான பலமிருப்பதால் சுவ: எனப்படுகிறார். இந்த வியாஹ்ருதிகளால் பரமாத்மா வியாஹ்ருத் அதாவது பிரதிபாதிக்கப்படுவதால் பரமாத்மா வியாஹ்ருதி சப்தத்தால் கூறப்படுகிறார். அவர் குணபூரணரானதால் மஹ: எனப்படுகிறார். வாசுதேவர் மத்தியதேகம்; அநிருத்தர் சிரஸ்; பிரத்தியும்னர் கை; சங்கர்ஷனர் கால்; பூராதி நான்கு வியாஹ்ருதிகளால் பிரதிபாதிக்கப்பட்ட பகவானுடைய நான்கு ரூபங்களும் லோகம்;

ஜோதிஸ், வேதம், பிராணன், இவைகளில் எப்படியிருக்கின்றன என்பதின் விவரம்.

6. பூ: புவ: சுவ: மஹ: இந்த நான்கு வியாஹிருதிகளாலும் பிரதிபாதிக்கப்பட்ட பரமாத்மாவின் அநிருதாதி நான்கு ரூபங்களும் சரீரத்தில் எவ்விடத்தில் உபாசிக்கத்தக்கவை என்பதின் விவரம்.—அதாவது ஹிருதயம்' உச்சந்தலைக்குக் கீழ்பாகம், மயிர் நுனி, மஸ்தகத்தின் மேல்பாகத்தில் நடுப்பாகம். பரமேசுவரனுடைய மூர்த்திகளிருக்குமிடம். பிருதிவி, வாயு, சூரியன், சதுர்முகப்பிரம்மா, இவைகள் முக்கிய ஸ்தானங்களானாலும் பரமாத்மா வியாபகர். சத்தியம் முதலிய அவருடைய குணங்கள் கூறப்படுகின்றன.

7. வேதவித்தையை அடையும்பொருட்டு முதலில் தெரிந்துகொள்ளவேண்டிய வித்தை. பிருதிவி, அந்தரிக்ஷம், ஸ்வர்க்கம், பூர்வம் முதலிய நான்குதிக்குகள், ஆக்கினேய முதலிய நான்கு அவாந்திரதிக்குகள், அக்கினி, வாயு, சூரியன், சந்திரன், நக்ஷத்திரங்கள், ஜலம், ஓஷதி, மரம், ஆகாசம் இவைகளி லெல்லாம் பரமாத்மாவின் அநிருத்தாதி ரூபங்களாயிருக்கின்றன. அந்தரூபங்களும் அந்த பிருதிவி முதலிய பெயர்களால் கூறப்படுகின்றன. தேகத்தில் பிராணன் முதலியஐந்திலும், கண், காது, மனது, வாக்கு, த்வக்கு இந்த ஐந்துஞானேந்திரியங்களிலும் பகவானுடைய நாராயணாதி ரூபங்களிருக்கின்றன. மாம்சாதிகளிலும் இந்த ரூபங்களிருக்கின்றன. ஆகவே, பிருதிவீ முதலிய ரூபபதார்த்தங்களிலும் நாராயணன் முதலிய ரூபங்களிருக்கின்றன.

8. பிரணவோபாசனை. பரமாத்மா குணபூர்ணரா யிருப்பதால் ஓம் சப்தத்தால் கூறப்படுகிறார். ஓம் குணபூர்ணம் அப்படியே மத்சியாதி ஸ்வரூபமும் ஓம் சப்தவாச்சியம். ஓம் சப்தத்தை உச்சரித்து சகலகர்மங்களையும் ஜனங்கள் பரமாத்மாவுக்கு அர்ப்பணம் செய்வதினால் அவர் ஓம் பதவாச்சியமா யிருக்கிறார்.

9. பிரம்ம வித்தையைக் கற்கிறவன் அவசியம் அனுஷ்டிக்க வேண்டிய நியமங்கள் சத்தியவசனம், சத்திய அனுஷ்டானம், அத்தியயனம் செய்தல், செய்துவைத்தல், இந்திரிய நிக்கிரகம், பக்வநிஷ்டை, அக்கினி ஆதானம், அக்கினிஹோத்திரானுஷ்டானம், அதிதிபூஜை, பிரஜோத்பத்தி, இரக்ஷணை, உபநயனம், இவைக

ளில்இன்னது முக்கியம் என்பதாய்மதபேதங்கள். கிரியாரூபமான தபஸ் மிகவும் சிரேஷ்டம்.

10. அத்தியயனம் செய்தல், செய்துவைத்தல் இதின்விஷய மாய் திருசங்குவின் உபதேசம்.

11. வேதாத்தியயனம் செய்துவைத்த பிறகு குருசொல்லிய யமநியம விதிகள்.

12. கடைசியிற் சாந்திமந்திரம்.

## 2–பிர்ம்மவல்லி.

பிரம்ம வித்தையை சொல்லும் பொருட்டு நடுவில் வரக் கூடிய விக்கினங்களை நிவிர்த்திப்பதற்காக சாந்தி மந்திரம்.

1-வது அனுவாகம்:—முக்கியமான பிரம்மவித்தை. பரமாத் மாவை அறிகிறவன் பரமேசுவரனை அடைகிறான். (1) இந்தபரமாத் மாவின் லக்ஷணமென்ன (2) அவரை எங்கே அதாவது தன்னுடைய ஹிருதயத்திலா அல்லது வேறுஇடத்திலா அறியலாம் (3) அவ ரை அடைதல் என்றால் என்ன அவரும்தானும் ஒன்றுதலா அல் லது அவரிடம்போய் ஆநந்தத்தை அனுபவித்தலா. இந்த மூன்று சங்கைகளுக்கும் உத்தரம் சொல்லும்பொருட்டு सत्यं ஸத்யம் முதல் विपश्चिता விபஶ்சிதா வரையிலுள்ள ரிக்குமந்திரம் கூறப்பட்டிருக் கிறது.

எது சத்தியமாயும் ஞானஸ்வரூபமாயும், அநந்தமாயு மிரு க்கிறதோ அது பிரம்மம். இது முதலாவது சங்கைக்கு உத்தரம் கூறுகிறது.

எந்த அதிகாரி சத்தியம் முதலிய குணங்களுடன் கூடின பரமாத்மா தன்னுடைய ஹிருதயத்தி லிருக்கிற அல்ப ஆகாசத்தி லிருக்கிறதாக அறிகிறானோ அவன் பரமாத்ம ஞானி. அவன் பர மாத்மாவுடன் கூட இருந்து தன்னுடைய யோக்கியதைக்குத் தக்க படி ஆநந்தத்தை அனுபவிக்கிறான். இதனால் இரண்டாவது மூன் றாவது சங்கைகளுக்கும் உத்தரம் கூறலாயிற்று.

இனி சிருஷ்டிக்கிரமம் கூறப்படுகிறது. பரமாத்மாவினிட மிருந்து ஆகாசம் உண்டாயிற்று. ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவீ, மரம், அன்னம், மனுஷ்யன், இவைகளில் முன்னிருப்பதி னின்றும் பின்வருவது உண்டாயிற்று, இது சிருஷ்டிகிரமம், இவ் விடத்தில் ஆகாசாதி சப்தங்களால் (1) ஐந்து மகா பூதங்கள் (2) இவைகளின் அபிமானி தேவதைகள், (3) அந்ததேவதைகளின்

தேகங்கள் (4) அந்த தேகங்களி லிருந்துகொண்டு நியமனம் செய்யும் ஹரி இந்நான்கையும் அறியவேண்டியது.

ஜீவனுடைய சரீரத்தில் காணப்படுகிற பரமாத்மாவின் அநிருத்தன் என்கிற ரூபம் அன்னமயம் எனப்படும்.

இந்த அநிருத்தன் என்கிற பரமாத்ம ரூபத்தில் பரமாத்மாவின் பிரத்தியும்னன் என்கிற யாதொரு ரூபமுண்டோ அதுபிராணமய மெனப்படும்.

இந்த பிரத்தியும்னன் என்கிற பரமாத்மரூபத்தில் பரமாத்மாவின் யாதொரு சங்கர்ஷண என்கிற ரூபம் காணப்படுகிறதோ அது மனோமய மெனப்படும்.

இந்த சங்கர்ஷணத்தில் பரமாத்மாவின் வாசுதேவன் என்கிற யாதொரு ரூபமுண்டோ அது வாசுதேவ என்று பெயருள்ள விஞ்ஞானமய மெனப்படும்.

இந்தவாசுதேவ ரூபத்தில் பரமாத்மாவின் நாராயண என்கிற யாதொரு ரூபமுண்டோ அது ஆனந்தமய மெனப்படும்.

இவ்விதமாய் அன்னமய பிராணமய மனோமய விஞ்ஞானமய ஆநந்தமய ஆகிய இவ்வைந்தும் பிரம்மத்தின் ரூபங்களேதவிர ஜீவனுடைய ரூபங்களல்ல.

அஞ்ஞானியால் பரமாத்மா அடையப் படுகிறதில்லை. ஞானிகளால்தான் அடையப்படுகிறார். ஞானிகளிலும் இன்னார் அடைகிறார்கள் என்றும் இன்னார் அடையவில்லை என்றும் நியமமில்லை, ஆனால் அவர்களெல்லோரும் ஒரே விதமான பரமாத்மாவை அடைகிறார்கள் என்பதுமில்லை. அவரை விசேஷமாய் அடைகிறவர் பிரம்மதேவரே. மற்றவர்கள் தாங்கள் தாங்கள் யோக்கியதைக்குத் தக்கபடி அடைகிறார்கள்.

பரமாத்மாவின் ஞானம் எவனுக்கு உண்டா யிருக்கிறதோ அவன்தான் பரமாத்மாவை அடைகிறான் என்று சொல்லப்பட்டது. அந்த ஞானம் எப்படிப்பட்டதாக இருக்கவேண்டும்? லோகத்தை உற்பத்தி செய்தல் அதில் பிரவேசித்தல் சகலதேவதைகளையும் தன்னுடைய பயத்தில் வைத்தல், முக்தியைக் கொடுத்தல், இப்படிபட்ட பரமேசுவரனுடைய குணங்களை அறிவதே பரமாத்ம ஞானமாம்.

பிரளயகாலத்தில் நாராயணன் இச்சித்ததானது:— தான் முதலில் வாசுதேவன் முதலிய ரூபமாக விளங்கவேண்டும். தான் நியமனம் செய்யும்படியான ஜகத்து இருக்கவேண்டும். பிறகு இலட்சுமி பிரம்மதேவர் முதலானவர்கள் ஜகத்தை நியமனம் செய்கிறதினால்தான் வெகு ரூபங்களை தரிக்கிறவனாக ஆகவேண்டும். பிரளயகாலத்திலிருந்த நாராயணன் தன்னுடைய உதரத்தினின்றும் ஜகத்தை உற்பத்தி செய்தார். பிறகு வாசுதேவமுதலிய ரூபங்களை தரித்தார்; பிறகு மற்றபதார்த்தங்களைச் செய்தார்.

ஜகத்தை நியமனம் செய்யும் பொருட்டு பரமாத்மாதானே அநிருத்த முதலிய அநேக ரூபங்களைத் தரித்து சிருஷ்டியில் பிரவேசித்தார். இலட்சுமி, பிரம்மதேவர். முக்கியப்பிராணன் இவர்களிடமிருந்து இவர்களை நியமனம் செய்கிறார். சப்தத்தால் அவர்வர்ணிக்கத்தக்கவரல்ல; சர்வத்துக்கும் ஆசிரயமாயிருக்கிறார், சர்வத்தையும் அறிகிறார். சகல நற்குணங்களுள்ளவர், எங்குமிருக்கிற பரமாத்மா அமங்கள பதார்த்த சம்பந்தமன்னியிலேயே மங்களஸ்வரூபமாகவே யிருக்கிறார்.

அஞ்ஞானிகளுக்குத் தெரியாதவராயும், ஜீவனுடைய அல்பஞ்ஞானம், அல்பசுகம் இவைகளற்றும், வேதத்தால் பூர்ணமாய் வர்ணிக்கப்படாமலும், வேறு ஒன்றையும் ஆசிரயிக்காமலும் இப்படி பரமாத்மா இருக்கிறார் என்பதாய் எந்த யோக்கிய புருஷனுக்கு ஞானமுண்டாகிறதோ அவன் பயமற்றவனாய் பிரமாத்மாவினிடம் போகிறான். ஜீவர்கள் பரஸ்பரம் வெவ்வேறாயிருப்பது போல் விசுவதைஜஸ முதலிய பரமாத்மாவின் ரூபங்களும் வெவ்வேறு என்று நினைக்கிறவன் அந்தந்தமஸ் என்கிற பயங்கரமான நரகத்தை அடைகிறான். வேதத்திலேயே முழுகியிருக்கிறவர்களை சம்சாரபயத்தில் பரமாத்மாவைக்கிறார்.

பரமாத்மாவின் பயத்தால் வாயு அபிமானி தேவதை சூரியன், அச்கினி, இந்திரன், யமன், இவர்கள் தங்கள்தங்கள் வியாபாரங்களைச் செய்கிறார்கள்.

இனி பிறருடைய யோக்கியதைக்குத் தக்கபடி ஆநந்தரூப முக்தியைக் கொடுக்கும் பரமாத்மாவின் மாஹாத்மியத்தைச் சொல்லுகிறார். திரேதாயுகத்தின் சம்பந்தத்துடன் கூடினபிருதிவீபதியானவன் துக்கமற்ற, நாசமற்ற ஆநந்தத்துடன் கூடியும், அத்தியயனத்தின் பூர்ணபலத்துடன் கூடியும், பலிஷ்டனாயும் இருந்தால், இப்ப

டிப்பட்டவனுடைய ஆநந்தத்தை ஒரு ஆநந்தமாக வைத்துக்கொண்டால், இதின் நூறு மடங்குள்ளது மனுஷிய கந்தர்வாநந்தம். மனுஷியகந்தர்வன், தேவகந்தர்வன், பிதுருக்கள், அஜானஜ தேவர்கள், கர்மதேவர்கள், தாத்விக தேவர்கள், தக்ஷன், இந்திரன், ருத்திரன், பிரம்மதேவர் இவர்களில் முன்னுலிருக்கிறவருடைய ஆநந்தத்தின் நூறுமடங்கு சேர்ந்து பின்னால் இருக்கிறவருடைய ஒரு ஆநந்தமாகிறது.

கனிஷ்ட ஜீவர்களான மனிதர்களையு நியமனம் செய்கிறவரும், சிரேஷ்டஜீவர்களான சூரியன் முதலானவர்களை நியமனம் செய்கிறவரும் பிரம்மதேவர் முதலானவர்களுக்கு ஸ்வருபாநந்தமாகிற முக்தியைக் கொடுக்கிறவரும் விஷ்ணுவே·

பரமாத்மாவின் சகலருபங்களிலும் பேதமில்லை என்று எவன் அறிகிருனே, மனிதன்முதல் பிரம்மதேவர்வரையில் அவரவருடைய யோக்கியதைக்குத் தக்கப்படி பரமாத்மாவின் பிரசாதத்தால் ஆநந்தம் கிடைக்கிறது என்று எவன் அறிகிருனே, அவன் பிராரப்த கர்மத்தின் அனுபவத்தை முடித்து, இந்த கடைசியான தேகத்தில் சுஷும்ன என்னும் நாடிவழியாய் வெளிப்பட்டு அர்ச்சிராதி மார்க்கமாய் தன்னுடைய யோக்கியதைக்குத் தக்கபடி பிரம்மதேவரிடமாவது பரமாத்மாவிடமாவதுபோய் அவ்விடமிருந்து பிரளயகாலத்தில் பிரம்மதேவருடன் அன்னமயம்என்கிற பிருதிவீ ஜலமாகிற அநிருத்தனிடம் போகிருன். அக்கினி என்கிற பிரத்தியும்னனிடம் போகிருன். மனமென்கிற ஸங்கர்ஷனிடம்போகிருன்· மஹத் தத்வத்தி லிருக்கிற வாசுதேவரிடம் போகிருன். பிரகிருதியிலிருக்கிற நாராயணனிடம் போகிருன். இவ்விதமாக பரமாத்மாவின் ஐந்து ருபங்களையும் பிரத்தியக்ஷமாய் தர்சித்து சம்சாரபயத்தினின்றும் விடுபட்டவனுய் ஆகிருன்.

நான் புண்ணியம் செய்யவில்லையா, பாபம் செய்திருக்கிருனே, அதினுல் அநிஷ்டபலன் கிடைத்திருக்கிறதா, இப்படிப்பட்ட பச்சாத்தாபத்தால் பீதி முக்தனுக்கு உண்டாகிறதில்லை· முன் சொன்னபடி பரமாத்மாவை பிரத்தியக்ஷமாய் அறிகிறவனுடைய சஞ்சிதமான புண்ணி பாபகர்மங்கள் மித்திரனையும் சத்துருவையும் அடைந்து விடுகின்றன. ஆகையால் முன் சொன்னபடி அறிந்த முக்தன் பரமாத்மாவை அடைவதில் சந்தேகமில்லை. இப்படி அறிகிறவனுக்கும் இப்படியே பலன் கிடைக்கிறது இவ்விதமாக வருணனுக்கு பிரம்மவித்தையை பிரம்மதேவர் சொல்லி முடித்தார்.

## 3. பிருகுவல்லியின் சுருக்கம்.

பிரம்மதேவர் முதலில் விக்கின நாசத்தின் பொருட்டு சாந்தியைச் சொல்லுகிறார்.

முந்தின பிரம்மவல்லியில் பிரம்மத்தின் ஐந்து ருபங்களான அன்னமய பிராணமய, மனோமய விஞ்ஞானமய ஆநந்தமயமாகிய இவைகளை உபாசிக்கவேண்டு மென்று சொல்லப்பட்டது. இதை அனுசரித்து பிருகு வருணன் இவர்களுடைய சம்பாஷணை இப்போது கூறப்படுகின்றது. வருணனுடைய பிள்ளையாகிய பிருகு தன் பிதாவைப்பார்த்து பிரம்மத்தைச் சொல்லும்படி கேட்டான். அப்போது வருணன் சொன்னதாவது:— அன்னமய, பிராணமய, சக்ஷுர்மய, சுரோத்திரமய, மனோமய, வாங்மய, விஞ்ஞானமய, ஆநந்தமய, ஆகிய பரமாத்மாவின் எட்டு ரூபங்களை மனன நிதித்தியாசன ருபவிசாரத்தால் அறியவேண்டியது. இந்தருபங்கள் ஜகத்தின் உற்பத்தி முதலியவைகளுக்குக் காரணமாகின்றன.

பிரம்ம தேவர்முதலான பிராணிகள் இவைகளி னின்றும் உண்டாகி இவைகளில் ஸ்திதி அடைந்து இவைகளிலேயே லயமடைகிறார்கள். இவ்விஷயத்தில் ஞானமுண்டாகும்பொருட்டு சிரவணமனன நிதித்தியாசனங்களைச் செய்யவேண்டும். ஞானமடைந்தவன் முக்தி அடைந்து பரமாத்மாவினிடம் தங்குகிறான். அன்னமென்கிற பகவானால் இரக்ஷிக்கப்பட்டு, அவரால் ஜீவித்து கீர்த்தியை அடைகிறான்.

மோக்ஷ சுகத்தின் இச்சை யிருக்கும்பக்ஷத்தில் பகவானிடத்தில் இன்ன தோஷமிருக்கிறது, இன்ன குணமில்லை, இன்ன குணம் குறைவாக இருக்கிறது, இப்படிப்பட்ட நிந்தையைச் செய்யலாகாது. இது ஞானத்தின் விரதம்.

பகவானை உபாசிக்கிற விஷயத்தில் இரண்டாவது பிரகாரத்தைச் சொல்லுகிறார். பிராணன் என்கிற பகவத்ரூபம் போக்கியம். சரீரம் என்கிற பகவத் ரூபம் போக்தா சரீரம் என்கிற பகவத்ரூபம் போக்கியம். ஆகையால் பிராணன், சரீரம், இவ்விரண்டு ரூபங்களும் பரமாத்மாவின் அன்னமென்ற ஒரே ரூபம். இப்படி அறிகிறவன் முக்தனாகி பரமாத்மாவினிடம் சேருகிறான். அன்னமென்கிற பகவானால் இரக்ஷிக்கப்பட்டு, அவரால் ஜீவித்து, கீர்த்தியை அடைகிறான்.

அப்படியே அன்னமென்ற பரமாத்மாவின் உபதேசத்தை அயோக்கியனுக்குச் செய்யக்கூடாது. இது சுகத்தை இச்சிக்கிற ஞானியின் விரதம். அப்பு என்கிற பகவத் ரூபமும் ஜோதி என்கிற பகவத் ரூபமும் முன்போலவே போக்தாவாயும் போக்கியமாயு மிருக்கிறதினால் இவைகளும் அன்ன மென்ற ரூபமும் எல்லாம் ஒன்றே. இதை அறிகிறவனுக்கும் பலம் முன்போலவே.

அப்படியே அன்னமென்ற பகவான் குணங்களாலும் கர்மங்களாலும் பூர்ணம் என்பதாய் சத்ஜனங்களுடைய சபையில் வியாக்கியானம் செய்யவேண்டும். பிருதிவீ என்கிற பகவத் ரூபமும் ஆகாசமென்ற பகவத் ரூபமும் முன்போலவே போக்கியமாயும் போக்தாவாயு மிருப்பதால் இவைகளும் அன்னரூபமும் ஒன்றே. இந்த ஞானபலனும் முன்போலவே. வித்தியாப்பியாசத்துக்காக குருவின் வீட்டுக்கு வருகிறவனுக்கு இடமில்லை என்று சொல்லக்கூடாது. ஞான இச்சையுள்ளவன் குருசேவை செய்து, சிரவணம் செய்து, மனனத்தால் அன்னமென்ற பகவான் பூர்ணராயிருக்கிறார் என்பதாய் உபாசித்து அவரை அடையவேண்டியது. இப்படி உபாசிக்கிறவனுக்கு பகவானுடைய பிரத்தியக்ஷ ஞானமுண்டாகிறது.

அன்னமயாதி எட்டு ரூபங்களையும் ஸ்பஷ்டமாய் பிரத்தியக்ஷமாய் அறிகிற சதுர்முக பிரம்மதேவர் முக்தராகி, அன்னமய அநிருத்தர் என்கிற பரமாத்மாவிடம், பிராணமய பிரத்தியும்ன மனோமயசங்கர்ஷண, விஞ்ஞானமய வாசுதேவ, ஆநந்தமய நாராயண, சக்ஷுர்மய, சுரோத்திரமய, வாஸ்மய,பரமாத்மாவினிடம் சென்று இச்சிக்கப்பட்ட சகல போகங்களையும் அனுபவித்து இச்சித்த ரூபங்களை தரித்து, சுவர்க்காதி லோகங்களில் சஞ்சரித்து, பகவத் குணங்களை சாமவேதத்தால் கானம் செய்துக்கொண்டிருக்கிறார்

## ஷட்வித தாற்பரிய லிங்க நிருபணம்.

உபநிஷத்துக்களின் தாற்பரியம் ஷட்வித லிங்கங்களால் நிச்சயிக்கப்பட வேண்டியது. முந்தின ஈசாவாஸியாதி உபநிஷத்துக்களில் சொல்லியபடி இந்த தைத்திரீயத்துக்கும் அவைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

1-வது :— ब्रह्मविदाप्नोति परं ஒம் ஹவிக் கூஹ்ணாதிவாமு = (அதாவது:—பிரம்மத்தை அறிகிறவன் பரப்பிரம்மத்தை அடைகிறான்) என்கிற (II - 1) வாக்கியம் உபக்கிரமலிங்கம்.

सयश्चायं पुरुषे यश्चासावादित्ये सएकः
ஸயச்சாயம் புருஷே யச்சாஸாவாதித்யே ஸஏக:

(அதாவது:—இந்த புருஷனிடத்திலிருக்கிறவனும் ஆதித்திய னிடமிருக்கிறவனும் ஒருவனே) என்கிற (II - 8) வாக்கியத்தில் உபசம்ஹாரலிங்கம் காணப்படுகின்றது.

2. भीषास्माद्वातःपवते பீஷாஸ்மாத்வாத:பவதே

(அதாவது:—பரமாத்மாவின் பயத்தினால் காற்று வீசுகிறது) என்கிற (II-8) வாக்கியம் அப்பியாச லிங்கம்.

3. यतोवाचोनिवर्त्तन्ते अप्राप्यमनसासह
யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமனஸாஸஹ

அதாவது:—மனதுடன் வாக்கும் எதை அடையாமல் எதி னின்றும் திரும்பிவிடுகின்றதோ) என்கிற (II-4) வாக்கியத்தால் மனம் வாக்கு இவைகளால் உபலக்ஷிதமான சகல பிரமாணங்க ளுக்கும் விஷயமல்ல என்பதான அபூர்வதா லிங்கம் விளங்குகிறது.

4. सोऽश्नुते सर्वान्कामान् सहब्रह्मणाविपश्चिता
ஸோऽஸ்நுதே ஸர்வாந்காமாந் ஸஹப்ரஹ்மணாவிப
ச்சிதா (அதாவது :—ஞானியானவன் ஞானரூப பிரம் மத்துடன் ஒன்றாகி சகல இச்சைகளையும் அடைகிறான்) என்கிற (II-1) வாக்கியமுதல் II-7-வது அனுவாகம் வரையிலுள்ள வாக்கி யங்களால் பலம் என்கிற லிங்கம் கூறப்படுகின்றது.

5. यदुदरमंतरं कुरुते अथतस्यभयंभवति
யதுதரமந்தரம் குருதே அததஸ்யபயம்பவதி

(அதாவது :—எவன் எவ்வளவு அற்ப பேதத்தைப் பார்த்தாலும் அவனுக்கு பயம் உண்டாகிறது.) என்கிற (II-7) வாக்கியத்தால் பேத ஞானியின் நிந்தையும்,

गायन्नास्तेहि तत्साम अहमन्नमहमन्नमहमन्नम्
காயந்நாஸ்தேஹி தத்ஸாம அஹமந்நமஹமந்நமஹமந்நம்

अहमन्नादोऽहमन्नादोऽहमन्नादः
அஹமந்நாதோऽஹமந்நாதோऽஹமந்நாத:

அதாவது:—வித்வான் அடியிற்கண்ட சாமத்தை கானம் செய்து கொண்டு இருக்கிறார்:— எல்லா போக்கியமும் நானே, எல்லா

போக்கியமும் நானே, எல்லா போக்கியமும் நானே, சகத்தையும் புஜிக்கிறவன் நானே, புஜிக்கிறவன் நானே புஜிக்கிறவன் நானே.) என்கிற (III - 10) வாக்கியத்தால் பகவன்னுமஸ்துதியும் அர்த்தவாத லிங்கத்தையும் கூறுகிறது.

ம். यतोवाइमानिभूतानि जायन्ते
யதோவா இமாநிபூதாநி ஜாயந்தெ

அதாவது:—எதினின்றும் இந்த பிராணிகள் உண்டாயினவோ என்கிற வாக்கியமும்

तत्सृष्ट्वातदेवानुप्राविशत् தத்ஸ்ருஷ்ட்வா ததெவாநுப்ராவிஶத்

அதாவது:—அதை சிருஷ்டித்து அதையே அனுப்பிரவேசம் செய்தது)·

என்கிற (II-6) வாக்கியமும் இன்னும் சில வாக்கியங்களும் காரிய காரணங்களின் அபேதத்தை போதிக்கும் சிருஷ்டி வாக்கியங்களாலும், பிரவேசிக்கிறவன், பிரவேசிக்கப்பட்டது பிரவேசம் இவைகளின் அபேதத்தைப் போதிக்கும் பிரவேச வாக்கியத்தாலும் கடைசியான உபபத்தி ஆகியலிங்கம் கூறப்பட்டது.

இந்த லிங்கங்களால் தைத்திரீய உபநிஷத்தின் கருத்து அத்வைதத்திலிருக்கிறது என்று தெரியவருகிறது.

(ஸ்ரீ சங்கராசாரியாருடைய உபோத்காதம்)

ओंनमः परमात्मने ॥
ஓம் நமஃபரமாத்மநெ ॥

यस्माज्जातं जगत्सर्वं यस्मिन्नेव प्रलीयते ।
येनेदं धार्यते चैव तस्मै ज्ञानात्मने नमः ॥
யஸ்மாஜ்ஜாதம் ஜகத்ஸர்வம் யஸ்மிந்நெவ ப்ரலீயதெ ।
யெநெதம் தார்யதெ செவ தஸ்மை ஜ்ஞாநாத்மநெ நமஃ

यस्मात् யஸ்மாத்=எந்த அபின்ன நிமித்த உபாதான காரணத்தினின்றும்

सर्वं ஸர்வம்=சமஸ்தமான
जगत् ஜகத்=ஜகத்தானது
जातं ஜாதம்=உண்டாயிற்றோ
यस्मिन्नेव யஸ்மிந்நெவ=எந்த காரணத்திலேயே
प्रलीयते ப்ரலீயதெ=லயமாகிறதோ
च ச=மேலும்

येनएव யெநவை=எந்த காரணத்தினலேயே
इदं இதம்= இந்த ஜகத்தானது
धार्यते தார்யதே=தரிக்கப்படுகின்றதோ
तस्मै தஸ்மை=அந்த
ज्ञानात्मने ஜ்ஞாநாத்மநே=ஞானஸ்வரூப ஆத்மாவுக்கு
नमः நம:= நமஸ்காரம்,

(ஆநந்தகிரி):—யஜுர்வேத சாகையைச் சேர்ந்த தைத்திரீய உபநிஷத்துக்கு வியாக்கியானம் செய்ய இச்சித்த பகவான் பாஷ்யகாரர் பிரம்மத்தை மந்த புத்திமான்கள் சாமான்னியமாய் தெரிந்துக் கொள்ளும் பொருட்டு அதி ஜகத்தின் ஜன்மாதிகளுக்குக் காரணமென்பதாய் தடஸ்த லக்ஷணத்தாலும் விசேஷமாய்த் தெரிந்துக் கொள்ளும் பொருட்டு சத்தியஞானம் முதலிய ஸ்வரூப லக்ஷணையாலும், நமஸ்கார பலத்தால் சுருக்கமாய்க் காட்டுகிறார். ஞானாத்மனே என்கிற பதத்தால் ஸ்வரூபலக்ஷணமும் மற்ற பதங்களால் தடஸ்த லக்ஷணமும் சித்திக்கின்றன.

यैरिमे गुरुभिः पूर्वं पदवाक्यप्रमाणतः ।
व्याख्याताः सर्ववेदान्तास्तान्नित्यं प्रणतोऽस्म्यहम् ॥ 2 ॥
யைரிமே குருபி: பூர்வம் பதவாக்யப்ரமாணத:
வ்யாக்யாதா: ஸர்வவேதாந்தாஸ்தாந்நித்யம் ப்ரணதோஸ்ம்யஹம் ॥2॥

यैः யை:=எந்த
गुरुभिः குருபி:=குருக்களால்
पूर्वं பூர்வம்=முன்
पदवाक्य प्रमाणतः பதவாக்யப்ரமாணத:= வியாகரணம், மீமாம்சை, அனுமானுதிப் பிரமாணம் அதாவது நியாயம் இவைகளின் விவேசனத்தால்

इमे இமே= இந்த
सर्ववेदान्ताः ஸர்வ வேதாந்தா:=சமஸ்தமான வேதங்களும்
व्याख्याताः வ்யாக்யாதா:= வியாக்கியானம் செய்யப்பட்டனவோ
तान् தாந்=அந்த குருக்களை
अहं அஹம்=நான்
नित्यं நித்யம்=எப்போதும்
प्रणमामि ப்ரணமாமி=நமஸ்கரிக்கிறேன்.

ஆ:—வித்தியா பிராப்திக்கு குருபக்தி அந்தரங்க சாதனமாயிருப்பதால் அதை பிரசித்தம் செய்யும்பொருட்டு குருவை நமஸ்கரிக்கிறார்.

तैत्तिरीयकसारस्य मयाऽऽचार्यप्रसादतः ।
विस्पष्टार्थरुचीनां हि व्याख्येयं संप्रणीयते ॥ 3 ॥

தைத்திரீயகஸாரஸ்ய மயாऽऽசார்யப்ரஸாததः ।
விஸ்பஷ்டார்த்தருசீநாம் ஹி வ்யாக்யேயம் ஸம்ப்ரணீயதே 3

तैत्तरीयकसारस्य தைத்திரீயகஸாரஸ்ய = தைத்திரீய சாரத்தின்

विस्पष्टार्थरुचीनां விஸ்பஷ்டார்த்தருசீநாம் = சந்தேகமற்ற அர்த்தத்தில் எவர்களுக்கு பிரிய முண்டோ அவர்களுடைய உபகாரத்தின்பொருட்டு

मया மயா = என்னால்

आचार्यप्रसादतः ஆசார்யப்ரஸாதத: = குருப்பிரசாதத்தால்

इयं இயம் = இந்த

व्याख्या வ்யாக்யா = வியாக்கியானம்

संप्रणीयत ஸம்ப்ரணீயதே = செவ்வையாகச் செய்யப்படுகிறது

கு:—இந்த சுலோகத்தில் தான் செய்யப்போகிற வியாக்கியானத்தைப்பற்றிச் சொல்லுகிறார்

சங்கரபாஷ்யம்.

(1) உபநிஷத்தின் குறிப்பான விஷயம் பிரம்மவித்தை முந்தின கிரந்தத்தில் (அதாவது) யஜுர் வேதத்தின் பிராமண பாகமாகிற கர்மகாண்டத்தில்) பாபங்களை நிவர்த்திக்கும் பொருட்டு ஏற்பட்ட நித்திய கர்மங்களும் சுவர்க்கம் முதலிய பலன்களை இச்சிக்கிறவர்களுக்கு காம்மிய கர்மங்களும் சொல்லப்பட்டன. இப்போது ஞானகாண்டமாகிற இந்த உபநிஷத்தில் கர்மானுஷ்டானங்களுக்கு எது காரணமோ அதை நிவர்த்திக்கும்பொருட்டு பிரம்மவித்தை ஆரம்பிக்கப்படுகின்றது. கர்மத்துக்குக் காரணம். காமம் அதாவது இச்சை இது கர்மானுஷ்டானத்தில் பிரவிர்த்தியை உண்டு பண்ணுகின்றது. அடையவேண்டிய எல்லாக் காமங்களையும் அடைந்தவனுக்கு காமமில்லை. அது இல்லாதபோது தன்னுடைய ஆத்மாவினிடத்திலேயே தான் இருப்பதால், கர்மங்களில் பிரவிர்த்தி உண்டாகிறதில்லை. ஆத்மாவில் காமம் உண்டாகும்போது தான் ஒருவன் சகல காமங்களையும் அடைந்தவனாக ஆகிறான். ஆத்மாவோ பிரம்மம் பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மத்தை அடைகிறான் என்று சுருதி சொல்லுகிறது.

(1) अभयंप्रतिष्ठां विन्दते (तै-उ-II 7-1)
அபயம் ப்ரதிஷ்டாம் விந்ததே (தை-உ II 7-1)

அதாவது பயமற்ற ஸ்திரமான ஸ்தானத்தை அடைகிறான்.

(2) एतमानन्दमयमात्मानमुपसंक्रामति (तै-उ-II-8-1
ஏதமாநந்தமயமாத்மாநமுபஸங்க்ராமதி (தை-உ-II-8-1

அதாவது "இந்த ஆநந்தமய ஆத்மாவுடன் ஒன்றாய் விடுகிறான்" முதலிய சுருதி வசனங்களால் பிரம்ம ஸ்வரூபத்தின் அஞ்ஞானம் நிவர்த்தியானவுடன் ஒருவன் தன்னுடைய ஆத்மாவாகவே இருக்கிறதினால் அவன் பிரம்மத்தை அடைகிறவன் என்று தெரிய வருகிறது.

வித்தியாரண்ய சுவாமிகள்:— தத்பதார்த்தத்தின் ஞானத்தை உள்ளபடி உபநிஷத்து போதிக்கிறது. அத்வைதமற்ற, ஆத்மாவை விட வேறாக அதைப்பற்றிய விபரீத ஞானமானது அதின்ஸ்வரூப அஞ்ஞானத்தால் ஏற்பட்டு, காமங்களை உண்டுபண்ணுகிறது. இந்த காமங்களால் ஒருவனுக்குக் கர்மங்களில் பிரவிர்த்தி ஏற்படுகிறது. பந்தத்துக்குக் காரணம் காமம். கர்ம பிரவிர்த்திக்குக் காரணமான காமங்களை ஞானந்தான் நிவர்த்திக்கும் காமாபாவமே மோக்ஷம் ஆத்மாவை அறியாததால் ஏற்படும் கர்மம் ஆத்ம ஞானத்துடன் சேர்ந்திருக்கமாட்டாது. ஆகையால் ஆத்ம ஞானமே கர்ம விர்த்தியை நாசம் செய்யத்தக்கது,

## கர்மத்தாலேயே மோக்ஷ சித்தி என்னும் மதம்.

மீமாம்சகனுடைய ஆக்ஷேபம்:—காம்மிய கர்மங்களையும் நிஷேதிக்கப்பட்ட கர்மங்களையும் அனுஷ்டிக்காததாலும் பலத்தைக்கொடுக்க ஆரம்பித்த கர்மங்களுக்கு இந்த ஜன்மத்தில் போகத்தால் நாசமுண்டாவதாலும், நித்திய கர்மங்களை அனுஷ்டிப்பதினால் பாபமுண்டாகாதபடியாலும், முயர்ச்சியன்றியிலேயே தன்னிடத்தில்தானிருப்பதான மோக்ஷம் சித்திக்கிறது. அல்லது, சுவர்க்க சப்தத்தால் கூறப்படும் விசேஷமான சுகமே மோக்ஷம். அது கர்மத்தினாலேயே சித்திக்கிறது. ஆகையால் மோக்ஷத்தை இச்சிக்கிறவன் கர்மத்தை அனுஷ்டிக்கவேண்டியதே தவிர, ஆத்ம ஞானம் என்பது அவனுக்குவேண்டியதில்லை.

## கர்மத்தால் மோக்ஷம் சித்திக்கமாட்டாது.

சித்தாந்தியின் உத்தரம்:—மேற்சொன்னது சரியன்று. ஏனெனின் கர்மங்கள் அநேகம். அநேக ஜன்மங்களிற் செய்யப்பட்ட அநேக கர்மங்கள் விருத்த பலன்களைக் கொடுக்கலாம். சில கர்மங்கள் பலத்தைக்கொடுக்க ஆரம்பித்தும் சில கர்மங்கள் கொடுக்கப்போகிறதாயுமிருக்கலாம். ஒரே ஜன்மத்தில் சஞ்சித கர்மங்க

ளெல்லாம் பலத்தைக்கொடுத்து நாசமடையமாட்டா வாகையால் பாக்கியிலிருக்கும் கர்மத்தால் வேறு சரீரம் அவசியம் உண்டாக வேண்டும். கர்மசேஷ மிருக்கிற தென்பது வெகு சுருதி ஸ்மிருதி வசனங்களால் தெரியவருகிறது. சாந்தோக்கியம் V-10 - 7 - ல் நல்ல கர்மத்தால் ஒருவன் நல்ல ஜன்மத்தை அடைகிறுன் என்று சொல்லியிருக்கிறது. அப்படியே ஆபஸ்தம்ப தர்ம சூத்திரம் II-2-3-ல் சுவர்க்க பலத்தைக் கொடுத்த கர்மத்தைவிட வேறுன கர்மத்தால் நல்ல ஜாதி குலம் முதலியவைகளை அடைகிறுன் என்று சொல்லியிருக்கிறது.

பிரம்மஹத்தி, அசுவமேதயாகம் இவைகளின் பலன்கள் பரஸ்பரம் விருத்தமாக இருப்பதால் ஒரே ஜன்மத்தில் அவைகளை அநுபவிக்க முடியாது. வெவ்வேறு சரீரங்களில் தான் அவைகளை அநுபவிக்கவேண்டும். தர்ம சாஸ்திரங்களில் ஒரு கர்மத்தின் பலன் ஏழு ஜன்மங்களில் சம்பவிக்கும் என்று சொல்லியிருக்கிறது. ஆகவே அந்தந்த கர்மங்களுக்கு அந்தந்த ஜன்மங்கள் வேண்டுமென்று சொல்லவேண்டியதில்லை.

பூர்வபக்ஷி:—இஷ்ட அனிஷ்ட பலன்களைக் கொடுக்க ஆரம்பிக்காத கர்மங்கள் நித்திய கர்மங்களால் நாசமாய் விடுகின்றன. (ஆகையால் கர்ம சேஷம் சித்திக்கவில்லை.)

சித்தாந்தி:—நித்திய கர்மங்களைச் செய்யாவிட்டால் பாபம் உண்டாகுமென்று சொல்லியிருக்கிறது. ஆகையால் நித்திய கர்மங்களை விட்டதினுல் உண்டாகப்போகிற துக்க ஹேதுவான பாபங்களை நித்திய கர்மங்கள் நிவர்த்திக்குமே தவிர சஞ்சிதமான கர்மங்களை நிவர்த்திக்க மாட்டாது. நித்திய கர்மங்கள் சஞ்சிதமான கர்மங்களையும் நிவிர்த்திக்குமென்று சொன்னுலும், புண்ணியத்துக்கும் பாபத்துக்கும் விரோத மிருப்பதால், புண்ணிய கர்மமானது பாபத்தை நிவர்த்திக்குமே தவிர புண்ணியத்தை நிவர்த்திக்க மாட்டாது. ஆகவே, நித்திய கர்மம் சஞ்சித கர்மங்களை நிவர்த்திக்கமாட்டாது.

மேலும் கர்ம ஹேதுக்களான காமங்கள் ஞானமன்றியில் நிவர்த்தியாகமாட்டா வாகையால் அசேஷ கர்மங்களின் நாசம் ஞானமன்றியில் உண்டாகமாட்டாது. ஆத்மாவை அறியாதவனுக்குத்தான் கர்மங்கள் உண்டாகும். இவைகள் ஆத்மாவைவிட வேறுன பலன்களைத்தான் தரும். ஆத்ம ஞானிக்கு தன்னைவிட

வேறான வஸ்து இராததால், தன் விஷயத்தில் இச்சை உண்டாக மாட்டாது. ஆத்மாவே பரப்பிரம்மம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் நித்திய கர்மங்களைச் செய்யாமையானது அபாவ ரூபம். அதினால் பாபம் சம்பவிக்கமாட்டாது. ஜன்மாந்திரத்திற் செய்யப்பட்ட பாபத்தினால் பிரத்தியவாயம் என்கிற துக்கமுண்டாகிறது. அதற்கு நித்திய கர்மத்தைச் செய்யாமையானது சூசகமாயிருக்கிறதே தவிர காரணமல்ல. ஆகவே,

अकुर्वन् निहितं कर्म निन्दितं च समाचरन् ।
प्रसज्जंश्चेन्द्रियार्थेषु नरः पतनमृच्छति ॥

𑌅𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 𑌵𑌿𑌹𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌨𑌿𑌨𑍍𑌦𑌿𑌤𑌂 𑌚 𑌸𑌮𑌾𑌚𑌰𑌨𑍍 ।
𑌪𑍍𑌰𑌸𑌜𑍍𑌜𑌂𑌶𑍍𑌚𑍇𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌾𑌰𑍍𑌥𑍇𑌷𑍁 𑌨𑌰𑌃 𑌪𑌤𑌨𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿 ॥

என்கிற மனுஸ்மிருதி (XI-44) வசனத்திலிருக்கிற **अकुर्वन्** 𑌅𑌕𑍁𑌰𑍍𑌵𑌨𑍍 = செய்யாமல் என்கிற பதத்துக்கு சரியான அர்த்தம் ஏற்படுகிறது. இல்லாவிடின் அபாவத்தினின்றும் பாவம் உண்டாகும் என்று ஏற்படும். இது சகல பிரமாணங்களுக்கும் விரோதம். ஆகையால் முயற்சியன்றியில் தன்னிடத்தில் தானிருப்பதான மோக்ஷம் சித்திக்குமென்பது ஒவ்வாது.

சுவர்க்க சப்தத்தால் கூறப்படும் விசேஷ சுகம் கர்மத்தால் ஏற்படுகிறது. ஆகையால் மோக்ஷமும் கர்மத்தால் சாத்தியம் என்று பூர்வபக்ஷி சொன்னதற்கு நாம் சொல்லுகிறதாவது:—அது சரியல்ல. மோக்ஷம் நித்தியமாக இருக்கிறது. எந்த வஸ்து நித்தியமோ அது உண்டாகிறதில்லை. எது உண்டாகிறதோ அது அநித்தியம். ஆகையால் மோக்ஷம் கர்மத்தினால் உண்டானதல்ல.

## உபாசனையுடன்கூடின கர்மத்தால் மோக்ஷசித்தி.

ஆக்ஷேபம்:—கேவலகர்மத்துக்கு நித்தியமான மோக்ஷத்தை யுண்டு பண்ண சாமர்த்தியமில்லாவிட்டாலும், வித்தை (உபாசனை) யுடன் கூடின கர்மத்துக்கு அந்த சாமர்த்திய மிருக்கிறது.

சமாதானம்:—அது சரியன்று. ஏனெனின் விரோதமிருக்கிறது. நித்தியமானது உண்டாகிறது என்று சொல்லுவது விருத்தம். (வி:—எது உண்டாகிறதோ அது அநித்தியம் என்கிற நியமமிருப்பதால் வித்தையானது அந்த அநித்தியமான ஸ்வபாவத்தை மாற்றமாட்டாது.)

**ஆக்ஷேபம்:**—எது நாசத்தை அடைகிறதோ அதுவே உண்டாகிறதில்லை. ஆகவே மோக்ஷமானது பிரத்துவம்ஸாபாவம்போல் நித்தியமாயு மிருக்கிறது, உண்டாகவும் உண்டாகிறது.

(ஒரு பாதார்த்தம் நாசமானால், அது அபாவமாகிறது. இந்த அபாவம் நித்தியம். ஏனெனின், நாசமானதே மறுபடியும் உண்டாகிறதில்லை. இதுவே பிரத்துவம்ஸாபாவம் எனப்படும்.)

**சமாதானம்:**—இது சரியல்ல. ஏனெனின், மோக்ஷம் 'பாவரூபம்' பிரத்துவம்ஸாபாவமோ அபாவரூபம். அது மற்ற சுபாவங்களைப்போ லிருப்பதால் உண்டாகிறதென்று சொல்லுவது கற்பனையே தவிர வாஸ்தவமல்ல. அபாவம் என்பது பாவபதார்த்தத்தின் எதிரிடை. அது ஒன்றாயிருந்தாலும் கடாதிகளான விசேஷங்களால் பேதத்தை அடைகிறதேதவிர வாஸ்தவத்தில் அடைகிறதில்லை. பாவபதார்த்தம் ஒன்றாயிருந்தாலும் கடாதிகளான விசேஷங்களால் பேதத்தை அடைந்து, திரவியம்போல் கிரியை, குணம் இவைகளுடன் கூடினதுபோல் பாவிக்கப்படுகின்றது. நீலோத்பலம் முதலிய புஷ்பங்களுக்கு நீலம் முதலிய ரூபங்கள் விசேஷணமாயிருக்கிறது போல் கடம் முதலியவைகளுக்கு அபாவம் விசேஷணமாயிருக்கிறது. விசேஷணம் விசேஷியத்துடன் சேர்ந்திருக்கும். அபாவம் விசேஷணமானால் பிரதியோகியுடன் சேர்ந்திருக்கவேண்டும். அப்படியிருந்தால் இரண்டுக்குமுள்ள விரோதம் கெட்டுப்போய்விடும். ஆகையால் பிரத்துவம்சாபாவம்போல் மோக்ஷம் உண்டாகிறதென்று சொல்லக்கூடாது.

**ஆக்ஷேபம்:**—வித்தை, கர்மம், இவைகளுக்குக் கர்த்தா நித்தியனாகையால், கங்காப்பிரவாஹம்போல் வித்தை கர்மங்களால் உண்டாகும் மோக்ஷமும் நித்தியம்.

**சமாதானம்:**—இது சரியன்று. துக்கரூபமானகர்த்திருத்வம்கங்காப்பிரவாஹம்போல் இடைவிடாம லிருப்பதால் அந்த கர்த்திருத்வம் நிவிர்த்தியாகிறதில்லை. கர்த்திருத்வத்துக்கு நிவர்த்தியுண்டானால் மோக்ஷமும் நிவிர்த்தியாய்விடும். ஆனதால் அவித்தியா, காமம் முதலியவைகளுக்கு உபாதானமான அஞ்ஞானம் நிவிர்த்தியாகும்போது தானேதானாக இருப்பதாகிய மோக்ஷம் சித்திக்கிறது. ஆத்மாவே (தானே) பிரம்மம், ஆத்மாவை பிரம்மம் என்று அறிந்தால் அவித்தியா நிவிர்த்தியாகிற மோக்ஷம் ஏற்படுகின்றது. அப்படிப்

பட்ட ஞானமுண்டாகவேண்டியதற்காக இந்த உபநிஷத்து ஆரம்பிக்கப்படுகின்றது.

## உபநிஷத் பதத்தின் அர்த்தம்.

உபநிஷத்து என்றால் பிரம்ம வித்தை. அதை அப்பியஸிக்கிறவர்களுடைய கர்ப்பம் ஜன்மம், ஜரை, முதலியவைகளை சிதிலமாக்குவதாலும் அல்லது அவைகளை நாசம் செய்வதினாலும், அல்லது பிரம்மத்துக்குச் சமீபத்தில் உபாசகனைக் கொண்டுபோய் விடுவதாலும், அல்லது அதில் பரமசிரேயஸ் இருக்கிறதினாலும், அது உபநிஷத்து என்று சொல்லப்படுகின்றது. இந்த பிரம்மவித்தையைக் கூறுகிற இந்த கிரந்தமும் உபநிஷத்து என்று சொல்லப்படுகின்றது.

ஸ்ரீவித்தியாரணிய சுவாமிகளின் உபோத்காதத்தின் சுருக்கம்:—மங்களாசரணம்.

वागीशाद्याः सुमनसः सर्वार्थानामुपक्रमे ।
यं नत्वा कृतकृत्याः स्युस्तं नमामि गजाननम् ॥
यस्य निश्वसितं वेदा यो वेदेभ्योऽखिलं जगत् ।
निर्ममे तमहं वन्दे विद्यातीर्थमहेश्वरम् ॥

வாகீஶாத்யா: ஸுமநஸ: ஸர்வார்த்தாநாமுபக்ரமே ।
யம் நத்வா க்ருதக்ருத்யா: ஸ்யுஸ்தம் நமாமி கஜாநநம் ॥
யஸ்ய நிஶ்வஸிதம் வேதா யோ வேதேப்யோऽகிலம் ஜகத் ।
நிர்மமே தமஹம் வந்தே வித்யாதீர்த்தமஹேஶ்வரம் ॥

அர்த்தம்:—பிரசஸ்த மனதையுடைய பிரஹஸ்பதி முதலானவர்கள் சகலகாரியங்களை ஆரம்பிக்குமுன் எவரை நமஸ்கரித்து கிருதகிருத்தியர்களாக ஆனார்களோ அப்படிப்பட்ட விக்கினேசுவரரை நமஸ்கரிக்கிறேன். (1)

எவரிடமிருந்து வேதங்கள் சுவாசம்போல் வெளிப்பட்டனவோ, எவர் வேதங்களின்றும் சமஸ்தமான ஜகத்தையும் நிர்மானம் பண்ணினாரோ, அப்படிப்பட்ட வித்தியா தீர்த்தரான மஹேசுவரரை நமஸ்கரிக்கிறேன். (2)

முதலில் உபநிஷத் சப்தத்தின் அர்த்தம், உபநிஷத்துக்கு விஷயம், பலம், உபநிஷத்துக்கும் கர்மத்துக்கும் உள்ள சம்பந்தம், உபநிஷத்வித்தைக்கு அதிகாரி இந்தவிஷயங்களை விசாரிக்கிறார்.

உபநிஷத் பதத்தின் அர்த்தம்:—

உபநிஷத்:—என்னும் பதம் பிரம்மவித்தையைக் கூறுகிறது. ஏனெனின், அந்த சப்தத்தின் அவயவங்களின் அர்த்தம் பிரம்மவித்தையிலேயே பொருந்துகிறது. உப என்றால் சமீபம் என்று அர்த்தம். தனக்குத்தன் ஆத்மாவைவிட வேறு ஒன்றும் அதிசமீபமாயிருக்கமாட்டாது. ஆத்மாவை அபேக்ஷித்துத்தான் மற்ற பதார்த்தங்கள் சமீபம் என்றும் தூரமென்றும் சொல்லப்படுகின்றன.

சத்:—என்னும் பகுதியின், (க்ஷயித்துப் போகிறது, அல்லது அறிகிறது, நாசம் செய்கிறது (ஆகிய) மூன்று அர்த்தங்கள் பிரம்மவித்தையில் பொருந்துகின்றன வென்பதாய் ஸ்ரீமத்சுரேசுவராசாரியரால் வியக்தமாய் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படியெனின், அடியிற்கண்ட காரணங்களால் பிரம்மவித்தை உபநிஷத்து எனப்படும்.

(1) வித்தையானது ஆத்மாவை துவைதமற்ற பிரம்மத்துக்குச்சமீபம் கொண்டுபோய் அவித்தையையும் அதின்காரியத்தையும் நசித்துப் போகும்படி செய்கிறது.

(2) அல்லது, சகலதுக்கத்துக்கும் மூலமான ஆத்மாவின் நிஜஸ்வரூப அஞ்ஞானத்தை நாசம்செய்து, துவைதமற்ற பரமாத்மா தன்னுடைய பிரத்தியகாத்மாவைத்தவிர வேறல்லவென்பதை அறியும்படி செய்கிறது.

(3) அல்லது, பகிர்முகப் பிரவிர்த்திகளுக்கு மூலமான அவித்தையை நாசம் செய்கிறதினால் அந்தபிரவிர்த்திகளை நி:சேஷமாய் நாசம் செய்து விடுகிறது.

பிரம்ம வித்தையை அறிய கிரந்தம் சாதகமா யிருப்பதால் கிரந்தமும் பிரம்மவித்தை அதாவது உபநிஷத்து என்று கூறப்படுகிறது.

உபநிஷத்தை அத்தியயனம் செய்ய ஆரம்பிக்கும் முன், (1) அதின்விஷயம் என்ன (2) பலம் என்ன (3) அதற்கும் மற்ற வேத பாகங்களுக்கும் சம்பந்தம் என்ன (4) இந்தவித்தைக்கு அதிகாரியார், என்ற நான்கு கேள்விகளுக்கும் உத்தரம் தேடவேண்டியது.

## I. உபநிஷத்தின் விஷயம்.

ஒரு சாஸ்திரத்தின் விஷயத்தின் இலக்ஷணம் என்னவெனின், அது வேறு எந்த சாஸ்திரத்திலும் வந்திருக்கக் கூடாது; ஔஷதிகள் கிரகசஞ்சாரங்கள் வைத்தியசாஸ்திரம் சோதிட சாஸ்திரம் இவை களைத்தவிர வேறு சாஸ்திரங்களில் சொல்லப்படாததினால் இச்சாஸ்திரங்களின் விஷயங்களே. அப்படியே உபநிஷத்து என்கிற சாஸ்திரத்துக்கும் அத்வைதம் விஷயம். இதுவேறுஇடத்தில் பிரஸ்தாபிக்கப் படவில்லை. ஆத்மா ஒன்றே என்பது உபநிஷத்தால்தான் தெரியவருகிறது. வேறு ஒரு சாஸ்திரத்தாலும் தெரியாது. தைத்திரிய பிராமணம் III 12-9 ல் வேதம் அறியாதவன் பிரஹத்தான பிரம்மத்தை நினைக்கவே மாட்டான் என்று சொல்லியிருக்கிறது. பிரஹதாரணியகம் III 9-26 ல் வேதத்தின் உபநிஷத்து பாகத்தால்தான் ஆத்மாவை அறியலாம் என்று சொல்லியிருக்கிறது.

ஆத்மாவை அறிய வேறு சாதகங்களிருந்தால், அவை பிரத்தியக்ஷப்பிரமாணமாகவாவது, அனுமானப் பிரமாணமாகவாவது, ஆகமமாகவாவது இருக்கவேண்டும். ரூபமற்றதாகையால் பிரம்மம் பிரத்தியக்ஷப்பிரமாணத்துக்கு விஷயமாகமாட்டாது; குணமற்றதால் அது அனுமானத்துக்கு விஷயமாகமாட்டாது. கர்மகாண்டம் பலன்களையும் அவைகளின் சாதகங்களையும் கூறுவதால் ஆகமத்தின் கர்மகாண்டத்தாலும் பிரம்மம் தெரியமாட்டாது, ஆகவே ஞானகாண்டமாகிய உபநிஷத்தால்தான் பிரம்மம் அறியக் கூடியது.

## உபநிஷத்தின் பலன்.

உபநிஷத்தின் விஷயம் இன்னதென்பது நிரூபிக்கப்பட்டது. இனி இதின்பலன் கூறப்படும், அத்விதீய பிரம்மமும் ஆத்மாவும் ஒன்று என்னும் விஷயத்தை நன்றாய் அறிவதே முதல் பிரயோசனம். பிரஹதாரணியக உபநிஷத்தில் IV - 4-23 ல் आत्मन्येवात्मानं पश्यति सर्वमात्मानंपश்யति ஆத்மந்யேவாத்மாநம்பச்யதி ஸர்வமாத்மாநம் பச்யதி அதாவது தன்னிடத்தில் ஆத்மாவை பார்க்கிறான், சகலத்தையும் ஆத்மாவாகப் பார்க்கிறான், என்று சொல்லியிருக்கிறது. இந்த முக்கியாத்மா சித்ரூபம், சாங்கியாளுடைய புருஷன், புத்திரன், சேவகன் முதலான கௌணாத்மாக்களைவிட வேறானவன், ஸ்தூலதேகம், லிங்கதேகம் ஆகிய மித்தியாத்மாக்களைவிட வேறானவன். மஹாவாக்கிய ஞானத்தால் இந்த ஆத்மாவினிடத்தில் ஜகத்காரணமான பரமாத்மாவை ஒருவன் பார்க்கிறான்; அதாவது தன்னுடைய ஆத்மாவும் பரமாத்மாவும் ஒன்று என்று அறிகிறான். இந்தபரமாத்மாவே ஜகத்தின் உபாதானகாரணம். ஆகையால் மிருத்து அன்றியில் கடம் இருக்கமாட்டாதுபோல் எந்தகாரியமும் காரணமன்றியில் இருக்கமாட்

டாது. ஆகையால் தானே பரமாத்மாவென்று அறிகிறவன் சகல பிரபஞ்சத்தையும் தன்ஸ்வரூபமாகவே அறிகிறான். நியாய வைசேஷிக சாஸ்திரங்கள் மித்தியாத்மாவை பிரஸ்தாபிக்கின்றன. சாங்கிய சாஸ்திரம் சத்தியாத்மா இருக்கிறதென்று மட்டும் சொல்லுகிறது. வேதாந்தமானது இந்த ஆத்மா ஈசுவரன்தான் என்றும், சகல ஜகத்ஸ்வரூபமென்றும் சொல்லுகிறது. இப்படிப்பட்ட அத்விதீய ஞானமே முதலாவது பலன்.

2. இந்த ஜீவப்பிரம்ம ஐக்கிய ஞானமுண்டானபோதே அவித்தை நிவிருத்தியாய் விடுகிறது. முண்டகோபநிஷத்தில் II 1-10 ல்—

एतद्यो वेदनिहितंगुहायां
सोऽविद्याग्रन्थि विकरतीहसोम्य

வஏதத்யொவெதநிஹிதம்குஹாயாம்
ஸொऽவித்யாக்ரந்திம் விகரதீஹஸொம்ய

அதாவது புத்தியாகிற குகையில் சாக்ஷியா யிருக்கிற பிரம்மமாகிய ஆத்மாவை எவன் அறிகிறானோ அவன் இந்த சரீரத்தில் வசித்துக்கொண்டிருக்கும்போதே அவித்தையாகிற முடிச்சை அவிழ்த்து விடுகிறான்—என்று அங்கிரா: எனும் குருவானவர் சௌநகருக்குச் சொல்லியிருக்கிறார். பிரபஞ்சத்தில், சந்திரன் ராகுவால் முழுதும் மூடப்பட்டபோது, அவனுடைய காந்திமறைபட்டு, ஆகாசத்தில் மலினமடைந்து, தான்பிரகாசித்து, ராகுவுடன் ஒன்றாய் விட்டதாகக் காணப்படுகிறான். இதுபோல் இந்த, அத்வயமாயும், ஆநந்தமாகிற ஏகரசமாயும், சித்தாயுமிருக்கிற ஆத்மா அநாதியான அவித்தையால் மூடப்பட்டவனாய், அப்படி மூடப்பட்டதினால் வெகுவிதத்துவைத ரூபமான ஜகத்துடன் கூடி, துக்கமடைந்து, தன்னுடைய சைதன்னியத்தினால் தன்னையும் அவித்தையையும் பிரகாசம் செய்துவைத்து, அவித்தையுடன் ஒன்றாய்விட்டதுபோல் காண்பிவித்து தான் அஞ்ஞன் என்பதாய் வியவஹரிக்கிறான். இந்த அவித்தையுடன் ஒன்றாய்ப்போவதே அவித்தியாகிரந்தி (முடிச்சு) எனப்படும். இது ஞானத்தால் அவிழ்க்கப்படுகிறது. இராகுக்கிராஸத்தினின்றும் விடுபட்ட சந்திரன் செவ்வையாய்ப் பிரகாசிக்கிறதுபோல், ஞானத்தால் அவித்தையானது விலகினதின்பேரில், ஆத்மாவின் அத்வைத ஸ்வரூபமும், சுத்த ஆநந்தத் தன்மையும் விளங்குகின்றன. இதுவே அவித்தியா கிரந்தியை அவிழ்ந்தல் எனப்படும். ஸ்மிருதியிலும் இப்படியே சொல்லப்பட்டிருக்கிறது, அஞ்ஞானம் என்பது ஒன்று. தனக்கு அதிஷ்டானமான ஆத்மாவை மறைக்கும்போது அது அவித்தை எனப்படுகிறது. விசித்திர காரியங்களை உண்டுபண்ணும்போது மாயை எனப்

படுகிறது. ஆகவே தத்துவ ஞானமானது மாயை, அவித்தை, இரண்டையும் விலக்கிவிடுகிறது. ஆகையால் தத்துவத்தை அறிந்தவனுக்கு அவனுடைய அத்வைத ஸ்வரூபமும் ஆநந்தத்துவமும் ஒருக்காலத்திலும் மறைபடுகிறதில்லை. அவன் புனர்ஜன்மாதிகளை அடைகிறதில்லை.

3. இவ்விதமாய் அவித்தையின் முடிச்சு தளர்ந்தவுடன், ஹிருதயக்கிரந்தி முதலியவைகளும் நிவிர்த்தியாய் விடுகின்றன. முண்டகோபநிஷத்தில்

**भिद्यतेहृदयग्रन्थिछिद्यन्ते सर्वसंशयाः ।**
**क्षीयन्तेचास्यकर्माणि तस्मिन्दृष्टेपरावरे ॥** I-2-9

பித்யதே ஹ்ருதயக்ரந்தி ச்சித்யந்தே ஸர்வஸம்ஶயா:
க்ஷீயந்தே சாஸ்யகர்மாணி தஸ்மின் த்ருஷ்டே பராவரே ॥

என்று சொல்லியிருக்கிறது. அதாவது உத்தமமாயும் அதமமாயு மிருக்கிற ஆத்மா அறியப்பட்டவுடன் அந்தக் கரணத்தின் முடிச்சுகள் பேதித்துப்போகின்றன. சைதன்னியத்தின் தேஜஸால் வியாபிக்கப் பட்ட அந்தக்கரணமே ஆத்மாவென்று தார்க்கிகர்களும் பூர்வ மீமாம்ஸகர்களும் சொல்லுகிறார்கள். வேதாந்திகள் ஸ்தூல சரீரம்போல் இந்த ஸ்வரூபம் மித்தை என்கிறார்கள். அந்தக்கரணத்தை ஆத்மாவாக பாவிப்பதாகிய பிராந்தியே ஹிருதயக் கிரந்தி எனப்படும். வேதம்-குரு-இவர்களின் உபதேசமன்றியில் சுத்த ஆத்மாவையும் மேற்கூறிய பிராந்தி ஞானத்துக்கு விஷயமான மித்தியாத்மாவையும் பிரித்து அறியமுடியாது. சத்தியத்தை சாக்ஷாத்கரிப்பதால்மட்டும் ஹிருதயக் கிரந்தி அவிழ்ந்து இரண்டின் பேதமும் செவ்வையாய் தெரிய வரும். அவித்தை விலகினவுடன் பிராந்தியே போய்விடும்.

4. எவர்களுடைய மனது வெளிவிஷயங்களில் பிரவிர்த்தித்திருக்கிறதோ அவர்களுக்கு அநேகசம்சயங்களுள. ஆத்மா ஸ்தூலசரீரமா? சூட்சும சரீரமா? அல்லது இவைகளைவிட வேறானால் அணுப்பிரமாணமா, மத்தியமப்பிரமாணமா, அல்லது சர்வ வியாபகமா-சித்ரூபமா-ஜடமா-ஈசுவரனைவிட வேறு - அல்லது ஈசுவரனு-ஜகத்தானது சத்தியமா, மித்தையா, மோக்ஷத்திற்குச் சாதகம் ஞானமா-கர்மமா இப்படிப்பட்ட சம்சயங்கள் ஹிருதயக்கிரந்தியை முன்னிட்டுக்கொண்டு சித்திக்கின்றன. சுஷுப்தி அவஸ்தையிலும், மரணத்திலும், மயக்கத்திலும் அந்த முடிச்சு காணப்படாது. ஆகவே ஜாக்கிரத அவஸ்தையிலும் எவன் சச்சிதாநந்த பிரம்மத்தை அறிகிறானோ, அவனிடத்தில் ஹிருதயக் கிரந்தியில்லை; இப்படிப்பட்ட சந்தேகங்களும் அவனுடைய மனதில் ஜனிக்கமாட்டா.

5. எப்போது சந்தேகங்கள் நிவிர்த்தியாகின்றனவோ, அப்போது வித்தையின் பலத்தை அடைய ஒருவித பிரதிபந்தமு மில்லாதபடியால், செய்தகர்மமெல்லாம் நசித்துப் போகிறது. சன்னியாசாசிரமத்தை ஒருவன் பிரவேசித்தவுடன், தேவரிஷிபிதிர் ரிணங்களும், கிரகம் முதலிய விஷயமாய் ஏற்பட்டிருக்கும் பிராபஞ்சிக ரிணங்களும் நிவிர்த்தியாய் விடுவதுபோலும்.

6. இந்த ஜன்மத்தின் சுகதுக்கங்களும் அவனுக்கில்லாமற் போகின்றன. எப்போது ஆத்மாவினிடத்தில் மனது ஸ்திரப்படுகிறதோ அப்போது ஞானியானவன் ஸ்வயம் ஜோதிஸ்வரூபமான பரமாத்மாவை அடைந்து சுகதுக்கங்களை விட்டுவிடுகிறான். புத்திரமித்திரதனாதிகளே பிரபஞ்சத்தில் சுகதுக்க சாதனங்கள். அத்வைத ஆத்மாவை அறிந்தவனுக்கு தன்னைத்தவிர வேறு ஒன்றுமில்லாதபடியால் சுகதுக்க சாதனங்களில்லை; ஆகையால் சுகாதிகளு மில்லை.

7. எவன் ஆத்மநிஷ்டையில் இருக்கிறானோ அவனுக்கு ஆத்மா எப்போதும் பிரசன்னமா யிருக்கிறதினால், ஆத்மாவை இச்சிக்கிறானேதவிர மற்ற யாதொன்றையும் இச்சியான். இச்சிக்கக்கூடிய விஷயமில்லாதபடியால் இச்சையே யில்லை. அதினால் காமக்குரோதாதிகளும் அவனுக்கில்லை.

8. இப்படிப்பட்டவன் ஆத்மாவினிடத்தில் இரமிக்கிறான். எப்படி பிராபஞ்சிக புருஷன் சொக்கட்டான் ஆடுங்காலத்தில் தன்னுடைய ஜயத்தையும் பிறருடைய அபஜயத்தையும் தேடிக்கொண்டே ஆடுகிறானோ அப்படி பிரம்மத்தை அறிந்தவனும் ஜீவபிரம்ம ஐக்கிய ஞானத்துக்குச் சாதகமான சுருதி யுக்திகளைத் தேடிக்கொண்டும், பிறருடைய தௌர்ப்பல்லியத்தை நிரூபித்துக்கொண்டும் ஆத்மாவுடன் இரமிக்கிறான்.

9. இந்த பிரம்மவித்தானவன் ஆத்மாவினிடத்திலேயே சந்தோஷத்தை அடைகிறான்; அவன் கிருதகிருத்தியன். செய்யவேண்டியது யாதொன்று மில்லை.

10. இப்படிபட்டவனுக்கு எப்போதும் மனதில் ஆநந்தப் பிராதானியமே தோன்றுகிறது.

11. ஆகவே இந்த உபநிஷத்தின் பலமானது ஜீவபிரம்ம ஐக்கியமாகுதல், அவித்தியாகிரந்தியின் நாசம், ஹிருதய கிரந்தி நாசம், சம்சயநாசம், கர்மநாசம், சுகதுக்கங்களை விடுதல், இச்சையில்லாமை, ஆத்மாவினிடத்திலேயே கிரீடை, ஆத்மாவினிடத்தில் இரதியே கிரியை, கிருதகிருத்தியத்தன்மை, ஆநந்தத்தன்மை இவ்வாறும்.

## III. ஞானகர்மகாண்டங்களின் சம்பந்தம்.

உபநிஷத்தின் விஷயத்தையும் உபநிஷத்தின் பலத்தையும் கூறினபிறகு, உபநிஷத்துக்கும் வேதத்தின் இதர பாகங்களுக்கு முள்ள சம்பந்தத்தை கவனிப்போம். இந்த சம்பந்தம் சாத்திய சாதனரூபமாயிருக்கிறது. ஞானம் சாத்தியம். கர்மமானது மனதை சுத்தப்படுத்துவது மூலமாயாவது, அல்லது, ஞானத்தில் ஆசையை உண்டுபண்ணுவது மூலமாயாவது ஞானத்திற்குச்சாதகமாயிருக்கிறது. கௌதமதர்மசாஸ்திரத்தில் 8-25 ல்-கர்ப்பாதானுதி 40 சம்ஸ்காரங்களை எவன் அடைந்திருக்கிறுனே அவன் பிரம்மத்தின் ஸ்தானத்தை அடைந்து பிரம்மத்துடன் சேர்ந்துவிடுகிறுன்—என்று சொல்லி யிருக்கிறது. இந்த சம்ஸ்காரங்களால் மனதானது சுத்தமாகிறது, அதாவது ஞானத்தை அடைய யோக்கியமாகிறது. பிரஹதாரணியகம் IV-4-22 ல் பிரம்மத்தை பிராமணர்கள் வேதபடனத்தாலும், யஞ்ஞத்தாலும், தானத்தாலும், தபஸாலும், மிதமான போஜனத்தாலும், அறிய இச்சிக்கிறுர்கள்—என்று சொல்லி யிருப்பதால் கர்மமானது ஞான இச்சையை உண்டுபண்ணுகிறதென்றுதெரியவருகிறது. கர்மம் அஞ்ஞான ஸ்வரூபமானதால் மோக்ஷத்தைக் கொடுக்க மாட்டாது. அஞ்ஞான நிவிர்த்திக்கு ஞானந்தான் வேண்டியது. ஞானமுண்டாவதற்கு சமம் முதலியது வேண்டியது. சமம் உண்டாவதற்கு சித்தசுத்தி வேண்டியது. இந்த சித்தசுத்தி நித்தியம் முதலிய கர்மங்களால் கிடைக்கிறது. இவ்விதமாக கர்மம் பாரம்பரையாக ஞான சாதகமாயிருக்கிறது.

## IV. அதிகாரி.

உபநிஷத்தின் விஷயம், பலன், உபநிஷத்துக்கும் மற்ற வேதபாகத்துக்கும் உள்ளசம்பந்தத்தை விசாரித்த பிறகு உபநிஷத்துக்கு அதிகாரியார் என்பதை விசாரிக்கவேணடியது. சிலர் கர்மத்தைச் செய்கிறவனே உபநிஷத்துக்குஅதிகாரி என்று சொல்லுகிறுர்கள்.உபநிஷத்து கர்மத்தையே போதிக்கிறதாக இருந்தால் சகலகர்மங்களுக்கும் சாட்சியான சிதாத்மாவை ஒப்புக்கொள்ளக் கூடாது. பிரம்ம சூத்திரம் I-3-26-33 ல். உபநிஷத்து கர்மத்தை போதிக்காதபடியால் கர்மம் செய்கிறவனுக்காக் அது ஏற்படவில்லை என்றும், ஞானம் சம்பாதிக்க வேண்டிதாக இச்சிக்கிறவனுக்காகவே அது ஏற்பட்டிருக்கிறதென்றும் நிரூபிக்கப்பட் டிருக்கின்றது. உபநிஷத்தின் கருத்து ஞானத்தை போதிப்பதி லிருப்பதால், ஞானத்தை இச்சிக்கிறவனுக்குத்தான் அது ஏற்பட்டிரு 'கிறதே தவிர கர்மத்தைச்செய்ய இச்சிக்கிறவனுக்காக ஏற்படவில்லை.

## உபநிஷத்துக்கள் ஜீவபிரம்ம ஐக்கியத்தை போதிக்கின்றன.

உபநிஷத்தின் விஷயப்பிரயோசன சம்பந்த அதிகாரிகளை நிரூபித்தபிறகு உபநிஷத்துக்களை ஜீவப்பிரம்ம ஐக்கியத்தைத்தான் போதிக்கின்றன வென்பதை நிரூபிக்கிறார். ஜீவபிரம்ம ஐக்கிய ஞானவிஷயத்தில் உபநிஷத்துக்கள் பிரமாணங்கள் என்கிற விஷயத்தில் விவாதத்திற்கு இடமில்லை. உபநிஷத்து பிரமாணம் என்பதை எல்லாரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அதை அப்பிரமாணமாகச் சொல்லுவதற்குக்காரணமுமில்லை. வெகு ஆக்ஷேபசமாதானங்களின்பேரில் ஐக்கிய ஞானத்துக்கு உபநிஷத்தை பிரமாணம் என்று வித்தியாரணிய சுவாமிகள் நிரூபிக்கிறார்.

### சாந்திமந்திரம்.

ओं शं नो मित्रः शं वरुणः 𑌓𑌂 𑌶𑌂 𑌨𑍋 𑌮𑌿𑌤𑍍𑌰𑌃 𑌶𑌂 𑌵𑌰𑍁𑌣𑌃 ।

शं नो भवत्वर्यमा 𑌶𑌂 𑌨𑍋 𑌭𑌵𑌤𑍍𑌵𑌰𑍍𑌯𑌮𑌾 ।

शं न इन्द्रो बृहस्पतिः 𑌶𑌂 𑌨 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑍋 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌃 ।

शं नो विष्णुरुरुक्रमः 𑌶𑌂 𑌨𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌰𑍁𑌰𑍁𑌕𑍍𑌰𑌮𑌃 ।

नमो ब्रह्मणे 𑌨𑌮𑍋 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 ।

नमस्तेवायो 𑌨𑌮𑌸𑍍𑌤𑍇 𑌵𑌾𑌯𑍋 ।

त्वमेव प्रत्यक्ष ब्रह्मासि 𑌤𑍍𑌵𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌾𑌸𑌿 ।

त्वामेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि 𑌤𑍍𑌵𑌾𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌕𑍍𑌷𑌂𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 ।

ऋतं वदिष्यामि 𑌋𑌤𑌂 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 ।

सत्यं वदिष्यामि 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌵𑌦𑌿𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 ।

तन्मामवतु 𑌤𑌨𑍍𑌮𑌾𑌮𑌵𑌤𑍁 ।

तद्वक्तारमवतु 𑌤𑌦𑍍𑌵𑌕𑍍𑌤𑌾𑌰𑌮𑌵𑌤𑍁 ।

अवतु माम् 𑌅𑌵𑌤𑍁 𑌮𑌾𑌮𑍍 ।

अवतु वक्तारं அவது வக்தாரம் ।

ओं शान्तिः शान्तिश्शान्तिः ஓம் ஶாந்தி: ஶாந்தி ஶ்ஶாந்தி: ॥

இந்த சாந்தி மந்திரமே முதலாவது அனுவாகமாக ஏற்படுவதால் அர்த்தத்தை அவ்விடத்தில் பார்த்துக்கொள்ளவும்.

## தைதரீயத்தின்

### சிக்ஷாத்தியாயமாகிற முதலாவது வல்லியில்

### முதலாவது அனுவாகம்.

வி:—தேவதைகளுடைய இடையூறுகள்:—நல்லகாரியத்துக்கு அநேகம் விக்கினங்களுண்டு என்று உலகத்தில் சொல்லுவார்கள். பிரம்ம வித்தையை சம்பாதிக்கிற விஷயத்தில் தேவதைகளால் அநேக விக்கினங்கள் ஏற்படுகின்றன. ஆகையால் இவைகளைப் பரிஹரிக்க பிரயத்தினம் செய்யவேண்டிய தவசியம். தேவதைகளால் விக்கினம் ஏற்படுமென்பது

अथयोऽन्यां देवतामुपास्तेऽन्योसावन्योऽहमस्मीति नसवेदयथापशुरेवं सदेवा
नां यथाहवैबहव: पशवो मनुष्यं भुञ्ज्युरेवं मेकैक: पुरुषोदेवान्भुनक्त्येकस्मिन्नेव
पशावादीयमानेऽप्रियं भवाति किमुबहुषु तस्मादेषां तन्नाप्रियं यदेतन्मनुष्या विद्यु:

அதயோऽந்யாம் தேவதாமுபாஸ்தே ऽந்யோ ஸாவந்யோऽஹ
மஸ்மீதி நஸவேத யதாபஶுரேவꣳ ஸ தேவாநாம் யதாஹவை
பஹவ: பஶவோ மநுஷ்யம் புஞ்ஜ்யுரேவமேகைக: புரு
ஷோதேவாந்புநக்த்யேகஸ்மிந்நேவ பஶாவாதீயமாநேऽப்ரியம் ப
வதி கிமு பஹுஷு தஸ்மாதேஷாம் தந்நப்ரியம் யதேதந்மநுஷ்யா
வித்யு: ॥

என்கிற பிரஹதாரணியக I-4-10 சுருதியால் தெரியவருகிறது.

இதற்கு அர்த்தம்:—மனிதர்கள் பிரம்மஞானி என்றும் கர்மீ என்றும் இருவகைத்தார்கள். பிரம்மத்தை அறிந்தவன் சர்வமாகிறான் என்பது முந்தின வாக்கியத்தில் கூறப்பட்டிருக்கிறது. பிரம்மத்தை அறிந்தவன் சர்வமாகிற விஷயத்தில் தேவதைகளால் கூட விக்கினங்களை ஏற்படுத்தமுடியாது. ஏனெனின் பிரம்மத்தை அறிந்தவன் தேவதைகளின் ஆத்மாவாகிறான்.

இப்படி பிரம்மவித்தானவன் பரமபுருஷார்த்தத்தை அடைகிறான் என்று சொல்லி பிரம்மத்தை அறியாதவனுக்கு பரமபுருஷார்

த்தம் கிடைக்கமாட்டாதென்பதாய் இந்த சுருதி சொல்லுகிறது. தான் வேறு என்றும் தன்னால் ஆதரிக்கப்பட்டது வேறு யென்று பாவித்து தனக்கும் தேவதைக்கும் பேதத்தை பார்க்கிறவன் தானே பிரம்மம் என்கிற மகிமையை அறியமாட்டான். ஒரு யானை அல்லது ஒருகுதிரை தன்னுடைய பலத்தை அறியாமல் பலத்தில் தன்னைவிட குறைந்தவனான மனிதனுடைய சுவாதீனத்தில் வந்துவிடுவதுபோல் அஞ்ஞானியான உபாசகன் தேவதைகளின் சுவாதீனத்தில் வந்து விடுகிறான். எப்படி அநேக பசுமாடுகள், ஆடுகள், குதிரைகள், காளைமாடுகள், எருமை மாடுகள் ஆகிய அநேக பசுக்கள், பால்கொடுப்பதினாலும், மூட்டையைத் தூக்குவதினாலும், இப்படி பல காரியங்களாலும் ஒரே புருஷனுடைய சுகத்தைத் தேடுகின்றனவோ அப்படி அஞ்ஞானியான ஒவ்வொரு புருஷனும், அக்கினி, சூரியன், இந்திரன் முதலான தேவதைகளுக்கு ஹவிஸைக்கொடுத்து அவர்களுடைய சுகத்தைத் தேடுகிறவனாகிறான். ஆகவே, ஒவ்வொரு புருஷனும் தேவதைகளுக்கு எல்லா பசுக்களின் ஸ்தானத்திலிருக்கிறான். வெகு பசுக்களையுடைய ஒரு புருஷனுடைய ஒரு பசுவைத் திருடனாவது, புலியாவது கொண்டுபோய் விட்டால் அவனுக்கு வெகு துக்கமுண்டாகிறது. அப்படியிருக்க, அநேகம்பசுக்கள் போய்விட்டால் அவனுடைய துக்கம் எவ்வளவு அதிகமாயிருக்கவேண்டும். ஆகையால், மனிதர்கள் இந்த பிரம்மம் தாங்களே என்பதாய் ஐக்கியத்தை அறிந்துவிட்டார்களேயானால் தேவதைகளுக்கு வெகு துக்கமுண்டாகிறது. பிரம்மவித்தையை மனிதன் தேடுவது தேவதைகளுக்கு மிகவும் அப்பிரியம் என்று வேதமே கூறுவதால், அவர்கள் மனிதர்கள் பிரம்மவித்தையை அடைகிற விஷயத்தில் வெகுவிக்கினங்களை ஏற்படுத்தலாம். இவ்விஷயம் வார்த்திகசாரமென்றும் கிரந்தத்திலும் வியக்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

எப்படி தேவதைகள் பிரதிபந்தகர்களோ அப்படியே ரிஷிகள் முதலானவர்களும் பிரம்மவித்தையில் பிரதிபந்தகர்கள் என்பது.

**अथोऽयंवा ऽत्मासर्वेषांभूतानां लोकः ।**

அதொऽயம்வாऽத்மா ஸர்வேஷாம் பூதாநாம்லோகஃ ।

முதலிய பிரஹதாரணியக வாக்கியத்தினாலேயே தெரியவருகிறது. மனிதன் பிரம்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொண்டானேயானால்

தன்னை இலக்ஷியம் செய்யமாட்டான் என்பது தேவதையின் பயம். ஆகையால், தேவதைகள் விக்கினங்களை ஏற்படுத்துகிறார்கள். ஆகையால் தான் கடோபநிஷத்து II-7-ல் பிரம்மத்தைப்பற்றி கேட்பார் வெகு பெயர்களில்லை யென்றும் கேட்டாலும் அநேகம் பெயர்கள் அறியமாட்டார்கள் என்றும் சொல்லியிருக்கிறது. அப்படியே பகவானும் கீதையில் V11-3-ல் சொல்லுகிறார்.

## விக்கின நிவாரக மந்திரங்கள்.

இப்படி பரமபுருஷார்த்தத்துக்கு அநேக விக்கினங்க ளிருப்பதால் அவைகளை விலக்கும்பொருட்டு சாம்ஹிதை உபநிஷத்தின் முதலாவது அனுவாகத்தில் ஒரு மந்திரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை ஜபிக்கவேண்டியது. இந்த மந்திரம் கர்மகாண்டத்தின் ஆரம்பத்தில் கொடுக்கப்படவில்லை. ஏனெனின், கர்மாநுஷ்டானங்களை தேவதை முதலானவர்கள் இச்சிக்கிறார்கள். ஆகையால் அவர்கள் விக்கினஞ்செய்யமாட்டார்கள். யஞ்ஞங்களாலும் தானங்களாலும் ஞானப் பிரதிபந்தங்கள் நீங்கியிருக்கும் என்று சொல்லுவார்கள். அது சரியே ஆயினும் வேறு சில விக்கினங்கள் இருக்கக்கூடும். அவைகள் இந்த மந்திரத்தை ஜபிப்பதினால் விலகக்கூடும். வித்தையில் ருசியில்லாமையே முதலாவது விக்கினம், இது சஞ்சிதங்களான மஹாத்பாபங்களால் ஏற்படுகிறது. பிரம்மஞானத்தில் ருசியை உண்டாக்கக் கூடிய ஸத்கர்மங்களாலும் தானங்களாலும் இந்த மஹாத்பாபங்கள் நீக்கப்படுகின்றன. இந்த யாகாதிகள் பலாபேக்ஷயின்பேரில் செய்யப்பட்டால் சம்சாரபலத்தைக் கொடுத்தாலும் ஈசுவரார்ப்பணமாக செய்யப்பட்டால் ஞானவிர்த்திக்கு விரோதிகளான மஹாத்பாபங்களை நீக்கிவிடுகின்றன. பகவத் கீதையின் V-10-வது சுலோகத்தால் தெளிவாகிறது. இந்த பாபம் நீங்கினதற்கு ஒரு அடையாளம் பற்றுதலில்லாமை. இப்படி நைஷ்கர்மிய சித்தி என்றும் கிரந்தத்தில் I-47-ல்சொல்லியிருக்கிறது.

வைராக்கியம் சித்தித்ததின் பேரில் ஞானத்தில் ருசியைக்கொடுக்காதிருந்த பிரதிபந்தம் நீங்கினாலும், மனது ஏகாக்கிரமாவதற்குச் சாதகமான யோகம் அதாவது உபாசனை விஷயத்தில் அநேக பிரதிபந்தங்கள் இருக்கக் கூடும். பதஞ்சலி பகவானால் யோகசூத்திரம் I-10-ல்:—வியாதி, மந்தபுத்தி, சம்சயம், அசாக்கிரதை, ஆலசியம்,

## XI. வியாஹ்ருதிகளின் உபாசனே.

வியாஹ்ருதிகளின் உபாசனே இப்போது விதிக்கப்படுகின்றது

(10) ता यो वेद । தா யொ வெத ।

IV (1) स वेद ब्रह्म । ஸ வெத ப்ரஹ்ம ।

(2) सर्वेऽस्मै देवा बलिमावहन्ति । ஸர்வெऽஸ்மை தெவா பலி மாவஹந்தி ॥9॥

பதவுரை.

(10) ताः தாஃ=அவைகளை
यः யஃ=எவன்
वेद வெத=அறிகிருனே
IV (1) सः ஸஃ=அவன்
(2) ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மத்தை
वेद வெத=அறிகிருன்
(2) सर्वे ஸர்வெ=சகலமான
देवाः தெவாஃ=தேவதைகளும்
अस्य அஸ்ய=இவனுக்கு
बलिं பலிம்=பலியை
आवहन्ति ஆவஹந்தி=வஹிக்கிருர்கள்

---

வி:—(10) IV (1-2):—அவைகளை அறிந்ததின் பலன் இனி சொல்லப்படுகிறது.

IV (2) அவைகளை அறிவதிஞல்பிரம்மஸித்தைசித்திக்கிறது.

(2) சமஸ்தமான தேவதைகளும் அவனுக்கு பூஜையை செய்கிருர்கள். (மற்ற பதங்களுக்கு அத்வைதம்பார்க்க)

5-வது அனுவாகம் முற்றுற்று.

---

து;—10. यः யஃ=எவன், பிரம்ம பதத்துக்குயோக்கியனை எவன்
ताः தாஃ=பதிநாறு மூர்த்திகளை
वेद வெத=அறிகிருனே உபாசிக்கிருனே சாக்ஷாத்கரிக்கிருனே
IV. 1. सः ஸஃ=அவனே
ब्रह्म ப்ரஹ்ம=குணங்களால் பெருத்திருக்கிற விஷ்ணுவை
वेद வெத=விசேஷமாய் அறிகிருன்

அ: — வி-வி:—பிருதிவீ முதலிய ரூபமாக கூறப்பட்ட வியாஹ்ருதிகளை எவன் உபாஸிக்கிறானோ அந்த உபாசகனுக்கு இந்திரன் முதலான சகலதேவதைகளும் பூஜையைக்கொண்டுபோகிறார்கள். அதாவது அவனை பூஜிக்கிறார்கள்.

சம்பா:—ஆக்ஷேபம்:—

तद्ब्रह्म आत्मा தத்ப்ரஹ்ம ஆத்மா அதாவது அது பிரம்மம் அது ஆத்மா வென்பதாய் இந்த அனுவாகத்தின் I-5-6-ல் சொல்லியிருப்பதால் பிரம்மம் முன்னமேயே தெரிந்திருக்க, பிரம்மம் முன் அறியப்படாதது போல் இப்போது அறிகிறான் என்பதாய் சொல்லவேண்டிய காரணமென்ன.

உத்தரம்:—இந்த ஆக்ஷேபத்துக்கு இடமில்லை. ஏனெனின் பிரம்மத்தைப்பற்றி விசேஷமாய் உபதேசிக்க வேண்டுமென்பது சுருதியின் கருத்து. நான்காவது வியாஹ்ருதியானது பிரம்மம் என்று முன்னே சொன்னது சரிதான். ஆனால் ஹிருதயத்தில் பிரம்மம் அறியத்தக்கது என்கிற தாவது, அல்லது, இனிவரும் அனுவாகத்தில் கூறப்படும் மனோபலத்வம், விசேஷசாந்தி முதலிய குண விசேஷங்களாவது தெரியவில்லை.

இவைகளையெல்லாம் எவன் அறிகிறானோ அவன்தான் பிரம்மத்தை அறிந்தவன் என்பது சுருதியின் கருத்து. இனி சொல்லப்போகிற குணங்களுடனிருப்பதாக பிரம்மத்தை எவன் தியானிக்கிறானோ அவன் தான் பிரம்மத்தை அறிந்தவன். இந்த அனுவாகமும் அடுத்த அனுவாகமும் உபாசனையாகிய ஒரேவிஷயத்தைபோதிக்கின்றன. அக்கினியில் பூ: என்கிறரூபமாக பிரம்மம் இருக்கிறதென்கிறலிங்கத்தால் உபாசனை ஒன்று என்றேதெரியவருகிறது. இரண்டுஉபாசனைகளைப்பற்றிச்சொல்லியிருப்பதாக எந்தப்பதங்களாலும் தெரியவில்லை. இந்த அனுவாகத்திலுள்ள तायोवेद தாயோவேத என்கிற வார்த்தைகளும் அடுத்த அனுவாகத்திற் சொல்லுவதையே கூறுவதால், உபாசனையில் பேதமில்லை. இந்த அனுவாகத்தில் முன்சொன்ன விசேஷங்களே கூறப்பட்டிருக்கின்றன.

இப்படி தியானிக்கிறவனுக்கு சகலதேவதைகளும் கீழ்ப்படிந்து அவன் ஸ்வாராஜ்ஜியத்தை அடைந்தவுடன் அவனுக்கு பலியைக்கொண்டு போய் கொடுக்கிறார்கள். எல்லாதேவதைகளும் அவர்களுடைய சக்திக்குத் தக்கபடி அவனுடைய சுகத்துக்குச் சாதகமாக இருக்கிறார்கள். இதுவே தியானபலன்.

அ:—வி-வி:—பிரம்மசூத்திரம் IV-3-15 ல் எவன் பிரம்மத்தைப் பிரதீகமன்றியில் தியானம் செய்கிறானோ அவனுக்குத்தான் பிரம்மலோகம் கிடைக்குமென்று சொல்லியிருக்கிறது. வியாஹ்ருதிகளாகிற பிரதீகங்களை தியானிக்கிறவன் பிரம்மலோகத்துக்குப் போகமாட்டான். ஆகையால் எல்லாதேவதைகளும் பூஜிக்கிறார்கள் என்று சொல்லுவது அயுக்தம்.

இது சரியன்று. ஒருவன் வியாஹ்ருதியை தியானிக்கும் போது, அடுத்த அநுவாகத்திற் சொல்லியபடி பிரம்மத்தையும் தியானிக்கிறான். பிரம்மத்தியானமே முக்கியம். வியாஹ்ருதி தியானம் அங்கம். ஆகையால் உபாசகன் பிரம்மலோகத்துக்குப் போகிறான். அவன் தேவதைகளால் பூஜிக்கப்படுவதாகச் சொன்னது யுக்தமே.

असौलोको यजुः ।षि वेदद्वेच । அஸௌலோகோ யஜூம்ஷி வேத ஏவ

असौ लोकः அஸௌலோக: முடிய ஒருவர்க்கம்
यजूंषि யஜூம்ஷி முடிய ஒருவர்க்கம்
वेद வேத முடிய ஒருவர்க்கம்

மேல் இரண்டு வாக்கியங்கள் ஆக 32 வாக்கியங்கள்

---

து:—2. अस्मै அஸ்மை=முக்தனான சதுர்முக பிரம்மதேவனை (இவரை)

सर्वे ஸர்வே=முக்தி காலத்திலிருக்கிற சகல
देवाः தேவா:=தேவதைகள்
बलिं பலிம்=பூஜையை
आवहन्ति ஆவஹந்தி=கொடுக்கிறார்கள். பிராமணவாக்கியம்

भरादिव्याहृतीभिस्तु वाच्यमूर्ति चतुष्टयं ।
अनिरुद्धादिकं वासु देवातं देहमध्यगः ।
वासुदेवो महोनामा त्वनिरुद्धः शिरोगतः ।
भूर्नामाथ भुवोनामा बाहू प्रद्युम्न ईरितः ।
संकर्षणः सुवर्नामा पादोतस्य महात्मनः ।
अमन्योऽन्यं यशब्देन चतुरात्मा प्रकीर्त्यते ।
निर्विशेषो पि भगवान् संख्यामात्र विशेषतः ।
लोकज्योतिः प्राणवेदेष्वेकः सपुरुषोत्तमः ।
प्रत्येकशश्चातुरात्म्यात्सो दशात्मा प्रकीर्तितः ।
महयतेमहतीच स्वयं स भगवान्हरिः ।
पञ्चपूजकभेदोत्र मैवकश्चिदपेक्ष्यते ।
नामप्रवृत्तिहेतुत्वा न्नामलोकादिकं हरेः ।

து:—अयंसमीपस्थतयात्वसौ प्राणेस्थितस्ततः ।
इक्षणादंतरिक्षंचा थादित्यस्थोऽदितेःसुतः ।
अग्निरग्नौस्थितत्वाच्च वायुर्वयतियज्जगत् ।
चन्द्रआह्लादयरूपत्वा दृगर्च्यत्वाज्जनार्दनः ।
यजुयाज्यस्वरूपत्वा त्सामचासौसमत्वतः ।
बृहत्वाद्ब्रह्मवेदानां समुदायेऽखिलेस्थितः ।
तत्संबधाद्वेदराशिब्रह्मशब्देनकीर्तितः ।
प्रकृष्ठनयनात्प्राणोऽपानोऽवाङ्नयनाद्धरिः ।
विविधंनयनाद्व्यानः सोन्नंसर्वोपजीव्यतः ।
एवंषोडशरूपासोचतुरात्माव्यवस्थितः ।
महाचमसनामासौ यस्मादत्तिचसत्कृतिः ।
महाचमस्यस्तज्ज्ञानी नह्यासंपरिकीर्तितः ।
एवंषोडशरूपाणां ज्ञानयोगश्चतुर्मुखः ।
सएवब्रह्मवित्तस्मात्पूज्यते मुक्तिगोपिसन् ।
सर्वदेवैरतितरांयः सम्यक्षोडशात्मवित् ॥ (व्याहृतितत्वे)
भूर्नामास्फूर्तिरूपत्वा द्भूरिवीर्यत्वतोभुवः ।
सुवःसुबलरूपत्वा न्महःपूर्णत्वतोविभुः ।
तदेतच्चतुराकारं ब्रह्मोक्तंगुणबृंहणात् ।
सआत्मासर्वदेवानां चतुरात्माजनार्दनः ।
तस्यब्रह्मादयोदेवा अंगमागंतुकत्वतः ।
वासुदेवादिरूपोसौ षोडशात्माचतुश्चतुः ।
सएव सर्ववेदोक्तः सर्वविद्यासुचेश्वरः ।
प्रणवार्थाव्या तयो व्याहृत्यर्थाऋगादयः ।
इतिहासपुराणञ्च पंचरात्रंचसर्वशः ।
सम्यग्व्याहरणाद्विष्णोः श्रुताव्या तय स्त्विति ।
सर्ववेदोक्तसर्वस्व व्याहृतेर्व्याहृतित्वमु ।
विशेषेणाहरंतीमं विष्णुमित्यथवास्मृता॥ व्याहृतिसारे ॥

## அ:— VI.வது அனுவாகம்.

அவதாரிகை:— பிரம்மத்தின் உபாசனை.

ச-பா:—பூ: புவ: சுவ: என்பவைகளில் கூறப்பட்ட இதரதேவதைகள் மஹ: என்னும் வியாஹிருதியால் கூறப்பட்ட பிரம்மத்தின் அங்கங்களாக சொல்லப்பட்டார்கள். எந்த பிரம்மத்துக்கு அவர்கள் அங்கங்களோ அந்த பிரம்மத்தை சாக்ஷாத்தாய் அறியும்பொருட்டும் தியானிக்கும் பொருட்டும் ஹிருதயாகாசம் ஸ்தானமாகச் சொல்லப்படுகின்றது. விஷ்ணுவை தியானிக்கச் சாலிக்கிருமம் சரியான ஸ்தானமாயிருப்பது போலும். அந்தஸ்தானத்தில் பிரம்மம் உபாசிக்கப்பட்டால் அது மனோமயத்வம் முதலிய தர்மங்களுடன் கூடினதாக சாக்ஷாத்தாய் அறியப்படுகின்றது; கையிலிருக்கிற நெல்லிக்காய் போலும். சர்வாத்மபாவத்தை அடைவதற்கு மார்க்கத்தையும் சொல்லவேண்டும். இவைகளின் பொருட்டு இந்த ஆறுவது அனுவாகம் ஆரம்பிக்கப்படுகின்றது.

வி-வி:—ஐந்தாவது அனுவாகத்தில் இதர தேவதைகளின் உபாசனை கூறப்பட்டது. ஆறில் முக்கிய தேவதையின் உபாசனை கூறப்படுகிறது. முதலில் உபாசிக்கத்தக்கதின் ஸ்வரூபம் கூறப்படுகின்றது-

### I. ஹிருதயத்தில் பிரம்மம்:உபாசியஸ்வரூபம்.

I (1) स य एषोऽन्तर्हृदय आकाशः । ஸ ய ஏஷோऽந்தர்ஹ்ருதய ஆகாஶ: ।

(2) तस्मिन्नयं पुरुषो मनोमयः। தஸ்மிந்நயம் புருஷோ மநோமய:

(3) अमृतो हिरण्मयः ॥1॥ அம்ருதோ ஹிரண்மய: ॥1॥

பதவுரை.

(1) अन्तर्हृदये அந்தர்ஹ்ருதயே=ஹிருதயமத்தியில்

सः एषः ஸ: ஏஷ:=யோகசாஸ்திரத்திலும் சுருதியிலும் பிரசித்தமான

यः ய:=எந்த

आकाशः ஆகாஶ:=ஆகாசமோ

तस्मिन् தஸ்மிந்=அந்த ஆகாசத்தில்

मनोमयः மநோமய:=மனதைப்பிரதானமாக உடையவனும்

अमृतः அம்ருத:=மரணமற்றும்

हिरण्मयः ஹிரண்மய:=பிரகாசமயமாயுமிருக்கிற, ஜோதிர்மயனை

अयं அயம்=இந்த

पुरुषः புருஷ:=புருஷன்

(अस्ति அஸ்தி=இருக்கிறான்

அ:—(1) अन्तर्हृदये அந்தர்ஹ்ருதயே:—

ச-பா:—ஹிருதயமென்பது தாமரைப்பூவின் ஆகாரமுள்ள மாம்சபிண்டம், பிராணனுடைய ஸ்தானம், அநேக நாடிகளின் துவாரங்கள் அதிலிருக்கின்றன. அதின் காம்புமேலிருப்பது சிரசு கீழ்நோக்கியது. பசுவை யாகத்தில் அறுக்கும்போது இந்த ஹிருதயம் செவ்வையாகத் தெரியவருகிறது. இப்படிப்பட்ட ஹிருதயத்திற்குள்

आकाशः ஆகாஶ:=ச-பா:—ஒரு பாத்திரத்தில் ஆகாசமிருப்பதுபோல்ஆகாசம் இருக்கிறது.

வா.ஹிருதயத்துக்குள்ளிருக்கும் ஆகாசம் புத்தி ஸ்தானம்.

स: एष: ஸ:ஏஷ: இந்த சப்தங்கள் சமீபத்திலிருப்பதையும் தூரத்திலிருப்பதையும் கூறுகின்றன. ஸ: என்பது யோகசாஸ்திரத்தில் பிரசித்தமான ஆகையால் தூரத்திலிருக்கிறதை கூறுகிறது.

ஏஷ என்பது சுருதிகளில் பிரசித்தமான ஆகையால் சமீபத்திலிருக்கிறதைக் கூறுகிறது.

ஹிருதயகமலத்தில் கட்டை விரல் பரிமானமுள்ள ஆகாசம் இருக்கிறது

(2) तस्मिन्नयंपुरुषः தஸ்மிந்நயம்புருஷ:

ச-பா:—அதில் இந்த பிரசித்தமான புருஷன் இருக்கிறான். புரி என்கிற நாடியில் சயனம் செய்திருக்கிறதினால். அல்லது பூ: முதலிய லோகங்கள் எவனால் பூர்ணம் செய்யப்பட்டிருக்கின்றனவோ அவன் புருஷன் பரமாத்மா.

---

## 1-6-வது அனுவாகம்.

வி:—அ-கை:—அங்கங்கள் உபதேசிக்கப்பட்டன. இனி பரவித்தை கூறப்படுகின்றது.

I (1) ஹிருதயத்துக்குள் யாதொரு ஆகாசமிருக்கிறதோ

(2) तस्मिन् தஸ்மிந்=அந்த ஆகாசத்தில்

---

## I. 6-அனுவாகம்.

து:—அ-கை:—பூ: புவ: ஸுவ: மஹ: என்கிற நான்கு வியாஹிருதிகளால் பிரதிபாதிக்கப்பட்ட அநிருத்த முதலிய நான்கு ரூபங்களின் ஸ்தானங்களை (அதாவது தேகத்திலுள்ள ஸ்தானங்களை உபாசனையின் பொருட்டு சொல்லுகிறார்.

I (1) स: ஸ:=பிரசித்தமான

य: एष: ய:ஏஷ:=எந்த

हृदये अन्त: ஹ்ருதயே அந்த:=ஹிருதயத்திற்குள்

आकाश: ஆகாஶ:=ஆகாசமிருக்கிறதோ

2. तस्मिन् தஸ்மிந்=அந்த ஆகாசத்தில்

அ:—வி-வி.பரமாத்மா எங்கு மிருந்தாலுங்கூட அவரை அறியும் பொருட்டும் உபாசிக்கும் பொருட்டும் ஹ்ருதயஸ்தானம் உபதேசிக்கப்படுகிறது. ஹ்ருதயகமலத்தில் சமாதியால் மனதை ஏகாக்கிரமாக இருந்தினால் அது பரமாத்மாவை சாக்ஷாத்கரிக்க சமர்த்தமாகிறது.

अयं ஃபுரு=இந்தசப்தம் அபரோக்ஷத்தைக்கூறுகிறது.பரமாத்மா சாக்ஷாத்கரிக்க யோக்கியம் என்பதை இது காட்டுகிறது.

पुरुषः வடாமக=அப்படிப்பட்ட பரமாத்மா ஹ்ருதயமத்தியில் உபாசிக்கப்பட்டவராய் பிரசன்னராகிறார். ஆனதால் தஹரவித்தையிலும் (சாந்தோக்கியம் VIII-1-6) சாண்டில்லிய வித்தையிலும் (ஷை III-14)ஹ்ருதயம் கூறப்பட்டிருக்கிறது.

मनोमयः ஃபுனாஃப:

ச—பா. (1) மனது என்பது விஞ்ஞானம். விஞ்ஞானத்தால் அறியப்படுவதால் மனோமயன் அல்லது (2) எதினால்மனனம்செய்யப்படுகிறதோ அது, அதாவது அந்தக்கரணம்;அதற்கு அபிமானி எவனோ அல்லது எவனுக்கு அந்தக்கரணம் அடையாளமோ அவன்மனோமயன்.

வா:—ஆத்மாவை மனோமயனாகச் சொல்லியிருக்கிறது. ஏனெனின்:—

(1) ராகுவானவன் சந்திரனுடன் சேர்ந்திருப்பதாகக்காணப் படுகிறான். அதுபோல் ஆத்மாவும் மனதுடன் சேர்ந்ததாகத்தான் சாக்ஷாத்கரிக்கப் படுகிறது. அல்லது,

(2) மனத்தானது விஷயங்களை மனனம் செய்யும் சாதகமாயிருப்பதால், மனோமயன்-அல்லது

(3) புருஷன் மனதின் அபிமானியாயிருப்பதால், மனோமயின்

(4) ஆத்மா மனதின் மூலமாக விளங்குகிறது. ஆகையால் மனதானது அதின் ஸ்திதிக்கு அடையாளமாயிருக்கிறது.

வி-வி.—ஞானமடையவேண்டுமென்று இச்சிக்கிறவர்கள் அந்த புருஷனை மனதினால் சாக்ஷாத்கரிக்கிறார்கள். உபாசகர்களும் மனதினால் தியானிக்கிறார்கள். ஆகையால் அவன் மனோமயன்.

---

வி:—मनोमयः ஃபுனாஃபஃ சுத்த மனதினால் கிரகிக்கத் தகுந்தவனும்

---

து:—अयं ஃபுரு=புஃ என்கிற சப்தத்தால் பிரதிபாதிக்கப்பட்ட

मनोमयः ஃபுனாஃப=ஞானத்தால் பூர்ணரான

அ:—(3) अमृतः हिरण्मयः அம்ருத: ஹிரண்மய:

ச-பா.—அவர் மரணமற்றவர். ஜோதிர்மயர்

வி.வி.—நாசமற்றவர், சுவயம் பிரகாசமானவர்

## II. பிரம்மத்தை அடையும் மார்க்கம்.

அ-கை.—ச.பா. இவ்விதமாய் இருக்கிற, ஹிருதயகாசத்தில் ஞானியால் சாக்ஷாத்கரிக்கப்பட்ட, ஞானியின் ஆத்மாவாயிருக்கிற, இந்திரன் என்பதாய் கூறப்பட்ட, பிரம்மத்தை ஞானியானவன் எந்த மார்க்கத்தால் அடைகிறானோ அந்தமார்க்கத்தை சுருதி இனி காண்பிக்கிறது.

(2) வி-வி.—சுருதி இவ்விதமாய் உபாசிய ஸ்வரூபத்தைச் சொல்லி இனி உபாசகனுக்கு மார்க்கத்தைக் காட்டுகிறது.

(4) अन्तरेण तालुके । அந்தரேண தாலுகே ।

(5) य एषः स्तन इवावलम्बते ய ஏஷ: ஸ்தந இவாவலம்பதே ।

(6) सेन्द्र योनिः । ஸேந்த்ர யோநி: ।

(7) यत्रासौ केशान्तो विवर्त्तते । யத்ராஸௌ கேசாந்தோ விவர்த்ததே ।

(8) व्यपोह्य शीर्षकपाले ॥2॥ வ்யபோஹ்ய சீர்ஷகபாலே ॥2॥

---

வி:—(3) अमृतः அம்ருத:=சம்சாரமற்றவனும்

हिरण्मयः ஹிரண்மய:=பிரகாசமான சரீரத்தை உடையவனுமிருக்கிற

(2) अयंपुरुषः அயம்புருஷ:=இந்த புருஷன்

(उपासितव्य : உபாஸிதவ்ய:=உபாசிக்கத்தக்கவன் என்று அர்த்தம்.)

सर्वत्रप्रसिद्धोपदेशात् ஸர்வத்ரப்ரஸித்தோபதேசாத் என்கிற பிரம்மசூத்திர (I-2-1) அதிகரணத்தில் பாஷியகாரர் இந்த வாக்கியத்தைப் பரமாத்ம பரமாகவே வியாக்கியானம் செய்திருக்கிறார். அப்படியே வியாசாரியாரும் வியாக்கியானம் செய்திருக்கிறார். ஆகையால் இந்த வாக்கியம் பரம் என்பதாய் சங்கிக்கக் கூடாது.

---

து:—3. अमृतः அம்ருத:=நித்தியரான

हिरण्मयः ஹிரண்மய:=விலக்ஷணமான ஆநந்தத்தால் பூர்ணரான

पुरुषः புருஷ:=அநிருத்தன்

(वर्त्तते வர்த்ததே=இருக்கிறார்)

அ:— பதவுரை.

यः एषः ய: ஏஷ:=எந்த இந்தமாம்சபிண்டம்

अन्तरेण तालुके அந்தரேண தாலுகே=உள்வாய் (தாலு)க்குமத்தியில்

स्तन इव ஸ்தன இவ=கன்றுக்குட்டியின் முலைக்காம்புபோல்

अवलम्बते அவலம்பதே=தொங்குகிறதோ

यत्र யத்ர=எந்த சிரஸின் பிரதேசத்தில்

असौ அஸௌ=இந்த

केशान्तः கேசாந்த:=கேச மூலமானது

विवर्तते விவர்த்ததே=இருக்கிறதோ

(तं देशं प्राप्य தம் தேசம் ப்ராப்ய= அந்த இடத்தை அடைந்து)

शीर्षकपाले சீர்ஷகபாலே= சிரசின் கபாலங்களை

व्यपोह्य வ்யபோஹ்ய=பேதித்து வெளியே போகிறதோ

सा ஸா=அது

इन्द्रयोनिः இந்த்ரயோனி:=இந்திரனுடைய உற்பத்திஸ்தானம்.

ச—பா:— சுஷும்னை என்பது ஒருநாடி. அது ஹிருதயத்திலிருந்து மேல் போகிறது. யோக சாஸ்திரத்தில் இந்த நாடி பிரசித்தம். இது தொண்டையின் இரண்டு தூண்களின் மத்தியிலும், இந்த மத்தியிலிருக்கிற முலைக்காம்புபோல் தொங்குகிற மாம்ச பிண்டத்தின் வழியாயும் கேசங்களின் வேர்கள் இருக்கிற கபாலத்தின் வழியாயும் போகிறது. இந்தக்கடைசி ஸ்தானத்துக்கு நாடி வந்தவுடன் மண்டை யோட்டை பேதித்துக்கொண்டு மேல் போகிறது. இதுதான் இந்திரனுடைய ஜனனபூமி; ஸ்வரூபத்தை அடையும் மார்க்கம்.

---

## அர்ச்சிராதிமார்க்கம்.

வி:—1 (4):—இந்தப்படி பரவித்தையை உபதேசித்து அர்ச்சிராதி மார்க்கத்தை अन्तरेण அந்தரேண என்கிற வாக்கியங்களால் உபதேசிக்கிறார்.

**तालुके अन्तरेण** தாலுகே அந்தரேண=நாவின் அல்லது வாயின் மத்தியம் அல்லது இரண்டு தாலுகளுக்குக் கீழ்பக்கத்தில்

**स्तनइवयः अवलंबते** ஸ்தன இவ ய: அவலம்பதே=கோஸ்தனம் போல் யாதொன்று தொங்குகின்றதோ அது ஹிருதய புண்டரீகம்.

---

து:—4. तालुके தாலுகே=தாலுகைகளின்

अन्तरेण அந்தரேண=மத்தியில்

அ:—வா:—இவ்விடத்தில் தியானிக்கவேண்டியதாகச் சொன்னதுசகுண பிரம்மத்தை அடைய சுஷும்னு என்னும் நாடியே இதில் உதானவாயு ஸஞ்சரிப்பியிருக்கிறது. இதின் குணம் மேல் போகுதல். ஞானியானவன் ரேசகப்பிராணுயாமத்தால் இதின் வழியாய் மேல் போகலாம், இந்த மார்க்கத்தால் மண்டையின் அடிபாகம்வரையில் வந்து மண்டையைபேதித்து, மண்டையின் மேல்பாகத்தை ஞானி அடைகிறுன். இவ்விடத்தில் தலைமயிரின் வேர்களிருக்கின்றன.

வி—வா:—வாயின் உள்பாகத்தில் நாக்கின் நுணிக்கு மேலிருக்கிற வாயின் இடதுபக்கமும் வலதுபக்கமும் தொண்டையின் தூண்களாகச் சொல்லப்படுகின்றன. இதன் மத்தியிலிருக்கிற மாம்சபிண்டம் இவ்விடத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இது பிறருக்குச் செவ்வையாய் தெரியும். லம்பிகாயோகத்தால் ஒருவன் தொட்டும் பார்க்கலாம். ஆகையால் அது ய. ஏஷ: யঃ வஷ: என்கிற பதங்களால் கூறப்பட்டது; இந்த மாம்சகண்டம் பரமேசுவரனுடைய ஸ்தானம். சந்திரனை விரலால் காட்டும்போது ஒரு மரத்தின் கிளையின் நுணியை சந்திரனிருக்கிற ஸ்தானமாகக்காட்டுவதுபோல், இந்த மாம்சகண்டத்துக்கு அதிசமீபத்தில் சுஷும்னு நாடியிருப்பதால், அந்த பிண்டமே சுஷும்னு என்பதாக சுருதிசொல்லுகிறது. இந்த நாடியில் பிரவேசித்த சித்தம் ஏகாக்கிரமாகி பரமாத்மாவை சாக்ஷாத்கரிக்க சமர்த்தமாகிறது. இப்படியே க்ஷுரிகோபநிஷத்தில் சொல்லியிருக்கிறது. ஆகையால் இந்த சுஷும்னுநாடி பரமேசுவரனுடைய ஸ்தானம். மோக்ஷத்தை அடைய அது மார்க்கமாயிருப்பதாலும் அது அவருடைய ஸ்தானம். இது ஸ்தானம் என்பது கடோபநிஷத்து VI - 16 லும் சாந்தோக்கியம் VIII–6-6 லும் தெரியவருகிறது. மயிரின் நுணி பாகத்துக்கு மேல் மயிர் இல்லாதபடியால் அந்தகீழ்பாகம் நுணி என்றுசொல்லப்படுவது போல்மயிரின் உற்பத்திக்குக் கீழ்பாகத்திலும்மயிர் இல்லாதபடியால்அந்தகீழ்பாகமும் நுணிஎன்றுசொல்லப்படுகின்றது.

---

வி:—(( ) ஸ: வஷ:=இந்த ஹிருதய புண்டரீகமானது

इन्द्रयोनिः ஊ௦ஓ யோநி:=முக்தனுடைய ஐசுவரியத்தை அடையப்போகிற ஜீவனுக்கு அல்லது பரமத்மாவுக்கு, யோநி: வெளிக்கிளம்புகிற மார்க்கமாயிருக்கிறது. அல்லது ஸ்தானமாயிருக்கிறது.

வி:—(7) यत्र யத்ர = எந்த மார்க்கத்தில் அல்லது இடத்தில்

केशान्तः கேஶாந்த:= க:=பிரம்மா; ஈஶ:=ருத்திரன் இவர்களுக்கு அந்தமான=காரணமான-அதாவது சம்ஹாரம் செய்கிறவரான அல்லது இவர்களுக்கு இருப்பிடமாயிருக்கிற மயிர் நுனிபோல் சூட்சுமமான

असौ அஸள=இந்த பகவான் அல்லது இந்த ஜீவன்

विवर्त्तते விவர்த்தே=விசேஷமாக அடையத்தகுந்தவராக இருக்கிறரோ அல்லது தனிமையாக இருக்கிறரோ-இதற்கு ஆதாரம்:—हृदिह्ययमात्मा ஹ்ருதிஹ்யயமாத்மா என்கிற சுருதி

(8) शीर्षकपाले ஶீர்ஷகபாலே=சிரசு கபாலங்களை

व्यपोह्य வ்யபோஹ்ய=பிரயாணகாலத்தில் பிளந்து

---

து:—5. यः एषः स्तनः इव अवलम्बते யஃ ஏஷஃ ஸ்தனஃ இவ அவலம்பதே=எந்த இடம் ஸ்தனம்போல் தொங்குகிற மாம்ச உண்டையாயிருக்கிறதோ

6. सा ஸா=அந்த இடம்

इन्द्र योनिः இந்த்ர யோனி:=பரம ஐசுவரியத்துடன் கூடின பிரத்யும்னன் என்று பெயருள்ள பரமாத்மாவின் ஸ்தானம்

7. यत्र असौ केशान्तः யத்ர அஸள கேஶாந்தஃ=மயிர்களின் அடிபாகத்தில் வேரில்

वि: விஃ=பூர்ணரூபரான சங்கர்ஷணரான பரமாத்மா

वर्त्तते வர்த்ததே=இருக்கிறர்

8. अशीर्षकपले அஶீர்ஷகபாலே=மஸ்தகத்தின் மேல்பாகத்தில்

व्यपुः வ்யபுஃ=சகல ஜகத்தும் நஷ்டமானாலும் தான் மட்டுமிருக்கிற வாசுதேவர் என்று பெயருள்ள பரமாத்மா.

हि ஹி=பிரசித்தமாக

वर्त्तते வர்த்ததே=இருக்கிறர்

## III. உபாசனையின் பலன்.

வி-வி- இவ்விதமாக உபாசகன் தியான பலனை அடையும் பொருட்டு வெளியே போகும் மார்க்கத்தைச்சொல்லி இனி சுருதியானது அந்த பலனைக் கூறுகிறது.

(9) भूरित्यग्नौ प्रति तिष्ठति । பூரித்யக்னௌ ப்ரதிதிஷ்டதி ।

(10) भुव इति वायौ । புவ இதி வாயௌ ।

II (1) सुव रित्यादित्ये । ஸுவரித்யாதித்யே ।

(2) मह इति ब्रह्मणि । மஹ இதி ப்ரஹ்மணி ।

(3) आप्नोति स्वाराज्यम् । ஆப்நோதி ஸ்வாராஜ்யம் ।

(4) आप्नोति मनसस्पतिम् । ஆப்நோதி மநஸஸ்பதிம் ।

(5) वाक्पति श्चक्षुष्पतिः । வாக்பதிஶ்சக்ஷுஷ்பதிஃ ।

(6) श्रोत्रपति र्विज्ञानपतिः । ஶ்ரோத்ரபதிர்விஜ்ஞாநபதிஃ ।

(7) एतत् ततो भवति । ஏதத்ததோ பவதி ।

(8) आकाशशरीरं ब्रह्म । ஆகாஶஶரீரம் ப்ரஹ்ம ।

(9) सत्यात्म प्राणारामं मन आनन्दम् । ஸத்யாத்ம ப்ராணாராமம் மந ஆநந்தம் ।

(10) शान्ति समृद्धममृतम् ॥ ३ ॥ ஶாந்திஸம்ருத்தமம்ருதம் ॥3॥

பதவுரை

(9) भूः इति பூஃ இதி = பூ: என்கிற
अग्नौ அக்னௌ = அக்கினியில்
प्रतितिष्ठति ப்ரதிதிஷ்டதி = இருக்கிறான்
(10) भुवः इति புவஃ இதி = புவ: என்கிற
वायौ வாயௌ = வாயுவில்
(प्रतितिष्ठति ப்ரதிதிஷ்டதி = இருக்கிறான்)
II (1) सुवः इति ஸுவஃ இதி = சுவ: என்கிற
आदित्ये ஆதித்யே = சூரியனிடத்தில் (இருக்கிறான்)
(2) महः इति மஹஃ இதி = மஹ: என்கிற
ब्रह्मणि ப்ரஹ்மணி = பிரம்மத்தில் (இருக்கிறான்)

அ:—(3) स्वाराज्यं ஸ்வாராஜ்யம்=தானே ராஜா என்கிற பாவத்தை

आप्नोति ஆப்நோதி=அடைகிறான்

(4) मनसः மநஸ:=மனதின்

पतिं பதிம்=பதியை

आप्नोति ஆப்நோதி=அடைகிறான்.

(5) वाक्पतिः வாக்பதி:=வாக்குக்குப்பிரபுவாகிறான்

चक्षुष्पतिः சக்ஷுஷ்பதி:= நேத்திரத்துக்குப் பிரபுவாகிறான்

(6) श्रोत्रपतिः ஶ்ரோத்ரபதி:=சுரோத்திரங்களுக்குப் பிரபுவாகிறான்

विज्ञानपतिः விஜ்ஞாநபதி:=விஞ்ஞானத்துக்குப் பிரபுவாகிறான்

(7) ततः தத:=பிறகு

एतत् ஏதத்=இது

भवति பவதி=ஆகிறான் (எதுவெனின்)

(8) आकाशशरीरं ஆகாஶஶரீரம்=ஆகாசத்தைச்சரீரமாயுடைய

(9) सत्यात्म ஸத்யாத்ம=ஸத்திய ஸ்வரூபமான

प्राणारामं ப்ராணாராமம்=பிராணனே சந்தோஷமாக உடைய

मनआनन्दं மநஆநந்தம்=மனதை ஆநந்தமாக உடைய

(10) शान्तिसमृद्धं ஶாந்திஸம்ருத்தம்=சாந்தியுடன் விசேஷமாய்க் கூடியும்

अमृतम् அம்ருதம்=மரணமுமற்றுமிருக்கிற

(8) ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மம் (ஆகிறான்)

வியாக்கியானம்.

(9) भूः इति अग्नौ பூ:இதி அக்நௌ=

(ஈ) ச—பா:—எவன் இவ்விதமாகத் தியானம் செய்து மனோமயனான ஆத்மாவை அடைகிறானோ அவன்மேற் சொன்ன மார்க்

வி:—(9) अग्नौ அக்நௌ=அக்கினி லோகத்தில்

भूःइति பூ: இதி=உபாசிக்கப்பட்ட பூ என்கிற வியாஹிருதியால்

प्रतितिष्ठति ப்ரதிதிஷ்டதி=ஸ்தாபனம் பண்ணப்பட்டவனாக ஆய்விடுகிறான்.

பூ என்கிற வியாஹிருதியானது உபாசகனை அக்கினி லோகத்துக்குக் கொண்டுபோகிறது என்பது கருத்து. அர்ச்சிராதிமார்க்கமாய்ப் போகிறவர்களெல்லோரும் அக்கினிலோகத்தை அடைந்தாலும் பூராதி வியாஹிருதி உபாசனை மஹிமையால் சிலகாலம் அவ்விடமிருக்கிறார்கள் என்று அர்த்தம்.

அ:—கத்தால் சிரசுக்குவெளியே போய், இந்தபிருதிவிக்கு அதிப தியாயும்: மஹத்பிரம்மத்துக்கு அவயவம்போலுமிருக்கிற, பூ: என். கிற வியாஹ்ருதியால் கூறப்பட்ட அக்கினியில் ஸ்திரப்படுகிருன் அதாவது அக்கினிரூபமாக பூமியை வியாபிக்கிருன்.

(b) வி-வி:—மூன்று வியாஹ்ருதிகளேயும் தியானிக்கிறதி ஞல் அவன் அக்கினி முதலியவைகளில் பிரதிஷ்டையை அடைகிருன், அதாவது அக்கினிவாயு ஆதித்தியன் இவர்களுடைய சக்திகளை அடைகிருன். நான்காவது வியாஹ்ருதியை தியானிப்ப திஞல் சத்தியலோகத்திலிருக்கிற பிரம்மாவின் சக்திகளை அவன் அடைகிருன். இந்த சக்திதான் ஸ்வாராஜ்யமுதலிய பதங்களால் கூறப்படுகின்றது. அக்கினி முதலான தேவதைகளுக்கு, இவனே பதியாகிருன். ஆகையால் அவனுக்கு எல்லா தேவதைகளும் பலி யைக்கொடுக்கிருர்கள்.

(10) भुव: ஹுவஃ...:—

ச-பா:—அப்படியே இரண்டாவது வியாஹ்ருதியான புவ: என்பதால் கூறப்பட்ட வாயுவில் அவன் பிரதிஷ்டை அடைகிருன் அதாவது அதின் ரூபமாக புமியை வியாபிக்கிருன்.

II (1) सुव:...ஸுவ:...

ச-பா:—அப்படியே சுவ: என்னும் மூன்ருவது வியாஹ்ருதி யால் கூறப்பட்ட ஆதித்தியனிடத்தில் பிரதிஷ்டையை அடைகி ருன், அதாவது அவனுடைய ரூபமாக பூமியை வியாபிக்கிருன்.

---

து:—9. அ-கை:—பூ: முதலிய வியாஹ்ருதிகளால் கூறப்பட்டிரு க்கும் அநிருத்தாதிகளை உபாசிக்கும் பொருட்டு வேறு ஸ்தானங்க ளைச் சொல்லுகிருர்.

भूः इति ஹூஃஇதி=முன் சொன்னபடி பூ: சப்தத்தால் கூறப்ப ட்ட அநிருத்தன் என்று பெயருள்ள பரமாத்மா

अग्नौ அக்நௌ=அக்கினியில்

प्रतितिष्ठति ப்ரதிதிஷ்டதி=இருக்கிருர்

து.—10. भुवः इति ஹுவஃஇதி=புவ: என்கிற சப்தத்தால் கூறப்ப ட்ட பிரத்யுமனன் என்று பெயருள்ள பரமாத்மா

वायौ வாயௌ=வாயுவினிடத்தில்

प्रतितिष्ठति ப்ரதிதிஷ்டதி=இருக்கிருர் (இந்த பதத்தை நெடுகி லும் சேர்த்துக்கொள்ளவும்)

II 1· सुवः इति ஸுவஃஇதி=சுவ: என்று சொல்லப்பட்ட சங் கர்ஷணன்

आदित्ये ஆதித்யே=சூரியனிடத்தில் (இருக்கிருர்.)

அ:—(2) महः ... = ச-பா:— மஹ: என்கிற நான்காவது வியாஹ்ருதியால் குறிப்பிடப்பட்ட பிரதானமான பிரம்மத்தினிடத்திலும் அவன் பிரதிஷ்டையை அடைகிறான்.

(3) आप्नोति स्वाराज्यं ஆப்நோதி ஸ்வாராஜ்யம் = ச-பா: இவைகளிலெல்லாம் இவைகளின் ஆத்மாவாக இருந்து, பிரம்மமாகித்தானே சுவாராஜியத்தை அடைகிறான், அதாவது அதிபதியாக ஆகிறான். பிரம்மம் இதரதேவதைகளுக்கு அதிபதியாக இருப்பதுபோல், இவனும் அவர்களுக்கு அதிபதியாகிறான். பிரம்மத்துக்கு சகல தேவதைகள் பலியைக் கொடுக்கிறதுபோல் இவனுக்கும் கொடுக்கிறார்கள்.

வா:—இந்த உலகத்தில் எவனுக்கு வேறு அரசனில்லையோ, எவனே அரசனாக இருக்கிறானோ அவனே சுவராட் என்று சொல்லப்படுகிறான். உபாசகன் இவ்விடத்தில் இப்படிப்பட்ட அரசனாகி மனது, வாக்கு, சக்ஷுஸ், காது, புத்தி, இவைகளுக்கு அரசனாகிறான். இதில் சந்தேகமில்லை. இப்படிப்பட்ட சிலாக்கியமான பலன்கள் இப்படிப்பட்ட தியானத்தினால் சித்திக்கின்றன.

(4) आप्नोतिमनसस्पतिं ஆப்நோதி மநஸஸ்பதிம்:—

ச-பா:—மனதின் பதியை அவன் அடைகிறான்; சகல மனதுகளின் பதியை அடைகிறான். சகலத்துக்கும் ஆத்மாவான பிரம்ம

---

வி:—II (3) स्वाराज्यं ஸ்வாராஜ்யம் = அகர்மாதீனம்-அதாவது கர்மாதீனமற்றது.

(4) मनसस्पतिं आप्नोति மநஸஸ்பதிம் ஆப்நோதி = தன்னுடைய சங்கற்பத்தால் உண்டுபண்ணப்பட்ட சர்வேந்திரியங்களோடு கூடி

---

து:—2. महः इति மஹஇதி = மஹ: என்று சொல்லப்பட்ட வாசுதேவன்

ब्रह्मणि ப்ரஹ்மணி = சதுர்முக பிரம்மாவினிடத்தில் (இருக்கிறார்)

3. அ-கை;—சதுர்முகனிடமிருக்கிற வாசுதேவனும் பரிமித ஸ்தானத்திலிருக்கவில்லை ஆனால் வியாபகராயிருக்கிறார் என்பதை आप्नोति ஆப்நோதி என்பதால் சொல்லுகிறார்.

स्वाराज्यं ஸ்வாராஜ்யம் = ஜகத்தை

(सः ஸ: = அந்த வாசுதேவன்)

आप्नोति ஆப்நோதி = வியாபித்திருக்கிறார் என்று அர்த்தம்

4. मनसस्पतिं மநஸஸ்பதிம் = மனதின்பதியான அநிருத்தனையும்

அ:—த்தை அடைகிறான். பிரம்மம் சகல மனதுகளினால் மனனம் செய்கிறது. இவ்விதமாய் அறிகிறவன் தியானிக்கிறவன் பிரம்மத்தையே அடைகிறான்.

வி-வி.—எல்லாருக்கும் அதிபதியாகிறது மன்றியில் சகல பிராணிகளின் மனதுகளுக்கும் அதிபதியாகிறான்.

(5) वाक्पतिः வாக்பதி:=சகலவாக்கு இந்திரியங்களுக்கும் சகலசக்ஷுரிந்திரியங்களுக்கும், சகல கர்மேந்திரியங்களுக்கும் சகல ஞானேந்திரியங்களுக்கும் அதிபதியாகிறான், சகலத்துக்கும் ஆத்மாவாயிருப்பதால், சகல பிராணிகளின் கரணங்களையும் தன்னுடையதாக்கிக் கொள்ளுகிறான்.

வி-வி.—विज्ञानपतिः விஜ்ஞானபதி:=அந்தக்கரண மென்பது ஒன்றாக இருந்தும், சக்தி பேதத்தால் மனது என்றும் விஞ்ஞானமென்றும் கூறப்படுகின்றது. இந்திரியமாக பாவிக்கப்படும் போது அது மனது எனப்படுகின்றது. கர்த்தாவாக பாவிக்கப்படும்போது விஞ்ஞானம் (புத்தி) என்று கூறப்படுகின்றது. முன் ஒரு தேசத்திலிருக்கிற மனது, வாக்கு முதலிய இந்திரியங்களுக்கு அவன் அதிபதியாக இருந்தான். இப்போது தியானபலத்தால் விராட் ஸ்வரூபத்தை அடைந்து சகல தேசங்களிலுமிருக்கிற மனது வாக்கு முதலியவைகளின் அதிபதியாக ஆகிறான்.

(7) एतत्...வ்ஏதத்...

ச-பா மேலும், இவைகளுக்கெல்லாம் மேலாகவும் அவன் ஆகிறான். அது என்னவெனின்,

---

வி:—னவன்-அல்லது இந்திரியங்களை அபேக்ஷிக்காமல் உண்டான ஞானத்தோடு கூடினவன்

(7) அதின் பிறகு இது உண்டாகிறது. அது என்னவெனின்

---

து:— आप्नोति ஆப்நோதி=வியாபிக்கிறார்

நித்தியமான ஐசுவரிய பலத்தால் தன்னையும் ஜகத்தையும் வியாபித்துக்கொண்டிருப்பதால்

5. वाक्पतिः வாக்பதி:=வாக்கிலிருந்து வாக்கை நியமனம் செய்கிறவர்

चक्षुष्पतिः வக்ஷுஷ்பதி:=சக்ஷுவுக்குப்பதி

6. श्रोत्रपतिः ஶ்ரோத்ரபதி:=ஶ்ரோத்திரதின் நியந்தா

विज्ञानपतिः விஜ்ஞானபதி:=உத்தமஞானத்தைக் கொடுக்கப்பட்டவர்

एतद्भूतात्मवान् வ ஏதத்தொஜவதி = இவ்விதமாக அநேகவிதமான ரூபங்களை தரிக்கிறவராயிருக்கிறார் என்பது கருத்து

அ:—(8) आकाशशरीरंब्रह्म ஆகாஶஶரீரம்ப்ரஹ்ம=

ச-பா-அவன் பிரம்மமாகவே ஆகிறான், இந்தபிரம்மத்துக்கு ஆகாசம் சரீரம், அல்லது இதினுடைய சரீரம் ஆகாசம்போல் சூட்சுமமானது. இப்படிப்பட்ட பிரம்மத்தை அவன் அடைகிறான்.

வி-வி சமஷ்டியாகிற விராட் ஸ்வரூபத்தை அடைந்த பிறகு பிரம்மத்தின் வாஸ்தவ ஸ்வரூப ஞானத்தை அவன் அடைகிறான் அவித்தை நாசமடைந்தபிறகு அடியிற் சொல்லியபடி ஸ்வரூபம் சித்திக்கிறது.

(1) ஆகாசம்போல் பிரம்மமும் சரீரமற்ற ஸ்வரூபமுள்ளது அல்லது.

(2) சகல ஜகத்கற்பனைக்கும் அதிஷ்டானமாக இருப்பதினால் பிரம்மம் சகலத்துக்கும் ஆத்மாவாயிருக்கிறது. ஆகையால் ஆகாசமும் பிரம்மத்தின் ஸ்வரூபமாக சொல்லப்படுகின்றது. ஆகாசத்தில் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன.

(1) சச்சிதானந்த ரூபமான அதிஷ்டானம்சம்

(2) நாம ரூபங்களாகிற ஆரோபிக்கப்பட்ட அம்சம். இவைகளில் நாம ரூபாம்சம் மித்தையானதால் பிரம்மஸ்வரூபத்தில் ஏற்படமாட்டாது. ஆனால் அதிஷ்டானம்சம் சத்தியமானதால் பிரம்மத்தில் ஏற்படலாம்.

(9) सत्यात्म ஸத்யாத்:—

ச-பா இதின் ஸ்வரூபம் ஆகாரத்துடன் கூடியிருந்தாலும் ஆகாரமற்றதாயிருந்தாலும் ஒரேரீதியாக இருக்கிறது.

---

வி:—(8) आकाशशरीर ஆகாஶஶரீரம்=நான்கு பக்கங்களிலும் பிரகாசமான சரீரத்தோடு கூடின

ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மரூபமாக ஆகிவிடுகிறான்.

(9) सत्यात्मप्राणारामं ஸத்யாத்மப்ராணாராமம்=எப்போதும் ஒரே ரூபமாயிருப்பதால் சத்தியர்களாகவும் நித்திய முக்தர்களாயுமிருக்கிற ஜீவர்களுக்கு பிராணன்போல் பரம பிரீதிக்கு ஆஸ்பத

---

து:—8. வாசுதேவருடைய குணங்களை आकाशशरीरं ஆகாஶஶரீரம் முதலியதால் சொல்லுகிறார்.

ब्रह्म ப்ரஹ்ம=வாசுதேவர் என்கிற பிரம்மம்

आकाशशरीरं ஆகாஶஶரீரம்=ஆகாசம் போல் வியாபித்திருக்கிறது.

அ:—வி-வி:— சகல ஜகத்கற்பனைக்கும் அதிஷ்டான மாயிருப்ப தால், பிரம்மத்தின் ஸ்வரூபம் சத்தியமாயிருக்கிறது, பாதிக்கப்பட மாட்டாது.

प्राणारामं ப்ராணாராமம் —

ச-பா:—பிராணன்களிடத்தில் இவன் இரமிக்கிறான், அல்லது பிராணன்கள் இவனிடத்தில் இரமிக்கின்றன

வி-வி:—உற்பத்தி முதலிய வியவஹாரங்கள் பிரம்மத்தினிடத் திலிருக்கின்றன. பிரம்மத்தினின்றும் பிராணன் உற்பத்தியாகு தல் முண்டகோபநிஷத்து II-1-3 ல் தெரியவருகிறது. அப்படியே பிரச்னோபநிஷத்து III-1 லும் தெரியவருகிறது. இப்படிப்பட்ட பிராணனிடத்தில் ரமிக்கிறபடியால் பிராணாராமம் என்று சொல் லப்படுகிறது.

मन आनन्दम् மனஆனந்தம் —

ச-பா:—அவனுக்கு மனதானது ஆநந்தத்தைத்தவிர வேறு ஒன்றும் கொடுக்கிறதில்லை

வி-வி:—மனதானது எப்போது இந்திரியவிஷயங்களை நோக் காமல் பிரம்மத்தை நோக்குகிறதோ, அப்போதுதானே மனதிற்கு விசேஷ சுகம் கிடைக்கிறது. அப்படியே மைத்திரேய உபநிஷத் தில் (VI-34) சொல்லியிருக்கிறது. இந்த தைத்திரீய உபநிஷத்தி லேயே II-7லும் சொல்லியிருக்கிறது.

---

வி:—மா இருக்கிறாரோ அவரையே ஆராமமாக அதாவது போக்கிய வஸ்துவாக சொல்லி யிருக்கிறது.

मनआनन्दं மனஆனந்தம்=சங்கற்பமாத்திரத்தால் உண்டான ஆந ந்தத்தை உடையது.

---

9. सत्यआत्मा ஸத்யாத்மா=நல்லகுணங்களால் பூர்ணமாயிருக் கிறது.

து:— सत्भावे साधुभावेच ஸத்பாவே ஸாதுபாவேச என்கிற வசனப்படி ஸத்சப்தத்துக்கு சாதுகுணம் என்று அர்த்தம்

प्राणारामं ப்ராணாராமம்=முக்கியவாயு அவருடைய விசேஷ ஆநந்தத்துக்கு ஸ்தானமாயிருக்கிறான் அதாவது மற்ற எல்லா வற்றையும் விட முக்கியப் பிராணனிடம் வெகு பிரீதியுடன் வாசு தேவ பரமாத்மா இருக்கிறார். (அல்லது) பிராணசப்தம் பலத்தைக் கூறும் பல ஸ்வரூபமாயும் சுகஸ்வரூபமாயுமிருப்பதால் பிராணாராம என்று சொல்லப்படுகிறார்.

मनआनन्दं மனஆனந்தம்=ஞானாநந்தஸ்வரூபராயிருக்கிறார்.

அ:—(10) शान्तिसमृद्धं ஶாந்திஸம்ருத்தம்=இவன் சாந்தியுடனும், சம்ருத்தியுடனும் கூடியிருக்கிறான். அல்லது சாந்தியால் நிறைந்திருக்கிறவன்

வி-வி:— மனதானது விக்ஷேபமற்று இருப்பதே அதாவது கண்ட இடத்தில் அலையாமலிருப்பதே சாந்தி. இதால்நிறைந்திருக்கிறது பிரம்மம். ஆநந்தைகரசமான பிரம்மம் அறியப்பட்ட மாத்திரத்தில், அந்த ஆநந்தத்தில் முழுகியிருக்கிற மனது எங்கும் அலையமாட்டாது. இந்த சாந்தியானது சுவேதாசுவதரம் IV-14 லும், பகவத்கீதை VI-15 லும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் மனதால் ஏற்படும் சாந்தியால் நிரம்பியிருக்கிறது. பிரம்மம் அல்லது இந்த சாந்தியானது பிரம்மத்தினிடத்திலேயே இருக்கிறது. எப்படி மாயையானது ஜகதாகாரமாகவிகாரமடைகிறதோ அப்படி பிரம்மம் அடைகிறதில்லை. அது கூடஸ்தநித்தியம். ஆகையால் தன்னிடத்திலிருக்கிறசாந்தியாலேயே பிரம்மம் நிரம்பியிருக்கிறது.

अमृतं அம்ருதம்:—

ச-பா:—பிரம்மம் மரணதர்மமற்றது.

வி-வி:—பிராணன் தேகத்தைவிட்டு வெளியே போகுதலே மரண மெனப்படும். இது காரணசகிதமான ஜீவனுக்குப் பொருந்துமேதவிர பிராணமற்ற பரமாத்மாவுக்குப் பொருந்தாது. பரமாத்மாவுக்குப் பிராணனில்லை என்பது முண்டகம் II-1-ல் தெரியவருகிறது.

ச.பா:—இந்த அதிக குணவிசேஷணங்கள் மனோமயனாக வர்ணிக்கப்பட்ட பிரம்மத்துக்கே ஏற்பட்டிருக்கின்றன வென்பதை அறியவேண்டும்.

---

வி:—10) शान्तिसमृद्धं ஶாந்திஸம்ருத்தம்=ஆத்தியந்திகசாந்தியுடன் கூடினது.

अमृतं அம்ருதம்=சம்சாரமற்றது.

இப்படிப்பட்ட பிரம்மமாக ஆய்விடுகிறேன்.

---

து:—10. शान्तिसमृद्धं ஶாந்திஸம்ருத்தம்=சகல பிரகாரமான சுகமும் அவரிடம் பூர்ணமாயிருக்கிறது வேறு ஒருவருடைய பிரசாதத்தால் அவருக்கு சுகம் உண்டாகவேண்டியதில்லை

अमृतं அம்ருதம்=தேகமிருந்தும் அந்ததேகம் நித்தியம்

## IV. பிரம்மோபாசனவிதி.

வி-வி:—இவ்விதமாக உபாசிக்கவேண்டிய ஸ்வரூபத்தையும் அதை அடையும் மார்க்கத்தையும், உபாசனையால் கிடைக்கக்கூடிய பலனையும் சொல்லி இப்போது உபாசனையை விதிக்கிறார்.

IV (1) इति प्राचीनयोग्यो पास्व ॥४॥ இதி ப்ராசீநயோக்யோபாஸ்வ ॥4॥

பதவுரை.

इति இதி=இவ்விதமாக

प्राचीनयोग्य ப்ராசீநயோக்ய=பிராசீன யோக்கியனே

उपास्व உபாஸ்வ=உபாசிப்பாயாக.

### வியாக்கியானம்.

ச-பா:—பிராசீனயோக்கியனே, இவ்விதமாக மனோமயத்வாதி தர்மங்களுடன் கூடியிருக்கிற மேற்சொன்ன பிரம்மத்தை உபாசிப்பாயாக. இப்படிப்பட்ட ஆசாரியாருடைய வசனமானது அவருக்கு சத்தியத்திலிருக்கும் அபிமானத்தைக் காட்டுகிறது.

வி-வி:—பூர்வகாண்டத்தில் சொல்லிய நித்தியநைமித்திககர்மங்களைச்செய்வதினால் எவனுடையபாபம் நசித்துப் போயிருக்கின்றதோ அவன் உபாசனைக்கு யோக்கியனாகிறான். இப்படிப்பட்ட பிராசீன யோக்யனை சிஷ்யனை மஹாசமஸ்யன் என்கிற ரிஷி உபதேசம் செய்தார். इति இதி சப்தம் सयएषोऽन्तर्हृदय आकाश, ஸய ஏஷோऽந்தர்ஹ்ருதய ஆகாச முதலியவைகளால் கூறபட்ட பிரகாரத்தை கூறுகிறது. அப்படியே आकाशशरीरंब्रह्म ஆகாசசரீரம் ப்ரஹ்ம முதலியவைகளும் கூறப்படுகின்றன. एतत्ततोभवति ஏதத்ததோ பவதி என்ற வாக்கியத்தால் விராட் ஸ்வரூபத்தை அடைந்

---

வி:—IV (1) इति இதி=இந்தபிரகாரம்

प्राचीनयोग्यउपास्व ப்ராசீநயோக்யஉபாஸ்வ = பிராசீன யோக்கியன் என்று பெயருள்ள சிஷ்யனை குருவானவர் சிக்ஷித்தார்.

6-வது அனுவாகம் முற்றிற்று.

---

து:—III. 1. इति இதி =இந்த பிரகாரம்

प्राचीनयोग्य ப்ராசீநயோக்ய=அதிகாரிகளுக்குள் முதல்வரான சதுர்முகரே

उपास्व உபாஸ்வ=உபாசியும்

என்பதாய் பகவான் வாசுதேவ பரமாத்மாவானவர் சதுர்முக பிரம்மாவுக்குச் சொன்னார் என்பதாக அறியத்தக்கது.

அ.—தபிறகு பிரம்மத்தின் ஸ்திதியை அடைவதே தியானத்தின் பலன் என்பதாய் சுருதி. கூறுகிறது, ஆகவே आकाशशरीरंब्रह्म ஆகா ஶஶரீரம்ப்ரஹ்ம=முதலிய பாகத்தால் முக்தி ஸ்வரூபம் கூறப்பட்டதாக அறியவேண்டியது.ஆயினும் तं यथायथोपासतेतदेवभवति தம் யதாயதோபாஸதே ததேவ பவதி=அதாவது அதை எப்படி எப்படி உபாசிக்கிருனே அப்படியே ஆகிருன் என்கிற சுருதிப்படி உபாசியவிஷயமும் பலனும்ஒரேவிதமாக இருக்கவேண்டுமானதால் ஆகாசசரீரம் முதலியகுணங்களையும் உபாசிக்கவேண்டியது என்று ஏற்படுகிறது. ஆகையால் ஸ்ரீசங்கராசாரியர் இந்த சுருதி உபாசியபிரம்மத்தின் குணங்களைக் கூறுவதாக அர்த்தம் செய்கிருர்.

வி-வி:—இவ்விடத்தில் ஒருவிசாரம் செய்யத்தக்கது, 5 வது 6 வது அனுவாகங்கள் ஒரு உபாசனையை போதிக்கின்றனவா ? அல்லது இரண்டு உபாசனைகளையா ?

பூர்வபக்ஷம்.—இவைகளில் கூறிய உபாசியவிஷயங்களும் உபாசனுபலன்களும் வெவ்வேருயிருப்பதால், உபாசனைகள் இரண்டாக இருக்கவேண்டும். 5 வது அனுவாகத்தில் உபாசிக்கப்பட்டது ஒரு பிரதீகம், லோகாதிரூபமாக பாவிக்கப்பட்ட வியாஹிருதி. 6 வது அனுவாகத்திலோஉபாசிக்கப்பட்டது மனேமயமாயும் இதரகுண விசேஷங்களுடனும் கூடியிருக்கிற பிரம்மம், 5வதில் தியானபலன் "அவனை தேவதைகள் பூஜிக்கிருர்கள்" என்பதாய் சொல்லியிருக்கிறது; 6 ல் சுவாராஜ்ஜியம் அடையப்படுவதாக சொல்லியிருக்கிறது· ஆகையால் இரண்டு அனுவாகங்களிலும் உபதேசிக்கப்பட்ட உபாசனைகள் வெவ்வேறு.

சித்தாந்தம்:—இரண்டு அனுவாகங்களும் ஒரே புருஷனுக்கு உபதேசிக்கப்பட்டிருப்பதால், இரண்டும் ஒரு உபாசனையைத்தான் கூறும். 5 வது அனுவாகத்தில் तायो वेदसवेदब्रह्म தாயோவேத ஸவேதப்ரஹ்ம=(அவைகளை எவன் அறிகிருனே அவன் பிரம்மத்தை அறிகிருன்) என்னும் சுருதி (III-10) வசனம் வியாஹிருதி தியானம் எவனுக்கு ஏற்பட்டிருக்கிறதோ அவனுக்கே பிரம்மத்தியானமும் ஏற்பட்டிருக்கிறது என்று கூறுகிறது. மேலும் 3 வது அனுவாகத்தில் भूरितिअग्नौप्रतितिष्ठति ஹுரிதி அக்னௌ ப்ரதிதிஷ்டதி=(பூ: வாகிற அக்கினியில் அவன் பிரதிஷ்டையை அடைகிருன் அதாவது அக்கினி ரூபமாய் அவன் பூலோகத்தை வியாபிக்கிருன்) என்கிற சுருதி வியாஹிருதியின் தியானபலனையும் கூறுகிறது. ஆகையால் இரண்டு அனுவாகங்களும் ஒரே உபாசனையை கூறுகின்

றன. உபாஸியவிஷயங்களில் அங்காங்கிபாவங்கள் இருக்கின்றன. அங்கோபாஸனையின் பலன் தேவதைகளால் பூஜிக்கப்படுதலும், பிரம்மோபாஸனைக்குப் பலன் தனிமையாகச் சொல்லியிருக்கிறதும் தியானத்தில் பிரம்மம் முக்கியம் என்பதைக்காட்டும் பொருட்டேயாம். ஆகையால் இரண்டும் ஒரு உபாஸனையே. அவைகளில் ஒருபாகம் அங்க (தேவதை)உபா ஸனையையும் மற்றொரு பாகம் அங்கி (பிரம்ம) உபாஸனையையும்கூறுகிறது.

மேற்சொன்ன யுக்தியைக்கொண்டு 6-வது அனுவாகத்தில் உபதேசிக்கப்பட்ட உபாஸனையையும் 7 வது அனுவாகத்தில் உபதேசிக்கப்படும் உபாஸனையும் ஒன்று என்றே பாவிக்கக்கூடாது, வெவ்வேறு என்று பாவிக்கவேண்டும் என்பது பிரம்மசூத்திரம் III-3-58 ல் விவரிக்கப்பட்டிருக்கிறது.

6-7வது அனுவாகங்களில் கூறப்பட்ட வித்தைகள் வெவ்வேறாயிருப்பதால் ஒன்றையே அப்பியஸிக்கவேண்டியது. இரண்டை அப்பியஸிக்கக்கூடாது என்பது பிரம்ம சூத்திரம் III-3-59ல் விவரிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மத்தை ஆத்மஸ்வரூபமாக உபாஸிக்கவேண்டியது என்பது பிரம்மசூத்திரம் IV-1-3ல் விவரிக்கப்பட்டிருக்கிறது. நான் மனோமயனும் அமிருதமாயும், தேஜோமயனுமிருக்கிற பரமாத்மா என்று தியானம் செய்யவேண்டியது. பிரம்மசூத்திரம் I-2-1ல் பரமாத்மா எப்படி மனோமயன் என்பது விசாரிக்கப்பட்டிருக்கிறது. பரமாத்மா தேஜோமயம் என்பது I.1-20ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது. அமிருதம் முதலிய குணவிசேஷங்களையும் பிரம்மத்தையே கூறுகின்றன. ஆகையால் பரமாத்மாவையே தியானிக்க வேண்டியது. இந்த உபாஸனையை பிரம்ம சாக்ஷாத்காரம் வரையிலும் அதாவது உபாஸகன் தான் பிரம்மம் என்பதாய் அறிகிறவரையிலும் அப்பியஸிக்கத்தக்கது. 3-வது அனுவாகத்தில் சொல்லியபடி உபாஸனை என்பது பாவானுஸந்தானம். இந்த உபாஸனையை மரணம் வரையும் அனுஷ்டிக்க வேண்டியது என்பது பிரமம் சூத்திரம்IV .1-12-ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது. இப்படி உபாஸிக்கிறவன் சரீரத்தை விடுவதில் ஒருவிசேஷமிருக்கிறது' என்பது பிரம்மசூத்திரம் IV-2-17-ல் விவரிக்கப்பட்டிருக்கிறது. உபாஸகனுக்கும் ஸாதாரணபுருஷனுக்கும் மரணவிஷயத்திலுள்ள ஐந்து சமானம்சங்கள் பிரம்மசூத்திரம்IV-2-1,2 லும்.IV-2-3லும் IV.2-4-6லும் IV-2-7லும் IV-2-8-11லும் அதாவது IV-வது அத்தியாயம் 2-வது பாதம் 1-முதல் 11-வரையிலுள்ள சூத்திரங்களில் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

அ:—உபாசகனுடைய மார்க்கம் இந்த அனுவாகத்தில் கூறப்பட்டிருக்கிறது. பிரம்மலோகத்துக்கு உபாசகன் போகும்மார்க்கத்தைப்பற்றி வேதாந்த சூத்திரங்களில் ஆறு விஷயங்கள் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன.

(1) உபாசகனுடைய ஆத்மா இராத்திரியிலும் சூரியனுடைய கிரணத்துடன் சம்மந்தப்படுகிறது. (IV-2-18-19)

(2) தக்ஷிணாயனத்தில் மரணமடையும் உபாசகனும் உத்தராயணமார்க்கத்தை அடைகிறான். (IV-2-20-21)

(3) இந்தமார்க்கம் ஒன்றே (IV-3-1)

(4) வாயுலோகமானது ஆதித்யலோகத்துக்கு முன்னேயே இருக்கிறது (IV-3-2)

(5) வித்யுத் பிரதேசம் வருணனுடைய ஸ்தானத்துக்குமுன்னமேயே இருக்கிறது (IV-3-3)

(6) மார்க்கத்திலிருக்கிற தேஜஸ்கள் மார்க்கசின்னங்கள். யோகபூமிகளன்று. (IV-3-4-6)

(6) சகுணபிரம்ம உபாசகர்களுக்கெல்லாம் இந்ததேஜோமார்க்கம் ஒன்றே. (IV-3-7-14)

பிரம்மத்தைத் தவிர பிரதீகத்தை உபாசிக்கிறவர்கள் பிரம்மலோகத்தை அடையமுடியாது. (IV-3-15.16) பிரம்மலோகத்தின் மஹிமை இந்த அனுவாகத்தின் 3-வது விபாகத்தில் கூறப்பட்டிருக்கிறது. இந்த லோகத்துக்கு வந்தவுடன் உபாசகன் ஜீவாத்மாக்களுடனும் பரமாத்மாவுடனும் ஏகபாவத்தை அடைகிறான் அக்கினி வாயு முதலானவர்களுடன் ஒன்றாகி அவர்களுடைய சக்திகளை அடைகிறான். பரமாத்மாவுடன் ஒன்றாகி பூராதிலோகங்களின் அதிபதியாகி ஸ்வாராஜ்ஜியத்தை அடைகிறான்.

இந்த சுவாராஜ்ஜிய விஷயமாய் 4-விஷயங்கள் வேதாந்த சூத்திரங்களில் சொல்லியிருக்கின்றன.

(1) பிரம்மலோகத்தில் யோகியானவன் சங்கற்பத்தினாலேயே விஷயங்களை அடைகிறான் (IV-4-8-9)

(2) பிரம்மலோகத்தில் யோகியானவன் சரீரத்துடன் அல்லது சரீரமன்றில் போகங்களை போகிக்கக்கூடும். (IV-4-10-14)

அ:—(3) யோகியானவன் உற்பத்திசெய்யும் ஒவ்வொரு சரீரத்திலும் ஜீவன் இருக்கிறான் (IV-4-15-16)

(4) பிரபஞ்சத்தை எல்லாம் மட்டும் யோகி சிருஷ்டிக்கமுடியாது. (IV-4-17-22)

ஸ்வாராஜ்யமடைந்த யோகி பிரம்மலோகத்திலிருக்கும் போதே சாக்ஷாத்காரத்தை அடைகிறான். அதாவது கேவலம் அசங்கப்பிரம்மத்தின் வாஸ்தவமான ஸ்வரூபத்தை அனுபவிக்கிறான். பிறகு விதேஹகைவல்லியத்தை அடைகிறான். இந்தஸ்திதிதான் இந்த அனுவாகத்தில் एतत्ततोभवति வை தக்ஷதொஹவதி—என்பதால் கூறப்படுகிறது. இதுவே IV-3-10-லும் வியாசரால் கூறப்பட்டிருக்கிறது. பிரம்மலோகம் நாசமானவுடன், பிரம்மத்துடன் பரப்பிரம்மத்தை அடைகிறான். இவ்விதமாக பிரம்மத்தை தியானிக்கிறவன் முதலில் பிரம்மலோகத்தை அடைந்து பிறகு சுத்த மோக்ஷத்தை அடைகிறான்.

वायावमृतमेकंच । வாயாவம்ருதமேகஞ்ச ॥

வாயு முடிய ஒருவர்க்கம் அமிருதம் முடிய ஒருவர்க்கம் மேல் ஒருவாக்கியம் ஆக 21-வது வாக்கியங்கள் இந்த அனுவாகத்தில் அடங்கியிருக்கின்றன.

6-வது அனுவாகம் முற்றிற்று.

---

து:—இந்த அனுவாகத்துக்குப் பிரமாண வாக்கியம் பிரம்மாசாரம் என்கிற கிரந்தத்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது

यएषहृदयाकाश स्त्वनिरुद्धस्तुतद्गतः ।
प्रद्युम्नस्तालुमध्यस्थो लंबिन्यामिन्द्रनामकः ।
व्याख्यःसपर्णरूपत्वा त्केशांतेवर्ततेतुयः ।
संकर्षणःसुपर्णात्मा वासुदेवोऽव्ययःस्मृतः ।
यस्माद्व्यपगतेस्थाता जगतिप्रलयेविभुः ।
अशीर्षककपालोसौ कपालाद्परिस्थितः ।
अनिरुद्धस्तुभूर्नामा हुताशेसंव्यवस्थितः ।
प्रद्युम्नोभगवान्वायौ भुवइत्येवकीर्तितः ।
संकर्षणःसुवर्नामा सूर्येतिष्ठतिकेशवः ।
महोनामावासुदेवो ब्रह्मणिस्थश्चतुर्मुखे ।
सवासुदेवःस्वाराज्यं व्याप्यास्मिन्मनसस्पतौ ।

अनिरुद्धश्चसंव्याप्त स्ततोवागादिनांपतिः ।
वागादिषुस्थितोनित्यं भवत्येवजनार्दनः ।
स्वव्यापीचजगद्व्यापी नित्यैश्वर्यात्सईश्वरः ।
आकाशवद्व्याप्तदेहः सत्यात्मागुणपूरितः ।
वायोविशेषरमको बलानंदस्वरूपवान् ।
ज्ञानानन्दस्वरूपोसौ शांतिनामासुखोन्नतः ।
अंतर्गत्वात्स्वतःपूर्तः समृद्धंतत्प्रकीर्तितं ।
इत्युपास्यप्राथमिकोयो ह्यस्यास्मदुपासने ।
प्राधान्यादितिपूर्वंहिप्राहविष्णुश्चतुर्मुखं ॥ ब्रह्मसारे ॥

யத்வக்ஷஸ்யாகாஶஸம்ஸ்தோ நிருத்தஸ்தஸ்தத: ।
ப்ரத்யும்நஸ்[illegible] நாஸிக: ।
வ்யாப்ய: ஸர்வகுண[illegible] ।
ஸம்கர்ஷண: ஸர்வ[illegible] வாஸுதேவோ வ்யவஸ்தித: ।
யஸ்மாத்[illegible] ஜகதி[illegible] ।
[illegible] ।
அநிருத்தஸ்ஸ[illegible] ।
ப்ரத்யும்ந[illegible] ।
ஸம்கர்ஷண: ஸ[illegible] திஷ்டதி கேஶவ: ।
[illegible] ।
[illegible] ।
அநிருத்தஶ்சஸம்வ்யாப்த ஸ்ததோவாகாதிநாம்பதி: ।
வாகாதிஷுஸ்திதோநித்யம் பவத்யேவஜநார்தந: ।
ஸ்வவ்யாபீசஜகத்வ்யாபீ நித்யைஶ்வர்யாத்ஸஈஶ்வர: ।
ஆகாஶவத்வ்யாப்ததேஹ: ஸத்யாத்மாகுணபூரித: ।
வாயோர்விஶேஷரமகோ பலாநந்தஸ்வரூபவாந் ।
ஜ்ஞாநாநந்தஸ்வரூபோஸௌ ஶாந்திநாமாஸுகோந்நத: ।
அந்தர்கத்வாத்ஸ்வத:பூர்த்த: ஸம்ருத்தம்தத்ப்ரகீர்த்திதம் ।
இத்யுபாஸ்யப்ராதமிகோயோ ஹ்யஸ்யாஸ்மதுபாஸநே ।
ப்ராதாந்யாதிதிபூர்வம்ஹி ப்ராஹவிஷ்ணுஶ்சதுர்முகம் ।
॥ப்ரஹ்மஸாரே

## I-7-வது அனுவாகம்.

பிரத்தியக்ஷ பிரம்மோபாசனை ஹிரணியகர்போபாசனை

அவதாரிகை.—

ச-பா:—வியாஹிருதிஸ்வரூபமாக பிரம்மத்தை உபாசிக்கும் படி சுருதி இவ்விதமாய் உபதேசித்தது. அந்த பிரம்மத்தையே பாங்கத அதாவது பிருதிவீமுதலிய ஐந்து ஸ்வரூபமாக (மகாப லன்களை அடையும் பொருட்டு) உபாசிக்க வேண்டு மென்பதை சுருதி இனி உபதேசிக்கிறது. பங்கதி என்பது வேதத்தின் சந்தஸ் (விருத்தம்) அதில் ஐந்து பாதங்களிருக்கின்றன. இந்த பிர பஞ்சமும் ஐந்து வகுப்புகளுடன் கூடியிருப்பதால், ஐந்து என்கிற லக்கத்தைக்கண்டு பங்கதி சந்தசாக பாவிக்கப்படலாம். ஆகவே பங்கதியுடன் கூடின ஜகத்து பாங்கதம் எனப்படுகிறது. पञ्चपादापङ्क्तिः पाङ्क्तोयज्ञः வஞுவாஊவஂக்ஷீஃ வாஂகெ்ஹாயஜ்ஞஃ= (அதாவது பங்கதி ஐந்து பாதமுள்ளது, யஞ்ஞும் பாங்கதம்) என்கிற சுருதிப்படி யஞ்ஞுமும் பாங்கதம் ஆகையால் லோகம்முதல்ஆத்மா வரையிலுமுள்ள சகலத்தையும் பாங்கத்மாக பாவிப்பது யஞ்ஞும் என்றுபாவிப்பது போலாம். இப்படி பாவிக்கப்பட்ட யஞ்ஞுத்தினால் ஒருவன் பாங்கதமாகக் காணப்படும் பிரஜாபதியாக ஆய்விடுகிறுன்.

வா:—ஹிரணியகர்ப்பன் அதாவது பிரஜாபதி அதாவது சிருஷ்டியில் விளங்கும் பிரம்மமே பாங்கதம். ஏனெனின் பிரபஞ்சம் ஐந்துவித தத்துவங்களால் உண்டாயிருக்கிறது. ஹிரணியகர்ப்பனை பாங்கதனுக பாவிப்பது அவரை யஞ்ஞுமாக பாவிப்பது போலாம். ஏனெனின் யஜமானன், பத்நீ, புத்திரன், தியானுதி தெய்வசம்பத்து, கர்மம் திரவியம் முதலிய மானுஷ சம்பத்து இவ்வைந்தால் யஞ்ஞும் சித்திக்கிறது. இப்படிப்பட்ட தியானரூபமான யஞ்ஞுத்தால் ஒருவன் பிரஜாபதியின் ஸ்திதியை அடைகிறுன்.

வி-வி:—ஆருவது அனுவாகத்தில் மனோமயாதி ரூபமான பிரம்மத்தின் தியானம் உபதேசிக்கப்பட்டது. இந்த பிரம்மத்துக்கு கண்ணுக்கு விஷயமாகும்படியான குணங்களில்லாதபடியால் உத்தமாதிகாரிகளால் தான் அது அறியப்படும். மந்தாதிகாரிகளுக்கு கண்ணுக்கு விஷயமாகும்படியான பிரம்மத்தின் உபாசனை இந்த ஏழாவது அனுவாகத்தில் உபதேசிக்கப்படுகின்றது.

## ஆதிபௌதிகவகுப்பு.

ஆதிபௌதிகம் அதாவது மனிதனுடைய சரீரத்துக்கு வெளியிலிருக்கிற, ஐந்து உட்பிரிவுகளுடன் கூடிய மூன்று வகுப்புகளைத் தியானிக்கவேண்டிய பிரம்மத்தின் குணவிசேஷமாக முதலில் சுருதி உபதேசிக்கிறது.

(1) पृथिव्यन्तरिक्षं द्यौर्दिशोऽवान्तरदिशः । ப்ருதிவ்யந்தரிக்ஷம் த்யௌர்திஶோऽவாந்தரதிஶ꞉ ।

(2) अग्निर्वायुरादित्य श्चन्द्रमा नक्षत्राणि । அக்நிர்வாயுராதித்ய ஶ்சந்த்ரமா நக்ஷத்ராணி ।

(3) आप ओषधयो वनस्पतय आकाश आत्मा । ஆப ஓஷதயோ வநஸ்பதய ஆகாஶ ஆத்மா ।

(4) इत्यधिभूतम् ॥1 இத்யதிபூதம் ॥1॥

பதவுரை.

पृथिवी ப்ருதிவீ = பூமியும்

अन्तरिक्षं அந்தரிக்ஷம் = ஆகாசமும்

द्यौः த்யௌ꞉ = த்யுலோகமும் (நக்ஷத்திராதிமண்டலம்)

दिशः திஶ꞉ = திக்குக்களும் (கிழக்குமுதலியவை)

अवान्तरदिशः அவாந்தரதிஶ꞉ = திக்குக்களுக்கு மத்தியிலுள்ள திக்குக்களும்

अग्निः அக்நி꞉ = அக்கினியும்

वायुः வாயு꞉ = வாயுவும்

आदित्यः ஆதித்ய꞉ = சூரியனும்

चंद्रमाः சந்த்ரமா꞉ = சந்திரனும்

नक्षत्राणि நக்ஷத்ராணி - (நக்ஷத்திரங்களும்)

आपः ஆப꞉ = ஜலங்களும்

ओषधयः ஓஷதய꞉ = ஔஷதிகளும் (கொடிகள்)

वनस्पतयः வநஸ்பதய꞉ = புஷ்பிக்காத, பலனைக் கொடுக்கும் விருக்ஷங்களும்

அத்:—आकाश: ஆகாஶ:=ஆகாசமும்
आत्मा ஆத்மா=விராட்டும்
इति இதி=இந்தப் பிரகாரம்
अधिभूतं அதிபூதம்=அதிபூதம்

வியாக்கியானங்கள்।

ச—பா:—எப்படி இந்த பிரபஞ்சமெல்லாம் பாங்கதம் என்பதை சுருதி நிரூபிக்கிறது. பிருதிவி முதலியவைகள் லோகபாங்கதம். அக்கினி முதலியவை தேவதாபாங்கதம். ஜலம் முதலியவை பூதபாங்கதம். பூதபஞ்சகத்தில் கூறப்பட்ட ஆத்மாவை விராட் அதாவது ஸ்தூலபிரபஞ்சாபிமானியாக அறியவேண்டியது. அதிபூத என்கிற பதத்தால் அதிலோக அதிதைவங்களையும் முன் கூறப்பட்டதாக அறியவேண்டியது. ஏனெனின், லோகபாங்கதம் தேவதாபாங்கதம் கூறப்பட்டிருக்கின்றன.

---

## I. 7-வது அநுவாகம்.

வி:—(1) பிருதிவி முதலிய ஐந்தும் அக்கினி முதலிய ஐந்தும் அப்பு முதலிய ஐந்தும் ஆகிய இந்த மூன்று விதமான பஞ்சகங்கள் அதி பூதங்களாம்

---

## I. 7-வது அநுவாகம்.

து:—I. (1) அ-கை:—வேதவித்தையை அடையும்பொருட்டு முதலிலிருக்கிற வித்தையைச் சொல்லுகிறார். பிருதிவி முதலிய அதிபூதங்களான அவ்வைந்து கூடிய மூன்று வகுப்புகளிலும், பிராணன், முதலான அத்தியாத்மகங்களான அவ்வைந்து கூடிய மூன்றுவகுப்புகளிலும் கிரமமாக நாராயணன் முதல் வாசுதேவர் (சில பாடங்களில் அநிருத்தர்) வரையிலுள்ள மூர்த்திகள் பெரிது முதலிய நிமித்தங்களால் பிருதிவி முதலியவைகளில் இருக்கிறதாயும், பிருதிவி முதலிய அவ்வைந்து சப்தங்களால் கூறப்படுவதாயும் அறியத்தக்கது.

पृथिवी ப்ருதிவீ=பெரிதாயிருப்பதால் இந்த பதத்தால் கூறப்பட்ட பூமி

अन्तरिक्षं அந்தரிக்ஷம்=பகவான் உள்ளிருந்து சகலத்தையும் கற்பிக்கிறதினால் இந்த சப்தத்தால் கூறப்படும் அந்தரிக்ஷலோகம்

द्यौः த்யௌ:=இதனால் கூறப்படும் சுவர்க்கம் [illegible]

दिशः திஶ:=பூர்வம், பச்சிமம், தக்ஷிணம், உத்தரம் ஆகிய திக்குகள்

अवान्तरदिशः அவாந்தரதிஶ:=ஆக்நேய, வாயவ்ய நைருத்திய ஈசாந்ய, ஆகிய அவாந்தர திக்குகள்

இவைகளில் அநிருத்த, பிரத்யும்ன, சங்கர்ஷண, வாசுதேவ என்கிற பகவானுடைய ரூபங்கள் இருக்கின்றன. இந்த ரூபங்கள் அந்தந்த பெயர்களால் கூறப்படுகின்றன.

அத்:—வி-வி:—பிருதிவி முதலியவைகள் லோகபஞ்சகம். அக்கினி முதலியவைகள் தேவதாபஞ்சகம். ஜலம் முதலியவை திரவிய பஞ்சகம். இந்த அவ்வைந்து பதார்த்தங்களுடன் கூடின மூன்று வகுப்புகளும் அதிபூதம். ஏனெனின் இவைகள் பிருதிவிமுதலிய சிருஷ்டிக்கப்பட்ட பதார்த்தங்களால் சித்திக்கின்றன. இவைகளோ நமக்கு வெளியேயிருக்கின்றன; நான் என்கிற பாவனைக்குள் அடங்கிய பிராணன்முதலியவைக்கு அன்னியமாயும், இது என்று கூறப்படும் பாஹிய சிருஷ்டி ரூபமாயுமிருக்கின்றன: இவ்விதமாக பாஹிய பிரபஞ்சத்தில் பிரம்மத்தை உபாசிக்கும் விதம் உபதேசிக்கப்பட்டது.

வி:—(2) பிராணன் முதலிய ஐந்தும் சக்ஷுஸ் முதலிய ஐந்தும், சர்மம் முதலிய ஐந்தும் ஆகிய இந்த மூன்று விதமான பஞ்சகங்கள் அத்தியாத்மகங்களாம். இந்தப்பிரகாரம் ஆறு பஞ்சகங்களும் पञ्चाक्षरापंक्तिः பஞ்சாக்ஷராபங்க்திஃ என்கிற சுருதிப்படி ஐந்து சங்கியையோடு கூடியிருப்பதால் ஸங்கதங்களாயிருக்கின்றன, ஆகவே, எவன் இந்த ஆறு பஞ்சகங்களையும் பங்கதி சந்தஸோடு கூடினதாக உபாசிக்கிறானோ அவன் பாங்கதம் பஞ்சபூதங்களால்நிறைந்திருக்கிறஉலகங்களை स्पृणोति ஸ்ப்ருணோதி=காபாற்றுகிறான் அதாவது சாம்பராஜ்ஜியத்தை அடைகிறான் என்று அர்த்தம். एतत् ஏதத்=அந்த ஆறு பஞ்சகத்தை विधाय விதாய=உத்தேசித்து ऋषिरवोचत् ருஷிரவோசத்=ஒரு இருஷிசொன்னார் என்று அர்த்தம்.

7-வது அனுவாகம் முற்றிற்று.

---

து:—2. अग्निः... அக்நி... =அக்கினி, வாயு, சூரியன், சந்திரன் நக்ஷத்திரங்கள் இவைகளிலும் அநிருத்த முதலிய பகவானுடைய ரூபங்களிருக்கின்றன. அந்தந்த சப்தங்களால் கூறப்படுகின்றன.

(3)आप... ஆப...=ஜலம், ஓஷதி, வனஸ்பதி, ஆகாசம், அகங்கார தத்வம் இவைகளிலும் முன்போலவே பகவானுடைய ரூபங்களிருக்கின்றன; அந்த சப்தங்களாலும் கூறப்படுகின்றன.

4. इतिअधिभूतं இத்யதிபூதம்=இவ்விதமாக பூதங்களிலிருக்கிற பரமாத்ம ஸ்வரூபங்கள் கூறப்பட்டன.

## II. ஆத்தியாத்மிகவகுப்பு.

(5) अथाध्यात्मम् । 𑌅𑌥𑌾𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌮𑍍 ।

(6) प्राणो व्यानोऽपान उदानः समानः । 𑌪𑍍𑌰𑌾𑌣𑍋 𑌵𑍍𑌯𑌾𑌨𑍋𑌽𑌪𑌾𑌨 𑌉𑌦𑌾𑌨𑌃 𑌸𑌮𑌾𑌨𑌃 ।

(7) चक्षुः श्रोत्रं मनो वाक्त्वक् । 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂 𑌮𑌨𑍋 𑌵𑌾𑌕𑍍𑌤𑍍𑌵𑌕𑍍 ।

(8) चर्म मांसं स्नावास्थि मज्जा ॥ ॥ 𑌚𑌰𑍍𑌮 𑌮𑌾𑌂𑌸𑌂 𑌸𑍍𑌨𑌾𑌵𑌾𑌸𑍍𑌥𑌿 𑌮𑌜𑍍𑌜𑌾 ॥ 2 ॥

பதவுரை.

अथ 𑌅𑌥=இனி

अध्यात्मम् 𑌅𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌂=அத்தியாத்மம் (சொல்லப்படும்)

प्राणः 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃=பிராணன்

अपानः 𑌅𑌪𑌾𑌨𑌃=அபானன்

व्यानः 𑌵𑍍𑌯𑌾𑌨𑌃=வியானன்

उदानः 𑌉𑌦𑌾𑌨𑌃=உதானன்

समानः 𑌸𑌮𑌾𑌨𑌃 =சமானன்

चक्षुः 𑌚𑌕𑍍𑌷𑍁𑌃=நேத்திரம்

श्रोत्रं 𑌶𑍍𑌰𑍋𑌤𑍍𑌰𑌂=சுரோத்திரம்

मनः 𑌮𑌨𑌃=மனது

वाक् 𑌵𑌾𑌕𑍍=வாக்கு

त्वक् 𑌤𑍍𑌵𑌕𑍍=த்வக்கிந்திரியம்

चर्म 𑌚𑌰𑍍𑌮=தோல்

मांसं 𑌮𑌾𑌂𑌸𑌂=மாம்சம்

स्नावा 𑌸𑍍𑌨𑌾𑌵𑌾=ஸ்நாவா

अस्थि 𑌅𑌸𑍍𑌥𑌿=எலும்பு

मज्जा 𑌮𑌜𑍍𑌜𑌾=மஜ்ஜை (ஊன்சலம்)

## வியாக்கியானங்கள்.

ச-பா:—இனி அத்தியாத்ம பாங்க்த்திரயம் சொல்லப்படுகிறது. பிராணாதிகள் வாயுபாங்க்தம். சக்ஷுராதிகள் இந்திரிய பாங்க்தம். சர்மாதிகள் தாதுபாங்க்தம் (ஸ்தூலசரீரத்தில் அடங்கிய அம்சபேதங்கள் தாதுக்களாம்.)

**வி-வி:**—முன்சொன்ன அதிபூத பஞ்சகமும் இனி சொல்லப் போகிற அத்தியாத்ம பஞ்சகமும் ஒன்றோடொன்று கலந்து போகாமலிருக்கும்படி சுருதி அவைகளை வியக்தமாகவே பிரித்துவிடுகிறது. தேகம் இந்திரியம் முதலியவைகளின் சமுதாயத்தை சாஸ்திர சம்ஸ்காரமற்ற புருஷன் நான் என்று பாவிக்கிறான். அதுவே லோக பிரசித்தமான ஆத்மா. பிரமத்தை இந்த ஆத்மாவில் உபாசிப்பதே அத்தியாத்ம உபாசனை எனப்படும். தேகத்திலிருக்கிற ஒரு பிராணனுடைய விருத்தி பேதங்களை பிராணாதிகள் ஹிருதயத்தில் பிராணனிருக்கிறான் என்றும், மலவிசர்ஜ்ஜன ஸ்தானத்தில் அபானனிருக்கிறான் என்றும் சமானன் நாபியிலிருக்கிறான் என்றும், கண்டதேசத்தில் உதானனிருக்கிறான் என்றும், வியானன் சர்வ சரீரத்திலுமிருக்கிறான் என்றும் முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

வியாசர் II-4-12-வது சூத்திரத்தில் பிராணனைப்பற்றி பிரஸ்தாபிக்கிறார்.

---

**ஞா:**—5. **अथ अध्यात्मं** அத அத்யாத்மம் இனிவேறு விஷயம் சொல்லப்படுகிறது. தேகத்திலிருக்கிற நாராயணனது திவ்வரூபங்களைச் சொல்லுகிறார்.

6. **प्राणः** ப்ராணஃ=பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், இந்த ஐந்து பிராணங்களில் நாராயணன் முதலான ஐந்து ரூபங்களிருக்கின்றன.

7. **चक्षुः...** சக்ஷுஃ=கண், காது, மனது, வாக்கு, துவக்கு, இவைகள் ஞானேந்திரியங்கள். இவைகளிலும் பகவானுடைய ரூபங்கள் முன்போலவே யிருக்கின்றன.

8. **चर्म...** சர்ம=தோல், மாம்சம், ஸ்நாயு, எலும்பு, மஜ்ஜை, இவைகளிலும் நாராயணன் முதலிய ரூபங்களே

## III. விதிக்கப்பட்ட உபாசனை.

அ-கை:—(வி-வி) அதிபூத பஞ்சகத்ரயத்தாலும் அத்தியாத்மபஞ்சக த்ரயத்தினாலும் இரண்டினாலும் பிரம்மத்துக்குஉபாதியாகிற சமஸ்தமான ஜகத்தும் சொல்லப்பட்டது. இந்த ஜகத்தாகிற உபாதியுடன் கூடின பிர்ம்மம் உபாசிக்கத்தக்கது. இந்த உபாசனை அடியிற்கண்ட வாக்கியத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது.

(9) एतद धिविधाय ऋषिरवोचत् । 𑌏𑌤𑌦𑌧𑌿𑌵𑌿𑌧𑌾𑌯 𑌋𑌷𑌿𑌰𑌵𑍋
𑌚𑌤𑍍 ।

(10) पाङ्क्तं वा इदं सर्वं । 𑌪𑌾𑌙𑍍𑌕𑍍𑌤𑌂 𑌵𑌾 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂

(1) पाङ्क्तेनैव पाङ्क्तꣳ स्पृणोतीति ॥ 3 ॥ 𑌪𑌾𑌙𑍍𑌕𑍍𑌤𑍇𑌨𑍈𑌵 𑌪𑌾𑌙𑍍𑌕𑍍𑌤𑌂
𑌸𑍍𑌪𑍃𑌣𑍋𑌤𑍀𑌤𑌿 ॥ 3 ॥

பதவுரை.

एतत् 𑌏𑌤𑌤𑍍=இவைகளை
अधिविधाय 𑌅𑌧𑌿𑌵𑌿𑌧𑌾𑌯=கற்பித்து
ऋषिः 𑌋𑌷𑌿𑌃=ரிஷியானவர்
इदं सर्वं 𑌇𑌦𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂= இந்த சமஸ்தமும்
पाङ्क्तं वा 𑌪𑌾𑌙𑍍𑌕𑍍𑌤𑌂 𑌵𑌾=ஐந்து ஸ்வரூபமே
पाङ्क्तेनएव 𑌪𑌾𑌙𑍍𑌕𑍍𑌤𑍇𑌨𑍈𑌵=ஆத்தியாத்மிக மூன்றுவித அந்தரத்தால்
पाङ्क्तं 𑌪𑌾𑌙𑍍𑌕𑍍𑌤𑌂=வெளியிலுள்ள மூன்று ஐந்துகளை
स्पृणोति 𑌸𑍍𑌪𑍃𑌣𑍋𑌤𑌿=பலப்படுத்துகிறான்
इति 𑌇𑌤𑌿=என்று
अवोचत् 𑌅𑌵𑍋𑌚𑌤𑍍=சொன்னார்.

### வியாக்கியானங்கள்.

ஸ-பா:—பாஹ்யம், ஆந்தரமான சகல பிரபஞ்சமும் பாங்கதம் என்று சொல்லி ரிஷியானவர் (அதாவது வேதம், அல்லது அதை பிரத்யக்ஷமாய் அறிந்த ஞானியானவர்) அடியிற்கண்டபடி சொன்னார்.

அர்:—அதாவது:—எல்லாம்பாங்கதம். ஐந்துஐந்துரூபமாக உண்டாயிருக்கிறது. ஐந்து என்கிறலக்கம் இரண்டுக்கும் சமானமாயிருப்பதால் உள்ளேயிருக்கிற பாங்கதத்தால் வெளியேயிருக்கிற பாங்கதத்தை உபாசகன் பலப்படுத்துகிறான், பூரிக்கிறான். அதாவது இரண்டும் ஒன்று என்று பார்க்கிறான். இதெல்லாம் பஞ்சகம் என்று எவன் அறிகிறானோ அவன் பிரஜாபதி ஸ்வரூபமாகவே ஆகிறான் என்று அர்த்தம்.

வா:—பிரபஞ்சம்முழுமையும் பஞ்சகமாயிருப்பதைப் பார்த்து ரிஷியானவர் பிரம்மம்முதல் ஸ்தம்பம்வரையில் எல்லாம் பஞ்சகம் என்று சொன்னார்.

ஆ:—நிகிருஷ்டமானதை உத்கிருஷ்டமாக பாவிக்கவேண்டியது என்கிற நியாயப்படி ஆத்தியாத்மிக பாங்கத திரயத்தை வெளியிலுள்ள பாங்கத திரயவருப்புடன் ஒன்றாக பாவிக்கவேண்டியது.

வி:வி—இந்திரிய கோசரமாகாத சாஸ்திரார்த்தத்தைப் பார்த்த ரிஷியானவர், பிருதிவி, அந்தரிக்ஷம் முதலியவைகளை சாக்ஷாத்காரம் பண்ணும்வரையில் விசேஷமாய் தியானித்து, தன்னுடைய அனுபவத்தினால், விராட்ஸ்வரூபத்தை அடைந்து, தன்னுடைய

து:—9. एतत् ஏதத்=பிருதிவிமுதல் மஜ்ஜைவரையிலுள்ள அவ்வைந்தான ஆறு வகுப்புகளை

अधिविधाय அதிவிதாய=உத்தேசித்து

ऋषिः ரிஷிः=விஷ்ணுவானவர்

अवोचत् அவோசத்=உபதேசம் செய்தார். எப்படியெனின்

10. इदं सर्वं இதம்ஸர்வம்=பிருதிவிமுதலிய ஆறு வகுப்புகளும்

पाङ्क्तं பாங்க்தம்=அவ்வைந்து எண்ணிக்கையுடன் கூடியிருக்கின்றன.

वै வை=நிச்சயம், பிரசித்தி

11. पाङ्क्तेनैव பாங்க்தேநைவ=ஐந்து என்கிற எண்ணிக்கையுடன் கூடின நாராயணதி ரூபங்களால் தான்

पाङ्क्तं பாங்க்தம்=ஐந்து என்கிற சங்கியையுடன் கூடின பிருதிவி முதலியவைகளை

स्पृणोति ஸ்ப்ருணோதி=பலத்துடன் கூடினதாக அதாவது தங்கள் தங்கள் வியாபாரங்களைச் செய்ய சக்தர்களாக பகவான் செய்கிறார். (என்பதாய் உபதேசம் செய்தார்)

அர்த்:—அனுபவத்தால் சித்தித்த விஷயத்தைசிஷ்யர்களுக்கு அடியிற்கண்டபடி உபதேசிக்கிறார். நாம்பார்க்கிறஇந்தஜெகத்தெல்லாம் விராட்ரூபம், பாங்கதம், பங்கதி சந்தஸுடன் சம்பந்தப்படுகிறது. இதுஎல்லாருக்குந்தெரிந்தவிஷயம் पञ्चाक्षरापङ्क्तिः பஞ்சாக்ஷராபங்க்தி: (பங்க்தியானது ஐந்து அக்ஷரங்களுள்ளது.) என்கிற சுருதிப்படி பங்கதி: சந்தஸ் ஐந்து என்கிற லக்ஷணத்துடன் கூடினது. அப்படியே ஜகத்தும் ஐந்து என்கிற லக்ஷணத்துடன் கூடினது. ஏனெனின் பஞ்சீகரணம் செய்யப்பட்ட பஞ்சமகா பூதங்களும் அவைகளின் காரியங்களும் எல்லாம் விராட் என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆகவே பிரபஞ்சத்துக்கும் பங்கதி சந்தஸுக்கும் சாதிருசியத்தால் சம்பந்தம் ஏற்படுவதால் பிரபஞ்சம் பாங்கதமெனப்படுகின்றது. அப்படியே பிருதிவிமுதலிய ஐந்து பதார்த்தங்களின் உபாசனையும் பாங்கதமாகச் சொல்லப்படலாம். ஆகையால் பாங்கதமாகிற பிருதிவி முதலியனவைகளின் உபாசனையால் பாங்கதமாகிற விராட்டை உபாசகன் அடைகிறான். இந்த அர்த்தவாதத்தால் (ஸ்துதியாகச் சொல்லல்) பாங்கதமாகிற விராட்ரூபத்தை அடைய இச்சிக்கிறவன் இவ்விதமாக உபாசிக்கவேண்டியது என்பதாய் சுருதிவிதிக்கிறது. விராட் ரூபத்தை அடைந்தபிறகு தத்துவ ஞானமுண்டாகி அதின்மூலமாக முக்தி உண்டாகிறது.

सर्वं मेकंच । ஸர்வ மேகஞ்ச ।

அதாவது இந்த அனுவாகத்தில் सर्वं ஸர்வம் என்கிற கடைசியான சப்தம்வரையில் 10-வாக்கியங்களும் மேல் ஒருவாக்கியமும் ஆக 11-வாக்கியங்கள் அடங்கியிருக்கின்றன.

---

தா:—இந்த அனுவாகத்துக்குப் பிராமணவாக்கியம்:—

पृथिव्याद्यंपाङ्क्तपङ्क्तं पाङ्क्तेनैवस्वयंहरिः ।
नारायणादिरूपेण बलयत्यंजसाप्रभुः ।
इत्युवाचस्वयंविष्णुर्वेदद्रष्टागुणाधिकः ।। इतितत्त्वसंहितायां ।।

ப்ருதிவ்யாத்யம்பாங்க்தம்பங்க்தம் பாங்க்தேநைவஸ்வயம்ஹரி:।
நாராயணாதிரூபேண பலயத்யஞ்ஜஸாப்ரபு: ॥
இத்யுவாசஸ்வயம்விஷ்ணு: வேதத்ருஷ்டாகுணாதிக: ॥
॥ இதிதத்வஸம்ஹிதாயாம் ॥

## 8-வது அனுவாகம்.

### பிரணவத்தியானம் உபாசனை.

**அவதாரிகை:—**

ச-பா:—பிரம்மமானது வியாஹிருதி ரூபமாக உபாசிக்கத் தக்கது என்று (6—வது அனுவாகத்தில்) சொல்லப்பட்டது பிறகு (7-வது அனுவாகத்தில்) அதையே பாங்க்த ரூபமாய் உபாசிக்க வேண்டியது என்றும் சொல்லப்பட்டது. இப்போது சகல உபாசனைகளுக்கும் அங்கமாயிருக்கிற ஓங்காரத்தின் உபாசனை விதிக்கப்படுகின்றது. பர, அபர, பிரம்மமாக உபாசிக்கப்பட்ட ஓங்காரம் சப்தமாத்திரமாயிருந்தாலும் பர, அபர, பிரம்மத்தை அடைய சாதகமாக ஆகிறது. விஷ்ணுவுக்கு பிரதிமையானது ஸ்தானமாயிருப்பதுபோல் பர, அபர, பிரம்மத்துக்கு பிரணவம் ஸ்தானமாயிருக்கிறது. एतेनैवायतनेनैकतरमन्वेति ஏதேநைவாயதநேநைகதரமந்வேதி (அதாவது இந்த ஒரு சாதகத்தால் தான் இரண்டில் ஒன்றுக்குப் போகிறான்) என்பதாய்பிரச்ன உபநிஷத்து (V-2) சுருதிகூறுகிறது.

ஆ:—வேத வித்துக்களுடைய சகல காரியங்களும் பிரணவ உச்சாரணைபுரஃசரமாக நடக்கின்றன. ஆகையால் அது சிரத்தையுடன் கிரகிக்கப்பட்டிருக்கிறது. அதுவன்றியில் செய்யப்படும் பிரம்மோபதேசம் புத்தியில் இறங்கமாட்டாது. ஆகையால் அதை முன்னிட்டுக்கொண்டே பிரம்மோபாசனை விதிக்கப்படுகிறது. ஓங்காரம் சப்தமாத்திரமாக இருப்பதால் அசேதனம். நான் இவனால் உபாசிக்கப்பட்டேன் என்பதாய் அது அறியமாட்டாது. ஆகையால் அது எப்படி பலத்தைக் கொடுக்கமுடியும்? சரிதான் ஆயினும், பிரதிமாதிகளின் பூஜைபோல் எங்கும் ஈசுவரனே பலத்தைக் கொடுக்கப்பட்டவர் என்று அறியவேண்டியது.

வி-வி:—ஏழாவது அனுவாகத்தில் ஸ்தூலத்தையேபார்க்கும் மந்தாதிகாரிகளுக்கு பிரம்மமானது ஸ்தூலமான பிருதிவிமுதலிய ரூபமாக உபாசிக்கத்தக்கது என்று உபதேசிக்கப்பட்டது. அதற்கு முந்தின ஆறுவது அனுவாகத்தில் ஸ்வல்பம் சூட்சுமத்தை கிரகிக்கக்கூடிய மத்தியமாதிகாரிகளுக்கு பிரம்மமானது சூட்சுமமான மனது முதலியரூபமாக உபாசிக்கத்தக்கது என்று உபதேசிக்கப்பட்டது. உத்தமாதிகாரிக்கு இந்தஎட்டாவது அனுவாகத்தில் வேதாந்தத்தால் கூறப்பட்டுள்ள பிரணவத்தால் குறிப்பிடப்பட்டிருக்கிற தத்தப்பிரம்மத்தின் உபாசனை விதிக்கப்படுகின்றது.

## I-பிரணவ-பிரம்மம்.

*அத்:—சுருதிமுதலில் உபாசனைக்குவிஷயமானபிரணவத்தின் ஸ்வரூபத்தையும் பிரணவம் பிரம்மத்தைக்கூறும் என்பதையும் சொல்லுகிறது.*

I (1) ओमिति ब्रह्म ॥ ஓமிதி ப்ரஹ்ம ॥ 1 ॥

(2) ओमितीदं सर्वं ॥2॥ ஓம் இதீதம் ஸர்வம் ॥ 2 ॥

பதவுரை.

(1) ओं ஓம்=ஓங்காரம்
इति இதி=என்பது
ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மம்
(2) ओं इति ஓம்இதி=ஓம் என்பது
इदं இதம்=இது
सर्वं ஸர்வம்=எல்லாம்

### வியாக்கியானங்கள்.

(1) ச-பா:—இதி சப்தம் ஸ்வரூபம் இன்னது என்பதைக்காட்டுகிறது. ஓம் என்கிற சப்தம் பிரம்மம் என்று ஒருவன் மனதில் தரிக்கவேண்டியது. அதாவது தியானிக்கவேண்டியது. ஏனெனின் ओं इतिं इदं सर्वं ஓம்இதிஇதம்ஸர்வம்= சப்தத்தின் எந்தரூபமும்

---

### I. 8-வது அனுவாகம்.

**வி:—அகை:—இதுபிரணவத்தை ஸ்துதிக்கிறது.**

I (1)—ओं इति ब्रह्म ஓம்இதி ஹ்ரப்= பிரம்மத்துக்குப் பிரதீகமாகையாலும், பிரமத்தியானத்துக்குச் சாதனமாயிருப்பதாலும் பிரணவமானது பிரம்மமே.

---

### து:—I. 8-வது அனுவாகம்.

I. 1. அ-கை:—வேதவித்தையை அப்பியசிக்க இச்சிக்கிறவனுக்கு முதலில் பிரணவ வித்தையைச் சொல்லுகிறார்.

ब्रह्म ப்ரஹ்ம=விஷ்ணுவானவர்

ओं इति ஓம்இதி=ஓம் என்று சொல்லப்படுகிறார். ஏனெனின் அகார உகாரங்கள் அதிக மேன்மையைக் கூறுகின்றன. யோக்கியதை இருப்பதினால் குணங்களைச் சேர்த்துக்கொள்ளவும் ஆகவே ஓம் என்பதினால் அதிக மேன்மையான குணங்களுடையவர் என்று அர்த்தம்.

அர்த்:—ஓங்காரத்தால் வியாபிக்கப்பட்டிருக்கிறது. तद्यथा शङ्कुना தத்யதா ஶங்குநா=என்கிற சாந்தோக்கிய (II-23-4) சுருதி இதற்குப்பிரமாணம். சொல்லப்படவேண்டிய பதார்த்தம் சொல்லும் வசனத்தைப் பொருந்திருக்கிற படியால் நாம் பார்க்கிறதெல்லாம் ஓங்காரமென்று சொல்லப்படுகிறது.

(2) ஆ:—பிரம்மத்தை ஓங்காரமாக தியானிக்கிற விஷயத்தில் இரண்டுக்கும் என்ன சாதிர்சியம் இருக்கிறதெனின், பிரம்மம்போல் ஓங்காரமும் சகலத்துக்கும் ஆதாரமாக இருக்கிறது.

(3) வி-வி:—ओं ஓம்=ஓங்காரமே பரமாத்மாவைக் கூறும் பதம் வேறு ஒன்றும் அதை கூறமாட்டாது. பதஞ்சலிபகவான் தன்னுடைய யோகசூத்திரத்தில் तस्य वाचकः प्रणवः தஸ்ய வாசக: ப்ரணவ: என்று சொல்லியிருக்கிறார்.

इति இதி—:இந்த சப்தம் வேறு விஷயம் கூறப்படவில்லை என்பதைக் காட்டுகிறது.

ओं इति ब्रह्म ஓம் இதி ப்ரஹ்ம=ஓம் என்கிற சப்தத்தினாலேயே கூறப்பட்ட யாதொரு பிரம்மமுண்டோ அதுவே இவ்விடத்தில் உபாசிக்கத்தக்கதாக சொல்லப்படும் வஸ்து.

மனது, அல்லது, பிருதிவி முதலிய உபாதிகளை இவ்விடத்தில் கிரகிக்கக்கூடாது, தியானிக்கக்கூடாது. வாசகமான ஓங்காரத்தை உச்சரித்துகொண்டு வாச்யமான (அதினால் குறிப்பிடப்பட்ட) பிரம்மத்தை உபாசிக்கவேண்டியது என்று அர்த்தம்.

ओं इतीदं सर्वं ஓம் இதீதம் ஸர்வம்=இது, பிரம்மத்தை ஓங்காரம் கூறும், என்பதைக் காட்டுகிறது. ஓம் என்கிற அக்ஷரத்திலேயே சப்தரூபமாயும், அர்த்த (பொருள்) ரூபமாயுமிருக்கிற இந்த சமஸ்தமான ஜகத்தும் அடங்கியிருக்கிறது. இது சாந்தோக்கிய

---

வி:—(2) ओं इति इदं सर्वं ஓம் இதி இதம் ஸர்வம்=பிரம்மஸ்வரூபமாயிருப்பதினாலேயே சர்வஸ்ரூபமாயிருக்கிற தென்று அர்த்தம்.

---

து:—(2) அ-கை.—மூலரூபமான விஷ்ணுதான் ஓம் என்கிறபெயருள்ளவரல்ல.

इदं सर्वं இதம் ஸர்வம்=மத்ஸ்ய முதலிய சகல ரூபங்களும்

ओं इति ஓம் இதி= ஓம் என்று சொல்லப்படுகின்றன. ஏனெனின் சகல ரூபங்களும் அதிக மேன்மையான குணபூர்ணங்களாயிருக்கின்றன என்பது கருத்து. அப்படியே न स्थानतोऽपि परस्योभयलिंगं सर्वत्र हि நஸ்தாநதோऽபி பரஸ்யோபயலிங்கம் ஸர்வத்ர ஹி=என்கிற சூத்திரமும் கூறுகிறது.

**அர்த்:**—சுருதிதிருஷ்டாந்தத்தால் ஸ்பஷ்டம். சகலபதார்த்தங்களும் அவைகளைக் கூறும் பதங்களால் பிரணவத்தில் அடங்கியிருக்கின்றனவென்பதாய் அந்தசுருதி சொல்லுகிறது. இதெல்லாம் 4-வது அனுவாகத்தில் विश्वरूप விஶ்வரூபவ என்கிற பதத்திற்கு அர்த்தம் சொல்லுமிடத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் பிரணவமானது சர்வஸ்வரூபமாயிருப்பதால் ஸர்வஸ்வரூபமான பிரம்மத்தைக் கூறலாம்.

## II-பிரணவத்தின் ஸ்துதி.

இனி ஓம் என்னும் சப்தம் ஸ்துதிக்கப்படுகிறது. ஏனெனில் அதுவே தியானிக்கத் தக்கதாயிருக்கிறது.

(3) ओमित्येतदनुकृति ह स्म वा अप्यो श्रावयेत्याश्रावयन्ति ।

(3) ஓமித்யேதத³நுக்ருதி ஹ ஸ்ம வா அப்யோ ஶ்ராவயே

த்யாஶ்ராவயந்தி ।

(4) ओमिति सामानि गायन्ति । ஓமிதி ஸாமாநி கா³யந்தி ।

(5) ओं शोमिति शस्त्राणि शंसन्ति । ஓம் ஶோமிதி ஶஸ்த்ராணிஶம்

ஸந்தி ।

(6) ओमित्यध्वर्युः प्रतिगरं प्रतिगृणाति । ஓமித்யத்⁴வர்யு: ப்ரதிக³

ரம் ப்ரதிக்³ருணாதி।

(7) ओमिति ब्रह्मा प्रसौति । ஓமிதி ப்³ரஹ்மா ப்ரஸௌதி ।

(8) ओमित्यग्निहोत्रमनुजानाति । ஓமித்யக்³நிஹோத்ரமநுஜாநாதி।

(9) ओमिति ब्राह्मणः प्रवक्ष्यन्नाह ब्रह्मो पाप्नवानीति ॥ ३ ॥

(9) ஓமிதி ப்³ராஹ்மண: ப்ரவக்ஷ்யந்நாஹ ப்³ரஹ்மோபாப்நவா

நீதி ॥ 3॥

(10) ब्रह्मैवोपाप्नोति ॥ ४॥ ப்³ரஹ்மைவோபாப்நோதி ॥ 4 ॥

பதவுரை.

(3) ओं इति एतत् ஓம் இதி ஏதத்=ஓங்காரமென்பது
अनुकृतिः அநுக்ருதி:=அனுசரித்துச் சொல்லல்
ह स्म वै ஹஸ்மவை=இவைகள் பிரசித்தியைக்கூறுகின்றன.
अपि அபி=மேலும்
आश्रावय ஆச்ராவய=கேட்கும்படி செய்
इति இதி=என்பதாய் (சொன்னவுடன்)
आश्रावयन्ति ஆச்ராவயந்தி=கேட்கும்படி செய்கிறார்கள், (சொல்லச்சொன்னவுடன் சொல்லுகிறார்கள்)

(4) ओं इति ஓம் இதி=ஓம் என்பதாய்
सामानि ஸாமாநி=சாமங்களை
गायन्ति காயந்தி=கானம் செய்கிறார்கள்

(5) ओं शोम् इति ஓம் சோம் இதி=ஓம், சோம், என்பதாய்
शस्त्राणि சஸ்த்ராணி=பிரார்த்தனைகளை, கானமற்றரிக்குக்களை
शंसन्ति சம்ஸந்தி=சொல்லுகிறார்கள்.

(6) ओं इति ஓம் இதி=ஓம் என்பதாய்
अध्वर्युः அத்வர்யு:=அத்வர்யுவானவன் (யஞ்ஞத்தில் யஜுர் வேதியான ரித்விக்கு)
प्रतिगरं ப்ரதிகரம்=வேதசப்த விசேஷத்தை
प्रतिगृणाति ப்ரதிக்ருணாதி=ஹோமம் செய்கிறவனுடைய வசனத்தை அனுசரித்துச் சொல்லுகிறான்

(7) ओं इति ஓம் இதி=ஓம் என்பதாய்
ब्रह्मा ப்ரஹ்மா=பிரம்மா (வாத்தியார்)
प्रसौति ப்ரஸௌதி=அனுமதி வசனத்தைச் சொல்லுகிறான்.

(8) ओं इति ஓம் இதி=ஓம் என்பதாய்
अग्निहोत्रं அக்நிஹோத்ரம்=அக்நிஹோத்திரத்துக்கு
अनुजानाति அநுஜாநாதி=அனுஞ்ஞையை கொடுக்கிறான்.

(9) ओं इति ஓம் இதி=ஓம் என்பதாய்
प्रवक्ष्यन् ப்ரவக்ஷ்யந்=சொல்ல (அத்தியயனம் செய்ய) இச்சிக்கிற
ब्राह्मणः ப்ராஹ்மண:=பிராமணன்
आह ஆஹ=சொல்லுகிறான்.
ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மத்தை
उपाप्नवानि உபாப்நவாநி=அடைவேனாக
इति இதி=என்பதாய் இச்சித்து

(10) ब्रह्मैव ப்ரஹ்மைவ=பிரம்மத்தையே
उपाप्नोति உபாப்நோதி=அடைகிறான்.

## வியாக்கியானங்கள்.

*அத்:*—(3) ல் ஓம்:—

ச-பா:—ஓம் என்பது சம்மதிவசனம், ஒருகாரியத்தைச்செய்யும்படி ஒருவன் மற்றொருவனை ஆஞ்ஞாபிக்க, அதை அங்கீகரித்து நான் செய்கிறேன், போகிறேன், என்பதாய் தன்னுடைய அபிப்பிராயத்தைக் காட்டும் பொருட்டு ஓம் என்று சொல்லுகிறான். ஓம் என்பது அங்கீகாரவசனமென்பது எல்லோருக்கும் தெரியும்.

வி-வி:—வைதிககர்மங்களிலிருந்து சில திருஷ்டாந்தங்களைக் கொண்டு ஓம் என்பது சகலத்துடனும் சம்பந்தப்பட்டிருக்கிறதென்பதைச் சுருதி காட்டுகிறது. தர்சபூர்ணமாசமுதலிய யாகங்களில் யஜுர் வேதத்தில் விதிக்கப்பட்ட கர்மங்களை அனுஷ்டிக்கிற அத்வர்யுக்கள் எந்த காலத்தில் ஆக்கினீத்திரனுக்கு கட்டளையிடுகிறார்களோ, அப்போது आश्रय ஸ்ராவய என்பதாய் மந்திரத்தைச் சொல்லுகிறார்கள். आश्रावय ओश्रावय औश्रावय ஆஸ்ராவய. ஓஸ்ராவய, ஔஸ்ராவய என்பதாய் இந்த மந்திரமிருக்கலாம் என்று ஆபஸ்தம்பர்சொல்லுகிறார். பிரகிருதசுருதியில் ஓஸ்ராவய என்கிற பாடத்தைத் தான் சுருதி ஒப்புக்கொண்டிருக்கிறது. இந்த மந்திரத்திலிருக்கிற ஓங்காரம் ஆக்கினீத்திரா என்பதாய் அவனை உத்தேசிக்கிறது. ஓ ஆக்கினீத்ரா ஹவிஸைக்கொடுக்கும்படியான அவசரம் வந்திருக்கிறதென்று தேவதைகளுக்குத் தெரியப்படுத்து —என்பது மந்திரார்த்தம். இந்த மந்திரத்திலிருக்கிற ஓ என்கிற உச்சரிப்பு ஓம் என்பது போலவேயிருக்கிறது. இவ்விதமாகவே அத்வர்யுக்கள் ம் என்கிறதின் ஒரு பாகமாகிய ஓஎன்பதால் கட்டளையிடுகிறார்கள்.

(சங்கராசாரியாருடைய வியாக்கியானப்படி இந்த இடத்தில் ஆ சிராவய என்று பதப்பிரிவினை. வித்தியாரணிய சுவாமிகளின் வியாக்கியானப்படி ஓ சிராவய என்று பாடம்.)

---

**வி:**—(3) விதி என்ன அப்பியனுஞ்ஞாவிதி என்ன, நிஷேதமென்ன, இவைகளெல்லாம் ஓம் என்கிற ஒரே ஆகாரம்

**इत्येव** ஹஸ்மவை= இவை பிரசித்தியைகூறுகின்றன.

---

**து:**—3. அ-கை:—பரமாத்மா ஓம் சப்தத்தால் பிரதிபாதிக்கப்படுகிறார் என்பது எப்படித்தெரியவருகிறது என்பதை பரமாத்மாவை உத்தேசித்து சகல கர்மங்களையும் அவருக்கு சமர்ப்பிக்கிறவர்கள் நியமமாக அப்போதைக்கப்போது ஓம் என்கிற சப்தத்தை உச்சரித்துக்கொண்டு வருவதால் என்பதாய்ச் சொல்லுகிறார்.

அத்:—(4) ओंसामानि ஓம்ஸாமாநி:—

ச-பா:—சாமகர்கள், அப்படியே, ஓம் என்று கானம் செய்கிறார்கள்.

வி-வி:—சாமகானம் செய்கிறவர்கள் உத்காத்ரிகள் இவர்கள் பிரணவத்தை உச்சரித்து சாமங்களைக்கானம் செய்கிறார்கள்.

(5) ओंशों ஓம்ஸோம்=

ச-பா:—பிரார்த்தனைகளைச் செய்கிறவர்கள் பிரார்த்தனைகளை ஓம் சோம் என்று ஆரம்பிக்கிறார்கள்.

---

வி:—(4) ஓம் என்று ஆரம்பித்து உத்காதிர்களான ரித்விக்குகள் சாமாக்களை கானம் செய்கிறார்கள் என்று அர்த்தம்.

(5) ஹோதாக்களும் ஓம் என்று ஆரம்பித்து சாஸ்திரம் சொல்லுகிறார்கள் என்று அர்த்தம்.

---

து:—ओं इति अनुकृतिः ஓமிதி அநுக்ருதி:=ஓம்காரம் முக்கியமாய் பரமாத்மாவை பிரதிபாதிக்கிறது. அந்த ஓங்காரத்தை உச்சரித்து கர்மங்கள் முதலியவைகளை பரமாத்மாவுக்கு அர்ப்பணம் செய்கிறார்கள் என்பது பிரசித்தம்.

अपि அபி=அப்படியே யஞ்ஞியத்தில் யாஞ்ஞிகர்கள் மந்திரங்களைச் சொல்லும்போதும் பரமாத்மாவை ஸ்துதிக்கும்போதும் ओंश्रावय ஓம்ஶ்ராவய=அதிக மேன்மையான குணங்களால் பூர்ணரான விஷ்ணுவின் மூலரூபத்தைச் சொல்லும்என்று சொல்ல அத்துவர்யுக்கள் आश्रावयन्ति ஆஶ்ராவயந்தி எனைச்சலுடன் உச்சரிக்கிறார்கள். இதனால் ஓம் சப்தம் பரமாத்ம வாசகமாயிராவிடின் யஞ்ஞம் செய்கிறவர்கள் ஓம் சப்தத்தை உச்சரித்து கர்மத்தைச் செய்யமாட்டார்கள்.

ओश्रावय ஓஶ்ராவய= என்கிற இடத்தில் ஓவை ஓம் என்று அறியவும்.

एतत्अनुकृति ஏதத்அநுக்ருதி=இது அனுரூபம்

हस्मवै ஹஸ்மவை=இவை பிரசித்திபை கூறும் சப்தங்களாம்

4-உத்காதா-பிரஸ்தோதா-பிரதிஹர்தா-சுப்பிரம்மணிய-ஆகிய உத்காதர்கள் நாலுபெயர்கள்

ओंइति ஓமிதி=ஓம் என்று உச்சரித்து விஷ்ணுவை உத்தேசித்து

सामानि ஸாமாநி=பரமாத்மாவின் ஸ்துதி மந்திரங்களை

गायन्ति காயந்தி=சொல்லுகிறார்கள்

5. ओंशोंइति ஓம்ஶோமிதி= பரமாத்மா விசேஷ-சுகரூபியானதால் शों ஶோம் என்று சொல்லி

அத்: —வி-வி:— ரிக்வேத ரித்விக்குக்களாகிற ஹோதாக்கள் ஓம் சோம் என்பதான மந்திரங்களைச் சொல்லுகிறார்கள். ஹோதாக்கள் மந்திரங்களைச்சொல்ல அத்வர்யுவின் அனுஞ்ஞையை அபேக்ஷித்து, ஶோம்சாவோம் ஶோம்ஸாவோம்=நாம் பிரார்த்தனை செய்யலாமா என்பதாய், அத்வர்யுவைக்கேட்கிறார்கள். இவ்விடத்தில் சோமென்பது முதல்பதம், ஓம் என்பது இரண்டாவது பதம். இவ்விரண்டையும் சேர்த்து ஓம்சோம் என்பதாய் சுருதி சொல்லுகிறது.

(6) ஓம்ப்ரதிகர: ஓம்ப்ரதிகர:=

ச பா:—ஓம் என்று அத்வர்யுவானவன் அனுமதியைக்கொடுக்கிறான்.

வி-வி:— ஹோதாக்கள் மந்திரங்களைச் சொன்ன பிறகு அத்வர்யுவானவன் அவர்களுக்கு உத்ஸாகம் உண்டாகும்படியாக ஒரு சப்தத்தை உச்சரிக்கிறான். இந்த சப்தம் பிரதிகிரம் எனப்படும். எப்போது இந்தபிரதிகிரத்தை எவன்உச்சரிக்கிறானோ அப்பொழுது ஓம் என்று சொல்லுகிறான். ஹோதா ஒரு ரிக்கின்பாதியைச்சொன்னவுடன் "நீ சொன்னது ரொம்ப திருப்திகரமாயிருக்கிறது" என்பதாய் அத்வர்யுவானவன் உத்ஸாக வார்த்தையைச்சொல்லுகிறான். ரிக்கு முடிந்தவுடன் பிரணவத்தை முன்னிட்டுக்கொண்டு பிரதிகிரத்தைச் சொல்லவேண்டும். இந்த பிரணவம் சொன்ன ரிக்கை அத்வர்யு ஒப்புக்கொண்டான் என்பதைக் காட்டுகிறது. மந்திரம் முடிந்தவுடன் பிரணவத்தைமட்டும் உபயோகிக்கவேண்டியது. இது அங்கீகாரத்தைக் கூறுகிறது. இவ்விதமாக பிரதிகிரத்திலும் பிரணவமிருக்கிறது.

---

வி:—(6) ஹோதாவானவன் சாஸ்திரத்தைச் சொல்லும்போது அத்வர்யுவான ரித்விக்கு ரிக்குக்கள்தோறும் ஓம் என்று அனுமோதிக்கிறான்.

प्रतिगरं ப்ரதிகரம்=ओथामोदैव ஓதாமோதைவ என்கிற சப்தத்தைச் சொல்லுகிற ஹோதாவுக்கு உத்ஸாஹத்தை.

प्रतिगृणाति ப்ரதிக்ருணாதி=உண்டு பண்ணுகிறான் என்று அர்த்தம். பாகம்பக்ஷி என்பதுபோல் பிரதிகிரம் பிரதிகிருணாதி என்பதின் பிரயோகம்.

---

6. अध्वर्युः அத்வர்யு:=யஜுர்வேதத்தைச்சொல்லும் யாஞ்ஞிகர்கள்

प्रतिगरं ப்ரதிகரம்=பரமாத்மாவின் ஸ்துதியைச் செய்யும்போது ஒவ்வொரு மந்திரத்திலும்

ओं इति ஓம் இதி=ஓம் என்பதாய்

प्रतिगृणाति ப்ரதிக்ருணாதி=சொல்லுகிறார்கள்,

அத்:—(7) ओंब्रह्मा ஓம்ப்ரஹ்மா :—

ச-பா:—பிரம்மா என்கிற ரித்விக்கு தன் சம்மதியை ஓம் என்பதால் குறிப்பிடுகிறான்.

வி-வி:—மூன்று வேதங்களிலும் சொல்லிய பிரயோகங்களை அறிகிறவன் பிரம்மா. ஜலம் தெளித்தல் முதலிய காரியங்களைச்செய்யும்படி இதர ரித்விக்குக்களை அவன் ப்ரேரணை செய்யும் போது பிரணவத்தை முன்னிட்டுக்கொண்டு பிரேரணை செய்கிறான்.

(8) अग्निहोत्र அக்னிஹோத்ர=

ச-பா:—எப்போது யாகம் செய்கிறவன் நான் ஹவிஸைக்கொடுக்கிறேன் என்று சொல்லுகிறானோ, ஓம் என்பதாய் வேறு ஒருவன் அனுமதியைக் கொடுக்கிறான்.

வி-வி:—அக்கினி ஹோத்திரஹோமத்தில் அத்வர்யுவானவன் கரண்டியில் பாலை எடுத்துக்கொண்டு அக்கினி ஹோத்திரஹவணீ என்னும் பாத்திரத்தில் போட எப்போது தயாராயிருக்கிறானோ அப்போது "ஓம் தேவதைகளுக்காக ஹவிஸை எடுத்துக்கொள்ளட்டுமா" என்பதாய் யஜமானனுடைய அனுஞ்ஞையை யாசிக்கிறான். அந்தயஜமானன் ஓம் என்பதினால் அனுமதியைக் கொடுக்கிறான்.

---

வி:—(7) प्रसौति ப்ரஸௌதி = அனுமதி கொடுக்கிறான் என்று அர்த்தம்.

(8) अनुजानाति அநுஜாநாதி = ஓம் என்று கார்ஹபத்தியதினின்றும் ஆஹவநீயத்தில் அக்கினியைக் கொண்டுபோய் சேர் என்பதாய் எஜமானன் அனுமதிகொடுக்கிறான் என்று அர்த்தம்.

---

வி:—7. ब्रह्मा ப்ரஹ்மா=பிரம்மா என்கிற ரித்விக்கு

ओंइति ஓமிதி=ஓம் என்று

प्रस्तौति ப்ரஸ்தௌதி=விஷ்ணுவை உத்தேசித்து ஸ்தோத்திரம் செய்கிறான்.

(8) इति இதி=விஷ்ணுவானவர் கர்மத்தை சாங்கமாயும் சபலமாயும் செய்யட்டும் என்கிற கருத்துடன் ஓம் என்று உச்சரித்து.

अग्निहोत्रं அக்னிஹோத்ரம்=அக்கினி ஹோத்திரம் முதலிய கர்மங்களைச்செய்யும்போது

अनुजानाति அநுஜாநாதி=ஓம்என்பதால் அனுஞ்ஞையைகொடுக்கிறார்கள்

அக்:(9) ओंब्राह्मण: ஒம்ப்ராஹ்மண:=

ச-பா:—பிராமணன் ஓம் என்று சொல்லிக்கொண்டு அத்தியயனத்தை ஆரம்பிக்கிறான். பிரம்மம் என்றால் வேதம் அதைஅறிய இச்சித்து அதை அத்தியயனம் செய்கிறான். அல்லது பிரம்மம் என்பது பரமாத்மா, அதை அடைய இச்சிக்கிறவனாய் ஓம் என்று சொல்லுகிறான். அந்த ஓங்காரத்தால் பிராமணன் பிரம்மத்தை அடைகிறான். நிச்சயம்

இந்த அனுவாகத்தின் கருத்து என்னவெனின்:—ஓங்காரத்தை முன்னிட்டுக்கொண்டு செய்யப்படும் கர்மங்களெல்லாம் பலத்தை கொடுக்கிறபடியால் ஓங்காரத்தை பிரம்மமாக உபாசிக்கவேண்டியது என்பதாம்.

வி-வி:—இந்த வைதிக கர்மங்களின் திருஷ்டாந்தத்தால் ஓம் என்பது எங்கும் வியாபித்திருக்கிறது என்பது நிரூபிக்கப்பட்டது.

உபாசனையின் பலனைச் சொல்லுவதினால் உபாசனை செய்யத்தக்கது என்பதாய் கருதியானது ब्रह्म ப்ரஹ்ம முதலியதால் சொல்

---

வி:—(9) ब्राह्मण: ப்ராஹ்மண: = பிராமணன்

ब्रह्म ப்ரஹ்ம = வேதத்தை

उपाप्नवानीति உபாப்நவாநிதி=அடைகிறேன் என்று நினைத்து

प्रवक्ष्यन् ப்ரவக்ஷ்யந்=அத்தியயனம் செய்யப்போகிறவனாக இருந்துகொண்டு

ओं इतिआह ஓம் இதிஆஹ = ஒமென்று சொன்னான்.

(10) அப்படியே வேதத்தை அடைகிறான் என்று அர்த்தம்.

8-வது அனுவாகம் முற்றிற்று.

---

து:—(9) ब्राह्मण: ப்ராஹ்மண:=பிராமணன்

प्रवक्ष्यन् ப்ரவக்ஷ்யந்=அத்தியயனாதிகளைச் செய்துகொண்டு

ब्रह्म ப்ரஹ்ம=விஷ்ணுவை

उपाप्नवानीति உபாப்நவாநீதி = அடையவேணும்என்கிற பாவத்துடன்

ओं इति ஓம் இதி=ஓம் என்று आह ஆஹ= சொல்லுகிறான்

ब्रह्मैव ப்ரஹ்மைவ=விஷ்ணுவையே

उपाप्नोति உபாப்நோதி=அடைகிறான் எப்போது அத்வர்யு முதலானவர்கள் மேற்சொல்லியபடி பரமாத்ம ஞானத்துடன் பிரம்மத்தை அடையவேணும் என்பதாய் மந்திரங்களைஉச்சரிக்கிறார்களோ அப்போது பிரம்மத்தை அடைவார்கள்என்றே நினைக்கவேண்டியது.

**அத்:**—லுகிறது. எவன் பிரம்மத்தை அடைய இச்சிக்கிறானோ அவன் ஓம் என்கிற சப்தத்தால் கூறப்படும் பிரம்மத்தை உபாசிக்கவேண்டும். அந்த உபாசனையால் பிரம்மத்தை அடைகிறான்.

இவ்விடத்தில் ஸ்ரீவித்தியா ரணிய சுவாமிகள் பிரணவத்தைப் பற்றி ஸ்வல்பவிசாரம் செய்கிறார். அதின் சுருக்கம் அடியில் வருமாறு.

## பிரணவத்துக்கும் பிரம்மத்துக்கும் சம்பந்தம்.

ओंइतिब्रह्म ஓம் இதி ப்ரஹ்ம என்கிற வாக்கியத்துக்கு அர்த்தமென்ன ? (1) அது பிரதீகம், அதை பிரம்ம ரூபமாக பாவிக்க வேண்டியது என்று அர்த்தமா ? (2) அல்லது ஓம் என்கிற விசேஷணத்தால் கூறப்பட்ட பிரம்மத்தை உபாசிக்கவேண்டியது என்று அர்த்தமா ? ஓம் என்பதையே பிரதீகமாக வைத்துக் கொண்டு அதை பிரம்ம ரூபமாக பாவிக்கவேண்டியது என்பது அர்த்தம் என்பதாய் முதல் பார்வைக்குத்தோன்றக்கூடும். ஆனால் வேதாந்த சூத்திரம் III--3-9ல் ओमित्येतदक्षरमुद्गीथमुपासीत ஓமித்யேதத் க்ஷரம் உத்கீதமுபாஸீத என்கிறவாக்கியத்தைவிசாரிக்கிறவிடத்தில் ஓம் என்கிறசப்தம் 3 வேதங்களிலும் வந்திருப்பதால் எந்த ஓங்காரத்தை உபாசிக்கிறது என்று சந்தேகம் வர சாமவேதத்திலிருக்கிற ஓங்காரம்தான் தியானிக்கத்தக்கது என்பது அர்த்தம் என்றும் வேறு ஓங்காரம் கூறப் படவில்லை என்றும், ஆகவே உத்கீதாஎன்பது இன்ன ஓங்காரம்தான் குறிப்பிடப்பட்டிருக்கிறதென்பதை நிச்சயிக்கும்பொருட்டு ஏற்பட்ட விசேஷணம் என்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

அப்படியே ஓம் இதி பிரம்மம் என்கிற வாக்கியத்திலும் பிரம்மம் என்கிற பதம்

(1) மனோமய ரூபமாக பாவிக்கப்படும் சகுண பிரம்மத்தை யாவது

(2) பிருதிவீ முதலிய ரூபமாக பாவிக்கப்படும் சகுண பிரம்மத்தை யாவது

(3) சுத்த பிரம்மத்தை யாவது கூறக்கூடும். உத்கீத விஷயத்தில் கூறிய யுக்திப்படி சகுண பிரம்மத்தை விட்டு நிர்குண பிரம்மத்தைத்தான் கிரகிக்கவேண்டியது என்பது ஏற்படுகிறது. ஆகவே பிரணவமானது இன்ன பிரம்மம் என்பதை நிஷ்கர்ஷிக்கிறது. ஓம் என்கிற வாசகசப்தத்தால் (குறிப்பிடும்சப்தத்தால்) வாச்சியமான (குறிப்பிடப்பட்ட) பிரம்மம் தான் உபாசிக்கவேண்டியது என்பது ओंइतिब्रह्म ஓம் இதி ப்ரஹ்ம என்பதற்கு அர்த்தம்.

அத்:—ஓம் என்பதைபிரதீகமாகவைத்துக்கொள்ளும் பக்ஷத்தில் கேவலம் சப்தஸ்வரூபமான ஓங்காரத்தை பிரம்மமாக உபாசிக்க வேண்டியது என்று சொல்லுவதில், சப்தத்தை உபாசிக்கிறதாக ஆகுமே தவிர பிரம்மத்தை உபாசிக்கிறதாக ஆகமாட்டாது. இந்த பக்ஷத்தில் பிரதீகத்தை உபாசிக்கிறவன் பிரம்மலோகத்தையே அடையமாட்டான். பிரம்மத்தை எப்படி அடையப்போகிறான். பிரம்மத்தை அடையாவிட்டால் பிரம்மத்தையே அடைகிறான் என்னும் பலவாக்கியம் பொய்யாய்விடும்.

ஓங்காரத்தால் கூறப்பட்ட பிரம்மத்தை உபாசிக்கவேண்டியதாக வைத்துக்கொள்ளும் பக்ஷத்தில், பிரம்ம லோகம் கிடைக்கிறது. அவ்விடத்தில் பிரம்மத்தின் தத்துவத்தைத் தெரிந்துகொண்டு விதேகமுக்திஸ்வரூபமானபிரம்மத்தையே உபாசகன் அடைகிறான். ஆகையால் ஓங்காரத்தால் பிரம்மம் இன்னது என்று நிச்சயிக்கப்படுகின்றது.

## சுத்தபிரம்மோபாசனை.

ஆ:—வேதமாகிற பிரமாணத்தால் சித்திக்கும் ஞானத்தால் சுத்த பிரம்மத்தை அறியமுடியுமே தவிர உபாசனையால்அறியமுடியாது. ஆகையால்தான் சாண்டில்லிய வித்தை தஹரவித்தை முதலியவைகளில் சகுணப் பிரம்மோபாசனை விதிக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் சுத்தப்பிரம்மோபாசனை உபதேசிக்கப்படவில்லை. மேலும்சுருதியால் பிரம்மத்தை அறிந்தபிறகு உபாசனையால் அடையவேண்டியது யாதொன்றுமில்லை. மேலும் பிரம்மத்தை அறிந்தவர்களுக்கு கர்த்தா என்னும் புத்தியேயில்லை. ஆகையால் அவர்கள் உபாசனை என்கிற காரியத்தில் எப்படி பிரவிர்த்திக்கக் கூடும்?

ச:—இது தோஷமாகமாட்டாது. வேதாந்த வாக்கியங்கள் இரண்டுவிதம். ஒன்று அவாந்திரவாக்கியம் மற்றொன்று மஹாவாக்கியம். அவாந்திர வாக்கியமானது ஜகத்காரணமான பிரம்மத்தின் ஸ்வரூபத்தை உபதேசிக்கிறது. மஹாவாக்கியம் ஜீவப்பிரம்ம அபேதத்தை உபதேசிக்கிறது. மகாவாக்கியத்திற் சொல்லிய ஐக்கியத்தை அறிந்தவனுக்கு உபாசனையால் ஆகவேண்டியது ஒன்றுமில்லை, அவன் உபாசகன் என்கிறகர்த்தாவும் ஆகமாட்டான் அவாந்திர வாக்கியத்தால் பிரம்மம் ஜகத்காரணம் என்கிற தத்வத்தை மட்டும் அறிந்தவன் தான் கர்த்தாவென்கிற பாவத்தை விட்டுவிடுகிறதில்லை. ஆகையால் அவன்உபாசகனுயிருக்கலாம். இவனுடைய

**அத்:**—உபாசனையால் பிரயோஜனமும் இருக்கிறது. இவன் முதலில் பிரம்ம லோகத்தை அடைந்து அவ்விடத்தில் பிரம்மத்தின் நிஜமான ஸ்வரூபத்தைத் தெறிந்துகொண்டு பிறகு விதேகமுக்தி அடைகிறான். ஆகையால் இப்படிப்பட்டவன் சுத்தப்பிரம்மத்தை உபாசிக்கவேண்டியது. இந்த உபாசனை பிரம்ம சூத்திரம் I-3-13 ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதமாக சுத்தப்பிரம்மத்தையும் உபாசிக்கலாமாகையால், பிரம்மத்தை அடைய வேண்டுமென்று இச்சிக்கிறவன் பிரணவத்தை உச்சரித்துக்கொண்டு அதின் அர்த்தமாகிற பிரம்மத்தை உபாசிக்கவேண்டும். அந்த உபாசனையால் அவன் பிரம்மத்தை அடைகிறான் நிச்சயம்.

## 9-வது அனுவாகம்.

### உபாசகனுடைய தர்மங்கள்.

அவதாரிகை:—

(*a*) ச-பா:—விஞ்ஞானத்தாலேயே ஸ்வாராஜ்யத்தை ஒருவன் அடைகிறான் என்று சொல்லியிருப்பதால் சுருதி ஸ்மிருதிகளில் சொல்லிய கர்மங்கள் நிஷ்பிரயோசனங்களென்பதாய் ஒருவன் நினைக்கக்கூடும். அப்படி நினைக்காமலிருக்கும்பொருட்டு உபநிஷத்தானது புருஷார்த்தங்களை அடைய கர்மங்கள் சாதகங்கள் என்பதாய் அவைகளைப்பற்றிச் சொல்லுகிறது.

(*b*) ஆ:—கர்மங்கள் அபரவித்தைக்குச் சாதகங்களாயிருக்கின்றன. ஆகையால் அவைகள் அபரவித்தையின்பலனையே கொடுக்கின்றன. ஆகையால் அவைகளைப்பற்றி உபநிஷத்து பிரஸ்தாபிக்கிறது.

(*c*) வி·வி:—எட்டாவது அனுவாகத்தால் சுத்தப் பிரம்மத்தைக்கூறும் பிரணவத்தால் பிரம்மோபாசனை விதிக்கப்பட்டது. புருஷார்த்தமாகிற கிரமமுக்தியை உபாசகன் இந்தஉபாசனையாலேயே அடையலாமாகையால் சுருதி ஸ்மருதிகளில் சொல்லிய தர்மங்கள் உபாசகனுக்கு உபயோகமில்லை என்பதாய் ஒருவன் நினைக்கலாம். இதை நீக்கும் பொருட்டு உபாசனையுடன்நித்தியகர்மங்களைச் செய்யவேண்டு மென்பதை இந்த 9 வது அனுவாகம் உபதேசிக்கிறது.

## உபாசகன் செய்யவேண்டிய கர்மம்.

(1) ऋतं च स्वाध्यायप्रवचने च । ருதம் ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(2) सत्यं च स्वाध्यायप्रवचने च । ஸத்யம் ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(3) तपश्च स्वाध्यायप्रवचने च । தபஶ்ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(4) दमश्च स्वाध्यायप्रवचने च । தமஶ்ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(5) शमश्च स्वाध्यायप्रवचने च । ஶமஶ்ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(6) अग्नयश्च स्वाध्यायप्रवचने च । அக்நயஶ்ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(7) अग्निहोत्रं च स्वाध्यायप्रवचने च । அக்நிஹோத்ரம் ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(8) अतिथयश्च स्वाध्यायप्रवचने च । அதிதயஶ்ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(9) मानुषं च स्वाध्यायप्रवचने च । மாநுஷம் ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(10) प्रजा च स्वाध्यायप्रवचने च । ப்ரஜா ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

II. (1) प्रजनश्च स्वाध्यायप्रवचने च । ப்ரஜநஸ்ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ।

(2) प्रजातिश्च स्वाध्यायप्रवचने च ॥ 1 ॥ ப்ரஜாதிஸ்ச ஸ்வாத்யாயப்ரவசநே ச ॥ 1 ॥

பதவுரை.

(1) ऋतं च ருதம் ச = தர்மமும்

स्वाध्यायप्रवचने च ஸ்வாத்யாயப்ரவசநே ச = அத்தியயனம் செய்தல், செய்வித்தல், இவைகளும் (இந்தப்படி மேல் பதினெருவாக்கியங்களையும் அறியவேண்டியது)

(2) सत्यं च ஸத்யம் ச = சத்தியமும்

(3) तपः च தப: ச = தபசும்

(4) दमः च தம: ச = பாஹ்ய இந்திரிய நிக்கிரகமும்

(5) शमः च ஶம: ச = மனோநிக்கிரகமும்

(6) अग्नयः च அக்நய: ச = (தக்ஷிணாக்கினி முதலிய) அக்கினிகளும்

(7) अग्निहोत्रं च அக்நிஹோத்ரம் ச = அக்கினி ஹோத்திரமும்

(8) अतिथयः च அதிதய: ச = அதிதிகளும்

(9) मानुषं च மாநுஷம் ச = மானிட வியவஹாரமும்

(10) प्रजा च ப்ரஜா ச = பிரஜையையும்

(1) प्रजनः च ப்ரஜந: ச = ருதுகாலத்தில் ஸ்திரீயை அடைதலும்

(2) प्रजातिः च ப்ரஜாதி: ச = வம்சவிருத்தியும் (கவனிக்கத்தக்கது)

வியாக்கியானங்கள்.

ऋतं ருதம் =

(1) ச-பா:—ரிதம் அதாவது தர்மம் என்பது இன்னதென்ப

---

வி:—I. 9-வது அநுவாகம் (விசிஷ்டாத்வைதம்.)

இந்த அநுவாகமானது பிரம்மவித்தைக்கு அங்கமாக அனுஷ்டிக்கத்தகுந்த கர்மத்தைக் கூறுகிறது.

---

I-9-வது அநுவாகம்.

து:—அ-கை:—வேத மென்கிற பிரம்ம வித்தையை இச்சிக்கிறவன் அதை அடையும்பொருட்டு அவசியம் கவனிக்கவேண்டிய நியமங்களைச் சொல்லுகிறார்.

அர்:—முன்னமேயே சொல்லியாய்விட்டது. ரிதம் முதலியவை களையும் சுவாத்தியாயம் அதாவது அத்தியயனம் செய்தலையும் பிர வசனம் அதாவது அத்தியயனம் செய்துவைத்தல் அல்லது பிரம்ம யஞ்ஞம் அதாவது பிரதிதினம் அத்தியயனம் செய்ததை ஒப்பித் தல் இவைகளை அனுஷ்டிக்கத்தக்கது.

வி·வி:—எதையாவது ஒன்றைச் சொல்ல ஒருவன் இச்சித் தால் மனதினால் அதை உள்ளபடி பரியாலோசனைப் பண்ணிபார்க் கிறான். பிறகு அதைக்கூறும் சப்தத்தைக் கவனிக்கிறான். பதார்த் தத்தை எந்த உசிதமான வார்த்தை கூறும் என்று மனதினால் ஆலோசிப்பதே ரிதம். சுவாத்தியாயம் என்பது பிரதிதினம் செய்யப் படும் அத்தியயனம்.

(2) सत्यं ஸத்யம்=

வி·வி:—உபாசனையை மட்டும் முக்கியமாய் இச்சிக்கிற உபாச கன் அனுஷ்டித்தல் போதாது. சத்தியவசனத்தையும் அப்பியசிக்க வேண்டியது. அத்தியயனம்செய்தல் செய்துவைத்தல் இவ்விரண் டையும் அப்பியசிக்கவேண்டியது. च ச=சகாரத்தால் உபாசனையு டன் இவைகளையும் சேர்த்து அனுஷ்டிக்கவேண்டியது என்பது கருத்து.

ச—பா:—சத்தியம் இன்னது என்பதை ரிதம் என்பதை விவ ரிக்கிற இடத்திற் சொல்லியாய்விட்டது. அல்லது, சத்தியம் என் பதற்கு சத்திய பாஷணம் என்று அர்த்தமாகலாம்.

---

வி:—ऋतं ருதம்=சத்ய வசனம்.

स्वाध्यायप्रवचने ஸ்வாத்யாயப்ரவசனே=அத்தியயனம் செய்தல் செய்துவைத்தல்.

இவைகள் அனுஷ்டிக்கத்தகுந்தவைகள் என்று அர்த்தம்.

(2) सत्यं ஸத்யம்=சமான பார்வை.

---

து:—I. (1)ऋतंच ருதம்ச=சத்தியஞானம்

स्वाध्याय: ஸ்வாத்யாய:=குருவானவர் உச்சரிக்கபடி உச்சரித்தல் (அதாவது குருவினிடம் கற்றுக்கொள்ளல்)

प्रवचनं ப்ரவசநம்=வித்யார்த்திகளை கற்பித்தல்

(इत्यादीनि कर्तव्यानि இத்யாதீநி கர்த்தவ்யாநி=இவை முதலியவை களைச் செய்யவேண்டியது. அதாவது இவைகள் அவசியம் வேண் டியது என்கிற வார்த்தைகளை எங்கும் சேர்த்துக்கொள்ளவும்)

(2) सत्यं ஸத்யம்—சத்தியஞானத்துடன் பேசுதல், அப்படியே காரியம்செய்தல்

स्वाध्यायप्रवचने ஸ்வாத்யாயப்ரவசனே=இந்தபதங்களுக்கு முன் போலவே வெடுகினும் செய்துகொள்.

அ:—(3) तप: தவ:=

ச-பா:—கிருச்சிராதி விரதங்கள்:—

வி-வி:—போஜனமன்றியிலிருத்தல், சாந்திராயணாதி விரதங்கள். யாஞ்ஞிகீ உபநிஷத்து (78) பட்டினியாக இருப்பதற்கு மேல் தபஸ் இல்லை என்று சொல்லுகிறது. பிரஹதாரணியக(IV-4-12) சுருதியில் தபஸையும் உபவாசத்தையும் வெவ்வேறாய் சொல்லியிருக்கிறதே வெனின் உபவாசம் செய்யமுடியாதவனுக்கு யஞ்ஞும் தனதானம் இவைகள் தபஸாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. தைத்ரீய சம்ஹிதை (VI-1-6) தனத்தைக் கொடுப்பதை தபஸாகச் சொல்லியிருக்கிறது.

(4) दम: தமஃ=

ச-பா:—பாஹ்யகரணங்களின் (இந்திரியங்களின்) அடக்கம்.

வி-வி:—சக்ஷுராதி முதலிய பாஹ்ய இந்திரியங்களை நிஷேதிக்கப்பட்ட விஷயங்களினின்றும் திருப்பி விடுதல்.

(5) शम: ஶமஃ=

ச-பா:—அந்தக்கரணத்தை அடக்குதல்.

வி-வி:—நிஷேதிக்கப்பட்ட மனதின் கற்பனைகளினின்றும் மனதை திருப்புதல்

(6) अग्नयश्च அக்நயஶ்ச :—

வி-வி:—ஆஹவனீயம் முதலிய அக்கினிகள். இவைகளை அனுஷ்டிக்கவேண்டியது.

(7) अग्निहोत्रंच அக்நிஹோத்ரஞ்ச=

ச-பா:—அக்கினியில் ஹோமம் செய்யவேண்டியது.

வி-வி—ஆஹிதாக்கினியால் காலையும் மாலையும் ஹோமம் செய்யவேண்டியது.

---

வி:—(3) तप: தவஃ=சரீரத்தைச் சோஷித்தல்

(4) दम: தமஃ=வெளியிலிருக்கிற இந்திரியங்களை அடக்குதல்

(5) शम: ஶமஃ=மனதை அடக்குதல்.

(6) अग्नय: அக்நயஃ=கார்ஹபத்தியம் முதலிய அக்கினிகள்

(7) अग्निहोत्र அக்நிஹோத்ரம்=அக்கினி சாத்தியமான அக்கினி ஹோத்திரம் முதலிய நித்தியகர்மம்

---

து:—(3) तप: தவஃ=சத்தியத்தையே தியானித்தல் யோக்கியர்களை பூஜித்தல்.

(4) दम: தமஃ= இந்திரியங்களை நிக்கிரகித்தல்.

(5) शम: ஶமஃ= பகவானிடத்தில் நிஷ்டை.

(6) अग्नय: அக்நயஃ=அக்கினிகளை ஆதானம் செய்தல்.

(7) अग्निहोत्र அக்நிஹோத்ரம்=அக்கினிஹோத்திரானுஷ்டானம்

அ:—(8) अतिथय: அதிதய: :—

ச-பா:—அதிதிகள் பூஜிக்கத் தக்கவர்கள்.

வி-வி:—அமாவாசியை முதலிய விசேஷ தினங்கள் தவிர மற்ற தினங்களில் தப்பித்தவறி எப்போதாவது பிறருடைய வீட்டுக்கு யாசகத்தின்பொருட்டு வருகிறவன் அதிதி எனப்படுவான்.

(9) मानुषं மாநுஷம் :—

ச-பா:—இவைகள் லௌகிக வியவஹாரங்கள். இவைகள் உண்டாகும் காலத்தில் செய்யத்தக்கவை. (ஆ:—விவாகாதிகள் போலும்)

வி-வி:—விவாஹம் முதலிய சுபகாரிய காலங்களில் பந்து முதலான ஸ்திரீகளை உபசரித்தல். இவைகளும் பரம்பரையாக பெரியோர்களால் கவனிக்கப்பட்டிருப்பதால், சுருதிஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட கர்மங்களைப்போல் இவைகளையும் அனுஷ்டிக்க வேண்டியது.

(10) प्रजाः ப்ரஜா: :—

ச-பா:—பிரஜைகளை உற்பத்தி செய்தல்.

வி-வி:—இந்த சப்தத்தால் புத்திரோத்பத்தி சம்பந்தமான கர்ப்பாதானம் முதலிய சம்ஸ்காரங்களை கிரகிக்கவேண்டியது.

(1) प्रजनः ப்ரஜந: :—

ச-பா:—ருதுகாலத்தில்பாரியையை அடைதல்.

வி-வி:—புத்திரோற்பத்தியின் பொருட்டு ருதுகாலத்தில் ஸ்திரீயை அடைதல்.

---

வி:—(8) मानुषं மாநுஷம்=மரித்துப்போன மனிதனை உத்தேசித்து அனுஷ்டிக்கத்தகுந்த சிராத்தம், அல்லது, பகவதாராதனை

(II) प्रजनः ப்ரஜந:=ருதுகாலத்தில் ஸ்திரீகமனம்.

---

து:—(8) आतिथ्यम: ஆதித்யம்=அதிதி பூஜை

(9) मानुषं மாநுஷம்=எதாவது சாபத்தால் மானிடயோனியை அடைந்த உத்தமதேவர்களுக்கு விசேஷ ஞானமிருந்தாலும் அதை பிரகடனம் செய்யாமை. (செய்யாமல் குருவினிடம் கற்றுக்கொள்ளல் என்பது கருத்து)

(10) प्रजा ப்ரஜா=புத்திரோற்பத்திச்செய்தல்

II (1) प्रजनः ப்ரஜந:=புத்திரர்களை இரக்ஷித்தல்

அ:—(2) प्रजातिः ப்ரஜாதிஃ—

ச-பா:—புத்திரர்களுக்கு விவாகம் செய்து வைப்பதால் சந்ததியை விர்த்தி செய்யவேண்டியது. இந்த கர்மங்களைச் செய்துகொண்டுவரும்போதும் வேதாத்தியயனம் செய்தல் செய்துவைத்தல் ஆகிய இவைகளையும் ஒருவன்கவனிக்கவேண்டியது. இதைச் சொல்லும்பொருட்டுத்தான் ஒவ்வொரு கர்மத்துடன் ஸ்வாத்தியாயம், பிரவசனம், இவ்விரண்டையும் சேர்த்துச் சொல்லியிருக்கிறது. வேதாத்தியயனத்தால் வேதத்தின் அர்த்தஞானம் உண்டாகும். அர்த்தஞானத்தால் பரமான சிரேயஸ் கிடைக்கிறது. பிரவசனம் அதை மறக்காமலிருப்பதற்கும் தர்மம் விர்த்தியாகும் பொருட்டும் ஏற்பட்டிருக்கிறது. ஆகையால் ஸ்வாத்தியாய பிரவசனங்களை ஆதரிக்கவேண்டியது.

வி-வி:—பிரஜாபதி சப்தத்தால் சுருதிஸ்மிருதிகளில் சொல்லப்பட்ட சகல கர்மங்களையும் அவனவனுடைய வர்ணாசிரமங்களை அநுசரித்து உபாசகன் அநுஷ்டிக்கவேண்டியது என்று அறியவேண்டியது. இல்லாவிடின் விதிக்கப்பட்டவைகளைச் செய்யாததால் ஏற்படும் பாபத்தால் பிரதிபந்தம் ஏற்பட்டு உபாசகன் பலத்தை அடையமாட்டான். இதைக்கொண்டு பிரம்மத்தைத் தெரிந்துகொள்ள இச்சிக்கிறவனும் கர்மங்களை அவசியம் செய்யவேண்டும் என்று சொல்லக்கூடாது. தத்வத்தை அறிந்தவனுக்குத் தான் கர்த்தா, இன்ன வர்ணாசிரமம் உள்ளவன், என்கிற பிராந்தி போய்விடுவதால், அவனுக்குக் கர்மாதிகாரம் ஏற்படவில்லை. உபாசகனே இந்த பிராந்திக்குட்பட்டவனாக இருப்பதால் அவனுக்குக் கர்மாதிகாரம் இருக்கிறது. ஆகையால் அந்த உபாசனையுடன் கர்மத்தைச் சேர்ப்பது யுக்தமே.

எப்போதும் உபாசனையிலிருக்கிறவனுக்கு சித்தவிர்த்தியின் விக்ஷேபத்துக்குக் காரணமாயும் வெகுப் பிரயாசையால் சித்திக்கக் கூடியதாயுமிருக்கிற அக்கினி ஹோத்திரம் முதலிய கர்மங்களில் பிரவிர்த்தி உண்டாகமாட்டாதே எனின்,

---

வி:—(2) प्रजातिः ப்ரஜாதிஃ=அதிகமாக பௌத்திராதிகளினுற்பத்தி

---

து:—(2) प्रजाति ப்ரஜாதிஃ=பிதாவானவர் புத்திரனுக்கு உபநயனம் செய்து பிராமணனாக்குதல். இந்த கர்மங்களில் ஒவ்வொன்றைச்செய்யும் போதும் குருவினிடம் வித்தையை கற்று பிறருக்கு கற்பிக்கவேண்டியதும் அவசியம்.

அ:—அவன் சமதமாதி அனுகூலமான கர்மங்களைச் செய்யட்டும் ஆகையால்தான் உபாசகனை உத்தேசித்து யமநியமாதிகளைச் சொல்லும் யோகசாஸ்திரம் பிரவிர்த்தித்தது. மனதின் சலிக்கும் தன்மை, சலிக்காமலிருக்கும் தன்மை இவைகளை அனுசரித்து அக்கினிஹோத்திரம் முதலிய கர்மங்களும சமதமாதிகளும் விதிக்கப்பட்டாலும் ஸ்வாத்தியாய பிரவசனங்கள் அவசியம் அனுஷ்டிக்கத்தக்கவை என்கிற அபிப்பிராயத்துடன் அந்தந்த கர்மத்துடன் இவைகளையும் விதிக்கும்பொருட்டு, அடிக்கடி இவைகள் கூறப்பட்டிருக்கின்றன. வேதாத்தியயனத்தை எக்காலத்திலும் விடமுடியாது. அதை விட்டால் சூத்திரத்தன்மை வந்துசேரும். இப்படி ஸ்மிருதி கூறுகிறது.

பூர்வ கர்மங்களை விட்டுவிடும் சன்னியாசிகூட அத்தியயனத்தைவிடக்கூடாது. ஆருணி உபநிஷத்தில் விட்டுவிடும்படியாகச் சொல்லப்பட்ட ஸ்வாத்தியாயம் உபயோகமற்ற கர்மகாண்டசம்பந்தமான வேதபாகத்தை அத்தியயனம் செய்யக்கூடாதென்று சொல்லுகிறதே தவிர ஞானகாண்டமான உபநிஷத்பாகம் விட்டுவிடத்தக்கதாகச் சொல்லவில்லை. இந்த பாகத்தை அத்தியயனம் செய்யவேண்டுமென்று சொல்லுகிறது. அத்தியனம்செய்தல் செய்து வைத்தல் இவ்விரண்டையும் ஒருவனும் விடக்கூடாதென்பதைக்காட்டும் பொருட்டு ஸ்வாத்தியாய, பிரவசனபதங்கள் பலதடவை உபயோகிக்கப்பட்டிருக்கின்றன.

## II. உபாசகனுடைய முக்கியமான கர்மங்கள்.

முற்கூறிய கர்மங்களில் எதை எதை யார் யார் சிலாக்கியமாகச் சொல்லுகிறார்களோ அதை இனி சுருதி கூறுகிறது.

(3) सत्यमिति सत्यवचा राथीतरः । ஸத்யமிதி ஸத்யவசா ராதீதர: ।

(4) तप इति तपोनित्यः पौरुशिष्टिः । தப இதி தபோநித்ய: பௌருஶிஷ்டி: ।

(5) स्वाध्यायप्रवचने एवेति नाको मौद्गल्यः । ஸ்வாத்யாயப்ரவசநே ஏவேதி நாகோ மௌத்கல்ய: ।

(6) तद्धि तपस्तद्धि तपः ॥2॥ தத்தி தபஸ்தத்தி தப: ॥ 2 ॥

அ:—பதவுரை.

(3) राथीतरः ராயீதரः=ரதிதர் கோத்திரத்தில் பிறந்த
सत्यवचाः ஸத்யவசாः=சத்திய வசஸன் என்கிறவர்
सत्य इति ஸத்ய இதி=சத்தியம் (அனுஷ்டிக்கத்தக்கது) என்று (நினைக்கிறார்)

(4) पौरुशिष्टिः பௌருஶிஷ்டிः=புருசிஷ்டருடைய புத்திரனை.
तपोनित्यः தபோநித்யः=தபோநித்தியர் என்பவர்
तपः इति தபः இதி=தபஸ் (அனுஷ்டிக்கத்தக்கது) என்று (நினைக்கிறார்)

(5) मौद्गल्यः மௌத்கல்யः=முத்கலரிஷியின் புத்திரரான
नाकः நாகः=நாகர் என்பவர்
स्वाध्यायप्रवचने एवइति ஸ்வாத்யாயப்ரவசநே ஏவ இதி=அத்தியயனம் செய்தல் செய்வித்தல் இவைகளையே (அனுஷ்டிக்க வேண்டியது என்று (நினைக்கிறார்)

(6) तत् हितपः தத் ஹி தபः =அதுவே தபஸ்
तत् हितपः தத்ஹி தபः=அதுவே தபஸ்;

வியாக்கியானம்.

(3) सत्यमितिः ஸத்யமிதிः :—

ச-பா:—ரதிதர் கோத்திரத்தில் பிறந்த, சத்தியத்தைத்தவிர வேறு ஒன்றையும் பேசாதபடியால் சத்திய வசஸ் என்று பெயரடைந்த ஆசாரியர்சத்தியபாஷணையையே அப்பியசிக்கவேண்டியது என்று நினைக்கிறார்

---

வி:– (3) सत्यवचाः ஸத்யவசாः = சத்தியவசனத்தைச் சொல்லுகிறவன்

राथीतरः ராயீதரः=ரதிகனுடைய பிள்ளை ராதீதரன் என்று பெயருள்ள ரிஷி

सत्यं इति ஸத்யம் இதி=சத்தியம் என்று சொல்லப்பட்ட சத்திய வார்த்தையே பிரதானம் என்றும் சுவாத்தியாய பிரவசனங்கள் பிரதானங்கள் அல்ல என்றும் எண்ணுகிறார்.

---

து:–(3) அ-கை:—சத்தியம் முதலிய மேற்சொன்ன சாதனங்களில் எல்லாம் ஒரே விதமாயிருக்கின்றனவா, அல்லது சிலது சிரேஷ்டமா என்பதை விசாரிக்கும் போது சிலது சிலாக்கியம் என்கிற முனிகளின் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறார்.

सत्यवचाः ஸத்யவசாः=சத்தியமாய் வசனிக்கிற

रीथातरः ராயீதரः=ராதீதர என்கிற முனியானவர்

सत्य इति ஸத்யம் இதி = சத்திய ஞானத்துடன் வசனித்தல் காரியம் செய்தல் சிரேஷ்டம் அதாவது மோக்ஷத்துக்கு முக்கிய சாதனம் என்று சொல்லுகிறார்

அ:—(4)तपोनित्यः தபொநித்ய:-

ச-பா:—புருசிஷ்டருடையபுத்திரனும் தபஸை எப்போதும் செய்வதினால் தபோநித்தியர் என்றுபெயரடைந்துமிருக்கிற ஆசாரியர் தபஸையே அனுஷ்டிக்கவேண்டியது என்றுநினைக்கிறார்

வி-வி:—உபவாசம் தனதானம் இவைகளே தபஸ் என்கிறார்·

(5) स्वाध्यायप्रवचनेएव ஸ்வாத்யாய ப்ரவசநெ ஏவ

ச-பா:—முத்கலருடைய பிள்ளையும் நாகர் என்று பெருள்ளவருமான ஆசாரியர் வேதத்தை அத்தியயனம் செய்தல் செய்துவைத்தல், இவைகளையே அனுஷ்டிக்கவேண்டியது என்று நினைக்கிறார்· ஸ்வாத்தியாயம் பிரவசனம் இவைகளே தபஸாகிறதினால் இவைகளையே அனுஷ்டிக்கவேண்டியது· சத்தியம், தபஸ், வேதாத்தியயனம், வேதத்தை அத்தியயனம் செய்துவைத்தல் இவைகளை முன்னமேயே சொல்லியிருந்தாலும், அவைகளில் விசேஷகவனிப்பு இருக்கவேண்டியதற்காக அவைகள் மறுபடியும் சொல்லப்பட்டன·

வி-வி:—மௌத்கலர் எப்போதும் அத்தியயனம் செய்வதிலும் செய்துவைப்பதிலும் சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தபடியால் அவருக்கு துக்கமேயில்லை. ஆகையால்அவருக்கு நாகரென்று

---

வி:—(4) पौरुशिष्टिः பௌருஶிஷ்டி:= பௌருசிஷ்டி என்றும் பெயருள்ள

तपोनित्यः தபொநித்ய:=எப்போதும் தபஸ்செய்கிற ரிஷி

तपः தப:=தபஸ்தான் பிரதானம், சுவாத்தியாய பிரவசனங்கள் பிரயோஜனமற்றவை என்று நினைக்கிறார்.

·(5) வேதாத்தியயனம் செய்கிறதும், செய்துவைக்கிறதும் பிரதானம் என்பதாய் முத்கலருடைய புத்திரரான நாகரேரென்று பெயருள்ள ஓர் மஹரிஷி நினைக்கிறார் என்று அர்த்தம்.

9-வது அனுவாகம் முற்றிற்று.

---

து:—(4) तपोनित्यः தபொநித்ய:=தபஸிலேயே தத்பரரான

पौरुशिष्टिः பௌருஶிஷ்டி:=பௌருசிஷ்டி என்னும் ரிஷியானவர்

तपःइति தப:இதி=தியானதிரூபமான தபஸ் சிரேஷ்டம் என்று சொல்லுகிறார்·

(5) नाकः நாக:=நாக ரென்கிற முனியானவர்

मौद्गल्यः மௌத்கல்ய:=முத்கலருடைய புத்திரர்

स्वाध्यायप्रवचने एव इति ஸ்வாத்யாயப்ரவசநெ ஏவ இதி= அத்தியயனம் செய்தல், செய்துவைத்தல் இவைகள்தான் சிரேஷ்டம் என்று சொல்லுகிறார்

அ:—பெயர் கிடைத்தது. இவர் இவ்விரண்டும்தான் உத்தமமான கர்மங்கள் என்று சொல்லுகிறார். தபஸால்தேவதைகள் தேவபாவத்தை அடைந்தார்கள் என்றும் தபஸால் ரிஷிகள் சுவர்க்கத்தை அடைந்தார்கள் என்றும் சுருதியிற் (யாஞ்ஞீக உபநிஷத்து 79) சொல்லியிருப்பதால் இதுவே முக்கியமானது என்று சொன்னால், அப்படியே யிருக்கட்டும். அதினால் ஸ்வாத்தியாதிகளைச் சொல்லுகிற மௌத்கல்லியருடைய வசனத்திற்குயாதொரு ஹானியுமில்லை. ஸ்வாத்தியாய பிரவசனங்களின் அநுஷ்டானம் தபோரூபமாயிருப்பதால் அந்த அநுஷ்டானமேசிலாக்கியம். இந்ததபஸ் முக்கிய மென்பதை ஆவிர்த்தியால் சுருதி போதிக்கிறது. முக்கிய தபஸாக இருப்பதால் தான் அத்தியயனம் செய்யக்கூடாத நாள்களில் கூட பிரம்மயஞ்ஞத்தைச்சொல்லும்படி சொல்லியிருக்கிறது. அப்படியேதைத்தரீய ஆரணியகம் II-12, 14ல் சொல்லியிருக்கிறது. உபவாசம் தனதானம் ஆகிய தபஸுக்கு எந்தபலமோ அதைவிட அதிகபலன் உண்டானதால் இவைகளே சிலாக்கியமான தபஸுக்கள். இதுவும் ஷை சுருதியில் சொல்லப்பட்டிருக்கிறது.

प्रजाचस्वाध्यायप्रवचनेचषट्च । ப்ரஜாசஸ்வாத்யாயப்ரவசநேசஷட்ச ।

பிரஜா வரையில் 10 வாக்கியங்களும் மேல் 6 வாக்கியங்களும் இந்த அநுவாகத்தில் அடங்கியிருக்கின்றன.

---

து:—(6) அ-கை: இவைகளில் முதலிரண்டும் சமமாயிருந்தாலும் மூன்றாவது தான் சிலாக்கியம் என்கிறார்

तत्हितपः தத்ஹிதப:=தியான ரூபமான தபஸே சிலாக்கியம்.

சத்தியானம், சத்தியமாய் காரியம் செய்தல்,முதலியவைகள், ஸ்வாத்தியாய பிரவசனங்களை அநுஷ்டிப்பதில் அடங்கிப்போவதால் இவைகளை அநுஷ்டிப்பதால் சகலமும் அநுஷ்டிக்கப்பட்டதாய் விடும் என்பது கருத்து.

सम्यक् ज्ञात्वातुयोविष्णुं व्याख्यायातजपेतवा ।
नतस्यकिंचिदकृतंकर्तव्यंमुच्यतेचसः ॥

ஸம்யக்ஜ்ஞாத்வாதுயோவிஷ்ணும் வ்யாக்யாயாதஜபேதவா ।
நதஸ்யகிஞ்சிதக்ருதம் கர்தவ்யம் முச்யதேசஸ: ॥

...தாவது:—எவன் விஷ்ணுவை நன்ருக அறிந்து பிறருக்கு சொல்லுகிருனே அல்லது ஜபிக்கிருனே அவன் செய்யவேண்டியகாரியம் யாதொன்றுமில்லை. அவன் மோக்ஷமடைகிருன் என்று சொல்லியிருக்கிறது.

இந்த அனுவாகத்துக்குப் பிரமாணவாக்யம்.

ऋतंयथार्थविज्ञानं सत्यंतत्पूर्विकाकृतिः ।
ध्यानसत्येपूज्यपूजातपइत्यभिधीयते ॥ शब्दनिर्णये ॥
मंत्रामंत्रार्थवचनंमन्यस्यत्वात्मनोपिवा ।
सर्वकर्मसुकर्तव्यो सर्वकर्मात्मकोयतः ॥ कर्मतत्त्वे ॥
मानुषंमानुषोधर्मो देवाअपिहिमानुषे ।
मनुष्यवत्प्रवर्तन्ते नैवैश्वर्यप्रकाशिनः ॥ कर्मतत्त्वे ॥
प्रजायारक्षणंचैवपुनः प्रजननंतथा ।
प्रकृष्टजातिकरणंकर्मभिस्तत्तनयेपितुः ॥ कर्मतत्त्वे ॥
सत्येतपसिवाचीर्णं सर्वकर्मकृतंभवेत् ।
स्वाध्यायेचप्रवचनेह्यन्तभावोविशेषतः ॥ कर्मतत्त्वे ॥
यं यंक्रतुमधीते तेनतेनास्येष्टंभवति ॥ श्रुति ॥
जप्येनैवतुसंसिध्येद्ब्राह्मणोनात्रसंशयः ।
कुर्यादन्यत्रवाकुर्यान्मैत्रोब्राह्मणउच्यते ॥ भारते ॥
सम्यग्ज्ञात्वातुयोविष्णुं व्याख्यायोतजपेतच ।
नतस्यकिंचिदकृतंकर्तव्यंमुच्यतेचसः ॥ कर्मतत्त्वे ॥

𑌋𑌤𑌂 𑌯𑌥𑌾𑌰𑍍𑌥𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌤𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌾𑌕𑍃𑌤𑌿𑌃 ।
𑌧𑍍𑌯𑌾𑌨𑌸𑌤𑍍𑌯𑍇 𑌪𑍂𑌜𑍍𑌯𑌪𑍂𑌜𑌾𑌤𑌪 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥
(𑌶𑌬𑍍𑌦𑌨𑌿𑌰𑍍𑌣𑌯𑍇)

𑌮𑌂𑌤𑍍𑌰𑌾𑌮𑌂𑌤𑍍𑌰𑌾𑌰𑍍𑌥𑌵𑌚𑌨𑌂 𑌮𑌨𑍍𑌯𑌸𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌮𑌨𑍋𑌽𑌪𑌿𑌵𑌾 ।
𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌸𑍁𑌕𑌰𑍍𑌤𑌵𑍍𑌯𑍋 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌕𑍋 𑌯𑌤𑌃 ॥
(𑌕𑌰𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇)

𑌮𑌾𑌨𑍁𑌷𑌂 𑌮𑌾𑌨𑍁𑌷𑍋 𑌧𑌰𑍍𑌮𑌾 𑌦𑍇𑌵𑌾 𑌅𑌪𑌿 𑌹𑌿 𑌮𑌾𑌨𑍁𑌷𑍇 ।
𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌵𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌨𑍈𑌵𑍈𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌿𑌨𑌃 ।
(𑌕𑌰𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇)

𑌪𑍍𑌰𑌜𑌾𑌯𑌾 𑌰𑌕𑍍𑌷𑌣𑌂 𑌚𑍈𑌵 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍍𑌰𑌜𑌨𑌨𑌂 𑌤𑌥𑌾 ।
𑌪𑍍𑌰𑌕𑍃𑌷𑍍𑌟𑌜𑌾𑌤𑌿𑌕𑌰𑌣𑌂 𑌕𑌰𑍍𑌮𑌭𑌿𑌸𑍍𑌤𑌤𑍍𑌤𑌨𑌯𑍇 𑌪𑌿𑌤𑍁𑌃 ॥
(𑌕𑌰𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇)

𑌸𑌤𑍍𑌯𑍇 𑌤𑌪𑌸𑌿 𑌵𑌾𑌚𑍀𑌰𑍍𑌣𑌂 𑌸𑌰𑍍𑌵𑌕𑌰𑍍𑌮𑌕𑍃𑌤𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ।
𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑍇 𑌚 𑌪𑍍𑌰𑌵𑌚𑌨𑍇 𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑌭𑌾𑌵𑍋 𑌵𑌿𑌶𑍇𑌷𑌤𑌃 ।
(𑌕𑌰𑍍𑌮𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑍇)

## 10 வது அனுவாகம்.

## ஞாநோதயம்.

வி-வி:—அவதாரிகை:—9 வது அனுவாகத்தில் சுருதிஸ்ம்ருதிகளில் விதிக்கப்பட்ட கர்மங்களையும் பிரம்மோபாசனத்துடன் செய்யவேண்டியது என்பதாய் நிரூபிக்கப்பட்டது. பிரசங்கத்தில் பிரம்மயஞ்ஞமும் உத்தமமென்றும் சொல்லப்பட்டது. எவன் சிரத்தையுள்ளவனாயிருந்தும் மந்தப்பிரஞ்ஞை முதலிய காரணங்களால் வேதாத்தியயனம் செய்யாமல் பிரம்மயஞ்ஞத்துக்கு அர்ஹனாயில்லையோ அவன் பிரம்மயஞ்ஞபலனை அடையும் பொருட்டு அவன் ஜபிக்கவேண்டிய மந்திரம் 10 வது அனுவாகத்தில் உபதேசிக்கப்படுகின்றது.

I (1) अहं वृक्षस्य रेरिवा । அஹம் வ்ருக்ஷஸ்ய ரேரிவா ।

(2) कीर्तिः पृष्ठं गिरेरिव । கீர்த்தி: ப்ருஷ்டம் கிரேரிவ ।

(3) ऊर्ध्वपवित्रो वाजिनीव स्वमृतमस्मि । ஊர்த்வபவித்ரோ வாஜிநீவ ஸ்வம்ருதமஸ்மி ।

(4) द्रविणं सवर्चसम् । த்ரவிணம் ஸவர்சஸம் ।

(5) सुमेधा अमृतोक्षितः । ஸுமேதா அம்ருதோக்ஷித: ।

(6) इति त्रिशङ्कोर्वेदानुवचनम् ॥ 1 ॥ இதி த்ரிசங்கோர்வேதாநுவசநம் ॥ 1 ॥

பதவுரை.

(1) अहं அஹம்=நான்
वृक्षस्य வ்ருக்ஷஸ்ய=சம்சார விருக்ஷத்துக்கு
रेरिवा ரேரிவா=பிரேரணை செய்கிறவனாயிருக்கிறேன்
(2) (मम மம=என்னுடைய)
कीर्तिः கீர்த்தி:=கீர்த்தியானது
गिरेः கிரே:=பர்வதத்தின்
पृष्ठमिव ப்ருஷ்டம் இவ=சிகரம்போல் (இருக்கிறது)

---

டி:—யம் யம் க்ரதுமதீயதே தேந தேநாஸ்யேஷ்டம் பவதி (ச்ருதி)
ஜப்யேநைவ து ஸம்ஸித்யேத் ப்ராஹ்மணோ நாத்ர ஸம்சய: ।
குர்யாதந்யந்ந வா குர்யாந் மைத்ரோ ப்ராஹ்மண உச்யதே ।
(பாரதே)
ஸர்வயஜ்ஞாநாம் ஜபயஜ்ஞோ விசிஷ்யதே ।
ந தஸ்ய க்ரியமாணஸ்ய ... உச்யதே ! (...)

(3) ऊर्ध्वपवित्रः ஊர்த்வபவித்ர: =மேலானவனால் (பிரம்மத்தால்) சுத்தம் செய்யப்பட்டவனாய்
वाजिनि வாஜிநி=சூரியனிடத்தில்
इव இவ=இருக்கிறவன் போல்
स्वमृतं ஸ்வம்ருதம்=அத்தியந்தம் அமிருதமான பிரம்மமாக
अस्मि அஸ்மி=இருக்கிறேன்.
(4) सवर्चसम् ஸவர்சஸம்=பிரகாசமான
द्रविणं த்ரவிணம்=தனமாக (இருக்கிறேன்)
(5) सुमेधाः ஸுமேதா:=உயர்ந்த புத்தியுள்ளவன் (நான்)
अमृतः அம்ருத:=மரணமற்றவன்
अक्षितः அக்ஷித:=க்ஷயமற்றவன், குறைவில்லாதவன்
(6) इति இதி=இவ்விதம்
त्रिशङ्कोः த்ரிசங்கோ:=திரிசங்கு என்கிற பிரம்ம ஞானியின்
वेदानुवचनम् வேதாநுவசநம்=ஞானபோதம்

வியாக்கியானம்.

ச-பா:-அ-கை:—(மந்திரத்தின்-பிரயோஜனம்):—இந்தமந்திரமானது ஸ்வாத்தியாயத்தின் பொருட்டு (அத்தியயனத்தின் பொருட்டு) சொல்லப்பட்டிருக்கிறது- ஸ்வாத்தியாயம் ஞானத்தைக் கொடுக்குமென்று பிரகரணம் கூறுகிறது. வித்தையின்பொருட்டு இந்த பிரகரணம் ஏற்பட்டிருக்கிறது. வேறு பிரயோஜனத்துக்காக என்று தெரியவில்லை. ஸ்வாத்தியயனத்தால் எவனுடையமனதானது சுத்தமாயிருக்கிறதோ அவனுக்கு ஞானமுண்டாகும் என்பது யுக்தமே. (இனி ஆத்மானுபவம் காட்டப்படுகிறது)

(1) अहंवृक्षस्येरिवा அஹம்வ்ருக்ஷஸ்யேரிவா=

ச-பா:—நான் அந்தர்யாமியாக இருந்து நாசமடையக்கூடிய சம்சார விருக்ஷத்தை பிரேரணை செய்கிறேன்.

---

## வி:—I. 10-வது அநுவாகம்.

அ-கை:—வித்தைக்கு அங்கமாக ஜபிக்கத்தகுந்த மந்திரத்தை இது கூறுகிறது.

I. (1) अहंवृक्षस्य அஹம்வ்ருக்ஷஸ்ய = விருக்ஷம்போல் சேதிக்கத்தகுந்த அகங்காராதிகளுக்கு

---

## I - 10 அநுவாகம்.

து:—அ-கை:—ஸ்வாத்தியாயப் பிரவசனங்கள் சிரேஷ்டம் என்று சொன்னவிஷயத்தில் ஒரு வார்த்தையைச் சொல்லுகிறது.
I (1) अहं அஹம்=நான்
वृक्षस्य வ்ருக்ஷஸ்ய=சம்சாரமாகிற விருக்ஷத்துக்கு

அ: — வி-வி:—விருக்ஷம் வெட்டப்படுவதுபோல் சம்சாரம் தத்வ ஞானத்தால் நசிக்கக்கூடியதால் விருக்ஷம் என்று சொல்லப்படுகிறது. தைதரீய ஆரணியகத்தில் இந்தவிருக்ஷத்துக்கு மேலிருக்கும் பிரம்மம் வேறு என்றும் கீழ் இருக்கும் தேவதைகள் மனிதர்கள் மிருகங்கள் இவர்களின் சரீரங்கள் கிளைகளென்றும் சொல்லியிருக்கிறது.

கடோபநிஷத்து VI- 1 ல் இந்த சம்சாரம் அநித்தியமென்றும் நாளை தினமிராதது என்றும் ஆதியில்லை என்றும்சொல்லியிருக்கிறது.

பகவத்கீதை XV-1 ல் இந்த விருக்ஷத்துக்கு வேதங்கள் இலைகளென்றும் இதை அறிந்தவன் வேதவித் என்றும் சொல்லியிருக்கிறது. XV-3 4 ல் விஷயங்களில் வைராக்கியத்தால் இந்த விருக்ஷத்தைச் சேதித்து விடலாமென்றும் சொல்லியிருக்கிறது. நான் அப்படி சேதிக்கிறவனுக ஆகவேண்டும்.

(2) कीर्तिः... கீர்த்தி: ... –

ச பா:—என்னுடைய கீர்த்தியானது பர்வதத்தின் சிகரம் போல உயர்ந்திருக்கிறது.

வி-வி:—இந்த சம்சாரமாகிற விருக்ஷம் சோதிக்கப்பட்டவுடன் என்னுடைய கீர்த்தியானது பர்வதத்தின சிகரம்போலாகிறது. சிகரம் உயர்ந்திருக்கிறது. அப்படியே கீர்த்தியும் உயர்ந்திருக்கிறது. மோக்ஷவிஷயமான என்னுடைய கீர்த்தியானது தேவலோகங்களிலும் பிரசாிக்கிறது. தேவதைகள்கூட நான் புருஷார்த்தத்தை அடையாமலிருக்கும்படிசெய்யமுடியாது. இப்படி பிரஹதாரணியக (I-3-10) சுருதியிற் சொல்லியிருக்கிறது:

---

வி:—रेरिवा ரேரிவா=நாசகனுக இருக்கிறேன். தேகாபிமானத்தை விட்டவன் என்று அர்த்தம்,

(2) மேரு முதலிய பர்வதங்களுடைய பிருஷ்டபாகம்போல் சிலாக்கியமான குணத்தோடு கூடியிருப்பதால் கீர்த்திமானுகவும் இருக்கிறேன் என்று அர்த்தம்.

---

து:—रेरवा ரேரிவா=சேதிக்கிறவன், நாசம் செய்கிறவன்

(2) कीर्तिः கீர்த்தி:=அத்தியயனம் செய்தல், செய்துவைத்தல் இவைகளால் எனக்கு உண்டாயிருக்கிற கீர்த்தியானது

गिरेः கிரே:=பர்வதத்தின்

पृष्ठं इव ப்ருஷ்டம் இவ=அடிபாகம் போலிருக்கிறது, எப்படி பர்வதம் பரவியிருக்கிறதோ அப்படி என்னுடைய கீர்த்தியும் எங்கும் பரவியிருக்கிறது என்பது கருத்து

அ:—(3) ऊर्ध्वपवित्रः ஊர்த்வபவித்ர:... –

(3) ச-பா:—ஊர்த்வம் என்பது மூலகாரணத்தைக் கூறுகிறது அது சுத்தமாக்குகிறது. ஞானத்தால் பிரகாசமாகிறது. அப்படிப்பட்ட பரமாத்மா என்னை அதாவது சர்வாத்மாவாயிருக்கிறஎன்னை சுத்தமாக்குகிறது. அப்படிப்பட்ட நான் ஊர்த்வபவித்ர:

(வி) வி:—மூலகாரணமான பிரம்மம் சுத்தம் செய்கிறதாகச் சொல்லியிருக்கிறது. ஏனெனின் என்னுடைய புத்தி மூலமாக அவர் பிரகாசமாகி சம்சாரத்தினின்றும் விடுவிக்கிறார். ஆகையால் இப்படிசுத்தமானவுடன் நான் பிரம்மம் மூலகாரணமாகிறேன்.

वाजनि வாஜநி: —

ச-பா:—வாஜ மென்றால் அன்னம். அதையுடையவன்சூரியன். எப்படி சூரியனிடத்தில் விசுத்தமான அமிருதமான ஆத்மதத்வம் இருக்கிறதாக நூறு சுருதி ஸ்மிருதிகளில் பிரசித்மோ அப்படிநான் விசுத்த ஆத்மதத்வமாயிருக்கிறேன் (சூரியனிடமிருக்கிற ஆத்மதத்வம் நான் தான் என்பது கருத்து)

வி-வி:—வாஜ மென்றால் கதி. அதையுடையவன் வாஜி. சூரியன் எப்போதும் வேகமாகவே போகிறவன். அப்படிப்பட்ட சூரியனிடத்தில் சுத்தமான அமிருதமிருக்கிறது அப்படியே நானும் உத்கிருஷ்டமான சுத்தத்தை உடையவனாக இருக்கிறேன்.

---

வி.—(3) ऊर्ध्वपवित्रः ஊர்த்வபவித்ர:=எல்லாவற்றையும்விட சிரேஷ்டமான பரிசுத்தியோடுகூடின நான்

वाजिनि-வாஜிநி அன்னத்தோடுகூடின போக்தாவினிடத்தில் அதாவது சர்வ சேஷியான பரமாத்மாவினிடத்தில்

स्वमृतमास्मि ஸ்வம்ருதமஸ்மி=அமிருதம்போல் போக்கியமாக இருக்கிறேன். அதாவது அவருடைய பிரீதிக்கு விஷயமாக இருக்கிறேன் என்று அர்த்தம்.

---

து:=(3) என்னுடைய சாமார்த்தியத்தால் சம்சாரம் நிவிர்த்தியாகவில்லை பின்னேயோவெனின் ஈசுவர பிரசாதத்தால் என்கிற கருத்துடன்சொல்லுகிறார்.

ऊर्ध्वपवित्रः ஊர்த்வபவித்ர:=உத்கிருஷ்டரான ஹரியால் நான் பவித்திரன் (சுத்தன்) ஆக்கப்பட்டவனாய்

अस्मि அஸ்மி=இருக்கிறேன்

वाजिनीवस्वमृतं अस्मि வாஜிநீவஸ்வம்ருதம் அஸ்மி=வாஜினி என்றால் சூரியன். சூரியனிடத்திலிருக்கிறவன் வாஜினீ. வசு அதாவது விஷ்ணு அவரால் நான் பிராரப்த கர்மத்தினின்றும் முக்தனாயிருக்கிறேன். எப்படியெனின்

அ:—(4) द्रविण த்ரவிணம்=

ச-பா:—தேஜோமயதனம் அதாவது ஆத்மதத்வம்நான் அல்லது ஆத்மதத்வத்தைப் பிரகாசிப்பிக்கிறதும் மோக்ஷசுகத்தை அடைய காரணமாயுமிருக்கிற பிரம்ம ஞானத்தை நான் அடைந்திருக்கிறேன்.

வி-வி:—அப்படிப்பட்ட எனக்கு தேஜோமயமான தனம்கிடைக்கட்டும். தனம் மானுஷம் தைவம் என இருவகைத்து. கண்ணால் பார்க்கக்கூடிய பொன் வெள்ளிமுதலியவை மானுஷதனம். காதுகளால் கேட்கக்கூடிய வேதத்தால் தெரியவரக்கூடிய பிரம்ம ஞானம்முதலியவைதைவதனம் सुवर्चसं ஸுவர்சஸம்=என்கிற விசேஷணத்தால் தைவதனம் தான்இவ்விடத்தில் கூறப்பட்டதாக தெரியவருகிறது வர்சஸ் என்றால் பலம். அத்துடன் கூடினது ஸவர்சஸ் தைவதனமான பிரம்ம ஞானமானது சகல சம்சாரத்தையும் போக்கடிக்குமானதால் ஸவர்சஸ் என்று சொல்லப்பட்டது.

(5) सुमेधा। ...ஸுமேதா:.. :-

ச-பா:—சர்வஞ்ஞத்தன்மையுள்ளவனை நான் சுமேதா சம்சாரத்தை உண்டாக்கி நிர்வஹித்து நாசம் செய்யக்கூடிய சாமர்த்தியமுள்ளவனாகயிருப்பதால் நான் சுமேதா சர்வஞ்ஞன். ஆகையால் நான் மரண தர்மற்றவன் குறைவற்றவன் அல்லது அமிருதஜலத்தில் நான் நினைந்திருக்கிறவன்.

---

வி:—(4) பரமாத்மாவின் போகத்துக்கு நல்ல உபகரணமாக இருக்கிறேன் என்று அர்த்தம்.

(5) सुमेधा: ஸுமேதா:=பகவானுக்குச் சேஷனாக இருக்கிறேன், திடமான ஞானமிருப்பதால் நல்ல மேதையோடு கூடினவனாகவும் இருக்கிறேன்.

अमृत: அம்ருத:=மரணமற்றவனாகவும். இருக்கிறேன். அசம்சாரி என்பது கருத்து.

अक्षित: அக்ஷித:=க்ஷயமற்றவனாகவும் ஷட்பாவ விகார சூன்னியனென்று அர்த்தம்.

---

து:—(4) सुवर्चसं ஸுவர்சஸம்=சுந்தரமான காந்தியுடன் கூடி

द्रविण த்ரவிணம்=தங்கம்போல் ஆயிருக்கிறேன் ஏனெனின் என்னுடைய ஸ்வரூபம் நித்தியாநந்தம் என்பது கருத்து

(5) सुमेधा: ஸுமேதா: =நல்ல புத்தியுள்ளவனாக ஆகி

अमृतोक्षित: அம்ருதோக்ஷித:=ஹரியால் வியாபிக்கப்பட்டிருக்கிறேன். (அவரிடமிருக்கிறேன்)

வி-வி.—தைவசம்பத்தாகிய பிரம்மஞானமுள்ள நான், பிரம்மஞானத்தை பிரதிபாதிக்கும் வேதங்களின் அர்த்தத்தை அறிய சக்தியுடையவனாக ஆகவேண்டும். பிரம்மாநந்த ரஸத்தால் நினைக்கப்பட்டவனாக ஆகவேண்டும்.

(6) इति त्रिशंकोः உதித்ரிஶங்கோ:=

ச-பா.—பிரம்மத்தை அறிந்து பிரம்மஸ்வரூபமான திருசங்கு என்னும் ரிஷியானவர், ஆத்மா ஒன்று என்னும் ஞானத்தை அடைந்தபிறகு, தான் கிருதகிருத்தியனானேன் என்பதை, வாமதேவர் போல், பிரசித்தப்படுத்தும் பொருட்டு, இவ்விதமாகச் சொன்னார். ரிஷிபார்த்த மந்திரமானது ஆத்மவித்தையை பிரகாசிப்பிக்கிறது என்பது கருத்து.

(வி:—இந்தமந்திரத்தின் ஜபமானது சுத்தியையும் அபிவிருத்தியையும் கொடுக்கிறது. மோக்ஷ இச்சையுள்ளவன் பிரம்மஞானத்தை அடையும்பொருட்டு ஸ்திர சித்தத்துடன் மந்திரத்தை ஜபிக்கவேண்டியது.)

9 வது அனுவாகத்தில் ரிதஞ்ச முதலியவைகளால் கர்மங்களை நிரூபித்த பிறகு இந்த அனுவாகத்தில் ஜபிக்கவேண்டிய வேதமந்திரம் சொல்லப்படுவதால் இந்தமந்திரம் ஞானத்தைக்கொடுக்கும் என்று தெரியவருகிறது. இதனால் இச்சையன்றியில் சுருதிஸ்மிருதிகளிற் சொல்லிய நித்தியகர்மங்களைச் செய்கிறவனாயும் பரப்பிரம்மத்தை யறிய இச்சிக்கிற வனாயு மிருக்கிறவனுக்கு திவ்விய தர்சனங்கள் உண்டாகும் என்று தெரியவருகிறது.

ஆ:—இந்த மந்திரத்துக்கு திருசங்குரிஷி, பங்கதி சந்தஸ், பரமாத்மா தேவதை. பிரம்மவித்தையில் இந்த ஜபத்துக்கு விநியோகம்.

இந்த அனுவாகத்தில் 6 வாக்கியங்கள் அடங்கியிருக்கின்றன.

வி.வி.—இந்த மந்திரத்தை குரு சொன்னபின் அதை அனுசரித்து சிஷ்யன் சொல்லவேண்டியது என்றும் இந்த மந்திரமே பிரம்ம யஞ்ஞமாகிற ஸ்வாத்தியாய ரூபதபஸ் என்றும் சொல்லுகிறார்.

---

வி:—(6) இந்தப்படி திருசங்குவால் பார்க்கப்பட்ட மந்திரம் என்று அர்த்தம்.

## 10-வது அனுவாகம் முற்றிற்று.

---

து :—(6) इति உதி=இவ்விதமாக

त्रिशंकोः த்ரிஶங்கோ:=வைவஸ்வத மனுவின் வம்சத்தில்ஜனித்த திருசங்கு என்னு பெயருள்ள அரசன்

து:—वेदानुवचनं வேதாநுவசநம்=வேதத்தின் வியாக்கியானத்தின் பலனை சொல்லியிருக்கிறார். இந்த அனுவாகத்துக்குப் பிரமாணம்—

## I-11-வது அனுவாகம்.

### அனுசாஸனம்.

அ·கை:—

ச—பா:—இந்த அனுவாகத்தில் சில முக்கியமான கர்மங்கள் செய்யத்தக்கவை என்பதாய் சுருதி உபதேசம் செய்கிறது. இதைக்கொண்டு பிரம்மஞான முண்டாவதற்குமுன் சுருதிஸ்மிருதிகளிற் சொல்லிய கர்மங்களை அவசியம் செய்யவேண்டியது என்பது சுருதியின் கருத்தாக தெரியவருகிறது. அனுசாஸன சுருதிக்கு புருஷனுக்கு சம்ஸ்காரம் கொடுக்கவேண்டியது என்பதுகருத்து.

तपसाकल्मषंहन्ति विद्ययाऽमृतमश्नुते ।

தபஸா கல்மஷம்ஹந்தி வித்யயாऽம்ருதமச்நுதே

(தபஸால் பாபத்தைக் கொல்லுகிறான், வித்தையால் அமிருதத்தை அடைகிறான்) என்கிற ஸ்மிருதிப்படி எவனுடைய மனது சுத்தமாயிருக்கிறதோ அவனுக்கு ஆத்மஞானம் சீக்கிரம் உண்டாகிறது.

இவ்விடத்திலும் (தைத்ரீயம் III-2லும்)

तपसा ब्रह्मविजिज्ञासस्व ।

தபஸா ப்ரஹ்மவிஜிஜ்ஞாஸஸ்வ

அதாவது தபஸால் பிரம்மத்தை அறிய இச்சி என்று சுருதிசொல்லுகிறது. ஆகையால் ஞானமுண்டாகும் பொருட்டு கர்மங்களை அனுஷ்டிக்கவேண்டியது. ஏனெனின்: அனுசாஸன சப்தத்தை

---

து:—संसारवृक्षच्छेत्ताहं मत्कीर्तिःपर्वतोपमा ।
अत्युत्कृष्टेनहरिणा पावितोस्मियतःस्फुटं ।
वाजिरूपस्यनेताच नेताचवाजिनी सूर्यऊच्यते ।
तत्रस्थोभगवान्विष्णुः संप्रोक्तोवाजिनीवसुः ।
तेनामृतोस्मिद्रविणं नित्यानन्दस्वरूपतः ।
तेनामृतेनसिक्तोहं तेनव्याप्तोयतःसदा ।
इत्याहमंत्रदृक्पूर्वं त्रिशंकुर्मानवोनृपः ॥ यजुर्विवेके ॥

ஸம்ஸாரவ்ருக்ஷச்சேத்தாஹம் மத்கீர்த்தி: பர்வதோபமா ।
அத்யுத்க்ருஷ்டேநஹரிணா பாவிதோஸ்மியத: ஸ்புடம் ।
வாஜிரூபஸ்யநேதாச நேதாசவாஜிநீஸூர்யஉச்யதே ।
தத்ரஸ்தோபகவாந்விஷ்ணு: ஸம்ப்ரோக்தோவாஜிநீவஸு: ।
தேநாம்ருதோஸ்மித்ரவிணம் நித்யாநந்தஸ்வரூபத: ।
தேநாம்ருதேநஸிக்தோஹம் தேநவ்யாப்தோயத: ஸதா ।
இத்யாஹமந்த்ரத்ருக்பூர்வம் த்ரிசங்குர்மாநவோந்ருப: ॥
(யஜுர்விவேகே)

அ:— யே சுருதி உபயோகிக்கிறது. அதை அதிக்கிரமித்தால் தோஷம்சம்பவிக்கும். முதலில் கர்மங்களைப்பற்றி உபந்நியாசம்செய்யப்பட்டிருக்கிறது. பிறகு பிரம்மவித்தைக் கூறப்பட்டிருக்கிறது. பிரம்மவித்தை கிடைத்தபின் கர்மங்கள் நிஷ்பிரயோசனங்கள் என்பது இந்த உபநிஷத்திலேயே

(a) अभयंप्रतिष्ठां विन्दते ।

அபயம்ப்ரதிஷ்டாம்விந்ததே

அதாவது அபயத்தை (அபயமானதை) ஸ்திரமான ஸ்தானமாக அடைகிறான் என்று II-7ல் சொல்லியிருக்கிறது.

(b) नबिभेतिकुतश्चन किमहंसाधुनाकरवं ।

நபிபேதிகுதச்சந கிமஹம்ஸாதுநாகரவம்

அதாவது:—இவன் ஒன்றிலும் பயப்படுகிறதில்லை. ஏன் நான் நல்லதை செய்யவில்லை என்பதாய் அவன் மனதில் தோன்றுகிறதில்லை என்பதாய் II-9ல் சொல்லியிருக்கிறது. கர்மங்கள் முன் உண்டாயிருக்கும் பாபங்களை நாசம் செய்வது மூலமாக ஞானோற்பத்திக்குச் சாதகமாயிருக்கின்றன.

अविद्ययामृत्युंतीर्त्वा विद्ययाऽमृतमश्नुते ।

அவித்யயாம்ருத்யும்தீர்த்வா வித்யயாऽம்ருதமச்னுதே

(அவித்தையால் மரணத்தைத்தாண்டி வித்தையால் அமிருதத்தை அடைகிறான்.) என்கிற ஈசாவாஸ்ய உபநிஷத்தின் மந்திரமும் இதையே கூறுகிறது.

ரிதம் முதலியவைகளை 9 வது அனுவாகத்தில் உபதேசித்ததானது அவைகள் பிரயோசனமற்றவை என்னும் விபரீதபாவனையை போக்கும்பொருட்டு. இப்போது சுருதியானது ஞானோத்பத்திக்கு அவைகள் சாதகமாயிருப்பதால் அவைகள்சொல்லத்தக்கவை என்று சொல்லுகிறது.

ஆ:— இவ்விடத்தில் உபதேசிக்கப்பட்ட கர்மவிதியின் இரண்டு அம்சங்களையும் கவனிக்கவேண்டியது.

(1) ஞானமுண்டாவதற்கு முன் கர்மங்களை அவசியம் செய்யவேண்டியது.

(2) ஞானமுண்டாவதற்குமுன்தான் அவைகளின் அனுஷ்டானம் அவசியம்.

வி:—மோக்ஷ இச்சையுள்ளவன் ஆத்மஞானம் சித்திக்கும் வரையில் கர்மங்களைச்செய்யவேண்டியது. இதை அடைந்தபிறகு ஒருவன் கிருதகிருத்தியனாகிறான். ஆத்மா எப்போதும் முக்தனானதால் கர்மத்தால் ஆகவேண்டியது ஒன்றுமில்லை. மனதை சுத்தப்படுத்துவதால் கர்மானுஷ்டானம் அவசியம் வேண்டியது.

வி-வி:—பத்தாவது அனுவாகத்தில் பிரம்மயஞ்ஞத்துக்குப் பதிலாக ஜபத்துக்காக ஒருமந்திரம் உபதேசிக்கப்பட்டது. அதி

ளுல் மந்தபுத்தியுள்ளவனும் பிரம்மயஞ்ஞத்தை அடையலாம். இவ்விதமாக சுருதிஸ்மிருதிகளிற் விதிக்கப்பட்ட கர்மங்களேயும் முன் சொல்லப்பட்ட உபாசனையையும் சேர்த்து, கிரமமுக்தி அடையும் பொருட்டு அனுஷ்டிக்கலாம். இந்த பதினோருவது அனுவாகத்தில் கேவலகர்மமும் ஞானஇச்சையை உண்டுபண்ணுவது மூலமாக மோக்ஷ ஹேதுவாகலாம் என்கிற அபிப்பிராயத்துடன் சுருதியானது அனுசாஸனத்தை விதிக்கிறது.

I-வேதத்தை தெரிந்துகொள்ள வேண்டியது. அர்த்தத்தையும் தெரிந்துகொள்ள வேண்டியது.

I (1) वेदमनूच्याचार्योऽन्तेवासिनमनुशास्ति ॥ 1 ॥

வெதமநூச்யாசார்யோऽந்தேவாஸிநமநுஶாஸ்தி ॥ 1 ॥

பதவுரை.

आचार्यः ஆசார்ய: = ஆசாரியர்

वेदं வெதம் = வேதத்தை

अनूच्य அநூச்ய = அத்தியயனம் செய்வித்து

अन्तेवासिनं அந்தேவாஸிநம் = சிஷ்யனை

अनुशास्ति அநுஶாஸ்தி = சிக்ஷை செய்கிறுன்.

வியாக்கியானங்கள்.

ச-பா:—ஆசாரியர் வேதத்தை சொல்லிவைத்து அதாவது சிஷ்யன் கிரந்தத்தைக் கிரகித்தபிறகு அதின் அர்த்தத்தை கிரகிக்கும்படிச் செய்கிருர்.

---

I. 11-வது அனுவாகம்.

வி:—(1) குருவானவர் வேதத்தைச் சொல்லிவைத்து சிஷ்யனை சிக்ஷிக்கவேண்டும் என்பது கருத்து.

---

I-11-வது அனுவாகம்.

து—அ-கை:—வேத சிரவணத்துக்குப் பிறகு அனுஷ்டிக்கவேண்டிய நியமங்களேச் சொல்லுகிருர்.

I (1) वेदं வெதம் = வேதத்தை

अनूच्य அநூச்ய = சொல்லிக்கொடுத்து

आचार्यः ஆசார்ய: = குருவானவர்

अंतेवासिनं அந்தேவாஸிநம் = சிஷ்யனை

अनुशास्ति அநுஶாஸ்தி = உபதேசம் செய்கிருர்,

வி-வி:— மனுஸ்மிருதி II-14 ல் ஆசாரிய ஸ்வரூபம் அடியில் வருமாறு கூறப்பட்டிருக்கிறது. எந்தத்விஜன் (இருபிறப்புள்ளவன்) சிஷ்யனை சமீபந்தில் வைத்துக்கொண்டு, அவனுடைய உபநயனத்திற்குப் பிறகு வேதங்களையும், கல்பங்களையும், இரஹஸியங்களையும் சொல்லிக்கொடுக்கிறாரோ அவர் ஆசாரியராம். இப்படிப்பட்ட ஆசாரியருக்குச் சமீபத்தில் எப்போதும் வசிக்கிறவன் அந்தேவாஸீ அதாவது சிஷ்யன். அவனுடைய சாயைபோல் அவனிடத்தில் எப்போதும் விடாமலே இருக்கிறவன் சிஷ்யன். இப்படிப்பட்ட சிஷ்யனை ஆசாரியர் சமீபத்தில் வைத்துக்கொண்டு வேதத்தைச் சொல்லிக்கொடுக்கிறார். கிரந்தத்தை சிஷ்யன் கிரகித்த பிறகு அவன் அனுஷ்டிக்கவேண்டிய தர்மங்களை போதிக்கிறார். இதனால் என்ன தெரியவருகிறதெனின், சிஷ்யன் அத்தியயனம் செய்தபின் தர்மத்தைத் தெரிந்துகொள்ளாமல் குருகுலத்தினின்றும் திரும்பக்கூடாது என்பதாம்.

II-தர்மங்களின் சுருக்கமான விவரம்.

(2) सत्यंवद । ஸத்யம் வத ।

(3) धर्मं चर ॥ 2 ॥ தர்மம் சர ॥ 3 ॥

பதவுரை.

(2) सत्यं ஸத்யம்=நிஜத்தை

वद வத=சொல்லு

(3) धर्मं தர்மம்=தர்மத்தை

चर சர=அநுசரி.

வியாக்கியானம்.

सत्यंवद ஸத்யம்வத=

ச-பா:—அநுசாஸன பிரகாரம் கூறப்படுகிறது. சத்தியத்தைச் சொல்லு. பிரமாணத்தால் எது தெரியவருகிறதோ எது சொல்லக்கூடியதோ அதைச்சொல்லு.

வா:—எது எப்படி பார்க்கப்பட்டிருக்கிறதோ அதை மறைக்காமலும், தீங்கு செய்யவேண்டுமென்கிற கருத்தன்றியும், சொல்லுவதே சத்தியம் என்று ஞானிகள் சொல்லுகிறார்கள்.

---

து:—(2) இந்த உபதேசத்தின் பிரகாரத்தை இனி சொல்லுகிறார் சிஷ்யனே

सत्यं ஸத்யம்= நிஜத்தை

वद வத=சொல்லு

அர்:—வி-வி: — சத்தியசப்தத்தால், அஹிம்சை, சத்தியம், திருடாமை, முதலிய (யாஞ்ஞவல்கிய ஸ்மிருதி I-122 ல் சொல்லிய) தர்மங்களையும் அறியவேண்டியது.

(4) धर्मंचर தர்மஞ்சர ।

ச-பா:—அப்படியே தர்மத்தையும் அனுஷ்டிக்கவேண்டியது. சத்தியம் முதலிய தர்மங்கள் இனி கூறப்படுவதால், தர்மசப்தத்தால் தர்மங்களைப் பொதுவாய் அறியவேண்டியது.

வா:—அக்கினிஹோத்திரம் முதலிய கர்மங்களை அனுஷ்டித்தலே தர்மம் என்று ஞானிகள் சொல்லுகிறார்கள்.

வி-வி:—தர்ம சப்தத்தால் பிரத்தியக்ஷ சுருதிகளில் விதிக்கப்பட்ட அக்கினி ஹோத்திரம் முதலியவைகளைகிரகிக்கவேண்டியது. ஜைமினி என்பவர் I-I-2 ல் எது செய்யவேண்டியதாக ஆஞ்ஞாபிக்கப்பட்டிருக்கிறதோ அது தர்மம் என்று சொல்லியிருக்கிறார். சுருதிஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட சகலகர்மங்களும் செய்யத்தக்கவை என்பதுஇந்த இரண்டு வாக்கியங்களின் சுருக்கமான கருத்து.

## III பரித்தியாகம் செய்யக்கூடாத தர்மங்கள்.

வி-வி:— सकृत्कृतेकृत: शास्त्रार्थ: ஸக்ருத்க்ருதே க்ருத: சாஸ்த்ரார்த்த: அதாவது "ஒருதரம் செய்தால் சாஸ்திரத்தின் ஆஞ்ஞை அனுஷ்டிக்கப்பட்டு போய்விட்டது" என்கிற நியாயப்படி சுருதி ஸ்மிருதிகளில் கூறிய கர்மங்களை ஒருதரம் அனுஷ்டித்து பிறகு அவைகளை விட்டுவிடலாம். இது சரியன்று என்று உபதேசிக்கும் பொருட்டு சுருதி சொல்லுகிறது.

(4) स्वाध्यायान्मा प्रमद: ஸ்வாத்யாயான்மா ப்ரமத: ।

(5) आचार्यायप्रियं धनमाहृत्य प्रजानन्तुं माव्यवच्छेत्सी: ।

ஆசார்யாயப்ரியம் தனமாஹ்ருத்ய ப்ரஜாதந்தும் மாவ்யவச்சேத்ஸீ: ।

---

தா:—(3)धर्मंचर தர்மஞ்சர = தர்மத்தை அனுஷ்டித்து நட

(6) सत्यान्नप्रमदितव्यम् । ஸத்யாந்நப்ரமதிதவ்யம் ।

(7) धर्मान्नप्रमदितव्यम् । தர்மாந்நப்ரமதிதவ்யம் ।

(8) कुशलान्नप्रमदितव्यम् । குஶலாந்ந ப்ரமதிதவ்யம் ।

(9) भूत्यैनप्रमदितव्यम् । பூத்யை ந ப்ரமதிதவ்யம் ।

(10) स्वाध्यायप्रवचनाभ्यां नप्रमदितव्यम् ।

ஸ்வாத்யாய ப்ரவசநாப்யாம் நப்ரமதிதவ்யம் ।

11 (1) देवपितृकार्याभ्यां नप्रमदितव्यम् ॥ 3 ॥

தேவபித்ரு கார்யாப்யாம் நப்ரமதிதவ்யம் ॥ 3 ॥

பதவுரை.

(4) स्वाध्यायात् ஸ்வாத்யாயாத்=அத்தியயனத்தினின்றும்.

माप्रमदः மாப்ரமத:=பிரமாதத்தை (ஒழிவை) அடையவேண்டாம்

(5) आचार्याय ஆசார்யாய=ஆசாரியருக்கு
प्रियं ப்ரியம்=பிரியமான
धनं தநம்=தனத்தை
आहृत्य ஆஹ்ருத்ய=கொடுத்து
प्रजातन्तुं ப்ரஜாதந்தும்=பிரஜா சந்தானத்தை
माव्यवच्छेत्सीः மாவ்யவச்சேத்ஸீ:=சேதிக்கவேண்டாம்
(6) सत्यात् ஸத்யாத்=சத்தியத்தினின்றும்
नप्रमदितव्यम् நப்ரமதிதவ்யம்=தவறுதல் கூடாது
(7) धर्मात् தர்மாத்=தர்மத்தினின்றும்
नप्रमदितव्यम् நப்ரமதிதவ்யம் =தவறுதல் கூடாது.
(8) कुशलात् குஶலாத்=க்ஷேமத்தினின்றும்
नप्रमदितव्यम् நப்ரமதிதவ்யம்=தவறுதல் கூடாது
(9) भूत्यै பூத்யை= ஐசுவரியத்தினின்றும்
नप्रमदितव्यम् நப்ரமதிதவ்யம்=தவறுதல் கூடாது

(10) स्वाध्यायप्रवचनाभ्यां ஸ்வாத்யாயப்ரவசநாப்யாம்=வேதாத்தியயனம் செய்தல் செய்துவைத்தல் இவைகளினின்றும்

அத் :=नप्रमदितव्यम् நப்ரமதிதவ்யம்=தவறுதல் கூடாது

II (1) देवपितृ कार्याभ्यां தேவபித்ருகார்யாப்யாம்= தேவகாரியம் பிதுர்காரியம் இவைகளினின்றும்

नप्रमदितव्यम् நப்ரமதிதவ்யம்=தவறுதல் கூடாது

## வியாக்கியானம்·

(4) स्वाध्यायान्माप्रमदः ஸ்வாத்யாயாந்மாப்ரமத:=

ச-பா:—அத்தியயன விஷயத்தில் அஜாக்கிரதையை அடையக்கூடாது

வி-வி:—அத்தியயனத்தால் கிரகித்ததை மறைந்து விடுவதே பிரமாதம்· இது கூடாது இப்படி மறைதல் பிரம்மஹத்திற்குச்சமானம் என்று சுருதி சொல்லுகிறது.

(5) आचर्याय ஆசார்யாய ...=

ச-பா: — ஆசாரியருக்குப் பிரியமானதனத்தை அவருக்குத் தக்ஷிணையாகக்கொடுத்து, அவருடைய அனுஞ்ஞையைப்பெற்று, சரியான பத்நியை சம்பாதித்து பிரஜைசந்தானத்தில் பங்கம் வரும்படி செய்யக்கூடாது. புத்திரன் உண்டாகாவிட்டாலும் புத்திர காம்மியம் முதலிய கர்மங்களைச்செய்து புத்திரன் உண்டாகிறவிஷயத்தில் முயர்ச்சி எடுத்துக்கொள்ள வேண்டியது என்பதுகருத்து· முந்தின 9 வது அனுவாகத்தில் பிரஜா பிரஜநந பிரஜாதி என்கிற 3 தர்மங்களைச் சொல்லியிருப்பதால் இதுதான் அர்த்தம் என்றுதோன்றுகிறது. இல்லாவிடின் பிரஜநந என்கிற ஒரு தர்மத்தை மட்டும் சுருதி சொல்லியிருக்கும்·

வி-வி:—தனம்:— பசு, சுவர்ணம், வஸ்திரம், முதலிய எவ்விதமான தனத்தை குரு இச்சிக்கிறாரோ அதைக்கொடுக்கவேண்டும்.

பிரஜாதந்து புத்திர பௌத்திராதிகள் ரூபமான ஒரு தந்துநூல். அது அறுந்துபோகாமல் செய்யவேண்டியது.

---

வி:—(4) வேதாத்தியானத்தில் தவறிப்பொகக்கூடாது.

(5) குருவுக்கு தக்ஷிணையைக்கொடுத்து புத்திரவிர்த்தி உண்டாகும்பொருட்டு விவாகம் செய்யவேண்டியது என்று அர்த்தம்.

---

து:—(4) स्वाध्यायात् माप्रमदः ஸ்வாத்யாயாத் மாப்ரமத:=அத்யயனத்தினின்றும ஒழிவடையாதே அத்யயனத்தில் அஜாக்கிறதையாக இருக்கவேண்டாம் மறந்து போகவேண்டாம்

(5) आचार्याय ஆசார்யாய=குருவுக்கு

प्रियं ப்ரியம்=இஷ்டமான

(6) सत्यात् ...ஸத்்யாத்...=

ச—பா:—சத்தியத்தினின்றும் தவறக்கூடாது. பொய் சொல்லும்படி வைத்துக்கொள்வதே சத்தியத்தினின்றும் தவறுதல். பிரமாத சப்தத்தால் விஸ்மரணையால் கூட பொய் சொல்லக்கூடாது என்பது கருத்து. இல்லாவிடின் சுருதியானது பொய்சொல்லக்கூடாது என்று மட்டும் நிஷேதித்திருக்கும்.

வா:—ஞாபகப்பிசகினால்கூட அணுவாகிலும் பொய் சொல்லக்கூடாது என்பதை போதிக்கும் பொருட்டு சத்தியபாஷணையைப் பற்றி மறுபடியும் சுருதி இவ்விடத்தில் கூறுகிறது.

(7) धर्मात्...தர்மாத்...=

ச-பா:—தர்ம சப்தம் அனுஷ்டிக்கவேண்டிய விஷயத்தைக் கூறுகிறது. அதை அனுஷ்டிக்காமை பிரமாதம். அது செய்யத்தக்கதன்று. தர்மம் அனுஷ்டிக்கவே தகுந்தது என்பதுகருத்து.

வி—வி:—முன் சொன்ன சத்திய தர்மங்களில் எப்போதாவது ஆலசியம்வரும்; அவைகளை விட்டுவிடுதலேபிரமாதம். அதை செய்யக்கூடாது.

(8) कुशल...குஶல...=

ச-பா:—தன்னை இரக்ஷிக்கும் பொருட்டு ஏற்பட்ட கர்மங்களினின்றும் ஒழிவு அடையக்கூடாது.

---

வி:—(8) कुशलं குஶலம்=தேவதார்ச்சனை முதலிய கர்மங்களின் அனுஷ்டானம்.

---

து:—धनं தனம்=தனத்தை (தக்ஷிணையாக)

आहृत्य ஆஹ்ருத்ய=கொண்டுவந்து கொடுத்து

प्रजातन्तुं ப்ரஜாதந்தும்= (அவருடைய அனுக்ஞையை பெற்று தனக்கு அனுகுணமான ஸ்திரீயை விவாகம் செய்து அவள்மூலமாக புத்திரோற்பத்தி செய்யவேண்டியது. சந்ததி அறுபட்டுப்போகாமல் செய்யவேண்டும்

அவசியம் என்பதை தெரிவிக்கும் பொருட்டு சத்தியம் முதலியவைகள் மறுபடியும் சொல்லுகிறார்

(6) सत्यात् ஸத்யாத்=சத்தியத்தினின்றும்

नप्रमदितव्यं நப்ரமதிதவ்யம்=நழுவக்கூடாது

(7) धर्मात्न प्रमदितव्यं தர்மாத் நப்ரமதிதவ்யம்= தர்மத்தினின்றும் நழுவக்கூடாது

(8) कुशलात् குஶலாத் = கிரேயஸ்ஸுக்குகாரணமான காரியத்தினின்றும்

அத் :—வி-வி:-குசலமென்பது க்ஷேமம். அதின்பொருட்டு ஏற்பட்ட கர்மம் வைதிகம் லௌகிகம் என இருவகைத்து. தைத்ரீய ஸம்ஹிதை II-3-11ல் சொல்லியபடி ஆயுளையும் ஆரோக்கியத்தையும்தரும் கர்மம் வைதிகம். மருந்து முதலியவை லௌகிகம்.

(9) भूत्यै : ...ஹூத்யை...=

ச பா:—ஐசுவரியத்தின் பொருட்டு மங்களகரமான கர்மங்களினின்றும் ஒழிவடையலாகாது.

வி வி:—ஐசுவரியத்தைத் தேடுவதிலும் வைதிக லௌகிக உபாயங்களுண்டு. தைத்திரீய சம்ஹிதை (II-1-1) வைதிக உபாயத்தைக் கூறுகிறது. தானம் வாங்குதல் லௌகிக உபாயம். க்ஷேமம் ஐசுவரியம் இவைகள் இல்லாவிடின் முக்திக்கு ஹேதுவானகர்மங்களைச் செய்ய முடியாதபடியால் அவைகளில் அஜாக்கிரதையாக இருக்கக்கூடாது என்று சுருதி ஆஞ்ஞாபிக்கிறது.

(10) स्वाध्याय ...ஸ்வாத்யாய...=

ச.பா:—வேதாத்தியயனம் செய்தல் செய்துவைத்தல்: இவைகளை நியமமாக அனுஷ்டிக்கவேண்டியது. இவைகளைச்செய்யாமலும் தர்மங்களைத் தெரிந்துகொள்ளாமலும் குருகுலத்திலிருந்து திரும்பி வரக்கூடாது.

வி-வி:—கிரகித்த அத்தியயனத்தை மறைந்துவிடுதல் பிரமாதம். இது முன்நிஷேதிக்கப்பட்டது. இப்போதுகிரகித்ததை பிறருக்குச்சொல்லிக்கொடுத்தல் பிரம்மயஞ்ஞம். இவைகளை விடக்கூடாது என்பது சுருதி ஞாபகப்படுத்துகிறது.

II· (1) देवपितृकार्य தேவபித்ருகார்ய...=

ச-பா:—தேவபித்ரு காரியங்களினின்றும் ஒழிவடையக்கூடாது. அவர்களுக்காக கர்மங்களைச் செய்யவேண்டியது.

வி:வி:—புராணங்களில் விநாயக விரதம் அநந்தவிரதம் முதலியவைகள் தேவதைகளுக்காகச்சொல்லியிருக்கின்றன. சிராத்தாதிகள் பித்ரு காரியம்.

---

வி:—(9) ஐசுவரியமானது எல்லாவற்றிற்கும் சாதகமாயிருப்பதால் அதின்பொருட்டு கர்மத்தைச் செய்யவேண்டுமென்று கருத்து.

---

து—(9) भूत्यै ஹூத்யை=ஐசுவரியத்தின் பொருட்டு நியமான உபாயத்தால் திரவியத்தைச்சம்பாதிக்கவேண்டும் மற்றவைஸ்பஷ்டம்

II (1) देवपितृकार्याभ्यां தேவபித்ருகார்யாப்யாம்= தேவபூஜை பித்ருசிராத்தம் இவைகளைச்செய்வதில் தாமஸமிருக்கக்கூடாது.

## IV பூஜார்ஹர்கள்.

வி-வி:—மாதா முதலானவர்கள் மனுஷியர்கள் என்கிற புத்தியைவிட்டு தேவதைகளாக பாவித்து அவர்களை பூஜிக்கவேண்டும் என்று இனி சுருதி கூறுகிறது.

II (2) मातृदेवो भव । மாத்ருதேவோ பவ ।

(3) पितृदेवोभव । பித்ருதேவோ பவ ।

(4) आचार्यदेवो भव । ஆசார்யதேவோ பவ ।

(5) अतिथिदेवो भव ॥ 4 ॥ அதிதிதேவோ பவ ॥ 4 ॥

பதவுரை.

(2) मातृदेवः மாத்ருதேவ:=தாயாரை தேவதையாக உடையவனாக

भव பவ=ஆக

(3) पितृदेवोभव பித்ருதேவோபவ=பிதாவை தேவதையாக உடையவனாக ஆக

(4) आचार्यदेवःभव ஆசார்யதேவ: பவ=குருவை தேவையாக உடையவனாக ஆக

(5) अतिथिदेवःभव அதிதிதேவ:பவ=அதிதியை தேவதையாக உடையவனாக ஆக

ச-பா:—தேவதைகள்போல் இவர்களை பூஜிக்கவேண்டியகருத்து

வி-வி:—ருத்திரன், விஷ்ணு, விநாயகர், முதலானவர்களை தேவதாஸ்வரூபமாக பாவித்து பூஜிக்கவேண்டியது.

---

வி:—II. (2) தேவதையைப்போல் மாதாவை பூஜைசெய் என்று அர்த்தம். அடியில் வரும் வாக்கியங்களுக்கும் இப்படியே அர்த்தம்.

---

து.—(2) मातृदेव : மாத்ருதேவ:=(माता + देववत् + पूज्या + यस्य + स:) (மாதா + தேவவத் + பூஜ்யா + யஸ்ய) ஸ: அதாவது தாயாரை பூஜிக்கவேண்டியது என்பது கருத்து

3-4-5 உள்ள பதங்களையும் இப்படியே அறியவேண்டியது

## V. வேதவிதி பெரியோரநுஷ்டானம்.

வி-வி:—க்ஷேம ஐசுவரியங்களினின்றும் ஒழிவு அடையக்கூடாது என்று முன் சொன்ன விஷயத்தில் ஸ்வல்ப விசேஷத்தைக் காட்டுகிறார்.

II (6) यान्यनवद्यानि कर्माणि । யாந்யநவத்யாநி கர்மாணி ।

(7) तानि सेवितव्यानि । தாநி ஸேவிதவ்யாநி ।

(8) नो इतराणि ॥ 5 ॥ நோ இதராணி ॥ 5 ॥

(9) यान्यस्माकं सुचरितानि । யாந்யஸ்மாகம் ஸுசரிதாநி ।

(10) तानि त्वयोपास्यानि । தாநி த்வயோபாஸ்யாநி ।

I (1) नो इतराणि ॥ 6 ॥ நோ இதராணி ॥ 6 ।

பதவுரை.

(6) अनवद्यानि அநவத்யாநி=நிந்திக்கப்படாதவை.
यानि யாநி=எந்த
कर्माणि கர்மாணி=கர்மங்களோ
(7) तानि தாநி= அவைகள்
सेवितव्यानि ஸேவிதவ்யாநி=அநுஷ்டிக்கத்தக்கவை
(8) इतराणि இதராணி=மற்றவைகள்
न ந=அநுஷ்டிக்கத்தக்கவைகளல்ல
(9) अस्माकं அஸ்மாகம்=எங்களுக்கு
यानि யாநி=எவைகள்
सुचरितानि ஸுசரிதாநி=நல்ல கர்மங்களோ
(10) तानि தாநி=அவைகள்
त्वया த்வயா=உன்னால்
उपास्यानि உபாஸ்யாநி=செய்யத்தக்கவை
(1) इतराणि न இதராணி ந=மற்றவைகள் செய்யத்தக்கதல்ல

து:—(6) अनवद्यानि அநவத்யாநி=நிந்திக்கத்தகாதவைகளாக ஸ்துதிக்கத்தகுந்த, மற்றதுஸ்பஷ்டம்

## வியாக்கியானங்கள்.

அத்:—अनवद्यकर्म அநவத்யகர்ம=

ச-பா:—எந்த கர்மங்கள் நிந்திக்கத்தக்கவைகளாக இல்லையோ, எவைகள் சிஷ்டாசாரம் அதாவது பெரியோர்களால் அனுஷ்டிக்கப்பட்டிருக்கின்றனவோ அவைகளை நீ செய்யவேண்டியது. நிந்திக்கத்தக்க மற்ற கர்மங்களை பெரியோர்களால் அனுஷ்டிக்கப் பட்டிருந்தாலும் கூட, நீ செய்யக்கூடாது.

வா:—பெரியோர்கள் சில காரியங்களைச் செய்திருக்கிறார்கள் என்பதைமட்டும் கவனிக்கக்கூடாது. சுருதிஸ்மிருதிகளுக்குவிரோதமன்றியிலிருந்தால் தான் அவைகளை அனுஷ்டிக்கலாம். இல்லாவிட்டால் அனுஷ்டிக்கக்கூடாது.

வி-வி:—க்ஷேம ஐசுவரியங்களைக் கொடுக்கும் கர்மங்கள், நிந்திக்கத்தகாதவை, நிந்திக்கத்தக்கவை என இரண்டுவிதம்; முன் சொன்ன ஆயுள், ஆரோக்கியம் இவைகளுக்காகச் செய்யப்படும் கர்மங்கள், தானப்பிரதிக்கிரகம், யாகம் செய்து வைத்தல், இவைகள் நிந்திக்கத்தக்கவைகளல்ல. ஆகையால் இவைகளைச் செய்ய வேண்டியது. ஆபிசாரம் முதலிய கர்மங்கள் சத்துருவை நாசம் செய்வது மூலமாக க்ஷேமத்துக்குக் காரணமாயிருந்தாலும், நரகத்தைக்கொடுப்பதினால் அவைகளை அனுஷ்டிக்கக்கூடாது.

(9) सुचरितानि ஸுசரிதாநி:

ச-பா:—அதிர்ஷ்டபலன்களைக் கொடுக்கக்கூடிய கர்மங்களில், எவைகள் வேதவிருத்தமன்றியிலும், நல்ல கர்மங்களையும் எங்களால் அனுஷ்டிக்கப்படுகின்றனவோ, அவைகளையே நீ நியமமாக அனுஷ்டிக்கவேண்டியது. மற்றகர்மங்களை ஆசாரியர் அனுஷ்டித்தாலும் நீ அனுஷ்டிக்கக்கூடாது.

வி-வி:—சுருதிஸ்மிருதிகள் போல் சிஷ்டாசாரமும் பிரமாணமானதால் ஆசாரியர் செய்கிற கர்மத்தை எல்லாம் நாமும் செய்யவேண்டியது என்று தோன்றக்கூடும். அது கூடாதென்கிறார். பகவான் பகவத்கீதை XIV வது அத்தியாயத்தில் (1-4) அபயம் முத

---

வி:—(9) எங்களிடத்திலும் சுருதிஸ்மிருதி விரோதமன்றியில் சிஷ்டாசாரங்களுக்குள் எந்த(சதாசாரங்கள்) இருக்கின்றனவோ

(10) அவைகளே உன்னால் உபாசிக்கத்தக்கவை.

---

து:—(8) इतराणि இதராணி=நிந்திக்கத்தக்கவையல்ல

नो நோ=செய்யத்தக்கவையல்ல.

(9)-10 III 1. ஸ்பஷ்டம்

அத்:-விய தைவசம்பத்தையும்(சுவபாவத்தையும்)தம்பம் முதலிய ஆசுரசம்பத்தையும் விவரித்திருக்கிறார். நாங்கள் அனுஷ்டிக்கும் அபயாதிகளைமட்டும் நீ கிரகிக்கவேண்டியது. தம்பாதிகளை கிரகிக்கக்கூடாது. சிஷ்டாசார விஷயத்தில் எங்கும் இந்த நியாயத்தைத்தான் எடுத்துக்கொள்ள வேண்டியது. ஜாமதக்கினர்பிதாவின்உத்திரவுப்படி தன் தாயாரைக்கொன்றார். இவ்விடத்தில்பிதாவின் ஆஞ்ஞையைப் பரிபாலித்தார் என்கிற விஷயத்தையும் நாம் கிரகிக்கவேண்டியது. மாதாவைக்கொல்லலாகிய கெட்ட காரியத்தை நாம் அனுசரிக்கக்கூடாது- இப்படியே மற்ற கர்மங்களிலும் பார்த்துக்கொள்ள.

## VI பெரியோர்களின் சேவை.

III (2) येके चास्मच्छ्रेयांसो ब्राह्मणाः। யெகெசாஸ்மச்ச்ரெயாம்ஸொ ப்ராஹ்மணா:।

(3) तेषां त्वयाऽऽसनेन प्रश्वसितव्यम् ॥ 7 ॥ தெஷாம் த்வயாऽऽஸநெந ப்ரச்வஸிதவ்யம் ॥ 7 ॥

பதவுரை.

(2) अस्मात् அஸ்மாத்=எங்களைவிட
श्रेयांसः ச்ரெயாம்ஸ:=சிரேஷ்டர்களான
ब्राह्मणाः ப்ராஹ்மணா:=பிராமணர்கள்
येके யெகெ=எவர்களோ
(3) तेषां தெஷாம்=அவர்களுக்கு
त्वया த்வயா=உன்னால்
आसनेन ஆஸநெந=ஆசனத்தால்
प्रश्वसितव्यं ப்ரச்வஸிதவ்யம்=சிரமம் போக்கடிக்கத்தக்கது.

### வியாக்கியானங்கள்.

ச-பா:—க்ஷத்திரியர்கள் முதலானவர்கள் அன்றியில் பிராமணர்களுக்குள் எவர்கள் சாஸ்திராப்பியாசம் செய்து நம்மைவிட சிரேஷ்டர்களாக இருக்கிறார்களோ, அவர்களுக்கு ஆசனாதிகளைக் கொடுத்து அவர்களுடைய சிரமத்தைப்பரிஹரிக்கவேண்டியது. இவர்கள் உட்கார்ந்த பிறகு நீ மூச்சுக்கூட விடப்படாது. அவர்கள்சொல்லும் சாரத்தைமட்டும் கிரகிக்கவேண்டியது.

அத்:—வா;—நீ ஒன்றும் மத்தியில் பேசக்கூடாது. அவர்களை எதிர்த்துச்சொல்ல சாமர்த்திய மிருந்தாலும், சொல்லும் ஸாரத்தை மட்டும் கிரகிக்கவேண்டியது.

வி-வி:—வயதாலும், வித்தையாலும், குணங்களாலும், உன்னுடைய ஆசாரியர்களான எங்களைவிட பெரியோர்களைக் கண்டால் அவர்களுக்கு உட்கார ஆசனம், பாதப்பிரக்ஷாளனத்துக்கு ஜலம் இவைகளைக்கொடுத்து சிரமபரிஹாரம் செய்து வைக்கவேண்டியது அல்லது, அவர்கள் உட்கார்ந்திருக்கும் சமயத்தில் நீ சுவாசங்கூட விடக்கூடாது. பண்டிதனைக பாவித்து நீ வாதம் செய்யக்கூடாது. என்று சொல்லவேண்டுமா? ஆகையால் அவர்கள் சொல்லுவதை மட்டும் நீ கேட்கவேண்டியது உன்னுடைய கடமை.

---

வி:—III. (1) லோபம் முதலியவைகளால் ஏற்பட்ட அதாவது காமக்குரோதம் முதலிய தோஷங்களால் செய்யப்பட்ட கர்மங்கள்கிரகிக்கத்தகுந்தவைகளல்ல.

(2) தன்னைவிட சிரேஷ்டர்களான பிராமணர்களுடைய

(3) ஆசனம் படுக்கை இவைகளில் சமானமாக சிரமபரிஹாரம் செய்துகொள்ளக்கூடாது.

---

து:—III (2) अस्मच्छ्रेयांसः அஸ்மச்ச்ரேயாம்ஸ:=என்னை விட எவர்கள் ஞானத்தால் சிரேஷ்டர்களாக

येके ब्राह्मणाः யெகெ ப்ராஹ்மணா:எந்த பிராமணர்களிருக்கிறார்களோ

(3) तेषां தெஷாம் = அவர்களுக்கு

त्वया த்வயா=உன்னல்

आसनेन ஆஸநெந=ஆசனத்தி உபசாரத்தால்

प्रश्वसितव्यं ப்ரச்வஸிதவ்யம்=சிரம பரிகாரம்செய்யத்தக்கது

பெரியோர்கள் வீட்டுக்கு வந்தால் அவர்களுடைய சிரமம் எப்படி பரிகாரம் ஆகுமோ அப்படி செய்யவேண்டியது என்பது கருத்து.

---

## VII. தானவிசேஷணம்.

(4) श्रद्धयादेयम् । ச்ரத்தயாதெயம் ।

(5) अश्रद्धया ऽदेयम् । அச்ரத்தயாऽதெயம் ।

(6) श्रिया देयम् । ச்ரியாதெயம் ।

(7) ह्रियादेयम् । ஹ்ரியாதெயம் ।

(8) भियादेयम् । பியாதெயம் ।

(9) संविदादेयम् ॥ 7 ॥ ஸம்விதாதெயம் ॥ 7 ॥

பதவுரை.

(4) श्रद्धया ஶ்ரத்தயா=சிரத்தையுடன்
देयम् தெயம்=கொடுக்கத்தக்கது
(5) अश्रद्धया அஶ்ரத்தயா=அச்சிரத்தையுடன்
अदेयम् அதெயம்=கொடுக்கத்தகாது
(6) श्रिया ஶ்ரியா=சம்பத்துடன்
देयं தெயம்=கொடுக்கத்தக்கது
(7) ह्रिया ஹ்ரியா=லஜ்ஜையுடன்
देयम தெயம்=கொடுக்கத்தக்கது
(8) भिया பியா-சாஸ்திரபீதியுடன்
देयम् தெயம்=கொடுக்கத்தக்கது
(9) संविदा ஸம்விதா=மித்திரன் என்கிற பாவத்துடன்
देयम् தெயம்=கொடுக்கத்தக்கது-

## வியாக்கியானங்கள்.

श्रद्धया ஶ்ரத்தயா=

ச-பா:—நீ எதை கொடுக்கவேண்டியதாக இருக்கிறதோ அதை சிரத்தையுடன் கொடுக்கவேண்டியது. சிரத்தையன்றியில் ஒன்றும் கொடுக்கத்தக்கதில்லை.

வி-வி:—இனி சுருதி தான விஷயத்தில் ஸ்வல்ப விசேஷத்தைக் கூறுகிறது.

श्रद्धया ஶ்ரத்தயா=எப்போது தனம் பிராமணர்களுக்குக் கொடுக்கப்படுகின்றதோ அப்போது சிரத்தையுடன் உன்னால் கொடுக்கத்தக்கது. சிரத்தையன்றியில் எதுவும் கொடுக்கத்தகாது. சிரத்தைய

து:—(5) अश्रद्धयादेयं அஶ்ரத்தயாதெயம்=ஒருக்கால் சிரத்தைஇல்லாவிட்டாலும் திரவியத்தை மட்டுமாவது கொடுக்கவேண்டும். ஏனெனின் தானம் முக்கியம் சிரத்தை இரண்டாம் பக்ஷம் சிரத்தையில்லாததினால் முக்கியமான தானத்தை நிறுத்தக்கூடாது.

अदेयं அதெயம்=என்பதும் ஒரு பாடம்

ன்றியில் செய்யப்பட்டதானம் இரண்டு லோகங்களிலும் பிரயோஜன ப்படமாட்டாது. அப்படியே பகவான் (கீதை XVII - 28) சொல்லியிருக்கிறார். 5-வது வாக்கியத்தில் अदेयम् அதேயம் = என்பதாய் பதத்தைப்பிரித்து அர்த்தம் செய்யப்பட்டது. देयम् தேயம் = என்றும் பதம் பிரிக்கலாம். அப்போது அர்த்தமென்னவெனின்:— எப்படி சிரத்தையுடன் கூடினவன் கொடுக்கிறானோ அப்படி சிரத்தையில்லாதவன் கொடுக்கவேண்டியது. மேற் சொல்லிய கீதாவாக்கியம் சாத்விக பலம் கிடைக்கமாட்டாது என்று சொல்லுகிறதே தவிர ராஜஸ தாமஸ பலனும் கிடைக்கமாட்டாது என்றுசொல்லவில்லை. இவைகள் இருக்கவேயிருக்கின்றன. ஆகையால் தான் பகவான் தானங்களை 3 விதமாகச் சொல்லியிருக்கிறார். (கீதை XVII 20, 22 பார்க்க.)

(6) श्रिया ஶ்ரியா=சம்பத்து, லஜ்ஜை, சாஸ்திரபிரீதி தேசகால பாத்திரங்களின் ஞானம், இவைகளுடன் தானம் செய்யத்தக்கது. சம்பத்து முதலியவைகள் மேற்சொல்லிய மூன்றுவித தானங்களைக் கூறுகின்றன. எனக்கு தனம்விசேஷமாயிருக்கிறது. எப்படி தாசி முதலானவர்கள் அதைக்கொண்டுபோகிறார்களோ அப்படி பிராமணர்களும் கொண்டுபோகட்டும். இப்படி தனக்கொழுப்பினால் செய்யப்படும் தானம் தாமஸம். எனக்குச்சமானமானவர்கள் தானம்செய்கிறார்கள் என்பதாய் தான் கொடுக்காததைக்கொண்டு லஜ்ஜை

---

வி:—(6) श्रिया ஶ்ரியா=முகசோபையால் வருத்தமன்றியில்

(8) செவ்வையாகச் செய்யாவிடின் பாபம்வரும் என்கிற பயத்துடன் கொடுக்கவேண்டும்.

(9) சங்கற்ப பூர்வமாக கொடுக்கவேண்டும்.

(10) कर्म கர்ம=அக்கினிஹோத்திர முதலியகர்மங்கள்

वृत्त வ்ருத்த=சிஷ்டாசார மாத்திரத்தைப் பிரமாணமாக உடைய ஹோளி முதலிய ஆசாரம்.

இவைகள் விஷயத்தில் சந்தேகமிருக்குமேயானால்

---

து:—(6) श्रिया ஶ்ரியா:=பிரசன்னமான மனதுடன் 7-8-9 ஸ்பஷ்டம்

(10) अथ அத=இது வேறு சங்கதியைக்கூறுகிறது

ते தே=என்னைவிட்டு தேசாந்திரம் போன உனக்கு

यदि कर्म विचिकित्सा யதி கர்ம விசிகித்ஸா=பகவானுடைய யஞ்ஞம் முதலிய ஆராதனையில் சம்சயம் உண்டானால்

वृत्तविचिकित्सा வ்ருத்தவிசிகித்ஸா=கர்மாங்கத்தை ஆசரிக்கிற விஷயத்தில் சந்தேகம் உண்டானால்

அத்,—யும் புருஷன் தனக்கொழுப்பினால் முன்போலவே செய்யப்படும் தானம் ராஜஸம். ரித்விக்கு முதலானவர்களுக்கு சாஸ்திரத்தில் எந்த தானம் விதிக்கப்பட்டிருக்கிறதோ அதை கொடுக்காத பக்ஷத்தில் தனக்கு பாபம் வரும் என்கிற பயத்துடன் செய்யப்படும் தானம் சாத்விகம். அத்வர்யுமுதலான 4 முக்கியமானவர்களுக்குப் பூரா தக்ஷிணை கொடுக்கவேண்டியது. பிரதிபிரஸ்தாந்திரிகளுக்கு பாதி தக்ஷிணை கொடுக்கவேண்டியது. நேஷ்டாதி 4 பேர்களுக்கு மூன்றில் ஒருபாகம் கொடுக்கத்தக்கது. உன்னேத்திராதி 4 பேர்களுக்கு 4ல் ஒருபாகம் கொடுக்கத்தக்கது. இந்த விவேக ஞானத்துடன் கொடுப்பது சாத்விகமாகும். (அல்லது) பிரகிருத சுருதி சாத்விக தானத்தையே கூறுவதாகச் சொல்லலாம். அவனவனுடைய சக்திக்குத்தகுந்தபடி தானம் செய்யத்தக்கது. தனிகன் அல்பதானத்தால் தனக்கு வெட்கம் சம்பவிக்கும் என்கிற லஜ்ஜையுடன் விசேஷமாய் தானம் செய்யவேண்டியது.

## VIII. சந்தேக நிவிர்த்தி.

இவ்விதமாய் அறிந்திராத தர்மங்களைச் சுருதிசொல்லி, சந்தேகம் வந்தவிடத்தில் எப்படி நிர்ணயம் செய்கிற தென்பதை இனி சுருதிகூறுகிறது.

(10) अथयदिते कर्मविचिकित्सावावृत्तविचिकित्सावास्यात् । அதயதிதெ கர்மவிசிகித்ஸாவா வ்ருத்தவிசிகித்ஸாவாஸ்யாத்।

IV (1) येतत्र ब्राह्मणाः संमर्शिनः । யெதத்ர ப்ராஹ்மணாஃ ஸம்மர்சிநஃ ।

(2) युक्ता आयुक्ताः । யுக்தா ஆயுக்தாஃ ।

(3) अलूक्षा धर्मकामाः स्युः । அலூக்ஷா தர்மகாமாஃ ஸ்யுஃ ।

(4) यथातेतत्र वर्तेरन् । யதாதெ தத்ர வர்தெரந் ।

(5) तथातत्र वर्तेथाः ॥ 9 ॥ ததாதத்ர வர்தேதாஃ ॥ 9॥

பதவுரை.

(10) अथ அத=இப்போது

ते தே=உனக்கு

कर्मविचिकित्सा கர்மவிசிகித்ஸா=கர்மத்தில் சந்தேகம்

वृत्तविचिकित्सावा வ்ருத்தவிசிகித்ஸாவா=அல்லது ஆசாரத்தில் சந்தேகம்

यदिस्यात् யதிஸ்யாத்=உண்டானால்

IV (1) तत्र தத்ர=அக்காலத்தில், அத்தேசத்தில்

संमर्शिनः ஸம்மர்சிநஃ=விசாரத்தில் சமர்த்தர்களாகவும்

(2) युक्ता: யுக்தாஃ=அனுஷ்டான பரராயும்

आयुक्ता: ஆயுக்தாஃ=சாஸ்திரார்த்தங்களை தெரிந்துகொண்டவர்களாயும்

(3) अलूक्षा: அலூக்ஷாஃ=கடோர சித்தமில்லாதவர்களாயும்

धर्मकामा: தர்மகாமாஃ=தர்ம இச்சையுள்ளவர்களாயும்

(1) येब्राह्मणा: யேப்ராஹ்மணாஃ=எந்த பிராமணர்கள்

(3) स्यु: ஸ்யுஃ=இருக்கிறார்களோ

(4) ते தே=அவர்கள்

तत्र தத்ர=அக்காலத்தில், அத்தேசத்தில்

यथा யதா=எப்படி

वर्तेरन् வர்தேரந்=நடப்பார்களோ

(5) तथा ததா=அப்படி

तत्र தத்ர=அக்காலத்தில், அத்தேசத்தில்

वर्तेथा: வர்தேதாஃ=நீ நடப்பாயாக.

## வியாக்கியானங்கள்.

ச-பா:—இப்படி நடந்துகொள்ளும் உனக்கு எப்போதாவது சுருதிஸ்மிருதிகளிற் சொல்லிய கர்மத்திலாவது, ஆசார விஷயத்திலா

---

வி:—IV (1) संमर्शिनः ஸம்மர்சிநஃ=விசாரிப்பதில் சமர்த்தர்கள்

(2) युक्ता: யுக்தாஃ=வேத சாஸ்திரங்களை அறிந்தவர்கள்

आयुक्ता: ஆயுக்தாஃ=லௌகிகமான கர்மங்களிலும் சமர்த்தர்கள்

---

து:—IV (1) (तदा ததா=அப்போது. இந்த பதத்தைச் சேர்த்துக் கொள்ளவும்)

संमर्शिनः ஸம்மர்சிநஃ=விசாரித்து நடக்கிறவர்கள்

(2) युक्ता: யுக்தாஃ=யோகம் செய்கிறவர்கள்

வது சந்தேகம் வந்தால், அப்போது அக்காலத்தில் அந்த தேசத்தில் எந்த பிராமணர்கள் விசார சீலர்களோ அதாவது சூக்ஷ்மங்களை அறிய சக்தர்களோ, விஷயங்களைத் தெரிந்தவர்களோ, பிறர்களால் ஏவப்படவில்லையோ, கடோர சித்தமுள்ளவர்களன்றோ, தர்ம இச்சையுள்ளவர்களோ, இந்திரியங்களுக்கு விஷயமாகாததை இச்சிக்கிறவர்களோ, பிராபஞ்சிக இச்சையால் அடிபடாதவர்களோ, இவர்கள் எப்படி அந்த கர்மத்திலாவது ஆசாரத்திலாவது நடந்து கொள்ளுவார்களோ அப்படி உன்னாலும் நடக்கத்தக்கது.

வி-வி:—கர்மம் இருவகைத்து. ஒன்று, அக்கினி ஹோத்திரம் முதலிய சுரௌதம். மற்றொன்று, சந்தியாவந்தனம் முதலிய ஸ்மார்த்தம். சுருதியில் ஒரு இடத்தில் சூரியன் உதித்ததின்பேரில் ஹோமம் செய்யச்சொல்லியிருக்கிறது. இன்னும் ஒரு இடத்தில் சூரியன் உதிக்குமுன் ஹோமம் செய்யச்சொல்லியிருக்கிறது. ஆகவேசுருதியிற் சொல்லிய கர்மவிஷயமாய் சந்தேகம் ஜனிக்கிறது. ஸ்மார்த்த கர்மத்திலும், சந்தியாதேவதை புருஷமூர்த்தி என்றும் ஸ்திரீமூர்த்தி என்றும் சொல்லியிருப்பதால் சந்தேகம் ஜனிக்கிறது. ஆசாரமென்பது குலபரம்பரையாக வந்த லௌகிக ஆசாரம். அம்மான் பெண்ணை விவாகம் செய்தல், மாம்சபக்ஷணம் முதலியவிஷயங்களில் சந்தேகம் வரலாம். இப்படிப்பட்ட சந்தேக விஷயங்களில், எந்தகாலத்தில், எந்ததேசத்தில், எந்த குலத்தில் நீ யிருக்கிறாயோ, அந்த காலத்தில் அந்ததேசத்தில் அந்த குலத்தில் இருக்கிற விசாரசீலதை முதலியவைகளுடன் கூடின பிராமணர்கள் எப்படி நடப்பார்களோ, அப்படி நீயும் நடந்துகொள்ளவேண்டியது. விசார சீலதையாவது,

---

வி:—(3) अलूक्षा: அலூக்ஷா:=குரோத மோஹாதிக மற்றவர்கள்; மற்றவை ஸ்பஷ்டம்

---

து—: आयुक्ता: ஆயுக்தா:=தங்களுடைய கர்மங்களை அனுஷ்டிப்பதில் தற்பரர்கள்

(3) अलूक्षा: அலூக்ஷா:=பிரச்னம் செய்தால் கோபமடைந்தவர்கள்

धर्मकामा: தர்மகாமா:=அதிர்ஷ்டத்தை இச்சிக்கிறவர்கள்

(4) ते தே=இப்படிப்பட்ட மஹாபுருஷர்கள்

तत्र தத்ர=நீ சந்தேகித்தகர்மத்திலாவது, ஆசாரத்திலாவது

यथावर्त्तेरन् யதாவர்த்தேரந்=எப்படி நடப்பார்களோ

(5) तथा ... ததா ...=அப்படியே நீயும் நடக்கவேண்டும்

அபிமானம், துவேஷம், மனோவிகாரம் முதலியதோஷங்களன்றியில் சாஸ்திரார்த்தத்தை விசாரிக்கும் சாமர்த்தியம். நித்திய நைமித்திக கர்மங்களில் ஸ்வயம் பிரவிர்த்தியுள்ளவர்கள் யுக்தர்களாம். செவ்வையாக அனுஷ்டிக்கவேண்டும் என்கிற கருத்துள்ளவர்கள் ஆயுக்தர்கள். கோபம், ஆக்கிரகம், இவைகளன்றியிலிருப்பவர்கள் அரூக்ஷர்கள். தர்மத்தையே இச்சிக்கிறவர்கள். லாபத்தையாவது, ஸ்தோத்திரத்தையாவது இச்சிக்காதவர்கள் தர்மகாமர்கள், இப்படிப்பட்ட பிராமணர்கள் நடக்கிறபடி நடக்கவேண்டியது.

## IX. தோஷமுள்ளவர்களுடன் வியவஹாரம்.

வி:-வி:—இவ்விதமாக சந்தேகமான விஷயங்களில் எப்படி நடந்துகொள்ளுகிறதென்பதை சுருதி உபதேசித்து, பாபி என்பதாய் நிந்திக்கப்பட்ட புருஷர்களுடன் எப்படி வியவஹரிக்கிறதென்பதை சுருதி சொல்லுகிறது.

(6) अथाभ्याख्यातेषु । அதாப்யாக்யாதேஷு ।

(7) ये तत्र ब्राह्मणाः सम्मर्शिनः । யே தத்ர ப்ராஹ்மணா: ஸம்மர்சின: ।

(8) युक्ता अयुक्ताः । யுக்தா அயுக்தா: ।

(9) अलूक्षा धर्मकामाः स्युः । அலூக்ஷா தர்மகாமா: ஸ்யு: ।

10) यथा ते तेषु वर्त्तेरन् । யதா தே தேஷு வர்த்தேரன் ।

(1) तथा,ते तेषु वर्तेथाः ॥ 10 ॥ ததா தே தேஷு வர்த்தேதா: ॥

॥ 10 ॥

(7) अथ அத=இப்போது

अभ्याख्यातेषु அப்யாக்யாதேஷு=சம்சயமுள்ள தோஷத்துடன் கூடினவர்கள் விஷயத்தில். மற்றபதங்களுக்கு முன்போலவே அர்த்தமானதால் மறுபடியும் எழுதப்படவில்லை.

---

வி:—(6) अभ्याख्याताः அப்யாக்யாதா:= தூஷிக்கப்பட்டவர்கள்

---

து:—(6) अथ அத =இதுவேறு விஷயத்தைக்கூறுகிறது

अभ्याख्यातेषु அப்யாக்யாதேஷு=நிந்திக்கத்தக்க விஷயங்களிலும் சந்தேகம் வந்தால் (7)-(8)-(9)-(10), (V-I) முன்போலவே

## X. முடிவு.

வேதாந்த சாஸனத்தின் (ஆஞ்ஞையின்) முடிவு கூறப்படுகிறது.

(2) एष आदेशः । 𑌏𑌷 𑌆𑌦𑍇𑌶𑌃 ।

(3) एष उपदेशः । 𑌏𑌷 𑌉𑌪𑌦𑍇𑌶𑌃 ।

(4) एषा वेदोपनिषत् । 𑌏𑌷𑌾𑌵𑍇𑌦𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍 ।

(5) एतदनुशासनं । 𑌏𑌤𑌦𑌨𑍁𑌶𑌾𑌸𑌨𑌮𑍍 ।

(6) एव मुपासितव्यम् । 𑌏𑌵𑌮𑍁𑌪𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌮𑍍 ।

(7) एवमु चैत दुपास्यम् ॥ 11॥ 𑌏𑌵𑌮𑍁𑌚𑍈𑌤𑌦𑍁𑌪𑌾𑌸𑍍𑌯𑌮𑍍 ॥11॥

**பதவுரை.**

(2) एषः 𑌏𑌷𑌃=இது
आदेशः 𑌆𑌦𑍇𑌶𑌃=விதி
(3) एषः 𑌏𑌷𑌃=இது
उपदेशः 𑌉𑌪𑌦𑍇𑌶𑌃=உபதேசம்
(4) एषा 𑌏𑌷𑌾=இது
वेदोपनिषत् 𑌵𑍇𑌦𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍 :—வேத இரகஸியம்
(5) एतत् 𑌏𑌤𑌤𑍍=இது
अनुशासनं 𑌅𑌨𑍁𑌶𑌾𑌸𑌨𑌂 =ஆஞ்ஞை
(6) एवं 𑌏𑌵𑌂=இப்படி
उपासितव्यं 𑌉𑌪𑌾𑌸𑌿𑌤𑌵𑍍𑌯𑌂=உபாசிக்கத்தக்கது
(7) एवं 𑌏𑌵𑌂=இந்தப்பிரகாரம்
एतत् च 𑌏𑌤𑌤𑍍𑌚=இதுவும்
उपास्यं 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑌂=உபாசிக்கத்தக்கது

### வியாக்கியானங்கள்.

**(2) आदेशः 𑌆𑌦𑍇𑌶𑌃=**
ச-பா:—இது விதி

---

வி:—V. (2) அரசனுடைய ஆஞ்ஞைக்குச் சமானமான ஆஞ்ஞை

---

து:—V.(2) एषः आदेशः 𑌏𑌷𑌃 𑌆𑌦𑍇𑌶𑌃=இது ஹரியினுடைய ஆஞ்ஞை.

வி-வி:—सत्यंवद ஸத்யம்வத (I–11-2) என்பதுமுதல் तथा तेषु वर्तेथाः தயா தேஷு வர்த்தேதா: வரையில் உள்ள கிரந்தத்தில் கூறப்பட்ட உபதேசம் ஆதேசம் எனப்படும். இது சுருதியிற் கூறப்பட்டது. அரசன் சேவகர்களை ஆஞ்ஞாபிக்கிறதுபோல்வேதவிதியும் அனுஷ்டாதாவை ஆஞ்ஞாபிக்கிறது.

(3) उपदेशः உபதேஶ:

ச-பா:—பிதா முதலானவர்கள் புத்திரன் முதலானவர்களுக்குக்கொடுக்கும் புத்திவாதம் உபதேசமாம்.

வி-வி:—ஸ்மிருதிகளுக்கு வேதம் மூலம். ஆகையால் ஸ்மிருதிகள் வேதத்துக்கு உப சமீபத்திலிருக்கின்றன. வேதவிதி ஆதேசம். ஆதேசத்துக்குச் சமீபத்தில் ஸ்மிருதியிருப்பதால், அது கூறுவது உபதேசம் வேத மூலத்தைக் கூறமுடியாத ஸ்மிருதிகளிலும் "நிஜத்தைச்சொல்லு" என்பதுபோலுள்ள ஆஞ்ஞைகளும் உபதேச ரூபமாகவே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

(4) वेदोपनिषत् வேதோபநிஷத்

ச-பா:—வேத இரகஸியம், வேதார்த்தம்

வி-வி:—(நிஜத்தைச்சொல்லு) सत्यंवद ஸத்யம்வத முதலிய வசனங்களே வேதோபநிஷத். வேதங்கள் விதிரூபமாயும், அர்த்தவாத ரூபமாயும், மந்திரரூபமாயும் இருக்கின்றன. இவைகளில் விதி பாகம் சாரமானது.

(5) अनुशासनं அநுஶாஸநம்

ச-பா:—இது ஈசுவரவசனம். சகலமானவர்களுக்கும் பிரமாணமானதெல்லாம் விதிக்கப்பட்டிருக்கிறது.

வி-வி:—சத்தியம்வத முதலியவை ஈசுவராஞ்ஞை. சுருதிஸ்மிருதிகள் என்னுடைய ஆஞ்ஞை என்றுஈசுவரன் சொல்லியிருக்கிறார்.

---

வி:—(3) உபதேசம்-பிதாமுதலானவர்களுடையஹிதமானவார்த்தை
(4) வேதங்களின் இரகஸிய உபதேசம்
(5) சிஷ்யர்களுக்கு ஆசாரியர் செய்யவேண்டிய ஆஞ்ஞை

---

து:—(3) एषः उपदेशः ஏஷ: உபதேஶ:=இது ஆஞ்ஞை மட்டுமல்ல பின்னையோவெனின் இது வேதத்திற் கூறப்பட்ட உபதேசம்
(4) एषा ஏஷா=இது
वेदोपनिषत् வேதோபநிஷத்=வேத இரகசியம்
(5) एतत् अनुशासनं ஏதத் அநுஶாஸநம்=இது சிக்ஷை

(6) उपासितव्यं உபாஸிதவ்யம்—

ச-பா:—இப்படி யிருப்பதினால் சொன்னதை யெல்லாம் செய்யவேண்டியது. எல்லாம் அனுஷ்டிக்கத்தக்கது. ஒருவனும் மறக்கக்கூடாதென்பதை காட்டும் பொருட்டு சுருதி இரண்டுதடவை உபாசிக்கத்தக்கது என்று கூறுகிறது.

வி-வி:—सत्यंवद ஸத்யம்வத முதலிய தர்மங்கள் சுருதிஸ்மிருகளில் விதிக்கப்பட்டிருப்பதாலும், வேதத்தின் சாரமாயிருப்பதாலும் ஈசுவரனாலேயே ஆஞ்ஞாபிக்கப்பட்டிருப்பதாலும், இவைகளைச்சொன்னபடி அனுஷ்டிக்கவேண்டியது. उ உ என்பதுநிச்சயத்தைக்கூறுகிறது.

இவைகளை ஒருநாளும் விடமுடியாது.

ஞானகர்ம விஷயமாய் ஸ்வதந்திரவிசாரணை.

வி-வி:—இவ்விதமாக சுருதியானது கர்மத்தைச் சிலாகிப்பதைப் பார்த்து சிலர் கர்மமே மோக்ஷத்தைக் கொடுக்கும் என்றும், சிலர் கர்மமும் ஞானமும் சேர்ந்து மோக்ஷத்தைக்கொடுக்கும் என்றும் சொல்லுகிறார்கள். இந்த இரண்டுபக்ஷங்களும் நம்மால் உபோத்காதத்தில் (முகவுரையில்) ஞானகர்ம காண்டங்களைப்பற்றி விசாரிக்கிற இடத்தில் நிராகரிக்கப்பட்டன. மோக்ஷத்துக்கு கர்மங்கள்சாக்ஷாத் சாதனங்களாகா விட்டாலும், ஞானத்தை அடைய இச்சையைஉண்டு பண்ணுவது மூலமாக அவைகள் சாதகங்களாயிருக்கின்றன. ஆகையால் தான் ஞானகாண்டத்தில் கர்மங்களைச் சொல்லியிருக்கிறது.

ஆ:—பாஷ்யத்தின் ஆரம்பத்தில் ஞானத்தால்தான் பரமாநந்தம் கிடைக்கும் என்று பாஷ்யகாரர் சொல்லியிருக்கிறார். இதையேசெவ்வையாக ஸ்தாபிக்கும் பொருட்டு சுருதி கர்மத்தை விதிக்கிற விடத்தில் மறுபடியும் அவ்விஷயத்தை பாஷ்யகாரர் விசாரிக்கிறார். ஞானத்துக்கும் கர்மத்துக்கும் பிரயோசனம் வெவ்வேறுஎன்பதைக்காட்டுவதே அவருடைய கருத்து.

---

வி:—(6) ஆஞ்ஞாப்ரகாரம் அனுஷ்டிக்கவேண்டியது என்பதுகருத்து

(7) இந்தப்படியே உபாசிக்கவேண்டியது என்று அர்த்தம்

11-வது அனுவாகம் முற்றிற்று.

---

து:—(6)एवं उपासितव्यं ஏவம் உபாஸிதவ்யம்:=முன்சொன்னசத்தியம் முதலியவைகள் அவசியம் உபாசிக்கத்தக்கவை.

(7) एवंएतत् उच उपास्य ஏவம் ஏதது உ ச உபாஸ்யம்= உபாசிக்கும் படியாக முன் சொன்ன சத்தியம் முதலியவைகளை அவசியம் அனுஷ்டிக்கவேண்டியது என்பதை போதிக்கும் பொருட்டு இரண்டாவது தடவை சொல்லப்பட்டது

## பரம சிரேயஸ் கர்மத்தால் உண்டாகிறதா ? அல்லது ஞானத்தாலுண்டாகிறதா ?

ச-பா:—ஞான கர்மங்களை விவேசனை செய்து பார்க்கும்பொருட்டு, இப்போது நாம் அடியிற்கண்ட விஷயங்களை விசாரிப்போம்.

1. கேவல கர்மத்தினால்மட்டும் பரமசிரேயஸ் கிடைக்கிறதா?

(2) அல்லது ஞானத்துடன் கூடின கர்மத்தால் கிடைக்கிறதா ?

(3) அல்லது ஞானகர்மங்களின் சமுச்சயத்தால் கிடைக்கிறதா ?

(4) அல்லது கர்மத்துடன் கூடின ஞானத்தால் கிடைக்கிறதா ?

(5) அல்லது கேவலம் ஞானத்தால்மட்டும் கிடைக்கிறதா ?

## I. கேவல கர்மத்தால் மோக்ஷம் என்னும்பக்ஷம்.

சமஸ்த வேதார்த்தத்தையும் அறிந்தவன் தான் கர்மத்துக்கு அதிகாரியாவதால், கேவலம் கர்மத்தாலேயே பரமசிரேயஸ் சித்திக்கும் என்று ஒருவன் சொல்லலாம். வேதம்முழுமையும் இரகஸியத்துடன் இருபிறப்புள்ளவனால் தெரிந்துகொள்ளத்தக்கது என்கிற ஸ்மிருதிப்படி ஆத்மஞானமும் இந்த வேதார்த்த ஞானத்தில் அடங்கியிருக்கிறது. विद्वान्याजतेविद्वान्याजयति வித்வாந்யாஜதே-வித்வாந்யாஜயதி= (ஞானியாகம் செய்கிறான், ஞானி யாகம் செய்துவைக்கிறான்) என்பதாய் சுருதி ஞானியே கர்மத்துக்கு அதிகாரி என்பதைக் காட்டுகின்றது. ज्ञात्वाचानुष्ठानं ஜ்ஞாத்வாசாநுஷ்டாநம் அதாவது அறிந்து அனுஷ்டிக்கவேண்டியது என்றும் சொல்லியிருக்கிறது. சிலர் சகல வேதமும் கர்மத்தையே போதிக்கிறது என்று அபிப்பிராயப்படுகிறார்கள். பரமசிரேயஸ் கர்மத்தால் கிடைக்காவிட்டால் வேதம் நிஷ்பிரயோஜனம்.

### கர்மத்தால் மோக்ஷம் கிடைக்கமாட்டாது.

இது சரியன்று. ஏனெனின் மோக்ஷம் நித்தியம். மோக்ஷம் நித்தியம் என்பது ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. காரியம் அநித்தியம் என்பதும் பிரசித்தம். கர்மத்தால் மோக்ஷம் கிடைக்குமேயானால், அது அநித்தியமாக இருக்கவேண்டும். இது இஷ்டமன்று.

ஆக்ஷேபம்:—காம்மிய கர்மமும் நிஷேதிக்கப்பட்ட கர்மமும் செய்யப்படாமலும், ஆரம்பமான கர்மமும் அதின் பலத்தை அனுபவிப்பதினால் நாசமாய் விடுவதாலும், நித்திய கர்மங்களைச்செய்து வருவதாலும், ஞானத்தை அபேக்ஷிக்காமலே மோக்ஷம் கிடைக்கும்.

சித்தாந்தம்:—கிடைக்கமாட்டாது. ஏனெனின் கர்மம் பாக்கியில் இருக்கும். அதின் பொருட்டு வேறு சரீரம் கிடைக்கலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கர்மசேஷத்துக்கும் நித்தியகர்மத்துக்கும் விரோதமில்லாதபடியால் கர்மசேஷம் நாசமாகமாட்டாது.

சமஸ்த வேதார்த்தத்தை அறிந்தவன் தான் கர்மாதிகாரியாகிறான் என்று சொல்லுவது ஆயுக்தம். வேதத்தின்ஞானத்தைவிட வேறானது உபாசனை, வேதஞானத்தால் மட்டும் கர்மத்தில் அதிகாரம் ஏற்படுகிறது. கர்மம் உபாசனையை அபேக்ஷிக்கவில்லை, மோக்ஷத்துக்கு வேத ஞானத்தைத்தவிர உபாசனையும் ஒரு சாதகம். श्रोतव्यः ஶ்ரோதவ்ய: (கேட்கத்தக்கது) என்று சொல்லி मन्तव्यो निदिध्यासितव्यः மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:=(மனனம் செய்யத்தக்கது. தியானிக்கத்தக்கது) என்பதாய் வேறு பிரயத்தினமும் செய்யத்தக்கது என்பதாய் வேதம் விதிப்பதால். மனனமும் நிதித்தியாசனமும் சிரவணத்தை விட வேறுஎன்பதுதெரியவருகிறது.

## கர்ம உபாசனங்களாலும் மோக்ஷசித்தி.

ஆ:—அப்படியானால் உபாசனையுடன் கூடின கர்மத்தால் மோக்ஷம் கிடைக்கட்டுமே. உபாசனையுடன் கூடினகர்மத்தால் ஒரு பிரயோசனம் உண்டாகலாம். விஷம், தயிர் முதலியவைகள் ஸ்வத: மரணம், ஜ்வரம் முதலிய பலன்களைக் கொடுத்தாலும், மந்திரம் சர்க்கரை முதலியவைகளுடன் சேர்ந்து புதுபலனைக் கொடுக்கின்றன. அப்படியே மோக்ஷமும் உபாசனையுடன் கூடின கர்மத்தால் சித்திக்கலாமே,

சி:—சித்திக்கமாட்டாது. எது உண்டாகிறதோ அது அநித்தியம் என்ற ஆக்ஷேபம் இப்போதும் உண்டாகும்.

ஆ:—சுருதி வசனத்தால் மோக்ஷம் உண்டானாலும் நித்தியமே. (சாந்தோக்கியம் VIII-15-1 ல் न च पुनरावर्तते நசபுநராவர்த்ததெ மறுபடியும் திரும்புகிறதில்லை என்று சொல்லியிருக்கிறதல்லவா)

சி:—உண்டானது நித்தியமாக மாட்டாது. சுருதியானது ஞாபகப்படுத்துகிறது. சுருதி இருக்கிறதை ஞாபகப்படுத்துமே தவிர இல்லாததைச் செய்யமாட்டாது. நூறு வசனங்களாலும் நித்தியமாயிருப்பது உண்டாகமாட்டாது, உண்டானதும் நாசமாகாமலிருக்கமாட்டாது

இந்த யுக்தியால் வித்தையும் (ஞானம், உபாசனை) கர்மமும் சேர்ந்து மோக்ஷத்தைக்கொடுக்குமா என்றும் 3 வது பக்ஷத்துக்கும் உத்தரம் சொன்னதாக ஆய்விட்டது.

ஆ:—வித்தையும் கர்மமும் மோக்ஷப் பிரதி பந்தங்களை நிவர்த்திக்கின்றன. (ஆநந்தகிரி:—அவித்தையும் அதர்மமும்பிரதிபந்தங்கள். வித்தையால் அவித்தையும் கர்மத்தால் அதர்மமும் நாசமாய்கிறது. இப்படி நித்தியமோக்ஷத்துக்கு அவைகள் சாக்ஷாத்சாதகங்களாகாவிட்டாலும் பிரதிபந்தங்களை நிவர்த்திப்பது மூலமாய் சாதகங்களாயிருக்கின்றன)

சி:—இல்லை. கர்மத்தால் உண்டாகக்கூடிய பலன்கள் வேறு. உற்பத்தி, விகாரம், சம்ஸ்காரம், பிராப்தி ஆகிய பலன்களைத்தான் கர்மம் கொடுக்கும். மோக்ஷம் இந்நான்கில் ஒன்றினாலும் சித்திக்கவில்லை. (மோக்ஷமென்பது ஆத்மஸ்வரூபமாயிருத்தலே. யாகத்தில் புரோடாசத்தைச்செய்கிறது போல் மோக்ஷம் செய்யப்படவில்லை. தான்னியம் ஜலத்தைத் தெளிக்கிறதினால் சுத்தமாகிறது போல் மோக்ஷம் சம்ஸ்காரமடைகிறதில்லை. சோமலதையைப்பிழிவதினால் விகாரத்தை அடைவதுபோல் மோக்ஷம் விகாரத்தால் சித்திக்கிறதில்லை. வேதத்தை அத்தியயனத்தால் அடைவதுபோல் மோக்ஷம் அடையப்படவில்லை. மோக்ஷம்நித்தியமாக இருப்பதால் அதற்கு உற்பத்தி இருக்கமாட்டாது, சுத்தமாகமாட்டாது விகாரமடையமாட்டாது, அடையப்படவும் மாட்டாது என்றுசொல்லக்கூடாது-ஆந]

ஆ:—உற்பத்தி முதலியவைகளை ஒப்புக்கொள்ள வேண்டாம். சூரியன் மூலமாக என்பதாய் மார்க்கம் சொல்லப்பட்டிருப்பதால் மோக்ஷம் அடையக்கூடியது என்று சொல்லுகிறோம். (முண்டகம் II கடம் VI-16- பார்க்க)

சி:—இது சரியன்று. மோக்ஷம் எங்குமிருக்கிறது. ஆகையால் அடைகிறவனைவிட வேறு அன்று. ஆகாசாதிகளுக்குக் காரணமாகையால் பிரம்மம் சர்வகதம். ஜீவர்களெல்லாம்பிரம்மத்தைவிட வேறன்று. ஆகையால் மோக்ஷம் அடையக்கூடியது என்று

அத்:—சொல்லக்கூடாது. எது அடையப்படுகிறதோ அது அடைகிறவனைவிட வேறாக இருக்கவேண்டும். எப்போது ஒன்றுமற்றொன்றைவிட வேறாக இல்லையோ அப்போது அடைதல் என்பது ஏற்படமாட்டாது.

तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् தத்ஸ்ருஷ்ட்வா ததேவானுப்ராவிசத் (அதை சிருஷ்டித்து அதையே பிரவேசித்தது) என்கிற தைத்திரீய (II–6) சுருதியாலும் क्षेत्रज्ञंचापिमांविद्दिसर्व क्षेत्रषुभारत க்ஷேத்ரஜ்ஞஞ்சாபிமாம்வித்திஸர்வக்ஷேத்ரேஷுபாரத (சகல க்ஷேத்திரங்களாலும் சரீரங்களிலும் இருக்கிற க்ஷேத்திரஜ்ஞன் நான் தான் என்பதாய் அறி அர்ச்சுனா) என்கிற பகவத்கீதா வாக்கியத்தாலும் இன்னும் பல சுருதிஸ்மிருதிகளாலும் அடைகிறவன் அடையப்படுவதற்கு வேறல்லவென்று தெரியவருகிறது.

ஆ:—மோக்ஷம் அடையக்கூடிய ஸ்திதி அன்றே என்று சொல்லும் பக்ஷத்தில் அடியிற்கண்ட சுருதிகள் விருத்தங்களாகும். சாந்தோக்கியம் VII-16-2 ல் அவன் ஒருவனாகிறான், மூன்றாகிறான் என்றும், VIII-2–1 ல் பிதிர்லோகத்தை இச்சிக்கும்போது பிதிர்க்கள் அவனிடம் வருகிறார்கள் என்றும், VIII-12-3 ல் அவன்சஞ்சரித்துக்கொண்டிருக்கிறான் என்றும் சொல்லியிருக்கிறது.

சி:—விரோதமில்லை. மேற்கண்ட பிரமாணங்கள் காரியபிரம்மத்தைகூறுகின்றன. காரிய பிரம்மத்தினிடத்தில்தான் இவைகள் ஏற்படும். காரண பிரம்மத்தினிடத்தில் இவைகள் ஏற்படமாட்டா. சாந்தோக்கியம் VI-2-1 ல் ஏகமேவாத்விதீயம் என்றும் VII-24–1 ல் எங்குவேறு ஒன்றும் பார்க்கப்படவில்லையோ அதுஅநந்தம்என்றுஞ் சொல்லியிருக்கிறது. இவைகளால் மோக்ஷம் சுவதஸ்ஸித்தமென்றே ஏற்படுகிறது.

## ஞானகர்மங்களின் சமுதாயம் உண்டாகமாட்டாது.

வித்தையும் கர்மமும் பரஸ்பரம் விருத்தமானதால்சேர்ந்திராவாம். வித்தையிலோ கர்த்தா, சாதகம் முதலியவைகள் வேண்டியதில்லை. கர்மமோ இவைகளால்தான் சித்திக்கும். ஆகையால் இரண்டும் பரஸ்பரம் விருத்தம். ஒரே இடத்தில் கர்த்திருத்வமும் அகர்த்திருத்வமும் சேர்ந்து காணப்படுகிறதில்லை. இரண்டில் ஒன்று பொய்யாக இருக்கவேண்டும். துவைதத்தையே மித்தையாகச்சொல்லவேண்டியது. ஏனெனின், அதுதான் அஞ்ஞானத்தாலுண்டாகிறதாக இருக்கிறது. பிரஹதாரணியகம் VI-5-15, I-4-10, கடம் II-10, சாந்தோக்கியம் VII-24-1 தைத்திரீயம் II-7–1. இவைகளை பார்க்க.

அத்:—ஏகம் என்பதே சத்தியம் என்பது பிரஹ IV-4-20. சா VI-2-1, நரசிம்ம உத்தரதாபணி 7, சா-VII-25-2, இவைகளால் தெரியவருகிறது.

சம்பிரதானுதிகள் (எவன் கொடுத்ததைவாங்கக்கூடியவனே அவன் சம்பிரதானன்) அன்றியில் காரியம் சித்திக்கமாட்டாது. வித்தையிலோ பேதபுத்தியேயில்லை. என்பது வெகு சுருதிகளால் பிரசித்தம். ஆகையால் வித்தையும் கர்மமும் பரஸ்பரம் விருத்தங்கள். ஆகையால்அவைகள் சேர்ந்திரா. ஆகையால்வித்தை, கர்மம் இவைகளின் சேர்க்கையினின்றும் மோக்ஷம் சித்திக்கும் என்கிற மதம் யுக்திக்கு விருத்தமாயிருக்கிறது.

ஆக்ஷேபம்:—இப்படி சொல்லுவது சுருதிக்குவிருத்தமாகும். ஏனெனின் சுருதியில் கர்மம் விதிக்கப்பட்டிருக்கிறது. இரஜ்ஜுஞானமானது சர்ப்பப்பிராந்தியை நிவிர்த்திசெய்வதுபோல்கர்மத்துக்குவேண்டிய கர்த்தாமுதலான அம்சங்களை நிஷேதித்து ஆத்மா ஒன்றுஎன்கிற ஞானத்தை சுருதி போதிக்கிற தென்றுசொன்னால், கர்மத்தை விதிக்கும் சுருதிகளுக்கு விரோதம் வரும்.அவைகளும் நிஷ்பிரயோசனங்களாகும். கர்மங்களே விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் விரோதம் ஏற்படக்கூடாது. ஏனெனின் சுருதிகளெல்லாம் பிரமாணங்கள்.

சித்தாந்தம்:—இப்படிசொல்வது சரியன்று. ஏனெனின்- சுருதியின் கருத்து புருஷனுக்கு முக்கியமாய் வேண்டியதை உபதேசிக்க வேண்டு மென்பதாம். வித்தையைக்கூறும் சுருதிகள் சம்சாரத்தினின்றும் புருஷன் விடுபடத்தக்கவன் என்பதாய் கோறி சம்சாரத்துக்குக் காரணமான அவித்தை வித்தையால் நிவிர்த்திக்கத்தக்கது என்பதாய் வித்தையை உபதேசிக்கின்றன. ஆகையால் விரோதமில்லை.

ஆக்ஷேபம்:—அப்படி யிருந்தாலும் கர்த்தா முதலானவர்களை போதிக்கும் சாஸ்திரம் விருத்தமாகுமே

சித்தாந்தம்:—ஆகமாட்டாது. கர்த்தா முதலானவர்கள் இருக்கிறதாகவே ஒப்புக்கொண்டு பாபங்களை நிவிர்த்தி செய்யும் பொருட்டு கர்மங்களை விதிக்கும் சாஸ்திரம் முமுக்ஷுவுக்கும் பலத்தை இச்சிக்கிறவர்களுக்கும் பிரவிர்த்தித்திருக்கிறது. கர்த்தா முதலானவர்கள் இருக்கிறார்கள் என்பதை உபதேசிக்க பிரவிர்த்திக்கவில்லை (அதாவது வேதங்கள் சொல்லிய விஷயங்களெல்லாம் சத்தியம் என்கிற கருத்துடன் அவைகள் பிரமாணங்களாகிறதில்லை.

அத்:—மனிதனுக்கு வேண்டிய பரம புருஷார்த்தத்தைபோதிக்கி றதினால்அவைகள் பிரமாணங்களாகின்றன.ஆநந்தகிரி) பாபமாகிற பிரதிபந்தமிருக்கும் வரையில் வித்தை ஜனிக்கமாட்டாது. அது நா சமானவளவில் வித்தை உதிக்கும். அதினால் அவித்தைநிவிர்த்தியா கும். அதினின்றும் நிः சேஷமாய் சம்சாரம் நிவிர்த்தியாய்விடும்.

(இதுவரையில் வித்தையும் கர்மமும் சத்தியத்துக்கும் மித் தைக்கும் விஷயமானதால் அவைகளின் சமுச்சயம் சித்திக்கமாட் டாது என்று சொல்லப்பட்டது. இனிவித்தையும் கர்மமும் காம மற்றவனுக்கும் காமமுள்ளவனுக்கும் விஷயங்களாவதால் இரண் டுக்கும் விரோதமென்பதை பாஷ்யகாரர் நிரூபிக்கிறார் ஆநந்தகிரி)

மேலும் அநாத்மாவைப் பார்க்கிறவனுக்குத்தான் அநாத்மா வில் இச்சை உண்டாகிறது. இப்படி இச்சித்துக்கொண்டு அவன் கர்மங்களைச் செய்கிறான். அவைகளின் பலனை அநுபவிக்கும்பொ ருட்டு சரீராதிகளை எடுத்துக்கொள்ளவேண்டியதாக இருக்கிறது. அதாவது ஜனனமரணரூப சம்சாரத்தில் பிரவேசிக்கவேண்டியதா யிருக்கிறது. ஆத்மா ஒன்று என்று பார்க்கிறவனுக்கோ விஷயமி ல்லாதபடியால் இச்சையில்லை.ஆத்மாதன்னைவிட வேறாகாதபடியால் இச்சைக்கு விஷயமாகமாட்டாது. ஆகையால்தன்னிடத்தில் தான் இருப்பதே மோக்ஷம், ஆகையாலும் வித்தைக்கும் கர்மத்துக்கும் விரோதம் ஏற்படுகின்றது. இந்த விரோதத்தால்தான் வித்தையா னது மோக்ஷத்தின் பொருட்டு கர்மங்களை அபேக்ஷிக்கவில்லை. நித் திய கர்மங்கள் பிராரப்த்தங்களை நாசம்செய்வதுமூலமாக வித்தை உண்டாவதில் ஹேதுவாகின்றன. ஆகையால்தான் இந்தப்பிரகர ணத்தில் கர்மங்களைப்பற்றிச் சொல்லியிருக்கிறது என்று நாம் சொன்னோம். ஆகையால் கர்மத்தை விதிக்கும் சுருதிகள் விருத்த ங்களன்று. ஆகையால் கேவலம் வித்தையாலேயே பரமசிரேயஸ் கிடைக்கும் என்பது சித்தமாகிறது

(வித்தியாரணிய வியாக்கியானம்)

கர்மசாதகமன்றியிலே ஞானம் மோக்ஷத்தைக்கொடுக்கும்.

இவ்விஷயம் வேதாந்த சூத்திரம் III-4-25 ல் பிரஸ்தாபிக்க ப்பட்டிருக்கிறது. ஆத்மஞானம் பலத்தைக்கொடுக்க கர்மத்தின் சாதகத்தை அபேக்ஷிக்கிறதா இல்லையா? தர்சபூர்ணமாசயாகத்துக்கு பிரயாஜம் என்பது அங்கமாயிருப்பதுபோல் ஞானத்துக்குக்கர்ம

மும் அங்கமானதால் கர்மத்தின் சாதகத்தையும் ஞானம்அபேக்ஷிக்கிறது என்பது பூர்வபக்ஷம். சித்தாந்தம்:—பிரம்மஞானமானது அஞ்ஞானத்தை நிவிர்த்திக்கிறது. இதர சாதகத்தை அபேக்ஷிக்கவில்லை. ஏனெனின் அதுவே எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிறது. பிரயாஜம் அங்கமாயிருப்பதுபோல் கர்மமும் ஞானத்துக்கு அங்கம் என்றால், பலனைக் கொடுக்கிற விஷயத்தில் ஞானத்துக்குச் சாதகமாயிருக்கிறதா? அல்லது, ஞானமுண்டாவதற்கே ஏதுவாக இருக்கிறதா? முதல் பக்ஷத்தில் மோக்ஷம் அநித்தியமாய்விடும்-இரண்டாவது பக்ஷத்தில் பிரயாஜையால் தர்சபூர்ணமாசம் உண்டாகாததால் எப்படி அங்கமாகமாட்டாதோ அப்படி கர்மமும் ஞானத்துக்கு அங்கமாகமாட்டாது. ஆகையால் ஞானமுண்டாய்விட்டால் கர்மம் மோக்ஷத்துக்காக வேண்டியதில்லை.

## ஞானோற்பத்திக்கு கர்மம் அவசியம்.

ஞானோற்பத்திக்குக் கர்மம் வேண்டுமென்பது வேதாந்த சூத்திரம் III-4-26-27-ல் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. பலத்தைக் கொடுக்க எப்படி பிரம்ம வித்தையானது கர்மத்தை அபேக்ஷிக்கவில்லையோ அப்படி அது உண்டாகிற விஷயத்திலும் கர்மத்தை அபேக்ஷிக்கமாட்டாது என்பது பூர்வபக்ஷம். சித்தாந்தம்:—பலன் கொடுக்கிற விஷயத்தில் பிரம்மஞானம் கர்மத்தின் சாதகத்தை அபேக்ஷிக்காதபடியால் தான் உண்டாகிற விஷயத்திலும் அதின் சாதகத்தை அபேக்ஷிக்கக்கூடாது என்று சொல்லக்கூடாது. பிரயோஜனத்தை உத்தேசித்து ஒவ்வொன்றின் ஆவசியகத்தன்மையும் ஏற்படுகின்றது. வேளாண்மைக்கு குதிரை அவசியமில்லை. வண்டிக்கு அவசியம்வேண்டும். ஞானம் உண்டாவதற்கு கர்மம் வேண்டியதில்லை என்றுசொல்ல ஆதாரமில்லை.பிரஹதாரணியகம் IV-4-22 ல் பிராமணர்கள் வேதாத்தியனத்தாலும், யாசகத்தாலும், தானத்தாலும், உபவாசாதிகளாலும் பிரம்மத்தை அறிய எத்தனிக்கிறார்கள் என்று சொல்லியிருக்கிறது. இதனால் பிரம்மஞானமுண்டாவதற்கு இவைகள் சாதகங்கள் என்று தெரியவருகின்றது. அதே உபநிஷத்தில் அடுத்த வாக்கியத்தில் சாந்தியை அடைந்தபிறகு ஆத்மாவைப் பார்க்கிறான் என்று சொல்லியிருக்கிறது. ஆகவே, மனோநிக்கிரகம் முதலியது ஞானத்தை உண்டுபண்ண சமீபசாதகம் என்று ஏற்படுகிறது. ஆகையால் யாகம்போன்ற கர்மமும், மனோநிக்கிரகம் போன்ற சத்வகுணங்களும் ஞானமுண்டாகிற விஷயத்தில் அவசியம் வேண்டியவை என்று நிச்சயமாகிறது.

அ:த்—வேதாந்த சூத்திரம் III-4-32-35-ல் ஞானத்தை சம்பாதிப்பதில் ஆசிரமதர்மமும் அனுஷ்டித்ததாக ஆய்விடுகிறது என்பதாய் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஞானகாண்டத்தில் ஞானத்தை அடையும் பொருட்டு கர்மங்களைச் சொல்லியிருக்கிறது. கர்மகாண்டத்தில் ஆசிரமதர்மத்தைப் பரிபாலனம் செய்யும்பொருட்டு அவைகளை அனுஷ்டிக்கச் சொல்லியிருக்கிறது. இரண்டிலும் உத்தேசம் வேறானதால் கர்மங்களை இரண்டு தடவை செய்யவேண்டியது என்பது பூர்வபக்ஷம். சித்தாந்தமென்னவெனின்:—வேண்டியதில்லை. சிரார்த்த சம்பூர்த்தியின் பொருட்டு புஜிக்கிறவன் பசியையும் தீர்த்துக்கொள்ளுகிறான். அதுபோல் ஞானத்துக்காக கர்மங்களைச் செய்தால் வர்ணாசிரமதர்மமும் பரிபாலனமாகிறது. ஞானத்துக்காகச் செய்யப்படும் கர்மம் காம்மியம். வர்ணாசிரமத்தைப் பொருத்த கர்மம் நித்தியம். காம்மியமும் நித்தியமும் ஒன்றாகாததால் வெவ்வேறாகவே அவைகளைச் செய்யவேண்டியது என்று சொல்லும்பக்ஷத்தில் இரண்டு பிரயோஜனங்களை உத்தேசித்து ஒரே கர்மத்தைச் செய்யலாம் என்று சுருதி சொல்லுகிறது. ஆகையால் ஒரு தடவை கர்மத்தைச் செய்தால் போதும்.

(பாஷ்யம்.)

ஆக்ஷேபம்—அப்படியானால் இதர ஆசிரமங்களுக்கு இடமில்லை. கர்மங்கள் வித்தை உண்டாவதில் சாதகங்கள், கிரஹஸ்தாசிரமத்துக்கே கர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் கிரஹஸ்தாசிரமமே போதுமானது. யாவத்ஜீவம் கர்மம் செய்யத்தக்கது என்று சொல்லும் சுருதிகளும் இதற்கே அனுகூலமாயிருக்கின்றன.

சித்:—இப்படி சொல்லக்கூடாது. கர்மங்கள் அநேகம். அக்னிஹோத்திரம்தான் கர்மம் என்பதில்லை. பிரம்மசரியம், தபஸ், சத்திய வசனம், மனோநிக்கிரகம், இந்திரிய நிக்கிரகம், அஹிம்சை முதலிய கர்மங்களும் இதர ஆசிரமங்களுக்கும் விதிக்கப்பட்டிருக்கின்றன என்பது எல்லாருக்கும் தெரிந்த விஷயமே. ஞானம் உண்டாகிற விஷயத்தில் இவைகள் வெகு சாதகங்கள்-தியானம் தாரணை முதலிய கர்மங்களுமிருக்கின்றன. தைத்திரீயம் III-2 வது சுருதி தபஸால் பிரம்மத்தை அறிய இச்சி என்று சொல்லுகிறது. ஜன்மாந்திரத்திற் செய்த கர்மத்தால் கிரகஸ்தாசிரமத்தை எடுத்துக்கொள்ளும் முன்னமேயே ஞானமுண்டாகக்கூடும். கிரஹஸ்தாசிரமம் கர்மத்தைச்செய்வதற்காக வேண்டியது. கர்மத்தால் சித்திக்கக்கூடிய ஞானம் கிடைத்திருந்தால் கிரஹஸ்தாசிரமம் வேண்டி

அத்:—பதில்லை. புத்திரன் முதலானவர்கள் லோகங்களை அடைய வேண்டியதற்காக வேண்டியவர்கள். புத்திரன் முதலானவர்களால் சித்திக்கக்கூடிய இஹலோக பிதுர்லோக, தேவலோக போகங்களின் ஆசையை விட்டு, கர்மத்தில் பிரயோஜனத்தைப் பாராத நித்திய சித்தமான ஆத்மலோகத்தைப் பார்க்கிறவனுக்கு கர்மத்தில் எப்படிபிரவிர்த்திவரும். கிரஹஸ்தாசிரமத்தில் இருக்கிறவன்கூடஞானமுண்டானவுடன் கர்மத்தில் விரக்தியைஅடைந்து அதின் பிரயோசனத்தைப் பார்க்காமல் அதினின்றும் ஒழிவடைய வேண்டும்.

ஆக்ஷேபம்:—இப்படி சொல்லக்கூடாது. கர்ம விஷயமாகவே வெகு சுருதிகள் ஏற்பட்டிருக்கின்றன. அக்னிஹோத்திரம் முதலிய கர்மங்களை போதிப்பதில் சுருதி அதிக பிரயாஸை யெடுத்துக் கொண்டிருக்கிறது. அக்நிஹோத்ராதி கர்மங்களை வெகு பதார்த்தங்களின் சாதகத்தால் தான் செய்யமுடியுமாதலால் கர்மங்களிலும் வெகு பிரயாசையிருக்கிறது. இதர ஆசிரமங்களுக்கு ஏற்பட்டிருக்கிற தபஸ், பிரம்மசரியம் முதலியவை கிரஹஸ்தனுக்கும் சமம், இதர கர்மங்களை, ஸ்வல்ப சாதகங்களுடன் செய்துவிடலாம். ஆகையால்கிரஹஸ்தாசிரமம் போல்தான் இதர ஆசிரமங்கள் எதையாவது கிரகிக்கலாமென்று சொல்வது அனுசிதம்.

சித்:—அப்படியல்ல, ஏனெனின்:—ஜன்மாந்திரத்தில்செய்த கர்மத்தின் சாதகமிருக்கிறது. அதாவது:—கர்மவிஷயமாய் சுருதி அதிக பிரயாசை எடுத்துக்கொண்டிருக்கிறது என்பதினால் நம்முடைய சித்தாந்தத்துக்குத் பாதகம் வரவில்லை. ஏனெனின் அக்கினிஹோத்திரம், பிரம்மசரியம் முதலிய ஜன்மாந்திர கர்மங்களும் ஞானமுண்டாகிற விஷயத்தில் சாதகங்களாயிருக்கின்றன. ஆகையால்தான் சிலர் ஜன்மாரம்ப முதலேவிரக்தர்களாகக் காணப்படுகிறார்கள். சிலர் கர்மத்தில் பரவிர்த்திக்கிறார்கள், விரக்தியை அடையாமலிருக்கிறார்கள். வித்தையில் துவேஷ புத்தியையும் தரிக்கிறார்கள். ஆகையால் ஜன்மாந்திரத்தின் கர்மத்தால் சுத்தியடைந்து அதினால் விரக்தியை அடைந்தவர்கள் இதர ஆசிரமத்தையே ஸ்வீகரிக்க வேண்டியது.

மேலும், கர்மங்களும் பலன்களும் அநேகமானதால் பூர்வபக்ஷி சொல்லுவது சரியல்ல அதாவது, கர்மங்கள், அநேகம் அவைகளின் பலன்களும் அநேகம். இவைகளை பிராணிகள் அபேக்ஷிக்கிற

ஆத்:—படியால் சுருதி இவைகளைப்பற்றி விஸ்தாரமாகச் சொல்லுவது யுக்தமே. மேலும் கர்மங்கள் ஞானசாதகங்கள். ஆகையால்சாத்தியத்தைவிட சாதக விஷயத்தில் விசேஷ பிரயாசை எடுத்துக்கொள்ளவேண்டியது

ஆக்ஷேபம்:—ஞானம் கர்மத்தாலுண்டானால் இதர பிரயத்தினம் வேண்டியதில்லை. பிரதிபந்தகமான பாவம் நிவிர்த்தியானவுடன் ஞானமுண்டாகிறது. ஆகையால் கர்மத்தைத்தவிர உபநிஷத்தால் சிரவணம் முதலிய பிரயத்தினம் நிஷ்பிரயோசனம்.

சித்:-அல்ல, அப்படிநியமமில்லை. பிரதிபந்தநிவிர்த்தியால்தான் ஞானமுண்டாகிறது. ஈசுவர பிரசாதத்தாலாவது, தபஸாலாவது. தியானம் முதலியவைகளாலாவது உண்டாகவில்லை, என்பதாய்விதி ஏற்படவில்லை. அஹிம்சை பிரம்மசரியம் முதலியவை ஞானசாதனங்கள். சிரவணமனன நிதித்தியாசங்கள் சாக்ஷாத்கர்ரணங்கள். ஆகையால் இதர ஆசிரமங்களும் வேண்டியவை. எல்லாருக்கும் வித்தையில் அதிகாரமுண்டு. கேவல வித்தையால்தான் பரமசிரேயஸ் கிடைக்கும்.

வி-வி:—நான்கு ஆசிரமங்களிற் சேராதவர்களின் கர்மங்கூட ஞானசாதகமாகும் என்பது பிரம்மசூத்திரம் III-4-36-39 ல் விவரிக்கப்பட்டிருக்கிறது. அந்தக்கரணத்தை சுத்தம் செய்ய ஆசிரமதர்மத்தை அனுஷ்டிக்கவேண்டியது. அபத்நீகன், ஸ்னாதகன் முதலானவர்கள் ஒருஆசிரமத்திலும் சேர்ந்தவர்களல்ல. ஏனெனின் ஒரு ஆசிரமத்தின் காரியத்தை அவர்கள் செய்தாய்விட்டது. வேறு ஒரு ஆசிரமத்தை இன்னும் ஸ்வீகரிக்கவில்லை, இப்படிப்பட்டவர்களின் கர்மம் ஞானசாதகமாகமாட்டாது. என்பதுபூர்வபக்ஷம். சித்தாந்தமென்னவெனின்:—நான்கு ஆசிரமங்களில் சேராதவனுக்கும் ஞானமுண்டாகக்கூடும். ஏனெனின் ஜபம் அந்தக்கரணத்தின் சுத்தியின் பொருட்டு ஏற்பட்டிருக்கிறது. இதுஎந்த ஆசிரமத்துக்கும் சொந்தமல்ல. ஒரு ஆசிரமத்திலும் சேராத ரைக்வியர், கார்க்கியர், முதலானவர்கள் ஞானாதிகாரிகள் என்று சுருதியிற்சொல்லியிருக்கிறது. மனு ஸ்மிருதி II-8712 லும் சொல்லியிருக்கிறது. இதனால் ஆசிரமங்கள் பிரயோசனமற்றவை என்பது கருத்தல்ல. ஏனெனின், அந்தக்கரணசுத்தியைஅவைகள் பலப்படுத்துகின்றன. ஆகையால் நான்கு ஆசிரமங்களில் சேராதவனுக்கும்ஞானமுண்டாகலாம்.

இந்த அனுவாகத்தில்

(1) स्वाध्यायप्रवचनाभ्यां न प्रमदितव्यं । ஸ்வாத்4யாயப்ரவசநாப்4யாம் நப்ரமதி3தவ்யம் ।

(2) तानित्ययोपास्यानि । தாநித்யயோபாஸ்யாநி ।

(3) स्यात् । ஸ்யாத் ।

(4) तेषुवर्तेरन् । தேஷுவர்தேரந் ।

(5) समच । ஸமச ॥

என்பதாய் ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டியது. அதாவது (1) (2) (3) (4) ஆகிய ஒவ்வொரு வகுப்பிலும் பவ்வத்து வாக்கியங்களும் 5 ல் 7 வாக்கியங்களும் ஆகிய 47 வாக்கியங்கள் இந்த அனுவாகத்தில் அடங்கியிருக்கின்றன,

அனுவாகம் முடிந்தது ஓம்தத்சத்.

## I- 12 வது அனுவாகம்.

வி-வி:—(அவதாரிகை) பதினோருவது அனுவாகத்தில் சிஷ்யனுக்கு ஆசாரியாருடைய அனுசாஸனம் சொல்லப்பட்டது- இதுவரையில் பிரம்மதத்துவத்தை அறிவதற்கு பஹிரங்கசாதனங்களான உபாசனைகள், கர்மங்களிருக்கின்றன வென்று உபதேசிக்கப்பட்டது. இவைகளைப்பற்றிச்சொல்லிய கிரந்தங்களைப்படித்தவுடனும் அர்த்தங்களை விசாரித்தவுடனும் விதிக்கப்பட்ட கர்மங்களைச் செய்தவுடனும் ஜபிக்கவேண்டிய மந்திரம் இந்த 12 வது அனுவாகத்தில் கொடுக்கப்படுகிறது.

I (1) शं नो मित्रः शं वरुणः । ஶம் நோ மித்ர: ஶம் வருண: ।

(2) शं नो भवत्वर्यमा । ஶம் நோ ப4வத்வர்யமா ।

(3) शं न इन्द्रो बृहस्पतिः । ஶம் ந இந்த்3ரோ ப்3ருஹஸ்பதி: ।

(4) शं नो विष्णुरुरुक्रमः । ஶம் நோ விஷ்ணுருருக்ரம: ।

(5) नमो ब्रह्मणे । நமோ ப்3ரஹ்மணே ।

(6) नमस्ते वायो । நமஸ்தே வாயோ ।

(7) त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि । த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்3ரஹ்மாஸி ।

(8) त्वामेव प्रत्यक्षं ब्रह्मावादिषम् । த்வாமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாவாதிஷம் ।

(9) ऋतमवादिषम् । ருதமவாதிஷம் ।

(10) सत्यमवादिषम् । ஸத்யமவாதிஷம் ।

II 1 तन्मामावीत् । தந்மாமாவீத் ।

(2) तद्वक्तारमावीत् । தத்வக்தாரமாவீத் ।

(3) आवन्माम् । ஆவந்மாம் ।

(4) आवीद्वक्तारम् । ஆவீத்வக்தாரம் ।

(5) ओं शान्तिः शान्तिः शान्तिः । ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ।

பதவுரை

முதலாவது வாக்கியம் முதல் 7 வது வாக்கியம் முடியும்வரையில், முதல் அனுவாகத்தில் கொடுத்தபடி அர்த்தமாதலால் அவ்விடத்தில் பார்த்துக்கொள்ளுக.

(8) त्वांएव த்வாம்ஏவ=உம்மையே
प्रत्यक्षं ப்ரத்யக்ஷம்=பிரத்தியக்ஷமான
ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மமாக
अवादिषं அவாதிஷம்=சொன்னேன்
(9) ऋतं अवादिषं ருதம் அவாதிஷம்=ருதத்தைச் சொன்னேன்
(10) सत्यं अवादिषम् ஸத்யம் அவாதிஷம்=சத்தியத்தைச் சொன்னேன்

(1) तत् தத்= அது
मां மாம்=என்னை
आवीत् ஆவீத்=இரக்ஷித்தது
तत् தத்=அது
वक्तारं வக்தாரம்= வக்தாவை
आवीत् ஆவீத்=இரக்ஷித்தது
3, 4,5-ம் 1-2 போலவே
5 ओंशान्तिः शान्तिः शान्तिः ।ஓம்ஶாந்தி:ஶாந்தி:ஶாந்தி:

(சங்கராசாரியருடைய அபிப்பிராயப்படி இந்த அனுவாகம் இரண்டாவது வல்லியின் துவக்கத்திலிருக்கவேண்டும்)

அத்:—வி· வி:—முதல் அனுவாகத்தில் பிரம்மத்தைப்பற்றிச் சொல்வேன் என்பதாய்சொல்லியிருந்தது. எனெனின் அந்தக்காலத்தில்பிரம்மம் உபதேசிக்கப்படவில்லை· அப்படியேவிக்கினங்களை பரிஹரிக்கும்பொருட்டு பிரார்த்திக்கவேண்டியதால் अवतु அவது=(இரக்ஷிக்கட்டும் என்று சொல்லப்பட்டது. முடிவில் பிரம்மம் முன் சொல்லப்பட்டபடியாலும்விக்கினங்களும் பரிகரிக்கப்பட்டுப்போய் விட்டபடியாலும் अवादिषं आवीत् அவாதிஷம் ஆவீத்= சொன்னேன். இரக்ஷித்ததுஎன்பதாய்சொல்லப்பட்டிருக்கிறது· தான்கிரதக்கினன் அல்ல என்பதைக்காட்டும்பொருட்டு விக்கினங்கள்பரிஹாரமாயிருந்தாலும் அவைகளை எடுத்துக்சொல்லுகிறான். இல்லாவிடின் அதாவது முமுக்ஷுவானவன் இந்திரன்· வருணன் முதலானவர்கள் செய்த உபகாரத்தை ஸ்மரிக்காவிடின் இவன் கிருதக்கினன் என்று ஏற்படலாம்· ஆனால்கிருதக்கினனாயிருக்கக்கூடாது. கிருதக்கினதோஷத்தால் விதிக்கப்பட்ட காரியங்களைச்செய்யும் பலன் கிடைக்காமலிருக்கும். இந்தபிரதிபந்தத்தை நிவர்த்திக்கும்பொருட்டு தேவதைகள் செய்த உபகாரத்தை ஸ்மரிக்கவேண்டியது.

सत्य मवादिषं पञ्चच । ஸத்யமவாதிஷம்பஞ்சச॥

இதில் சத்தியமவாதிஷம் வரையில் 10 வாக்கியங்களாம். மேல் ஐந்து வாக்கியங்களும் அடங்கியிருக்கின்றன

12 வது அனுவாகம் முற்றிற்று.

शं नः शीक्षां सहनौयच्छन्दसांमृ: । ஶம் நஶ்ஶீக்ஷாம் ஸஹநௌ யச்சந்தஸாம் ருஷபம் ।

सयःपृथिव्यामित्रृतचाहं । ஸய:ப்ருதிவ்யாம் ருதம் சாஹம் ।

वेदमनूच्यशंनो द्वादश ॥ வேதமநூச்யஶம்நோ த்வாதஶ॥

இந்த வல்லியின் 12 அனுவாகங்களில் ஆரம்பம் மேல்கொடுக்கப்பட்டிருக்கிறது.

शं नो मह इत्यादियों नो इतराणि त्रयोविंशतिः॥

ஶம்நோ மஹ இத்யாதயோ நோ இதராணி த்ரயோவிம்ஶதி:

शंनो ஶம்நோ = முதல் பத்து வர்க்கங்கள்

महइति மஹ இதி= பத்து

नोइतराणि நோ இதராணி= 3

ஆக (23) வர்க்கங்கள் இதில் அடங்கியிருக்கின்றன.

சிக்ஷாவல்லியின் ஆரம்பத்தில் அதில் உபதேசிக்கப்படும் (அபர) வித்தை விஷயமாய் விக்கினங்கள் ஏற்படாமலிருக்கும் பொருட்டு ஒரு சாந்தி மந்திரம் கூறப்பட்டது.

இனி சொல்லப்போகிற பிரம்மவித்தை விஷயமாய் விக்கினங்களை நிவர்த்திக்கும்பொருட்டு சாந்தி மந்திரம் கூறப்படுகிறது.

ओं शं नो मित्रः शं वरुणः । ஓம் ஶம் நோ மித்ர: ஶம் வருண: ।

शं नो भवत्वर्यमा । ஶம் நோ பவத்வர்யமா ।

शं न इन्द्रो बृहस्पतिः । ஶம் ந இந்த்ரோ ப்ருஹஸ்பதி: ।

शं नो विष्णुरुरुक्रमः । ஶம் நோ விஷ்ணுருருக்ரம: ।

नमो ब्रह्मणे । நமோ ப்ரஹ்மணே ।

नमस्तेवायो । நமஸ்தே வாயோ ।

त्वमेवप्रत्यक्षं ब्रह्मासि । த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாஸி ।

त्वमेव प्रत्यक्षं ब्रह्मवदिष्यामि । த்வமேவ ப்ரத்யக்ஷம் ப்ரஹ்ம வதிஷ்யாமி ।

ऋतं वदिष्यामि । ருதம் வதிஷ்யாமி ।

सत्यं वदिष्यामि । ஸத்யம் வதிஷ்யாமி ।

तन्मामवतु । தந்மாமவது ।

तद्वक्तारमवतु । தத்வக்தாரமவது ।

अवतुमां । அவதுமாம் ।

अवतु वक्तारं । அவது வக்தாரம் ।

ओं शान्तिः शान्तिः शान्तिः । ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி: ॥

(இதற்கு அர்த்தம் சிக்ஷாவல்லியின் கடைசியில் கொடுத்திருக்கிறது. இந்த சாந்தியை சிக்ஷாவல்லியின் அந்தத்தில் வைத்துக்கொள்ள வேண்டும் என்று சங்கராசாரியரும் இந்த பிரம்மவல்லியின் ஆரம்பத்தில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று வித்தியாரண்யசுவாமிகளும் சொல்லுகிறார்கள்.)

## வி:-I-12-வது அனுவாகம்.

அத்தியயனம் செய்யப்பட்ட உபநிஷத்தின் முடிவில் சொல்ல வேண்டிய சாந்தியை இது கூறுகிறது.

இந்த மந்திரத்துக்கு அர்த்தத்தை முதலிலேயே கொடுத்திருக்கிறது.

12-வது அனுவாகம் முற்றிற்று.

சிக்ஷாவல்லியின் விசிஷ்டார்த்வைத வியாக்கியான தமிழ் மொழிபெயர்ப்பு முற்றிற்று.

---

## து:—I-12-வது அனுவாகம்.

து:-சாந்தி பாடத்தைச்சொல்லி பிரம்மவித்தையை ஆரம்பித்து முடிக்கப்பட்டது அந்த சாந்திபாடமே விக்கின நாசத்தின்பொருட்டும் செய்யத்தக்கது. ஆகையால் அதை மறுபடியும் சொல்லுகிறார்

வாயுவை பிரத்தியக்ஷ பிரம்மமாகச் சொன்ன காரணத்தை உபக்கிரமத்திலேயே சொல்லியிருக்கிறது.

முதலாவது வல்லி முற்றிற்று.

## 2 வது வல்லி.

ஸ்ரீவித்தியாரண்ய சுவாமிகளின் மங்களாசரண சுலோகம்:—

**यस्य निश्वसितंवेदा योवेदेभ्योऽखिलंजगत् ।**
**निर्ममेतमहंवन्दे विद्यातीर्थमहेश्वरम् ॥**
**साधनंब्रह्मविद्यायाः सांहित्यामीरितंस्फुटम् ।**
**वारुण्युपनिषद्येत ब्रह्मतत्वंविविच्यते ॥**

யஸ்ய நிச்வஸிதம் வேதா யோவேதேப்யோ(அ)கிலம் ஜகத் ।
நிர்மமே தமஹம் வந்தே வித்யாதீர்த்தமஹேச்வரம் ॥ (1)
ஸாதநம் ப்ரஹ்மவித்யாயா: ஸாம்ஹித்யாமீரிதம் ஸ்புடம் ।
வாருண்யுபநிஷத்யேத ப்ரஹ்மதத்வம் விவிச்யதே ॥ (2)

அர்த்தம்.

வேதங்கள் எவரிடமிருந்து சுவாசம்போல் உண்டாயினவோ எவர் வேதங்களினின்றும் சமஸ்தஜகத்தை நிர்மாணம் பண்ணினரோ அந்த வித்தியாதீர்த்தரான மஹேசுவரரை நமஸ்கரிக்கிறேன்.

சாம்ஹிதை அத்தியாயத்தில் பிரம்மவித்தையின் சாதனம் வியக்தமாகச் சொல்லப்பட்டது.

வாருணி ஆகிற இந்த உபநிஷத் பாகத்தில் இந்த பிரம்மதத்வம் விசாரிக்கப்படும்.

**हरिः ओं । सहनाववतु । सहनौभुनक्तु ।**
**सह वीर्यं करवावहै । तेजस्वि नावधीतमस्तु ।**
**मा विद्विषावहै । ओं शान्तिः शान्तिः शान्तिः ॥**

ஹரி: ஓம் । ஸஹநாவவது । ஸஹநௌ புநக்து ।
ஸஹவீர்யம் கரவாவஹை । தேஜஸ்வி நாவதீதமஸ்து ।
மா வித்விஷாவஹை । ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: ॥

नौ सह நௌ ஸஹ=எங்களிருவரையும்
अवतु அவது=(பரமேசுவரன்) இரக்ஷிக்கட்டும்.
नौसह நௌஸஹ=எங்களிருவரையும்
भुनक्तु புநக்து=புஜிக்கும்படிச் செய்யட்டும்
नौसह நௌஸஹ=நாங்களிருவரும்
वीर्यं வீர்யம்=வித்தையால் உண்டாகும் சாமர்த்தியத்தை
करवावहै கரவாவஹை=அடையவேண்டும்.
नौ நௌ=எங்களால்
अधीतं அதீதம்=அத்தியயனம் செய்யப்பட்ட சாஸ்திரம்
तेजस्वि தேஜஸ்வி=ஸபலமாக ஆகட்டும்
माविद्विषावहै மாவித்விஷாவஹை=நாம் பரஸ்பரம் த்வேஷிக்காமல் இருக்கவேண்டும்.

ओं शान्तिः शान्तिः शान्तिः ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி: । சாந்தியிருக்கட்டும் சாந்தியிருக்கட்டும் சாந்தியிருக்கட்டும்.

அத் வா:—குருவுக்கும்சிஷ்யனுக்கும்எக்காரணத்தாலாவது மனஸ்தாபம் வரக்கூடும். சித்தம் சாந்தமாயிராதவரையில் பிரம்மவித்தையின் பலன் சித்திக்கமாட்டாது. ஆகவே விக்கினங்கள் நிவர்த்தியாகி இருவர்களுடைய மனதும் ஒற்றுமையாயிருக்கும் பொருட்டு சாந்தி மந்திரம் படிக்கப்படுகிறது.

சிஷ்யலக்ஷணம்.

வி-வி:—இந்த ஜன்மத்திலாவது அல்லது சென்ற ஜன்மங்களிலாவது கர்மகாண்டத்திற் சொல்லியநித்தியநைமித்திக கர்மங்களைச்செய்து, ஞானம் சம்பாதிக்க வேண்டுமென்று இச்சைகொண்டவனும், சம்ஹிதோபநிஷத்திற் கூறப்பட்ட உபாசனைகளால் அந்தர்முகனாகி ஏகாக்கிர சித்தனாகவும், காம்மிய கர்மங்களால் சித்திக்கக்கூடிய லோகங்கள் அசாரங்கள் என்று பார்த்து வைராக்கியத்தை அடைந்தவனும், கர்மத்தால் முக்திகிடைக்கமாட்டாது என்கிற நிச்சயத்தால்மோக்ஷ சாதகமானபிரம்மவித்தையை அப்பியசிக்கும்பொருட்டு குருவை அடைகிறவனும் எவன் இருக்கிறானோ அப்படிப்பட்ட சிஷ்யன்தான் இவ்விடத்தில் கூறப்படுகிறான்.

குருலக்ஷணம்.

வி-வி—வேதாத்தியயனம் செய்து, வேதசாஸ்திரார்த்தத்தை பூர்ணமாகத் தெரிந்துகொண்டு பிறருக்குபோதிக்கும் சாமர்த்தியமுள்ளவராயும், எப்போதும் பிரம்ம நிஷ்டனாயிருப்பதால் எக்காலத்திலும் மனதை பாஹ்ய விஷயங்களில் பிரவிர்த்திக்கச் செய்யாமலுமிருக்கிறவர் குரு. இதற்குப் பிரமாணவாக்கியங்கள்:—முண்டகம் I-2-12-கடம் II-7.

குருவானவர் கிருதகிருத்தியராக இருப்பதால் அவருக்கு ஆகவேண்டியது ஒன்றுமில்லாவிட்டாலும் சிஷ்யன் இருவர்களின் க்ஷேமத்தையும் பிரார்த்திக்கிறான்.

பிரம்ம வல்லி.

வி:-அத்தியயனம் பண்ணப்பட்ட மந்திரமானது.

---

## தைத்திரீய உபநிஷத்து.

### பிரம்மவல்லி.

அ:—அ—கை:—எந்த வித்தையைஅப்பியசிக்கும் முன் அப்பியசிக்கவேண்டியதாக வித்தைகள் (முந்தினவல்லியில்) உபதேசிக்கப்பட்டனவோ, அந்தவித்தையை (இந்த பிரம்மவல்லியில்) சொல்லும்பொருட்டு விக்கின நாசநிமித்தம் சாந்தியைச் சொல்லுகிறார்.

அத்:— (1) सहनौ अवतु ஸஹ நௌ அவது :—

ச-பா:—சிஷ்யன், குரு, ஆகிய எங்களிருவர்களையும் பிரம்மம் இரக்ஷிக்கட்டும்.

வி-வி:—எந்த பிரம்மத்தை குருவினுடைய பிரசாதத்தால் நான் அறியப்போகிறேனோ அந்த பிரம்மம் எங்களிருவரையும் இரக்ஷிக்கட்டும்,

सहनौभुनक्तु ஸஹ நௌ பு நக்து :—

ச-பா:—நாமிருவரும் அனுபவிக்கும்படி பிரம்மம் செய்யட்டும்.

வி-வி:—உபதேசிக்கும் காலத்தில்குருவானவர் எப்படி ஆலசியமன்றியில் உபதேசிப்பாரோ, அந்த உபதேசத்தை பூர்ணமாயும் சந்தேகமன்றியிலும் நான் எப்படி கிரகிப்பேனோ, அப்படி எங்களிருவரையும் பிரம்மம் இரக்ஷிக்கட்டும். இருவர்களுடைய இரக்ஷணையும் ஒரேகாலத்தில் ஏற்படுவதற்காக सह ஸஹ என்கிற பதம் உபயோகிக்கப் பட்டிருக்கிறது. உபதேசித்த விஷயத்தை கிரகிப்பதினால் எப்படி என்னுடைய அவித்தை நிவர்த்தியாகி அப்படி நிவர்த்தியானதை ஆசாரியர் எப்படி சந்தோஷப்படுவாரோ, அப்படி பிரம்மம் எங்களை இரக்ஷிக்கட்டும் என்பதாய் சிஷ்யன் பிரார்த்திக்கிறான். அவித்தியா நிவர்த்தியே பிரம்ம வித்தையின் பலன் அதையே சிஷ்யன் முதலிலேயே பிரார்த்திக்கிறான்.

---

வி:-नौ நௌ=குருசிஷ்யர்களான இருவர்களை

सह ஸஹ=சேர்த்து

अवतु அவது=இரக்ஷிக்கட்டும்.

இரண்டு பேர்களுக்குள்ளே ஒருவருக்கும் தோஷம் உண்டாகவேண்டாம் என்பது கருத்து. திரும்பியும் அதையே பிரார்த்திக்கிறான்.

भुनक्तु பு நக்து=பாலனம் பண்ணட்டும். அத்தியயனம் செய்யப்பட்ட மந்திரங்களால்

---

து:—(1) नौ நௌ=குருசிஷ்யர்களாகிய எங்களை

सह ஸஹ=ஒரேகாலத்தில்

अवतु அவது=(பரமாத்மா எங்களிருவர்களிடத்திலும் ஒரேகாலத்தில் பிரவேசிக்கட்டும்.)

(2) नौसह நௌ ஸஹ=(முன்போலவே)

भुनक्तु பு நக்து=அன்னாதிகளைக் கொடுத்து இரக்ஷிக்கட்டும்,

**அத்:**—(3) सहवीर्यं करवावहै ஸஹவீர்யம்கரவாவஹை :—

**ச-பா:**—வித்தையால் ஏற்படக்கூடிய சாமர்த்தியம் எங்களுக்கு இருக்கட்டும்.

**வி-வி:**—மேற்சொன்ன பிரயோஜனம் சித்திக்கும் பொருட்டு சிஷ்யன் பிரார்த்திக்கிறான்:—வித்தையானது அதின் பிரயோஜனத்தைத் தரும்படி நாம் இருவரும் சேர்ந்து நடந்துகொள்ள வேண்டும்.

(4). तेजस्वि ...अस्तु தேஜஸ்வி அஸ்து :-

**ச-பா:**—எங்களுடைய அத்தியயனமானது தேஜஸ்வி அதாவது காந்தியுள்ளதாக ஆகட்டும், பிரகாசிக்கட்டும் அதாவது உபதேசத்தின் அர்த்தஞானம் நமக்குண்டாகட்டும்.

வி-வி:—மேற்சொன்ன பிரயோஜனம் சித்திக்கும்பொருட்டு சிஷ்யன் உபாயத்தைப் பிரார்த்திக்கிறான். குரு சிஷ்யர்களான நாம் படித்த கிரந்தங்கள் அவைகளிலுள்ள தத்துவத்தைப் பிரகாசிப்பிக்கிறதினால் பிரயோஜன முள்ளவைகளாக ஆகட்டும்.

---

**வி:**-वीर्यं வீர்யம்=அந்த அந்த பலத்தை உண்டுபண்ணும்படியான சாமர்த்தியத்தை

**வி:**-सह ஸஹ=சேர்த்து

करवावहै கரவாவஹை=பண்ணவேண்டியது என்று அர்த்தம்.

नौ நௌ=எங்களுடைய

अधीतं அதீதம்=அத்தியயனம் பண்ணப்பட்ட வேதமானது

तेजस्वि தேஜஸ்வி=மிகவும் வீர்யமுள்ளதாக

अस्तु அஸ்து =இருக்கட்டும்

---

**து:**-(3) वीर्यंसह करवावहैः வீர்யம்ஸஹ கரவாவஹை=பிரம்மவித்தையை வியாக்கியானம் செய்கிற விஷயத்தில் எங்களிருவருக்கும் பலம் சமமாகக் கொடுக்கட்டும்.

(4) तेजस्विनौ (भवौ) தேஜஸ்விநௌ (பவௌ)=நாங்களிருவரும் வர்ச்சஸுள்ளவர்களாக ஆகவேண்டும்.

अधीतं அதீதம் = எங்களுடைய அத்தியயனம்

अस्तु அஸ்து=பலத்தைக் கொடுக்கிறதா யிருக்கட்டும்.

அத்:—(5) मा विद्विषावहै மாவித்விஷாவஹை:=

ச-பா:—வித்தையை உபதேசிக்கிற சமயத்தில் குருவாவது சிஷ்யனாவது தெரியாமற்செய்த எந்த காரியத்தினாலாவது இருவர்களுக்கும் மனோவருத்தம் உண்டாகக்கூடும். அது உண்டாகாமல் இருப்பதற்காக இந்த "நாம் துவேஷிக்கும்படியான சந்தர்ப்பம் நேரிடவேண்டாம்" என்பதாய் பிரார்த்தனை.

வி-வி:—குருவானவர் செவ்வையாகக் கற்றுக்கொடுக்க வில்லை என்கிற சிஷ்யனுடைய அதிருப்தியே அவனுடைய துவேஷம். சிஷ்யன் செவ்வையாக சுசுரூஷை செய்யவில்லை என்பதாய் குருவினுடைய அதிருப்தி அவருடைய துவேஷம். இவ்விரண்டும் உண்டாகக்கூடாது என்பது பிரார்த்தனை.

பிரணவசாந்தி சப்தங்களுக்குவியாக்கியானம் முன்போலவே. இந்த வல்லியில் சாந்தி மந்திரத்தை முதலாவது அனுவாகமாகவும் பாக்கி கிரந்தம் முழுமையையும் இரண்டாவது அனுவாகமாகவும் பாவிக்கவேண்டியது என்பதற்கு ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகள் சொல்லிய காரணத்தை முகவுரையில் 7-வது பக்கத்தில் பார்த்துக்கொள்ளவும்.

---

வி:—माविद्विषावहै மாவித்விஷாவஹை=விரோதத்தை அடைய மாட்டோம். அதாவது

ஒருவரோடு ஒருவர் சேர்ந்து பிரீதி உடையவர்களாக ஆய்விடுவோம் என்பது கருத்து. இருவர்களுக்குள் ஒருவருக்காவது விரோதமிருக்குமேயானால் அத்தியயனம் செய்யப்பட்ட மந்திரத்தின் வீரியத்துக்குக் குறைவு உண்டாகிவிடுகிறது என்பது கருத்து.

शान्तिः ஶாந்தி:= 3 தடவை:—இதரதோஷங்களுக்கும் சாந்தியிருக்கட்டும் என்பது கருத்து.

---

து:—(5) माविद्विषावहै மாவித்விஷாவஹை=பிரம்ம வித்தையைக்கற்கிற நிமித்தியமாக சிஷ்யனுடைய அல்லது குருவினுடைய பிரமாதத்தால் அபராதம் சம்பவித்து அதினால் உண்டாகக்கூடிய துவேஷம் நம்மிருவருக்கும் உண்டாகவேண்டாம்.

(6) ओं ஓம்=இந்த பதத்தால் வாச்சியரான விஷ்ணுவால் [ ]
शान्तिः ஶாந்தி:=சாந்தி(ஏற்படட்டும்)

மூன்று தடவை சொன்னதின் பிரயோஜனத்தை முந்தினவல்லியிற் பார்த்துக்கொள்க.

அத்:—இந்த வல்லியின் விஷயம் பிரம்மவித்தை.

ச-பா:—முதலாவது வல்லியில் (1) கர்மங்களுக்கு விரோதமாகாத ஸம்ஹிதை முதலியவைகளின் உபாசனைகள் முதலில் கூறப்பட்டன. (2) பிறகு ஸ்வாராஜ்ஜிய பலத்தைக் கொடுக்கக்கூடிய ஸோபாதிபிரம்மத்தின் உபாசனை வியாஹ்ருதிகள் மூலமாகக் கூறப்பட்டது. இவைகளாலேயே சம்சாரபீஜம் நிச்சேஷமாய் நிவிர்த்தியாகமாட்டாது. ஆகையால், சகல உபத்திரவங்களின் பீஜமான அஞ்ஞானத்தை நிவிர்த்திக்கும் பொருட்டும், சர்வ உபாதியற்ற ஆத்ம ஞானத்தை உபதேசிக்கும் பொருட்டும் இந்த வல்லி ஆரம்பிக்கப்படுகின்றது.

வி-வி:—முந்தின மந்திரத்தில் துவேஷம் முதலிய சம்பவிக்கக்கூடிய விக்கினங்களை பரிகரிக்கும் பொருட்டு ஜபிக்கவேண்டியதைச்சொல்லி, இந்த அனுவாகத்தின் ஆரம்பத்தில் சகல உபநிஷத்துக்களின் சாரத்தை சுருக்கமாக சூசிகூறுகிறது.

(1) ओं ब्रह्मविदाप्नोति परम् ॥ 1 ॥

ஓம் ப்ரஹ்மவிதா³ப்நோதி பரம் ॥ 1 ॥

ब्रह्मवित् ப்ரஹ்மவித்=பிரம்மத்தை அறிகிறவன்
परम् பரம்=பரமானதை
आप्नोति ஆப்நோதி=அடைகிறான்.

---

முதலாவது அனுவாகம்.

வி:—பரமதத்துவமாயும் ஹிதமாயுமிருக்கிற புருஷார்த்தத்தைக் கூறுகிற ஆநந்தவல்லி ஆரம்பிக்கப்படுகின்றது.

ब्रह्मविदाप्नोतिपरं ப்ரஹ்மவிதா³ப்நோதிபரம்:—இதில் பெரியதான வஸ்துவை உபாசிக்கிற புருஷன் எல்லாவற்றையும்விட உத்கிருஷ்டமான வஸ்துவை அடைகிறான் என்பது அர்த்தம்.

---

து:—முதலாவது அனுவாகம்.

(1) அ-கை:—பிரதானமான பிரம்மவித்தையைச் சொல்லுகிறார்.

ब्रह्मवित् ப்ரஹ்மவித்=பரப்பிரம்மஞானி
परं பரம்=பிரம்மத்தை
आप्नोति ஆப்நோதி=அடைகிறான்.

இதனால் பரப்பிரம்மத்தை அடையவேண்டும் என்று இச்சிக்கிறவன் பரமான பிரம்மவித்தையுடன் கூடினவனாக ஆகிறான்.

அத்:—சு-வா:—பிரம்மஞானத்தை அபேக்ஷிக்கிறவன் கர்மங்களைப் பரித்தியாகம் செய்யவேண்டியது. எவன் நித்திய கர்மங்களைச் செய்வதில் அந்தக்கரண சுத்தியை அடைந்திருக்கிறானோ, ஸ்வப்நத்தில் பார்க்கப்படும் புத்திரன் முதலானவர்களிடத்தில் எப்படி பற்றுதலை ஒருவன் அடையமாட்டானோ எப்படி எவன் கர்மபலனில் பற்றுதலை அடையவில்லையோ, அப்படிப்பட்டவனுக்குத்தான் பிரம்மவித்தை ஏற்பட்டிருக்கிறது. சுருதியுக்தி அநுபவங்களால் கர்மபலன் நசுவரம் என்று அறிந்தவன் அதை நரகம் போல் வெறுத்து விடுகிறான். சகல இச்சைகளுமற்ற மோக்ஷம் அஞ்ஞானத்தால் அடையப்படாமலிருக்கிறது. ஆகையால் இந்த அஞ்ஞானத்தை நாசம் செய்து பிரம்மத்தைச் செவ்வையாக தபலால் (III-2) அறியவேண்டும் என்றும், அந்த பிரம்மம் (III-1) சகலத்தின் உற்பத்திக்குக் காரணமென்றும் பிரம்மஞானத்தை சுருதி போதிக்கிறது. கர்மசம்பந்தமான இந்த கோசங்களை எல்லாம் விட்டுவிட்டு இவைகளில் மறைபட்டிருக்கிற பிரம்மத்தை அறிவதே பிரம்மஞானத்துக்குச் சாதகம் என்று சுருதி போதிக்கிறது.

## அவித்தியா நிவிர்த்தியே பரமபிரயோஜனம்.

ச-பா:—இந்த பிரம்மவித்தையின் பிரயோசனம் அவித்தியா நிவிர்த்தியே. இதனால் சம்சாரம் நிச்சேஷமாய் நிவிர்த்தியாய் விடுகிறது.

विद्वान् न बिभेति कुतश्चन வித்வாந்நபிபேதி குதஶ்சந அதாவது பிரம்மத்தை அறிந்தவன் எதினாலும் பயத்தை அடைகிறதில்லை என்பதாய் தைத்திரீய II-9-வது சுருதி சொல்லுகிறது.

சம்சாரத்தின் காரணமிருக்கும் வரையில்:—

---

வி:—आवृत्तिरसकृदुपदेशात् ஆவ்ருத்திரஸக்ருதுபதேசாத் என்கிற பிரம்மசூத்திர (IV-1-1) அதிகரண நியாயப்படி வேதன உபாசனாதி சப்தங்கள் ஏகார்த்தமாகையால் பிரம்மவித் என்பதிலிருக்கிற வித் சப்தத்திற்கு உபாசனை என்று அர்த்தம். तत्क्रतु தத்க்ரது நியாயப்படி (அதாவது) எவன் எந்த வஸ்துவை எப்படி தியானம் செய்கிறானோ அவன் அந்த வஸ்துவை அப்படியே அடைகிறான் என்கிற நியாயப்படி) அடையத்தகுந்த வஸ்துவே உபாசிக்கத்தகுந்தது. ஆகையால் ब्रह्मविदाप्नोति परं ப்ரஹ்மவிதாப்நோதிபரம் என்கிற வாக்கியத்தில், பரப்பிரம்மம் அடையத்தகுந்தது என்று சொல்லியிருப்பதால் அதுவே உபாசிக்கத்தகுந்தது என்று அறியவேண்டியது.

அத:—(1) अभयंप्रतिष्ठांच विन्दते । அபயம் ப்ரதிஷ்டாம் ச விந்ததே ।

அதாவது :—பயமற்றதை ஸ்திரமான ஸ்தானமாக அடைகிறான், என்னும் சுருதி (II-7) வசனம் பொருந்தமாட்டாது. அப்படியே (2) செய்யப்பட்டதும் செய்யப்படாததுமான புண்ணிய பாபங்கள் नतपति நதபதி அதாவது அவனை தஹிக்கமாட்டா என்னும் (II-9) வசனமும் பொருந்தமாட்டாது. ஆகையால் சகலத்துக்கும் பிரம்மம் ஆத்மா என்கிற ஞானத்தால் ஸம்ஸார நிவிர்த்தி ஏற்படும் என்று நாம் அறிகிறோம்.

ब्रह्मविदाप्नोतिपरं ப்ரஹ்மவிதாப்நோதிபரம் என்பதினால்; சுருதியானது பிரம்மவித்தையின் சம்பந்தத்தையும் பிரயோசனத்தையும் காட்டும் பொருட்டு பிரயோசனத்தை முதலிலேயே கூறுகிறது. சம்பந்தமும்பிரயோசனமும் தெரிந்ததின் பேரில்ஒருவன் வித்தையை சிரவணம் செய்வான், கிரகிப்பான், மனதில் தரிப்பான். சிரவணாதிகளால் வித்தை பலத்தைக்கொடுக்கும்.

श्रोतव्योमन्तव्योनिदिध्यासितव्यः ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய: । அதாவது ஆத்மா சிரவணம் பண்ணத்தக்கது, மனனம் செய்யத்தக்கது என்பதாய் பிரஹதாரணியக (II-4-5) சுருதி கூறுகிறது.

சு-வா:—ஒரு பிரயோசன மன்றியில் ஒருவனும் ஒன்றிலும் பிரவிர்த்திக்கமாட்டானாகையால்; பிரம்ம வித்தையில் பிரவிர்த்திப்பதற்குச் சாதகமான பிரம்மப் பிராப்தியாகிற பிரயோசனத்தையும் அதை அடைய உபாயமான வித்தையையும் இரண்டையும் சுருதியானது ब्रह्मविदाप्नोति परं ப்ரஹ்மவிதாப்நோதிபரம் என்கிற வசனத்தால் கூறுகிறது.

ब्रह्मवित् ப்ரஹ்மவித் பிரம்மம் என்பதினால் இனி சொல்லப்போகிற இலக்ஷணமுள்ளது என்று அறியத்தக்கது. மிகவும் அதிகமாய் பெரியதாயிருக்கிறதினால் (बृहत्तम ப்ருஹத்தம) பிரம்மம். இதை எவன் அறிகிறானோ அவன் பிரம்மவித். அவன் பரத்தை அடைகிறான்.

परम् பரம்=நிரதிசயமான பரப்பிரம்மம். வேறு ஒன்றை அறிவதினால் இன்னும் வேறு ஒன்று அடையப்படுகிறதில்லை.

सयोहैवतत्परमं ब्रह्मवेदब्रह्मैवभवति ஸயோஹவைதத்பரமம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி

அர்த்:—அதாவது :—எவன் பரமான பிரம்மத்தை அறிகிறானோ அவன் பிரம்மமாகவே ஆகிறான் என்கிற முண்டக (III-2-9) சுருதியும் பிரம்மஞானிக்கு பிரம்மபிராப்தி அவசியம் கிடைக்கிறது என்பதாகவே கூறுகிறது.

## பிரம்மபிராப்தி வசனம் ஔபசாரிகம்.

ஆக்ஷேபம்:— சுருதியானது பிரம்மம் எங்குமிருக்கிறதென்றும் சர்வத்துக்கும் ஆத்மாவென்றும் சொல்லுகிறது. ஆகையால் பிரம்மத்தை அடையக் கூடியதாக சொல்லக்கூடாது. ஒரு பதார்த்தம் வேறு ஒரு பதார்த்தத்தால் அடையப்படுவதையும், பரிச்சின்னமான ஒன்று பரிச்சின்னமானவேறு ஒன்றால் அடையப் படுவதையும் பார்த்திருக்கிறோம். பிரம்மம் அபரிச் சின்னமாயிருப்பதினாலும், சகலத்துக்கும் ஆத்மாவாயிருப்பதாலும், பிரம்மத்தை பரிச்சின்னம் போலும் ஆத்மாவைவிட வேறுபோலும் பாவித்து பிரம்மத்தை அடைவதாகச் சொல்லுவது அயுக்தம். (த-வா:—அடைதல் என்கிற பதமே தேசகால சம்பந்தத்தையும் அடைகிற கர்த்தாமுதலான பேதத்தையும் குறிப்பிடுவதால் தேசகாலாதிகளால் பாதிக்கப்படாத பிரம்மத்தை அடைவதாக எப்படிச் சொல்லலாம்,)

சித்தாந்தம்:— இதில் தோஷமில்லை. எப்படியெனின்— பிர்மத்தை அடைவதும் அடையாததும் பிர்மத்தைப் பார்ப்பதையும் பார்க்காமையையும்பொறுத்திருக்கிறதும்,(அதாவது)ஜீவன் வாஸ்தவத்தில் பிர்மஸ்வரூபமாயிருந்தும், பஞ்சபூதங்களால் ஏற்பட்டும் (தனக்கு) பாஹியமாயும், பரிச்சின்னமாயும் இருக்கிற அன்னமயாதி சரீரங்களை தானாகப்பாவித்து அவைகளிலேயே ஆஸக்தியுள்ள சித்தத்துடன் கூடினவனாக ஆகிறான், தனக்கு அன்னியமாயிருக்கிறவர்களின் சங்கியை (எண்ணிக்கை) கவனிக்கிறவன் அந்த சங்கியையை பூர்த்திசெய்ய சமீபத்தில்தானிருந்தும் தன்னை எப்படி பார்க்கவில்லையோ, அப்படி, ஜீவன்தான் வாஸ்தவத்தில் பிர்மஸ்வரூபம் என்பதை அறியாமல் அவித்தையால் தனக்கு வேறாயிருக்கிற அனாத்மாக்களான அன்னமயாதிகளை தானாக பாவித்து, அவைகளைவிட தான் வேறாக இருக்கவில்லை என்பதாய் பாவிக்கிறான், இவ்விதமாக அவித்தையால் பிர்மம் தன் ஸ்வரூபமாயிருந்தும் அடையப்படாததுபோ லிருக்கிறது. சங்கியையை பூர்த்தி பண்ண வேண்டியதற்காக தன்னை அஞ்ஞானத்தால் மறந்துபோனவன் வேறு ஒருவனால் ஞாபகப் படுத்தினதின்பேரில் தன்னை எப்

அத்:—படி அறிந்து கொள்ளுகிறானோ அப்படி ஜீவனும் அவித்தையால் பிர்ம்பஸ்வரூபம்தான்தான் என்பதாய் அறியாதிருந்தும், சர்வாத்மாவான பிர்ம்மம் சுருதியிற் சொல்லியபடி தான்தான் என்பதாய் அறிந்து இந்த ஞானத்தால் பிரம்மத்தை அடைவதாகச் சொல்லுவது பொருந்தும்.

**வி-வி:**-பிரம்மஞானத்தால் முக்திசித்திக்கின்றது என்பதுமுழு உபநிஷத்தின் தாற்பரியம். பிரம்பம் என்னும்பதம் பிர்ஹ என்னும் பகுதியிலிருந்துவருவது. இந்தப் பகுதிக்குபெரிது, அல்லது பெரிய வஸ்து என்று அர்த்தம், பிரகரணத்திலாவது அல்லது சமீபத்திலிருக்கிற பதங்களாலாவது இந்த வஸ்து ஒருஅளவுக்குள் அகப்பட்டது என்று தெரிய வராததால் இது நிரதிசயமான பெரியவஸ்து. இதைவிட பெரிதானது ஒன்றுமில்லை என்று அறியத்தக்கது. பிரகிருதத்தில் ஒன்றுமில்லை என்று அறியத்தக்கது. பிரகிருதத்தில் ஒன்றை அபேக்ஷித்து ஒன்று பெரிது என்பதாய் ஒரு வஸ்துவைப் பற்றி பிரஸ்தாபம் ஏற்பட்டிருந்தால், அல்லது பரிச்சேதத்தைக் காட்டும்படியான எதாவது பதமிருந்தால் அப்போது அவ்வஸ்து விஷயத்தில் சங்கோசம் ஏற்படக்கூடும். இவ்விரண்டு மிவ்விடத்தில்லை. ஆகையால் நிரதிசய பெருந் தன்மையையே கிரகிக்க வேண்டியது. இந்த நிரதிசய பெருந் தன்மையானது நித்திய சுத்தமுதலிய ரூபம். இப்படியே ஸ்ரீ சங்கராசாரியாரவர்கள் வேதாந்த சூத்திர (சாரீரகமீமாம்சா) பாஷ்யத்தில் சொல்லி யிருக்கிறார். இதுவே அர்த்த மென்பதுஇவ்விடத்தில் பிர்ம்மத்துக்குக்கொடுக்கப் பட்ட சத்தியம், ஞானம், அநந்தம் என்கிற லக்ஷணங்களாலும் ஸ்பஷ்டமாயும் தெரிய வருகிறது.

**வி-வி:**—பிரம்மம் ஞேயம்:- இப்படிப்பட்ட பிர்ம்மத்தைஎவன் வேத்தி மனதால் சாக்ஷாத்கரிக்கிறானோ அவன் பிரம்மவித். பிருஹதாரண்ய உபநிஷத்தில்.

मनसैवानुद्रष्टव्यं नेहनानास्तिकिंचन மநஸைவாநுத்ரஷ்டவ்யம் நேஹநாநாஸ்திகிஞ்சந

அதாவது :—மனதினாலேயே பிரம்மத்தை சாக்ஷாத்கரிக்க வேண்டியது. இவ்விடத்தில் துவைதமில்லை என்பதாய் IV-4-19ல் சொல்லியிருக்கிறது. சக்ஷுராதி இந்திரியங்களுடன் கூடின மனதினால் நாமரூபங்களுடன் கூடின பிரம்மத்தைத்தான் கிரகிக்க முடியும். சுத்தப்பிரம்மத்தை கிரகிக்கமுடியாது: கேவலம் மனதினால் தான் சுத்த பிரம்மத்தை கிரகிக்கமுடியும். சுருதி யன்றியில்

அத்:—கேவலம் மனதில் மட்டும் பிரம்மத்தை அறிய முடியாதே எனின், அனுதிர்ஷ்டவ்யம் என்கிற பதத்தாலேயே பிரம்மத்தைப் பிரதிபாதிக்கிற சாஸ்திரத்துக்கு அனு அதாவது பிறகு பிரம்மம் திர்ஷ்டவ்யம் அதாவது முதலில் சுருதியால் தெரிந்துகொண்டு பிறகு அதை மனதினால் தான் சாக்ஷாத்கரிக்கவேண்டியது என்று அறியவேண்டியது.

வி-வி:—இந்த பிரம்மமும் ஆத்மாவும் ஒன்றே. சாஸ்திரத்தால் அறியப்பட்டது என்று சொல்லும் போது பிரம்மம் என்று பெயர், மனதினால் பிரத்தியக்ஷமாய்ப்பார்க்கப்படும்போது ஆத்மாஎன்றுபெயர் பிரம்மம் ஜகத்காரணம், சர்வஞ்ஞம், இவைமுதலிய விஷயங்களை சுருதியால் அறியவேண்டியது. இவைகள் பரோக்ஷமாய் இருப்பதால் பிரம்மமும் பரோக்ஷம் என்கிற பிராந்தி உண்டாகிறது. பிரத்தியக்ஷமாய் பார்க்கப்படும் தேகாதிகள் அப்பிரம்மமாயிருப்பதால் அவைகளின் சாட்சி சைதன்னியமும் அப்பிரம்மம் என்கிற பிராந்தி உண்டாகிறது.

இக்காரணங்களால் பிரம்மத்துக்கும் ஆத்மாவுக்கும் பேதம் தோன்றினாலும் மஹாவாக்கிய ஞானத்தால் ஆத்மாவும் பிரம்மமும் ஒன்று என்பதாய் அபரோக்ஷ ஞானம் உண்டாகிறது. இப்படிப்பட்ட ஞானத்துடன் கூடினவன்தான் பிரம்மவித் என்று சொல்லப்படுகிறான்.

இப்படிப்பட்டவன் பரப்பிரம்மத்தை அடைய யோக்கியனாக இருப்பதால் சுருதியானது आप्नोति परं ஆப்னோதிபரம் என்று சொல்லுகிறது.

பர சப்தம் அன்னியம் என்கிற அர்த்தத்தையும்கொடுக்கும். ஆனால் அந்த அர்த்தம் இவ்விடத்தில் உத்தேசிக்கப் படவில்லை. ஏனெனின் பிரம்மம் இரண்டற்றது; नेह नानास्ति किंचन நேஹ நாநா ஸ்திகிஞ்சந என்கிற பிரஹதாரணியக (IV-4-19) சுருதியும் துவைதத்தை நிஷேதிக்கிறது. உத்கிருஷ்டம் என்கிற அர்த்தத்தை எடுத்துக்கொண்டால் பர சப்தத்தால் பிரம்மத்தையே அறியவேண்டியது. ஏனெனின் பிரம்மத்தைத் தவிர சகலமும் மாயாசம்பந்தமடைந்திருப்பதால் நிகிருஷ்டம். ஆகையால் பிரம்மவித் ஆப்னோதிபரம் என்பதில் பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மத்தையே அடைகிறான் என்று ஏற்படுகிறது.

ஆதர்வணிகர்களும்.

सयोहवैतत्परमंब्रह्म वेदब्रह्मैवभवति (III-2-9

ஸயோ ஹவை தத்பரமம் ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி ( மு - III - 2 - )

அதாவது :—பரப்பிரம்மத்தை எவன் அறிகிருனே அவன் பிரம்மமாகவே ஆகிருன் என்று சொல்லுகிருர்கள்.

ஆக்ஷேபம் :— "கிராமத்தை அடைந்தான்" என்கிற இடத்தில் நடை, கிராம சம்பந்தம் இரண்டும் ஏற்படுகிறது. சகுண பிரம்மோபாசகன் சிரசிலுள்ள நாடிவழியாக வெளியே சென்று அர்ச்சிராதி மார்க்கமாய் பிரம்மலோகத்தை அடைகிருன் என்று சொல்லியிருக்கிறது. அப்படியே இவ்விடத்திலும் பிரம்மத்தை அடைகிருன் என்பதினுல் அறியவேண்டியது.

சித்தாந்தம் :— இது சரியன்று. ஏனெனின் வெளியேபோகுதலும் மார்க்கமும் இல்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. नतस्यप्राणा उत्क्रामन्ति நதஸ்யப்ராணா உத்க்ராமந்தி (அவனுடைய பிராணன்கள் வெளியே போகவில்லை) என்பதால் வெளியேபோகுதல் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது.

அப்படியே மார்க்கமும் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மவித்தானவன் சகல பிராணிகளையும் தன் ஆத்மாவாக பார்க்கிருன். அவனுடைய மார்க்கத்தை தேவதைகளும் அறிகிறதில்லை. தேவதைகள் பிராணிகளை உத்தராயண, தக்ஷிணாயன, கீழ், மார்க்கங்களைக் கொண்டு போகிருர்கள். அதாவது உபாசகர்களையும் யஞ்ஞாதிகளைச் செய்கிறவர்களையும், பாபிகளையும் கொண்டுபோகும் மார்க்கத்தை தேவதைகள் அறிகிருர்கள். பிரம்மவித்துக்கு ஒரு தனிமார்க்கம் ஏற்படாததால் அதை தேடுகிறவர்கள் பிரமையை அடைகிருர்கள். ஆகையால் பிரம்மத்தை அடைதல் என்பது ஔபசாரிகமே. ஞானமுண்டாவதற்கு முன்னும் அவன் பிரம்மம் தான். ஆயினும் அஞ்ஞானத்தால் ஜீவன்என்கிறபிராந்தியை அடைந்து, ஞானமுண்டானபின் தான் தான் பிரம்மம் என்கிற அனுபவத்தை அடைகிருன், ஜீவன் என்கிற உபாதி ஞானம் நசித்துப் போகிறது. கழுத்தி லிருக்கிற நகையைமறந்து பக்கத்தில்தேடுகிருள். வேறு ஒருவனுல் ஞாபகப் படுத்தினதின் பேரில் நகையை தொட்டுபார்த்து நகையை பெற்றேன் என்பதாய் உபசாரமாகச் சொல்லுகிருன். அப்படியே பிரம்ம பிராப்தியும் ஔபசாரிமே. (பிரம்மத்தின் ஸ்வரூபத்தை இனி சுருதியே விவரிக்கிறது. அதற்கு முன் ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகள் பிரம்மஞான விஷயமாயும், பரப்பிராப்தி விஷயமாயும் சில விசாரம் செய்கிருர். விஸ்தார பயத்தால் இவைகளின் தீர்மான அர்த்தத்தை மட்டும் அடியில் கொடுக்கப்படும்.)

## கேவலஞானம் புருஷார்த்த சாதனம்.

அத்:-பிரம்மவித் என்பதில் பிரம்மத்தின் யாதொருஞானம் கூறப்படுகிறதோ அதுசுவதந்திரமாகவே புருஷார்த்தத்துக்கு ஹேதுவென்பது பிரம்மசூத்திரம் III-4-1 ல்விசாரிக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஞானமானது இந்த ஜன்மத்திலாவது வரும் ஜன்மத்திலாவது சித்திக்கும் என்பது பிரம்மசூத்திரம் III-4-5ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

பிரம்மத்தைத் தவிர மற்றதெல்லாம் மித்தையானதால் பரசப்தத்தால் வேறு என்கிற அர்த்தத்தை கிரகிக்கக்கூடாது. நிரதிசயமான சிரேஷ்டம் என்கிற அர்த்தத்தை கிரகிக்கவேண்டுமென்று முன் சொல்லப்பட்டது. பிரம்மத்தைத் தவிர மற்ற சகலத்தின் மித்தியாஸ்வரூபம் பிரம்மசூத்திரம் III-2-(31-37)ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

பிரம்மவித்தின் பிராணன் வெளியேபோகவில்லை என்கிற விஷயம் பி-சூ-IV-2 (12-14-) ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

பரப்பிரம்மத்தை அடைதல் என்பது எந்த உபாதியால் ஆத்மாவானவன் ஜீவன் என்பதாய் ஏற்படுகிறதோ அந்த உபாதி நாசமே என்று முன் சொல்லப்பட்டது. இந்த உபாதிநாசம் பி-சூ-IV-2-15 ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

இந்த உபாதி நாசத்தின்பேரில் ஏற்படும் மோக்ஷஸ்வரூபம் பி-சூ- IV-4- (1-3) ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மஸ்வரூபமே மோக்ஷஸ்வரூபம். மோக்ஷமடைந்த ஜீவன் பரப்பிரம்மத்தைவிட வேறல்ல வென்பதுபி சூ VI-4-4 ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

பிரம்மம் சோபாதிகம் என்பதும் நிருபாதிகம் என்பதும் பி-சூ IV-4-(5-7) ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

இவ்விடத்தில் சொல்லிய முக்தியானது பரமஅவஸ்தை என்பது பி-சூ III-4-52 ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

### II-உதாஹரணரிக்கு.

வி-வி:—ब्रह्मविदाप्नोतिपरं ப்ரஹ்மவிதாப்நோதிபரம் என்கிற வாக்கியத்தினால் சுருதியானது சாதனமான ஞானத்தையும் பலமான மோக்ஷத்தையும் சுருக்கமாய் தெரிவித்தது. இவைகளின் ஸ்வரூபம் வேதாந்த சூத்திரங்களில் முற்கூறிய இடங்களில் விவரிக்கப்பட்டிருக்கிறது. சுருக்கமாய்ச் சொன்னதற்கு வியாக்கியானரூபமாய் சுருதியானது இனி ஒரு ரிக்கை உதாஹரிக்கிறது.

அத்:—ச-பா:—ब्रह्मविदाप्नोतिपरं ப்ரஹ்மவிதாப்நோதிபரம் என்கிறது சூத்திரரூபமான வாக்கியம். இது இந்த வல்லியின் முழு அர்த்தத்தையும் சுருக்கமாய் கூறுகிறது. இந்த வாக்கியம் பிரம்மம் அறியத்தக்கது என்று மட்டும் கூறுகிறதேதவிர, அதின் ஸ்வரூபம் இன்னது என்பதாய் நிச்சயிக்கவில்லை. ஆகையால் மற்ற எல்லாவற்றினின்றும் பிரம்மத்தைப் பிரித்துக்காட்டும்படியான லக்ஷணத்தைச் சொல்லவேண்டியது அவசியம். ஆகையால் இந்த லக்ஷணத்தைச் சொல்லும்பொருட்டும், விசேஷமாய் கூறப்படாத பிரம்மம் அடியிற்கண்ட விசேஷணங்களால் பிரத்தியகாத்மாவை விடவேறில்லை என்பதைக் காட்டும்பொருட்டும், பிரம்மஞானியானவன் பிரம்மத்தை அடைகிறான் என்பதாய் யாதொரு பிரம்மவித்தியாபலன் கூறப்பட்டதோ, அது சகலசம்சார தர்மமற்ற பிரம்ம ஸ்வரூபமாயிருப்பதே அதாவது சர்வாத்மபாவமே வேறில்லை என்பதை காட்டும் பொருட்டும் அடியிற்கண்ட ரிக்கானது உதாகரிக்கப்படுகிறது.

(2) तदेषाऽभ्युक्ता । ததேஷா(அ)ப்யுக்தா ।

(3) सत्यं ज्ञानमनन्तं ब्रह्म । ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம ।

**பதவுரை.**

तत् தத்=இந்த பிராமணவாக்கியத்தால் (சூத்திர ரூபமான வாக்கியத்தால்) கூறப்பட்ட அர்த்தத்திலேயே (அதின் அபிப்பிராயத்தை விளக்கும்பொருட்டு)

एषा ஏஷா=அடியில்வரும் ரிக்கு

अभ्युक्ता அப்யுக்தா=கூறப்படுகிறது

வி-வி:—சகல சூத்திரார்த்தமும் இதில் வியக்தமாய் தெரியும் என்பதுகருத்து. சூத்திரரூபவாக்கியத்தில்பிரம்மவித் என்று சொல்லியிருக்கிறது. இது பிரம்மம் என்பதாய் அறியவேண்டுமென்கிற இச்சை ஒருவனுக்கு உண்டாகக்கூடும். ஆகையால் சத்தியம் ஞானம், அநந்தம் பிரம்மம் என்கிற நான்குபதங்களால் பிரம்மஸ்வரூபத்தை சுருதிவிளக்கிவைக்கிறது.

## பிரம்மலக்ஷணம்.

ச-பா:—सत्यं ज्ञानं अनन्तंब्रह्म ஸத்யம்ஜ்ஞாநம் அநந்தம்ப்ரஹ்மஎன்கிற வாக்கியம் பிரம்மத்தின் லக்ஷணத்தைக்கூறுகிறது. சத்தியம், ஞானம், அநந்தம் என்கிற மூன்றுபதங்கள் விசேஷ்யமான பிரம்மத்தின் விசேஷணங்கள். பிரம்மம் விசேஷ்யம். ஏனெனின் அதுவே அறியத்தக்கவஸ்துவாக சொல்லப்பட்டிருக்கிறது. சத்தியம்முதலிய பதங்கள் விசேஷ்ய விசேஷணங்களாக இருப்பதாலேயே ஒரே வேற்றுமையிலிருக்கின்றன, ஒரே விஷயத்தைக் கூறுகின்றன. சத்தியம் முதலிய மூன்று விசேஷணங்களால் பிரம்மமானது மற்ற விஷயங்களினின்றும் வேறுபடுத்தப்படுகிறது. மற்ற வஸ்துக்களினின்றும் பிரித்து அறியப்படும்போதுதான் ஒருவஸ்து அறியப்பட்டதாக ஏற்படுகிறது. திருஷ்டாந்தம்:—நீலமாயும், பெரிதாயும், நல்ல வாசனையுடன் கூடியுமிருக்கிற உத்பலபுஷ்பம் என்பதுபோலும்.

---

வி:-இவ்விடத்தில் பிரம்மம் அதின் உபாஸனை, அதை அடைதல், அடையத்தகுந்த வஸ்து இந்நான்கும் சொல்லப்பட்டது. இந்த பிரம்மம், அதின் உபாஸனை எப்படிப்பட்டவை, அடைதல் எப்படிப்பட்டது, அடையத்தகுந்த வஸ்து எப்படிப்பட்டது இந்த கேள்விகளுக்கு மந்திரபூர்வமாக உத்தரம் சொல்லப்படுகின்றது.

तदभि ததபி=அந்த பிரம்மத்தைக்குறித்து

एषा ஏஷா= இந்த ரிக்கானது

उक्ता உக்தா=அத்தியயனம் பண்ணுகிற புருஷர்களால் சொல்லப்பட்டது. பிராம்மண வாக்கியத்தால் சொல்லப்பட்ட அர்த்தமானது இந்த மந்திரத்தால் பிரகாசம் பண்ணப்படுகிறது என்று அர்த்தம்.

---

து-(2) அ-கை:—பிரம்மத்தின் இலக்ஷணமென்ன? அதை எப்படி அறியலாம். பிரம்ம சப்தத்தால் ஒரு வரம்பில் அடங்காததான பொருள் அர்த்தமாகிறதே அதை சாக்ஷாத்கரிக்க முடியாது மேலும் பிரம்மம் சர்வ வியாபகமாயிருப்பதால் அது எப்போதும் நியமமாக நம்மிடத்திலேயே யிருக்கிறது: இப்படியிருக்க ஞானத்தால் அதை அடையலாம் என்பது எப்படி. இப்படி 3 சங்கைகள் ஏற்படலாம். அவைகளைக்கிரமமாக உபநிஷத்து பரிகரிக்கிறது.

तदभि ததபி=இந்த மூன்று சங்கைகளை உத்தேசித்து அவைகளுக்குச் சமாதானம் சொல்லும்பொருட்டு

एषा ஏஷா=இந்தரிக்

उक्ता உக்தா=சொல்லப்படுகின்றது

அத்:—சு-வா:—அதாவது நீலம், பெரிது, நல்லவாசனை என்கிற விசேஷணங்கள் ஒரு உத்பலத்தை மற்ற உத்பல புஷ்பங்களினின்றும் வேறுபடுத்திக் காண்பிவிக்கிறது மூலமாக உத்பலத்துக்கு லக்ஷணங்களாயிருப்பது போல், சத்தியம் ஞானம் அநந்தம் என்கிற விசேஷணங்களும் பிரம்மத்தை, அநிருத ஜடஸ்வரூபங்களான மற்ற சகல பதார்த்தங்களினின்றும் வேறுபடுத்திக் காட்டுவது மூலமாக பிரம்மத்துக்கு லக்ஷணங்களாக ஏற்படுகின்றன.

## லக்ஷணம் விசேஷ்யமாய் விசாரம்.

ஆக்ஷேபம்:—

ச-பா:—ஒரு விசேஷ்யம் வேறு ஒரு விசேஷணத்தால் குறிப்பிடும்படியாக இருந்தால், பிரகிருதத்தில் ஒரு விசேஷணத்தால் கூறப்படலாம். நீலமாயும் அல்லது சிவப்பாயும் இருக்கிற உத்பலபுஷ்பம் போலும். எப்போது ஒரு ஜாதியிற் சேர்ந்த அநேக வஸ்துக்கள் அநேக விசேஷணங்களுடன் கூடியிருக்கின்றனவோ அப்போது விசேஷணத்துக்குப் பிரயோஜனமுண்டு. வஸ்து ஒன்றாகவேயிருக்கும்போது விசேஷணத்துக்குப் பிரயோஜனமில்லை. எப்படி இந்த சூரியன் ஒருவனோ அப்படி பிரம்மமும் ஒன்று. நீலமான உத்பலத்தை வேறு வர்ணமுள்ள உத்பலத்தினின்றும் பிரித்துக்காட்டுவது போல் பிரம்மத்தைப் பிரித்துக்காட்டும்படியான வேறு பிரம்மங்களில்லை.

வி-வி:—மேற்சொன்ன நீலமாயும், பெரிதாயும் வாசனையுள்ளதாயுமிருக்கிற உத்பலத்தைத் தவிர வேறுவிதமான உத்பலங்களிருக்கின்றன. சிவப்பான உத்பலம்போலும், சிறியதான உத்பலம்போலும் ஸ்வல்பவாசனையுள்ள உத்பலம்போலும். இப்படிப்பட்டவைகள் சாதாரணமாய் பார்க்கப்படுகின்றன. ஆகையால் எந்த உத்பலத்தை மற்ற உத்பலங்களினின்றும் பிரித்துக்காட்டவேண்டுமோ அந்த உத்பலத்துக்கு நீலாதிபதங்கள் விசேஷணங்களாகின்றன. பிரகிருதத்தில் அநிருதம் பிரம்மம் என்றாவது ஜடமான பிரம்மம் என்றாவது பரிச்சின்னமான பிரம்மம் என்றாவது இப்படி பலவிதமான பிரம்மங்களில்லை. எப்படி சூரியன் ஒருவனோ அப்படி பிரம்மமும் ஒன்றே. எந்த பிரம்மங்களினின்றும் இந்த பிரம்மத்தைப் பிரித்துக்காட்டவேண்டுமோ அப்படிப்பட்ட பிரம்மங்களில்லாதபடியால் சத்தியம் முதலிய விசேஷணங்கள் வியர்த்தம்.

அத்:-உத்தரம்.

ச-பா:—இந்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனின், விசேஷணங்கள் லக்ஷணையாக ஏற்பட்டிருக்கின்றன. (அதாவது) விசேஷணங்களுக்குப் பிரயோசனம் லக்ஷணத்தைக் கூறவேண்டுமென்பதாம். கேவலம் விசேஷணங்களாக மட்டும் இருக்கவேண்டு மென்பதன்றும். லக்ஷணத்துக்கும் விசேஷ்யத்துக்கும் வித்தியாசம் என்னவெனின், சொல்லுகிறோம், கேள். ஒரு சாதியிற்சேர்ந்த ஒரு வஸ்துவை அதே ஜாதியிற் சேர்ந்த இதர வஸ்துக்களினின்றும் பிரித்துக்காட்டுவது விசேஷணம். லக்ஷணமோ ஒருவஸ்து மற்றஎல்லா வஸ்துக்களினின்றும் பிரித்துக்காட்டுகிறது. அவகாசத்தைக் கொடுக்கிற ஆகாசம்போலும் இந்த "சத்தியம் ஞானம் அநந்தம் பிரம்மம்" என்கிற வாக்கியம் லக்ஷணத்தைக் கூறுகிறதென்று நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறோம்.

வி-வி:—இந்த ஆக்ஷேபம் சரியன்று. சத்தியாதிபதங்கள் லக்ஷணரூப விசேஷணங்களா யிருக்கின்றன. பிரம்மத்தை பிரித்துக் காட்டவேண்டியதாகவு மிருக்கிறது. கேவலம் விசேஷணமென்பது ஒரு வஸ்துவை அதின் ஜாதியைச் சேர்ந்த இதர வஸ்துக்களினின்றும் பிரித்துக்காட்டுகிறது. லக்ஷணரூப விசேஷணமானது தனக்கு வேறான சகல பதார்த்தங்களினின்றும் பிரித்துக்காட்டுகிறது. இதுதான் இரண்டுக்கும் வித்தியாசம், ஆகவே பிரம்மமாயிராத அசத்திய ஜட பரிச்சின்னங்களான சகல பதார்த்தங்களினின்றும் பிரம்மத்தைப் பிரித்துக் காட்டும்பொருட்டு சத்தியாதிபதங்கள் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. அவகாசரூபமானது ஆகாசம் என்பதாய் சொல்லுமிடத்தில் இந்த ஆகாசத்தைப் பிரித்துக்காட்டும்படியான வேறுசஜாதீயமான ஆகாசமிராவிடினும், விஜாதீயமான ரூபமுள்ள இதர பதார்த்தங்கள் எப்படி விலக்கப்படுகின்றனவோ, அப்படி அசத்தியம் முதலியவைகள் விலக்கப்படுகின்றன.

ச-பா:—சத்தியம் முதலிய சப்தங்கள் ஒன்றுக்கொன்று விசேஷணமாயிருக்கவில்லை. அவைகள் வேறு ஒன்றுக்கு விசேஷணங்களாயிருக்கின்றன. ஒவ்வொரு விசேஷணமும் மற்ற விசேஷணங்களின் அபேக்ஷையன்றியில் சத்தியம் பிரம்மம், ஞானம்பிரம்மம், அநந்தம் பிரம்மம், என்பதாய் பிரம்மத்துடன் நேரில் சம்பந்தப்படுகிறது.

பிரம்மம் சத்தியம்.

அத்:-ச-பா:—எந்த ரூபத்துடன் எது இருக்கிறதாக நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ, அந்த ரூபத்தை விடாதது சத்தியம். எந்த ரூபத்துடன் எது இருக்கிறதாக நிச்சயிக்கப்பட்டு அது அந்த ரூபத்தைவிட்டால் அது அந்ருதமாகிறது என்று சொல்லப்படுகின்றது. ஆகையால் விகாரம் அசத்தியம்.

वाचारंभणं विकारोनामधेयं मृत्तिकेत्येवसत्यम्

வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்

அதாவது:—விகாரம் என்பது வாக்கினுல் சொல்லக்கூடிய நாமமாத்திரமே மிருத்திகை ஒன்றே சத்தியம் என்பதாய் சாந்தோக்கிய சுருதி (VI-1-4) சொல்லுகிறது. ஆகவே "சத்தியம் பிரம்மம்" என்பதினுலும் சுருதியானது பிரம்மத்தை சகல விகாரங்களினின்றும் பிரித்துக்காட்டுகிறது.

வி-வி:—ஒரு ரூபத்துடன் கூடியிருப்பதாக ஒரு வஸ்து நிச்சயிக்கப்பட்டு, அந்த ரூபத்தை எக்காலத்திலும் விடாத பக்ஷத்தில் அது

---

வி:-मान्त्रवर्णिकमेवच மாந்த்ரவர்ணிகமேவச =என்கிற பிரம்மசூத்திர (I-1-15) வதிலும் இப்படியே சொல்லப்பட்டிருக்கிறது.

ஜன்மாதிசூத்திரத்தில் யதோவா இமானிஎன்கிற வாக்கியத்தால் பிரம்மமானது ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, நாசம், இவைகளைக்குறித்து காரணமா யிருக்கிறதென்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் பிரம்மத்தின் சகலத்தையும் விட வேருன ஸ்வரூபம் கூறப்படுகின்றது.

सत्यं ஸத்யம்=இந்தபதம் உபாதியற்ற சத்தையோடு கூடின பிரம்மத்தைக்கூறுகிறது. அப்படிக்கூறுவதால் விகாரங்களுக்கு ஆஸ்பதமான அசேதனமும் அதோடுகூடின சேதனமும் சத்திய சப்தத்தால் கூறப்படமாட்டா.

---

து:-(4) சத்தியம் ஞானம் அனந்தம் பிரம்மம் என்கிறது இலக்ஷணவிஷயமாய் ஏற்பட்ட சங்கையின் சமாதானம். இம்மூன்றிலும் ஒவ்வொன்றும் தனித்தனி இலக்ஷணமே. இம்மூன்றையும் அவசியம் அறியவேண்டியது.

सत्यं ஸத்யம்=ஜகத்தை சிருஷ்டிக்கும் தன்மை. ஜகத்தை ஜீவிக்கச் செய்தல், சேஷ்டிக்கும்படி செய்தல், ஜகத்தை சம்ஹரித்தல் இவைகளை அறியவேண்டியது.

சத்தியசப்தத்தால் இந்நான்கு அர்த்தங்களையும் கிரகிக்கவேண்டியது. அந்த ரூபமாயிருக்கிறது என்று கிரகிக்கவேண்டியது.

அத்:-சத்தியம் என்று சொல்லுகிறோம். சர்பத்துக்கு அதிஷ்டானமான இரஜ்ஜுபோலும். எது ரூபத்தைவிட்டுவிடுகிறதோ அது அசத்தியம். ரஜ்ஜுவில் தோன்றும் சர்ப்பம்போலும். இதுபோல் சகல ஜகத்துக்கும் அதிஷ்டானமான பிரம்மம் முக்தியிலும் வியபிசரிக்காதபடியால் சத்தியம். முக்தியில் ஜகத்தானது ஞானத்தால் பாதிக்கப்பட்டுப்போவதால் அசத்தியம். ஆகையால் தான் மாண்டூக்கிய காரிகையானது मायामात्रंद्वैतं மாயாமாத்ரமிதம் த்வைதம்=(1-17) என்பதாய் ஜகத்தின் மித்தியாஸ்வரூபத்தைக் காட்டுகிறது. சாந்தோகர்களும் கடாதிவிகாரங்கள் அசத்தியம் மிருத்திகைமட்டும் சத்தியம்என்கிற திருஷ்டாந்தத்தால் பிரபஞ்சத்தின் அசத்தியத்தைச் சொல்லுகிறார்கள்.

## பிரம்மம் ஞானம்

ச-பா:—மிருத்திகை திருஷ்டாந்தத்தால் பிரம்மம் காரணம் என்று ஏற்படும். எதுகாரணமோ அது மிருத்திகைபோல் வஸ்துவாகையால் ஜடமாயிருக்கவேண்டும் என்று ஏற்படலாம். ஆகையால் சுருதியானது "ஞானம் பிரம்மம்" என்பதாய் கூறுகிறது. சத்தியம் அநந்தம் என்னும் பதங்கள் பிரம்மத்துக்கு விசேஷணங்களாயிருப்பது போல் ஞானசப்தமும் விசேஷணமாயிருப்பதால் ஞான சப்தத்துக்கு அவபோதம் என்று அர்த்தம் செய்யவேண்டும்.

சு-வா:—ஞான சப்தத்துக்கு (1) ஞாதா (2) ஞேயம் (3) ஞான சாதகம் (4) ஜனக்கிரியை, என்பதாய் நான்குவித அர்த்தங்கள் ஏற்படலாம். எந்த அர்த்தத்தை இவ்விடத்தில் கிரகிக்கவேண்டும். இவ்விடத்தில் ஞானசப்தம் பிரம்மத்தை மற்றவைகளினின்றும் பிரித்துக்காட்டுவதாலும், சத்தியம், அநந்தம் என்கிற பதங்களுடன் சேர்த்து உபயோகிக்கப் பட்டிருப்பதாலும் ஞானசப்தம் அவபோதத்தைத் தான் கூறுவது யுக்தம். ஞானசப்தத்தால் சத்தியமாயும் அநந்தமாயுமிருக்கிற ஞானம் என்று நாம் அறியவேண்டும்.

---

வி:-ज्ञानं ஜ்ஞானம்=இந்தபதம் நித்தியம். எப்போதும் எல்லையற்றிருக்கிற ஞானத்தின் ஆகாரத்தைக் கூறுகிறது. இதனால் முக்தர்கள் சங்கோசமடைந்த ஞானத்தை யுடையவர்களானதினால் அவர்கள் விஷயத்தில் இப்பதம் உபயோகப்படமாட்டாது என்று ஏற்பட்டது.

---

து:-ज्ञानं ஜ்ஞானம்=தன்விஷயமாயும் அன்னியவிஷயமாயும் மிச்சமன்றியில் சமஸ்தமான ஞானமுடைய தன்மை. அந்த ரூபமாயிருக்கிறது என்பது கருத்து.

அத்:—ச-பா:—பிரம்மம் ஞானகர்த்தாவாக இருக்கும்பக்ஷத்தில் அது சத்தியமாகவும் அநந்தமாகவும் இருக்கமாட்டாது. ஏனெனின் ஞானகர்த்தாவாக இருப்பதால் விகாரத்தை அடையும் பிரம்மம் எப்படி சத்தியமாயும் அநந்தமாயுமிருக்கமுடியும். எது ஒன்றினாலும் பிரிக்கப்படவில்லையோ அது ஞேயம், ஞானம், இவைகளினின்றும்பிரிபட வேண்டும். அப்போது அநந்தம் என்பது சித்திக்கமாட்டாது.

**यत्रनान्यद्विजानाति सभूमा ।**
**अथयत्रान्य द्विजानातितदल्पम् ।**

யத்ர நாந்யத்விஜாநாதி ஸபூமா ।
அதயத்ராந்யத்விஜாநாதிததல்பம் ॥

அதாவது:-எவ்விடத்தில் எவன்வேறு ஒன்றையும்ஒருவன்பார்க்கவில்லையோ அது பெரிது எவ்விடத்தில் வேறு ஒன்றைஒருவன்பார்க்கிருனோ அது அல்பம். என்பதாய்சாந்தோக்கிய (7-24-1) சுருதி சொல்லுகிறது.

ஆக்ஷேபம்:—**नान्य द्विजानाति** நாந்யத்விஜாநாதி என்பதினால் அனாத்மாக்களின் அறிவு நிஷேதிக்கப்பட்டிருப்பதால், ஆத்மாவை (தன்னை) அறிகிறான் என்பதாய் சுருதியால் அறியலாம்.

சித்தாந்தம்:—அப்படி அறியக்கூடியது, ஏனெனில் இந்த (சா-VII-24-1) வாக்கியமானது பூமாவின் (பிரம்மத்தின்) லக்ஷணத்தைக் கூறுகிறதாயிருக்கிறது. ஒருவன் தனக்கு அன்னியமானதைப் பார்க்கிறான் என்கிற உலகப்பிரசித்தியை எடுத்துக்கொண்டு, எவ்விடத்தில் இந்த பிரசித்தி விளங்கவில்லையோ அது பூமா என்பதாய் பூமாவின் ஸ்வரூபத்தை இந்த சுருதி கூறுகிறது. **अन्यत्र** அந்யத் என்கிற பதமானது நம்முடைய சாதாரண பார்வை முதலியவைகளை நிஷேதிக்கிறதற்காக ஏற்பட்டிருப்பதால் தன்னிடத்தில் கிரியை (தன்னைத்தானே அறிதல் என்னும்கிரியை) இருக்கிறது என்பதைக் காட்ட இந்த வசனம் ஏற்படவில்லை. தன்னிடத்தில் பேதமிராதபடியால் தன்னைத்தானே அறிதல் என்பது பொருந்தாது. ஆத்மா அறியப்படுகிறதாயிருந்தால் ஞாதா அறிகிறவன் இல்லாமற்போவான், ஏனெனில் ஆத்மா ஞேயமாய் போய்விட்டது.

ஆக்ஷேபம். ஒரே ஆத்மா ஞேயமாயிருக்கிறது ஞாதாவகாவுமிருக்கிறது.

சித்தாந்தம்:—இப்படிச் சொல்லமுடியாது. ஆத்மாவுக்கு அம்சங்களில்லாதபடியால் ஆத்மா ஒரேகாலத்தில் ஞாதாவாயும் (அறிகிறவனாயும்) ஞேயமாயும் (அறியப்பட்ட வஸ்துவாயும்) இருக்கமாட்டான். ஆத்மாவும் கடாதிகள்போல் ஞேயமாயிருந்தால் ஞானோப

அ:—தேசம், வியர்த்தம், கடாதிகள்போல் பிரசித்தமானதின் ஞானோபதேசத்தால் பிரயோசனமில்லை. ஆகையால் பிரம்மம் ஞாதாவாக இருந்தால் அநந்தமாகமாட்டாது- ஞானகர்த்தா என்பதாய் பிரம்மத்தை விசேஷமாய் அறிகிறதாயிருந்தால் பிரம்மம் சத்மாத்திரம் என்று சொல்லமுடியாது. तत्सत्यं தத்ஸத்யம் (அது சத்தியம்) என்பதாய் வேறு (சாந்தோக்கியம் VI-8-7) சுருதி சொல்லியிருப்பதால் சத்ரூபம் மட்டுமே சத்தியம். ஆகையால் சத்தியம், அநந்தம் இந்த சப்தங்களுடன் ஞானசப்தமும் விசேஷணமாக உபயோகப்பட்டிருப்பதால் ஞானசப்தம் ஞானபாவத்தை மட்டும் (ஞானஸ்வரூபம் என்பதை மட்டும்) கூறுவதாக அறியவேண்டியது. " ஞானம் பிரம்மம் " என்கிற வசனமானது பிரம்மம் கர்த்தாவன்று, காரியத்தில் ஒருவிதத்திலும் சம்பந்தப்பட்டதன்று, மிருத முதலியவைகள் ஜடமன்று, என்பதை தெரியப்படுத்தும் பொருட்டு ஏற்பட்டிருக்கிறது.

## பிரம்மம் அநந்தம்.

சா தா:—பிரம்மம் ஞானஸ்வரூபம் என்று சொன்னதினால் அது அந்தமுள்ளது என்று நினைக்கும்படி யிருக்கலாம். ஏனெனின் லௌகிக ஞானம் முடிவுள்ளதாகப் பார்த்திருக்கிறோம். இந்த சங்கையை நிவர்த்திக்கும் பொருட்டு அநந்தம் என்கிற லக்ஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

வி-வி:—கடஞானம் என்கிற இடத்தில் பரிச்சின்ன பதார்த்தத்தின் ஞானம் ஏற்படுகிறது. அதுபோல் பிரம்மமும் பரிச்சின்னமென்கிறசங்கைவரக்கூடும். அதைத்தடுக்கும்பொருட்டு அநந்தம் என்கிற விசேஷணம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ज्ञायते स्फोर्यते घटादिकमनेन ஜ்ஞாயதே ஸ்போர்யதே கடாதிகமநேந (எதினால் கடாதிகள் ஸ்புரிக்கின்றனவோ) என்கிற வித்பத்திப்படி கடத்தையும் ஸ்புரணத்தையும் சேர்த்து வைக்கும் அந்தக்கரணத்தின் விருத்தி விசேஷம் ஞானசப்தத்தின் சாதாரணமான அர்த்தம். இந்தவிருத்தி பௌதிக

---

வி:-अनन्त அநந்தம்=தேசகாலவஸ்து பரிச்சேதமற்ற அதாவது அளவற்ற ஸ்வரூபத்தை இந்தபதம் கூறுகிறது. ஸ்வரூபம் குணத்தோடு கூடியிருப்பதால் ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் பிரம்மம் அநந்தமாயிருக்கிறது. இதனால் விசேஷத்துடன் கூடின ஸ்வரூபமும் குணங்களும் அல்லவென்று ஏற்பட்டது.

---

து:-अनन्त அநந்தம்=தேசகால குணங்களால் பரிச்சேதமடையாதது.

ஏனெனின் अन्नमयं हि सोम्य मनः அன்னமயம் ஹி ஸோம்ய மந: (அதாவது மனது அன்னத்தால் உண்டானது) என்பதாய் சாந்தோக்கிய (VI-5-4) சுருதி கூறுகிறது. ஆகையால் ஞானம் பரிச்சின்னம் என்று சொல்லுவது யுக்தமே. இவ்விடத்திலோ ஞானசப்தம் ஞப்தி, ஸ்புரணத்தையே கூறுகிறது. இது பௌதிகமன்று. ஆகையால் இது அநந்தம் என்பதால் தேச, கால, வஸ்து பேதத்தால் மூன்று விதம். आकाशवत् सर्वगतश्च नित्यः ஆகாசவச்ச ஸர்வகதஶ்ச நித்ய: ஆகாசம் போல் எங்கும் வியாபி, நித்தியன்) என்கிற சர்வதேசத்துடனும் சர்வகாலத்துடனும் சம்பந்தப்பட்டிருப்பதாக தெரியவருவதால் தேசகால பரிச்சேதம் ஏற்படவில்லை. ब्रह्मैवेदं ப்ரஹ்மைவேதம் என்கிற முண்டக (II-2-11) சுருதியில், பிரம்மம் (சகல தேசகாலங்களுடன் சம்பந்தப்பட்டிருப்பதுபோல்) சகல வஸ்துஸ்வரூபமாயிருக்கிறதென்றுசொல்லியிருப்பதால் பிரம்மத்தைத் தவிர வேறு வஸ்து இல்லை. ஆகையால் வஸ்துவாலும் பரிச்சேதம் ஏற்படவில்லை.

ஆகவே சத்தியம் முதலிய சப்தங்களால் மித்தையாயும், ஜடமாயும், பரிச்சின்னமாயும் எது எது உண்டோ அதை அதைவிட வேறானது பிரம்மம் என்பது இந்த வாக்கியத்தின் அர்த்தம்.

### பிரம்மம் சூன்னியமன்று.

ச-பா ஆக்ஷேப:—

சத்தியம் முதலிய விசேஷணங்கள் அந்ருதம் முதலிய தர்மங்களை விலக்கும்பொருட்டு ஏற்பட்டிருப்பதாலும், விசேஷ்யமான பிர

---

வி:—ஆக்ஷேபம்:—இவ்விடத்தில் ஞானபதம் நித்தியம் விரிவான ஞானத்தைக் கூறும்பக்ஷத்தில் விஷயஞானத்தன்மை காரணமென்று சொன்னால், பிரம்மத்தின் ஸ்வரூபம் அப்படி இராதபடியால் ஞான பதத்துக்கு ஞானத்தோடுகூடினது என்று அர்த்தம் ஏற்படுமேயன்றி ஸ்வரூபஞானமென்று அர்த்தம் ஏற்படமாட்டாது. ஆனால் ஸ்வப்பிரகாசத்தன்மை காரணமென்று சொன்னால், ஞானத்தன்மை மாத்திரம் சித்திக்கிறது, ஞானத்தோடு கூடிக்கொண்டிருக்கிற தன்மை சித்திக்கிறதில்லை. ஆனால் இஷ்டப்படி வைத்துக் கொள்ளுகிறது என்று சொன்னால்,

तद्गुणसारत्वात्तु तद्व्यपदेशः प्राज्ञवत् தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேஶ: ப்ராஜ்ஞவத் என்கிறபிரம்ம (II-3-29) சூத்திரத்தின் பாஷ்யம்சத்தியம்ஞானம்என்கிற வாக்கியத்தில் பிரம்மம் ஞான குணசாரமாகையால் ஞானம் என்று சொல்லியிருக்கிறது என்கிற பாஷ்யம்—விரோதத்தை அடையும்.

அ:-ம்மம் உத்பலம்போல் அப்பிரசித்தமாயிருப்பதாலும், சத்தியாதி வாக்கியமானது கானல்ஜலத்தில் ஸ்நானம்செய்து ஆகாசபுஷ்பத்தை சிரசில்தரித்து இந்த மலடிமகன் முயற்கொம்பு தனுசை எடுத்துக் கொண்டுபோகிறான் என்கிற வாக்கியம்போல் சூன்னியத்தையே சொன்னதாக ஆகும்.

சு-வா:—முன் சத்தியாதிபதங்கள் அசத்தியம் முதலியவை இல்லை என்பதைக்காட்டும் பொருட்டு ஏற்பட்டன வென்று சொல்லியிருந்தது. இந்த வசனத்தின் பேரில் இந்த ஆக்ஷேபம் ஏற்படுகிறது. இதின் கருத்து என்னவெனின் உத்பலம் போல சகல விசேஷயங்களும் சப்தமன்றியில் இதரபிரமாணங்களுக்கும் விஷயங்களாயிருக்கின்றன. பிரம்மமோ சப்த (சுருதி) பிரமாணத்துக்குத்தான் விஷயமாயிருக்கிறது. ஆகையால் பிரம்மம் என்கிறபதம் பிரம்மம் இருக்கிறதென்று சொல்லவும் அதின் ஸ்வரூபத்தைச் சொல்லவும் பிரமாணமாகமாட்டாது. சத்தியம் முதலியபதங்கள் அசத்தியம் முதலியவைகளை விலக்குவதற்காகமட்டும் ஏற்பட்டிருப்பதால் பாவபதார்த்தஞானத்தைக் கொடுக்கமாட்டா.

உத்தரம்:—

I சு-வா:—இந்த வாக்கியம் சூன்னியத்தைக் கூறவில்லை

ஏனெனின்:—

(1) சத்தியபதார்த்தத்தை அவலம்பிக்காமல் பிராந்திஎங்கும் ஏற்படவில்லை, பிரபஞ்சம் பிராந்திரூபமானதால் இதற்கு அதிஷ்டானமான சத்தியம் இருக்கவேண்டும்.

---

வி:—சமாதானம:—ஸ்வப்பிரகாசத்தன்மையே நித்தியம் விரிவான ஞானத்தைக் கூறும்விஷயத்தில் காரணமாக இருக்கிறது. அதில் ஞானாசிரயத்தன்மையும் சித்திக்கிறது. ஆகவே பாஷ்யவிரோதமில்லை. பிரம்ம சப்தத்தால் தோன்றுகிற பெருந்தன்மை எப்படி ஸ்வரூபத்தாலும் குணத்தாலும் தோன்றுகின்றதோ அப்படியேஞானசப்தத்தால்சித்திக்கிறதென்று வியாசாசாரியார்சொல்லியிருக்கிறார். வாஸ்தவமோ வென்றால், சத்தியம், ஞானம், என்கிற இடத்தில் இருக்கிற ஞானசப்தம் ஞானவத்து என்கிற பதத்திற்குப் பிரதிபதமாக வியாகரணத்தால் சித்திக்கிறது. ஆகவே ஞானபதத்துக்கு ஞானத்தோடு கூடினதென்று அர்த்தம். प्रज्ञानघनएवआनन्दमयःनित्यंविज्ञानं ப்ரஜ்ஞாநகந ஏவ ஆநந்தமய: நித்யம் விஜ்ஞாநம் என்கிற சுருதியால் பிரம்மம் ஞான ஸ்வரூபமாகவும் இருக்கிறதென்று அறியவும்.

அ:—(2) உத்பலம் முதலிய பதங்கள் பதார்த்தங்கள் இருக்கின்றன வென்கிற ஞானத்தைக் கொடுக்கின்றனவே தவிர இல்லை என்கிற ஞானத்தைக் கொடுக்கவில்லை.

(3) ஒரு பதத்தைக்கேட்டவுடன் அதினால் கூறப்பட்ட பொருளைத்தான் ஒருவன் முதலில் கிரகிக்கிறான். பிறகுதான் அதின் எதிரிடை இல்லை என்பதை கிரகிக்கிறான். எலிகளிருப்பதைப்பார்த்து முதலில் எலிகளைத்தான் கிரகிக்கிறான். பிறகு அவைகளின் சத்துருவாகிய பூனையில்லை என்று கிரகிக்கிறான். இதுபோல் சத்தியம் என்பதால் சத்தியபதார்த்தத்தின் ஞானம்தான் முதலில் ஜனிக்கிறது. பிறகு அசத்தியமானது இல்லை என்று ஞானமுண்டாகிறது.

(4) நீலஞானம் நீலபதார்த்த ஞானமன்றியில் ஏற்படமாட்டாது. அப்படியே விசேஷ்யத்தின்ஞானம் விசேஷணத்தின் ஞானமன்றியில் ஏற்படமாட்டாது. ஆகையால் பிரம்மம், சத்தியம் ஞானம் அநந்தம் என்று சுருதி சொல்லும்போது சூன்னியத்தையே கூறமாட்டாது.

(5) நீலம் என்பதுபோன்ற பதத்தைக் கேட்டவுடன் அது எதைக் கூறுகிறது என்றகேள்வி ஏற்படுகிறது. அப்படியே சத்தியம் என்கிறபதத்தை கேட்டவுடன் அது எதைக்கூறுகிறது என்கிறவிசாரம் ஏற்படுமேதவிர அது சூன்னியத்தைக்கூறுவதாக ஏற்படமாட்டாது.

II. மேற்சொன்ன காரணங்களால் சத்தியாதிபதங்கள் கேவலம் சூன்னியத்தைக் கூறமாட்டா வென்று ஏற்படுகிறது. அப்படியே அவைகள் க்ஷணிகமான பொருளையும் கூறமாட்டா. எது அறியப்படாமலிருக்கிறதோ அது பிரத்தியக்ஷம் முதலிய பிரமாணங்களால் தெரியவருகிறது என்பது உலகானுபவம். ஒருவஸ்து ஒருகாலத்தில் அறியப்படாமலும் ஒருகாலத்தில் அறியப்பட்டுமிருப்பதால் அது க்ஷணிகமாகமாட்டாது. ஆகையால் எந்த வஸ்துவும் க்ஷணிகமென்று சொல்லத்தகுந்த காரணமில்லை.

---

வி:—ஒரு வஸ்து ஒரு இடத்திலிருக்கிறது வேறு இடத்திலில்லை என்று சொல்லுவது தேசபரிச்சேதமாம். ஒருவஸ்து ஒரு காலத்திலிருக்கிறது மற்றொரு காலத்திலில்லை என்று சொல்லுவது காலபரிச்சேதமாம். ஒருவஸ்துவை குறித்து இந்த வஸ்துவை அந்த வஸ்துவன்று என்று சொல்வது வஸ்து பரிச்சேதம். பிரம்மம் இம்மூன்று பரிச்சேதங்களு மற்றது.

அ:—(இவ்விதமாக சத்தியாதிபதங்கள் ஜன்னியத்தைபாவது க்ஷணிகவஸ்துவையாவது கூறமாட்டாது என்று நிரூபிக்கப்பட்டது. இனி மேற்கண்ட ஆக்ஷேபத்துக்கு பாஷ்யகாரருடைய உத்தரம் கொடுக்கப்படும்.)

இந்த ஆக்ஷேபம் சரியன்று. ஏனெனின் இந்த வாக்கியம் பிரம்மத்தின் லக்ஷணத்தைக் கூறுகிறது.

ஆ:—பழுதையைப்பார்த்துப் பாம்பு என்று பிரமிக்கிறோம். பாம்புக்கு ஆதாரம் பழுதையென்று நாம் அறிந்திருக்கிறோம். இதுபோல் இந்த பிரபஞ்சமும் திருச்யமாயிருப்பதால் இதற்கும் ஒரு சத்தியமான ஆதாரமிருக்கவேண்டும். இந்த ஆதாரத்தையே சுருதியானது சத்தியாதிபதங்களால் கூறுகிறது. மேலும் இந்த பதங்களை பிரம்மத்தின் கேவலம் விசேஷணங்களாக அறியக்கூடாது. ஏனெனின் இந்த பிரம்மத்தின் ஸ்வரூபத்தை வேறுவிதமாய் நாம் முன்னமேயே அறிந்திருக்கவில்லை.

இ:—ஆகவே இந்த பதங்கள் விசேஷணங்கள் போலிருந்தாலும் பிரம்மத்தின் ஸ்வரூபத்தையே முக்கியமாய்க் கூறுகின்றன. இப்படி நாம் முன்னமேயே சொல்லியிருக்கிறோம். லக்ஷியமானது ஜன்னியமாயிருந்தால், லக்ஷணவசனம் நிஷ்பிரயோசனமாகும். (ஜன்னியத்துக்கு லக்ஷணம் சொல்லவேண்டியதில்லை.) இந்த வாக்கியம் லக்ஷணத்தைக்கூறுவதாக இருப்பதால் அது ஜன்னியத்தைக் கூறமாட்டாது என்று நினைக்கிறோம். சத்தியம் முதலியபதங்கள் விசேஷணங்களாயிருந்தாலும் தங்களுடைய அர்த்தங்களை விட்டுவிடவில்லை.

---

வி:—नान्तंगुणानांगच्छतितेनान्तोयमुच्यते ।

நாந்தம் குணாநாம் கச்சதி தேநாநந்தோயமுச்யதே ।

என்கிற ஸ்மிருதிப்படி குணங்களால் அந்தமில்லாமலிருக்குந் தன்மை அநந்த சப்தத்துக்கு அர்த்தம். இவ்விடத்தில் ரூடி சக்தியாலும் தேவவிசேஷமென்றும் நிச்சயப்படுகிறது. இந்த அநந்தசப்தமானது நாராயணனைக் கூறும்போது ஆண்பாலாக இருக்கவேணும் என்று ஆக்ஷேபித்தால் அதுவே இஷ்டம். ஏனெனின் அந்த பதம் த்விதியாந்தம் (இரண்டாம் வேற்றுமை). த்விதியாந்தமல்லவென்று சொல்லும்பக்ஷத்தில் योवेदानिहितं गुहायां யோவேத நிஹிதம் குஹாயாம் என்கிறஇடத்தில் (II-1)த்தம் என்கிறபதத்தை சேர்க்கும்படி நேரிடும் பதத்தை சேர்க்காமலே வாக்கியார்த்தம் முடியும் போது சேர்த்துமுடிப்பது நியாயமல்ல.

அ:-(ஆ:—நீலம், மஹத்து, முதலிய விசேஷணபதங்கள் தங்களுக்கு விருத்தமானவைகளை நிஷேதிக்கின்றன. அப்படியே சத்தியசப்தம் பாதிக்கப்படாத சத்வத்தைக்கூறுகிறது. ஞானசப்தம் ஸ்வப்பிரகாசமான விஷயஞானத்தைக்கூறுகிறது. அநந்தசப்தம் வியாபகதர்மத்தைக்கூறுகிறது. ஆகவே ஒவ்வொருசப்தமும் தனக்கு விரோதமானது இல்லை என்பதை மட்டும் கூறவில்லை. தன்னுடைய அர்த்தத்தையும் கூறுகிறது.)

சத்தியாதி சப்தங்கள் ஜன்னியத்தைக் கூறுகிறதாயிருந்தால், விசேஷ்யத்தை (பிரம்மத்தை) க்கூறமாட்டா. ஆனால், சத்தியாதிகள் தங்களுடைய அர்த்தங்களைக் கொண்டிருந்தால், அவைகளுக்கு விருத்தமான தர்மங்களை யுடையவைகளினின்றும் விசேஷ்யமான பிரம்மத்தைப் பிரித்துக்காட்டும். பிரம்மசப்தமும் தனக்குறிய அர்த்தத்தைக்கூறுகிறது.

(ஆ:—பிரம்மம் என்கிறபதம் பிரஹ் என்னும் பகுதியிலிருந்து வருகிறது. இதற்கு விருத்தி அதாவது மஹத்து என்று அர்த்தம் இந்த பெரிதாயிருக்கும் தன்மை தேசகாலவஸ்துக்களால் பரிச்சேதமடையாததற்குத்தான் பொருந்தும். ஆகையாலும் இந்த வாக்கியம் ஜன்னியத்தைக் கூறமாட்டாது என்பது நிச்சயம்.)

இந்த மூன்று பதங்களுக்குள் அநந்தசப்தம் அந்தமுள்ளது என்பதை நிஷேதிப்பதினால் பிரம்மத்துக்கு விசேஷணமாகிறது. சத்தியசப்தமும் ஞானசப்தமும் தங்களுடைய அர்த்தங்களைக் கொண்டே விசேஷணங்களாகின்றன.

(ஆ:—அநந்தம் என்கிறபதத்தால் பிரம்மமும் ஆத்மாவும் ஒன்று என்று சொன்னதாக ஏற்படுகிறது. இவ்விஷயத்தில் சாஸ்திர தாற்பரியத்தை இனி கூறுகிறார்.)

**तस्माद्वा एतस्मादात्मनः ।**

தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந: ।

என்கிற (இனிவரும் II-1 வது) சுருதியில் ஆத்மசப்தம் பிரம்மத்தையேகூறுகிறதினால், அறிகிறவனுடைய ஆத்மா பிரம்மமே.

---

வி:—அநந்தத்தின் - தேசகால பரிச்சேதமற்ற-என்கிற யௌகிகார்த்தமானது நாராயணனைவிட வேறுஇடத்தில் இருந்தால் ஸ்ரீபதி முதலான சப்தங்களுக்குப்போல் ரூடி அர்த்தம் கற்பிக்கவேண்டாம் என்று சொன்னால் அப்போதும் எங்களுக்கு ஒருகுறைவுமில்லை-

அ:-एतमानन्दमयमात्मानमुपसंक्रामति ।
வஏதமாநந்தமயமாத்மாந முபஸங்க்ராமதி
என்கிற II-8 வது சுருதியானது ஆநந்தமயனான ஆத்மாவுடன் சேருகிறான் என்று சொல்லுவதினால் பிரம்மம் ஆத்மா வென்பதைக் காட்டுகிறது.

तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् ।
தத்ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிஶத் ।
என்கிற II 6 வது சுருதியானது அதை சிருஷ்டித்து அதிலேயே பிரவேசித்தது என்று சொல்லுவதினால் பிரம்மமே ஜீவரூபமாக சரீரத்தைப் பிரவேசித்ததாகச் சொல்லுகிறது.

ஆகையால் அறிகிறவனுடைய ஸ்வரூபம் பிரம்மம்.

(சு-வா:—இந்த II-1 வது சுருதியிலேயே பிரம்மம் ஹிருதய குஹையில் மறைந்திருக்கிறது என்றும் ஆத்மாவினிடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று என்றும் சொல்லியிருக்கிறது. இந்த இரண்டு வசனங்களாலும் பிரம்மமே ஆத்மாவென்று ஊகிக்கிறோம்.

பிரம்மம் நித்திய அகண்ட ஞானஸ்வரூபம்.

ஆக்ஷேபம்:—இப்படியிருந்தால் பிரம்மம் ஆத்மாவாக இருப்பதால், ஞானத்தின் கர்த்தாவாக இருக்கவேண்டும். ஆத்மா ஞாதா என்பது பிரசித்தம்: सोऽकामयत ஸோऽகாமயத (அவன் இச்சித்தான்) என்கிற பிரஹதாரணியக I-2 வது சுருதியானது எவன் இச்சையுள்ளவனோ அவன் ஞாதா என்று கூறுகிறது. இப்படி பிரமமம் ஞாதாவாக இருப்பதால் ஞானஸ்வரூபம் என்று சொல்லுவது அயுக்தம்.

மேலும் பிரம்மம் அநித்தியம் என்றும் ஏற்படும். பிரம்மம் ஞானமாயிருந்தால் அதாவது அறிதல் என்னும் பகுதி அர்த்தமுள்ளதாக இருந்தாலும், அது அநித்தியம் என்றும் பரதந்திரம் என்றும் ஏற்படும். ஏனெனின் ஞா என்னும் பகுதியின் அர்த்தமானது காரகங்களை அதாவது காரியசாதகங்களை அபேக்ஷிக்கிறது. பகுதியின் அர்த்தம் அறிதல் என்பதானதால் பிரம்மம் அநித்தியமாகும், பரதந்திரமுமாகும்.

உத்தரம்:-இந்த ஆக்ஷேபம் சரியன்று. ஞானமென்பது பிரம்ம ஸ்வரூபத்தைவிட்டு விலகியிராதபடியால், ஞானம் காரியம் என்று உபசாரமாகச் சொல்லப்படுகிறது. ஆத்மாவின் ஸ்வரூபம் ஞானம், ஞானமென்பது ஆத்மாவை விட்டு விலகியில்லை. ஆகையால் அது நித்தியமே. ஆயினும், ஆத்மாவின் உபாதியான புத்

அ:-தியின்விருத்திகள் கண் முதலியவைகள் வழியாய் வெளியேசென்று விஷயங்களை அடைந்து விஷயாகாரங்களாக பரிணமிக்கின்றன. இந்தபுத்தியின்சப்தாதி விகாரங்களான விருத்திகள் ஆத்மஞானத்துக்கு விஷயங்களாகின்றன. அவைகள் உண்டாகும்போதே ஆத்மஞானத்தால் வியாபிக்கப்பட்டவைகளாய் உண்டாகின்றன. ஆத்மஞானத்தால் பிரகாசிக்கப்பட்டும் விஞ்ஞான சப்தத்தால் கூறப்பட்டுமிருக்கிற இந்த 'புத்தி விருத்திகளே ஞா என்கிற பகுதியின் அர்த்தங்கள்' இவைகள் ஆத்மாவின் விகாரமடையும் தர்மங்களாக அவிவேகிகள் பாவிக்கிறார்கள்.

சு-வா:—புத்தியின் காரியங்கள் ஆத்மாவினுடையவைகளாக அவிவேகத்தால் சொல்லப்படுகின்றன. அறிகிற விஷயத்தில் ஆத்மா கர்த்தாவன்று. ஏனெனின் ஞானமென்பதே ஆத்மஸ்வரூபம்; அது ஆத்மா விட்டு விலகியிருக்கமாட்டாது. புத்திதான் ஞானத்தின் கர்த்தா, இந்த கர்திருத்வம் சாக்ஷியான ஆத்மாவினிடத்தில் உபசாரமாக கற்பிக்கப்படுகிறது. பழுக்கக் காய்ச்சின இரும்பின் பொறிகள் நெருப்புப் பொறிகள்போலிருப்பதுபோல், புத்தியும் ஆத்ம சைதன்னியத்தால் வியாபிக்கப்பட்டதாய் பரிணாமங்களை (விருத்திகளை) அடைகிறது. புத்தியால் ஏற்பட்ட இந்த விருத்திகள் சைதன்னியத்துடன் கூடியிருப்பதைப்பார்த்து, அஞ்ஞானிகள் ஞானம்கூடஸ்தமாயிருந்து முண்டாவதாக பாவிக்கிறார்கள். புத்தி விருத்தி உண்டாவதற்குமுன் எப்படி ஆத்மஞானம் பாதிக்கப்படாமலிருக்கிறதோ அப்படி அந்த விருத்தி உண்டானபோதும் விகாரமடையாமலிருக்கிறது. இது அனுபவத்தில் தெரியவருகிறது. (அதாவது புத்தியில் இருக்கிறதையும் இல்லாததையும் அறிகிறது சைதன்னியம். அதில் வித்தியாசம் வருவதாக யாதொரு பிரமாணமுமில்லை. அதுசாட்சியாக மட்டுமிருக்கிறது.)

ச-பா:—பிரம்மத்தின் விஞ்ஞானம் சூரியனுடைய பிரகாசம் போலும் அக்கினியின் உஷ்ணம் போலும் பிரம்மத்தின் ஸ்வரூபமே, அது வேறு காரணத்தை அபேக்ஷிக்கவில்லை. ஏனெனின் அதுவே நித்திய ஸ்வரூபம். தேசத்தாலும் காலத்தாலும் பிரம்மத்தை விட்டுப் பிரிந்ததாக யாதொரு பதார்த்தமுமில்லை. பிரம்மமே காலம், ஆகாசம் முதலியவைகளுக்குக் காரணம், நிரதிசய சூட்சுமம். ஆகையால் சென்ற காலத்திலாவது, தற்காலத்திலாவது வருங்காலத்திலாவது எவ்வளவு சூட்சும மாயிருந்தாலும், விலகியிருந்தாலும், மறைந்திருந்தாலும், பிரம்மத்துக்குத் தெரியாதது யாதொன்றுமில்லை. ஆகையால் பிரம்மம் சர்வஞ்ஞம், ச்வேதாஸ்வதரஉபநிஷத்தில். (III-19ல்)

அ:—अपाणिपादोजवनो ग्रहीतापश्यत्यचक्षुःसश्रृणोत्यकर्णः।
सवेत्तिवेद्यंनचतस्यास्तिवेत्ता तमाहुरग्र्यंपुरुषंमहान्तम् ॥

அபாணிபாதொஜவநோ க்ரஹீதா பஶ்யத்யசக்ஷுஃ ஸஶ்ரு ணோத்யகர்ணஃ। ஸவேத்திவேத்யம் நசதஸ்யாஸ்திவேத்தா தமாஹு ரக்ர்யம் புருஷம் மஹாந்தம் ॥

அதாவது கைகளற்றவர், கால்களற்றவர், வேகமுள்ளவர், கிரகிக்கிறவர், கண் இல்லாமல் பார்க்கிறவர், காது இல்லாமல் கேட்கிறவர், அறியவேண்டியதை அறிகிறவர், அவரை ஒருவனும் அறிகிறதில்லை, இவரை முதல்வர் என்றும் புருஷன் என்றும், மஹான் என்றும் சொல்லுகிறார்கள் என்றும் சொல்லியிருக்கிறது.

பிரஹதாரணியகத்தில் IV-3-30ல்

नहिविज्ञातुर्विज्ञाते र्विपरिलोपो विद्यते ।
अविनाशित्वात्नतु तद्द्वितीयमस्ति ॥

நஹிவிஜ்ஞாதுர்விஜ்ஞாதே விபரிலொபொவித்யதே।
அவிநாஶித்வாத்நதுதத்த்விதீயமஸ்தி ।

அதாவது ஞாதாவை விட ஞானம் வேறல்ல. ஏனெனின் அது நாசமடையாதது. இரண்டாவது ஒன்றுமில்லை என்று சொல்லியிருக்கிறது.

பிரம்மமானது விஞ்ஞாதாவின் ஸ்வரூபத்தை விட வேறாக இராததாலும், வேறு காரணத்தை அபேக்ஷிக்காததாலும், பிரம்மம் ஞானஸ்வரூபமாயிருந்தாலும் நித்தியமாயிருக்கிறது. ஆகையால்பிரம்மம் கிரியாரூபமற்றதால் பகுதியின் அர்த்தமல்ல. ஆகையாலேயே ஞான கர்த்தாவுமல்ல. ஞானகர்த்தவாக இராதபடியால் அந்த பிரம்மம் ஞானசப்தத்தால் கூறப்படுகிறதில்லை. ஆயினும் ஞானபாசத்தைக் கூறுகிறதாயும், புத்தி தர்மத்தை விஷயமாக்குகிறதாயு மிருக்கிற ஞானசப்தம் பிரம்மத்தைக் குறிப்பிடுகிறதே தவிர கூறவில்லை. ஏனெனின் சப்த பிரவிர்த்திக்கு ஹேதுவான ஜாதி முதலிய தர்மங்கள் பிரம்மத்துக்கில்லை.

அப்படியே பிரம்மம் சத்திய சப்தத்தாலும் கூறப்படவில்லை. சர்வ விசேஷ சூன்னியமான பிரம்மம் சத்திய சப்தத்தால் குறிப்பிடப்படும்போது பாஹ்ய பிரபஞ்சத்தில் இந்த சப்தம் சத்தை கூறுவதுபோல், இந்த சப்தத்தால் கூறப்படுகிறதே தவிர இந்த சப்தத்தாலேயே அது கூறப்படமாட்டாது.

அ:—இவ்விதமாக சத்தியம் முதலிய சப்தங்கள் ஒன்றோடொன்று சேர்ந்து தங்களுடைய அர்த்தங்களை நிச்சயமாக்குகின்றன. சத்தியாதி சப்தங்கள் பிரம்மத்துக்கு வாச்சியங்களாகாவிட்டாலும், பிரம்மத்தின் ஸ்வரூபத்தைக் குறிப்பிடுகின்றன.

சு-வா:—சத்தியாதி சப்தங்கள் தங்களுடைய அர்த்தங்களை விடாமல், பிரம்மஸ்வரூபத்துக்கு விருத்தமானவைகளை நிவிர்த்தி செய்து, அஞ்ஞானத்தைப் போக்கடித்து பரப்பிரம்மத்தின் ஸ்வரூபத்தைக் குறிப்பிடுகின்றன. அசத்தியம் முதலிய பாவங்களை நிவிர்த்தி செய்கிறதாகமட்டும் சத்தியாதி சப்தங்களுக்கு வெவ்வேறு அர்த்தம் ஏற்படுகிறதே தவிர, விருத்தங்களை நிவிர்த்தித்த பிறகு இந்த சப்தங்கள் பிரம்மத்தின் ஸ்வரூபமாகிற ஒரே பாவத்தைக் கூறுகின்றன. வாக்கியத்தால் ஏற்படக்கூடிய பாவசமுதாயம்போல் இந்த பதங்களின் சமுதாயத்தால் மிஸ்ர பாவம் விளங்கவில்லை. ஒரே பாவம் ஏற்படுகிறது.

பிரம்மம் அவாச்சியம் என்பது.

(1) यतोवाचोनिवर्त्तन्ते अप्राप्यमनसासह ।

யதோவாசோநிவர்த்தந்தெ அப்ராப்யமநஸாஸஹ ।

அதாவது எதினின்றும வாக்கும் மனதும் அடையாமல் திரும்பி விடுகின்றனவோ என்கிற தைத்தீரிய II-4 வாக்கியத்தாலும்

(2) अनिरुक्तेअनिलयने ।

அநிருக்தெ அநிலயநெ

அதாவது:—சொல்லப்படாதது, ஸ்திரமில்லாதது என்கிற தைத்திரீய II-7 வது வாக்கியத்தாலும், தெரியவருகிறது.

நீலோத்பலம்போல் பிரம்மமானது வாக்கியத்தால் (பதசமூகத்தால்) கூறப்படவில்லை.

(சு-வா:—உபசம்ஹாரம்:— சத்திய சப்தம் கூடஸ்ததன்மையைக் கூறுகிறது. இந்த சத்தியத்துவமே ஞானத்தின் ஸ்வரூபம். ஞானம் கூடாஸ்தமாயிருப்பதால், ஞாதா அதாவது சாக்ஷி பிரம்மம் அநந்தம் அதாவது ஒன்றே

(வித்தியாரணிய வியாக்கியானம்)

வாஸ்தவத்தில் ஒரு பிரம்மத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லாவிட்டாலும், அநிருத, ஜட, பரிச்சின்னங்களாகிற உபாதிகளுடன் கூடி, அநிருதம் முதலிய தர்மங்களுள்ள மூன்று பிரம்மங்களிருப்பது போல் அவித்தையால் தோன்றக்கூடும். அந்த சஜாதியமான பிரம்மங்களினின்றும் பிரித்துக்காட்டும்பொருட்டு சத்தியம்முதலிய பதங்கள் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன.

அ:—இவைகளை லக்ஷணங்களாக பாவிக்கும்போது இவைகள் விஜாதீயங்களான உபாதிகளினின்றும் பிரம்மத்தை பிரித்துக்காட்டுகின்றன. திர்ஷ்டா, தர்சனம், திருச்யம் ஆகிய திருபுடியினின்றும் வேறு என்பதாய் பூமா என்பது பிரித்துச் சொல்லப்படுவது போலும். சாந்தோக்கியம் VII-24-1ல்

**यत्रनान्यत्पश्यति नान्यच्छृणोति नान्यद्विजानाति सभूमा।**

யத்ர நாந்யத்பஶ்யதி நாந்யச்ச்ருணோதி நாந்யத்விஜாநாதி ஸபூமா ॥

அதாவது எவ்விடத்தில் ஒருவன் வேறு ஒன்றையும் பார்க்கவில்லையோ, வேறு ஒன்றையும் கேட்கவில்லையோ, வேறு ஒன்றையும் அறியவில்லையோ அது பூமா என்று சொல்லியிருக்கிறது. ஒருவன் வேறு ஒன்றைப்பார்க்கிறான் என்பதாகிய திருபுடி எந்த பதார்த்த விஷயத்திலில்லையோ அது பூமா என்று பிரித்துச் சொல்லுவதினால் சகல வியவஹாரமுமற்ற வஸ்து கூறப்படுகிறது. அப்படியே இவ்விடத்திலும் சத்தியம் முதலிய பதங்களும் மித்தை முதலியவைகளினின்றும் பிரிக்கப்பட்டு இவைகளற்ற பிரம்மம் கூறப்படுகிறது.

இவைகளை விசேஷங்களாக பாவிக்கும் பக்ஷத்தில் சத்தியாதி பதங்கள் மூன்றும்

I. பரஸ்பரம் நியமனம் செய்தும், சேர்ந்தும், பிரம்ம ஸ்வரூபத்தை பிரதிபாதிக்கின்றன. எப்படியெனின்:—

(1) சத்திய சப்தத்துக்கு பாதையற்றது என்று அர்த்தம் இந்த சத்திய சப்தம் மூன்றுவித சத்தியத்தை அதாவது பிராதிபாஸிக, வியாவஹாரிக, பாரமார்த்திக சத்தியத்தைக் கூறுகிறது. கிளிஞ்சலில் வெள்ளி எதுவரையில் தோன்றுகிறதோ அது வரையில் அது பாதிக்கப்படாமலிருக்கிறதினால் வெள்ளி பிராதிபாஸிக சத்தியம் எனப்படுகிறது; பிருதிவீமுதலிய பூதங்களும் சரீரம்முதலிய பௌதிகங்களும் தத்துவ ஞானமுண்டாகும் முன் உலக வியவஹாரத்தில் பாதிக்கப்படாதபடியால் வியாவஹாரிக சத்தியங்களாயிருக்கின்றன. வேதாந்தத்தால் சித்திக்கக்கூடிய ஞானமுண்டான பிறகும் பாதிக்கப்படாததினால் பிரம்மம் பாரமார்த்திக சத்தியம். மூன்றுவித சத்தியத்தையும் கூறும் சத்திய சப்தம் ஞான அநந்த சப்தங்களால் நியமனம் செய்யப்பட்டு பிரம்மத்தையே குறிப்பிடுகிறது. வியாவஹாரிக பிராதிபாஸிகங்கள் சித்ரூபங்களுமல்ல, அபரிச்சின்னங்களுமல்ல.

அ:-(2) ஞான சப்தமும் சித்வஸ்துவையும் புத்தி விருத்திகளையும் கூறினாலும், சத்தியம் அநந்தம் இந்த சப்தங்களால் நியமனம் செய்யப்பட்டதாய் சித்ரூப பிரம்மத்தையே கூறுகிறது. புத்தி விருத்திகள் பிரம்மம்போல், சுத்தமாய் பாதிக்கப்படாதவைகளன்று மூன்றுவித பரிச்சேதங்க ளற்றவைகளன்று.

(3) அநந்த சப்தம் தேச பரிச்சேதமற்ற ஆகாசத்தையும் சர்வ பரிச்சேதமற்ற பிரம்மத்தையும் கூறினாலும், சத்திய ஞான சப்தங்களால் நியமனம் செய்யப்பட்டதாய் பிரம்மத்தையே கூறுகிறது.

ஆகாசம் பாரமார்த்திக சத்யமுமன்று, சித்ரூபமுமன்று இவ்விதமாக சத்தியாதிசப்தங்கள் பரஸ்பரம் நியமனம் செய்து கூடஸ்தமாயும், சித்ரூபமாயும், அத்விதீயமாயும் இருக்கிற பிரம்மத்தைப் பிரதிபாதிக்கின்றன. முந்தின பெரியோர்களாலும்

**कौटस्थ्यमेवसत्यत्वं स्फुरणंज्ञानमुच्यते ।**
**आनन्त्यमेकताचैवं बोध्यतेब्रह्मतैस्त्रिभिः ॥**

𑌕𑍌𑌟𑌸𑍍𑌥𑍍𑌯𑌮𑍇𑌵𑌸𑌤𑍍𑌯𑌤𑍍𑌵𑌂 𑌸𑍍𑌫𑍁𑌰𑌣𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ।
𑌆𑌨𑌨𑍍𑌤𑍍𑌯𑌮𑍇𑌕𑌤𑌾𑌚𑍈𑌵𑌂 𑌬𑍋𑌧𑍍𑌯𑌤𑍇𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌤𑍈𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌃 ।

அதாவது கூடஸ்தமாயிருப்பதே சத்தியம், ஸ்புரித்தலே ஞானம், அநந்தம் என்பது ஒன்று. இப்படி மூன்று பதங்களால் பிரம்மம் கூறப்படுகிறது.

இந்த மூன்று பதங்களுக்குள் அநந்தசப்தம் மற்ற எல்லாவற்றையும் விலக்குகிறது மூலமாக பிரம்மத்தைக் குறிப்பிடுகிறது. சத்தியசப்தமும் ஞானசப்தமும் தங்களுடைய அர்த்தங்களான கூடஸ்தத்வத்தையும் ஞானத்தையும் வகித்து பிரம்மத்தைக் குறிப்பிடுவதுமன்றி தங்களுக்கு விபரீதங்களான மித்தையையும் ஜடத்தன்மையையும் விலக்கி விசேஷணங்களாகின்றன. அநந்தசப்தம் அந்தமுள்ள வஸ்துக்களினின்றும் பிரம்மத்தைப் பிரித்துக்காட்டுவதினால் விசேஷணமாயிருக்கிறது.

தர்மிக்கும் தர்மத்துக்கும் (விசேஷ்யத்துக்கும் விசேஷணத்துக்கும்) சம்பந்தம் வாஸ்தவமாயிராவிட்டாலும் பிரம்மத்தை அறிய இந்தசம்பந்தம் மார்க்கமாயிருக்கிறது. மித்தையான பிரதிபிம்பத்தால் சத்தியமான பிம்பத்தை அறிகிறோம். அப்படியே ஸ்வப்நத்தில் பார்க்கப்படும் ஸ்திரீசுபத்தை சூசிப்பிக்கிறாள். இதுபோல் சத்தியாதி மூன்று விசேஷணங்களால் பிரம்மஸ்வரூபம் தெரியவருவதால் இவைகள் பிரம்மலக்ஷணங்களாகின்றன.

II அல்லது, இந்தசப்தங்களில் ஒவ்வொன்றும் தனித்தனியே பிரம்ம லக்ஷணமாகலாம். எப்படியென்னின்:—

(1) சத்தியசப்தம் மித்தையான அஞ்ஞானம், இதின்காரியங்கள் இவைகளை விலக்குகிறதினால் அகண்டமான, ஞானமாகிற பிரம்மம் ஒன்றே மிச்சப்படுகின்றது. பிரம்மத்தைக்கூறும் சத்தியம் என்கிற தர்மமும் அவித்தியாகாரியமாக இருப்பதால் மித்தையே. அதுவும் சத்தியசப்தத்தால் விலக்கப்படுகின்றது. தேத்தாங்கொட்டையின் தூளிகள் கலங்கினஜலத்தில் போடப்பட்டவுடன், கலக்கத்தையும் போக்கடித்துத் தானும் போய்விடுவதுபோலும். சாப்பிடப்பட்ட அன்னம் ஜரிப்பதற்காகச் சாப்பிடப்பட்ட ஔஷதமானது அன்னமும் தானும் ஜீர்ணமாகும்படிச் செய்வதுபோலும். சத்தியம் என்கிற தர்மமற்றதுஎன்று சொன்னதினால் பிரம்மம் மித்தை என்று சங்கிக்கலாகாது. மித்தையை முன்னமேயே விலக்கியாய்விட்டது. தேத்தாங்கொட்டையின் தூளிகள் போய்விட்டபடியால் முன்னிருந்த கலக்கம் மறுபடியும் உண்டாகிறதில்லை. ஔஷதம் ஜரித்துப் போனதால் அன்னம் மறுபடியும் அஜீர்ணமாகிறதில்லை. சத்தியம் மித்தை என்பவைகளினின்றும் விலக்கப்பட்டவுடன் பிரம்மம் தர்மமற்றது என்று ஏற்படுகிறது. இப்படிப்பட்ட வஸ்து இருக்குமா என்பதாய் சங்கிக்கக்கூடாது. அப்படி சங்கித்தால் அது சத்ரூபம் ஆத்மரூபம் என்று சொல்லியது பொருந்தாமற்போகும். சந்தோகர்கள் அதுசத்ரூபம் என்றும் ஆத்மரூபம் என்றும் சொல்லுகிறார்கள். सदेवसोम्येदमग्रआसीत् ஸதே³வஸோம்யேத³மக்³ர ஆஸீத் என்பதில் சத்வஸ்துவை ஆரம்பித்து तत्सत्यंसआत्मा தத்ஸத்யꣳஸ ஆத்மா அதாவது அது சத்தியம் அது ஆத்மாவென்பதாய் சாந்தோக்கிய (VI-9-4) சுருதி சொல்லுகிறது. இவ்விடத்தில் (தைத்திரீயத்தில்) எது சத்தியசப்தத்தால் கூறப்படுகிறதோ அதுவே (சாந்தோக்கியத்தில்) சத்ரூபம் என்றும் ஆத்மரூபமென்றும் சொல்லப்படுகிறது. தேஜஸ் அந்தகாரமாகாததுபோல் சத்து அசத்தாகமாட்டாது. ஆத்மா அசத்தாகமாட்டாது என்று முன்னமேயே நிருக்கப்பட்டிருக்கிறது. மேலும் சத்தியம், மித்தை, முதலிய கற்பனைகளுக்கு அதிஷ்டானமாயிருப்பதாலும் பிரம்மம் அசத்தியமாகமாட்டாது. அதிஷ்டானமன்றியில் பிரமை உண்டாகமாட்டாது. இந்த அபிப்பிராயத்தைக் கொண்டே சாந்தோக்கியம் VI-2-1, 2, ல் அசத்துந்தான் முதலிலிருந்தது என்றும் அதினின்றும் சத்உண்டாயிற்று என்றும் சொல்லி, பிறகு அசத்தினின்றும் சத்து எப்படி உண்டாகும் என்று ஆக்ஷே

பித்து சத்தே முதலிலிருந்தது. இரண்டற்ற ஒன்றே இருந்தது என்கிற பக்ஷம் கூறப்பட்டிருக்கிறது; இந்த பக்ஷம் யுக்தமாகத்தானிருக்கிறது. அசத்தானது உபாதான காரணமாக இருந்தால், பிருதிவி அசத்தாயிருக்கவேண்டும். அப்படியே சகல ஜகத்தும் அசத்தாயிருக்கவேண்டும்; ஒன்றும் விளங்கக்கூடாது. ஆனால் அனுபவத்தில் அப்படியில்லை; பின்னையோவெனின், பிருதிவியிருக்கிறது. எல்லாம் இருக்கிறது (சத்தாயிருக்கிறது) என்பதாய் சத்துடன் கூடியிருப்பதாகவே சகலமும் விளங்குகிறது. ஆகையால், ஜகத்காரணமான பிரம்மம் சத்ரூபமே. சாந்தோக்கியத்தில் பிரம்மம் காரணம் என்கிற விஷயத்தில் சத், அசத் பக்ஷங்களின் குணதோஷங்கள் கூறப்பட்டிருப்பதுபோல் இந்த தைத்திரீயத்தில் (II-6 ல் பிரம்மம் பிரத்தியகாத்மா என்கிற விஷயத்தில் சத், அசத் பக்ஷங்களின் குணதோஷங்கள் இனி கூறப்படுகின்றன. கடவல்லி VI-13 ல் பிரம்மம் இருக்கிறதென்றே அறியவேண்டியது என்பதாய் சொல்லியிருக்கிறது. ஆகையால் வாஸ்தவத்தில் பிரம்மத்துக்கு சத்தியம் என்கிற தர்மமில்லாவிட்டாலும் அந்த கற்பனைக்கு அதிஷ்டானமாக இருப்பதால் பிரம்மம் சத்ரூபமே.

ஆக்ஷேபம்.—சத்தியம், மித்தை, இவைகளைத்தவிர மூன்றாவது ஒன்றுமிராதபடியால் பிரம்மத்துக்கு இரண்டும் விசேஷணங்களல்லவென்று சொல்லக்கூடாது.

உத்தரம்:—ஸ்திரீயாயுமிராமல், புருஷனாயுமிராமல் நபும்சகனிருப்பதுபோல் பிரம்மமு மிருக்கலாம்.

ஆக்ஷேபம்:—நபும்சகன் பிரத்தியக்ஷமாய் பார்க்கப்படுகிறானே.

உத்தரம்:—பிரம்மமும் அப்படியே சுருதியால் தெரியவருகிறது.

ஆக்ஷேபம்.—சுருதியானது பிரம்மம் சத்தியம் என்று சொல்லுவதினால் சத்தியத்தை விசேஷணமாக ஒப்புக்கொள்ளுகிறதே.

உத்தரம்.—இல்லை. यतोवाचोनिवर्त्तन्ते யதோவாசோநிவர்த்தந்தெ என்கிற சுவேதா சுவதர (VI-19) சுருதியானது பிரம்மம் வாக்குக்கு விஷயமாகாதது என்று சொல்லுகிறது. காலில் தைக்கப்பட்ட முள் வேறு ஒரு முள்ளால் எடுக்கப்பட்டபின் சுத்தகால் மிச்சப்படுகிறது. இதுபோல் சத்தியசப்தம் வியாவஹாரிக சத்தியத்தைக்கூறுவதாக இருந்தாலும் அதற்கு எதிரிடையான அசத்தியம் இல்லையென்றுகாட்டி, இரண்டு தர்மங்களுமற்ற பிரம்மம் தான் இருக்கிறது என்பதைக்காட்டுகிறது. ஆகையால் பிரம்மம் சத்தியம் என்று சொல்லுவதில் தோஷமில்லை.

## பிரம்மம் ஞானரூபம்.

ஆக்ஷேபம்.—ஞானசப்தம் கிரியையைக் கூறுகிறது. பிரம்மமோ கிரியையற்றது. ஆகையால் பிரம்மம் ஞானரூபம் என்று எப்படிச் சொல்லலாம்.

உத்தரம்.—சத்தியசப்தம்போல் ஞானசப்தமும் லக்ஷணம். பகுதியின் அர்த்தமோ புத்தி விர்த்தி என்பதாம். இதில் சைதன்னியத்தின் பிரதிபிம்பம் விளங்குகிறது. சப்த ஸ்பர்சாதி விஷயங்கள் தோன்றுகின்றன. இந்த ஞானசப்தமானது பிரம்மம் ஜடமன்று என்பதைக் காண்பித்து பிரத்தியகாத்மா நித்திய சைதன்னியரூபம் என்று சொல்லுவதினுல் ஞானம் என்கிற தர்மம்கூட பிரம்மத்துக்கு இல்லை என்பதைக்காட்டுகிறது. ஒரு உப்புக்கல் உள்ளும் வெளியும் உப்பாகவே இருப்பது போல் பிரம்மம் கேவலம் ஞானபிண்டமே. இப்படிப்பட்ட ஸ்வரூபந்தான் இவ்விடத்தில் ஞானசப்தத்தால் கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் தோஷமில்லை.

## பிரம்மம் அநந்தம்.

ஆக்ஷேபம்.—பிரம்மம் அநந்தம் என்று சொல்லுவதில் மூன்று வித பரிச்சேதங்களும் நிஷேதிக்கப்பட்டிருப்பதால், இவைகளின் அபாவத்துடன் கூடியது பிரம்மம் என்பதாய் ஏற்படும். இந்த இடத்தில் கடமில்லை என்று சொன்னுல், இந்த இடமானது கடமில்லை என்கிற விசேஷணத்துடன் கூடியிருக்கிறது என்று சொல்லுவதுபோலும் ஆகையால் பிரம்மம் அகண்டைகரஸமாகமாட்டாது.

உத்தரம்:-இது சரியன்று. வஸ்து பரிச்சேதமற்றது பிரம்மம் என்று சொன்னதினுல் பிரம்மத்துக்கு வேருன அபாவமும் நிஷேதிக்கப்பட்டதாக ஆய்விட்டது. இந்த அநந்தசப்தம் முதலில் பரிச்சேதாபாவத்தைக் கூறி பிறகு தேத்தான்கொட்டையின் தூளிகள்போல் அதுவுமில்லாத சுத்த பிரம்மத்தைக் கூறுகிறது.

## இதரலக்ஷணங்கள்.

இவ்விதமாகவே

(1) विज्ञानमानन्दंब्रह्म விஜ்ஞாநமாநந்தம்ப்ரஹ்ம

என்கிற இடத்தில் (பிர-III-9-28) ஆநந்தசப்தத்தையும்,

(2) अत्रायंपुरुषःस्वयंज्योतिर्भवाति அத்ராயம்புருஷஃஸ்வயம்ஜ்யோதிர்பவதி

என்கிற பிரஹதாரணியிக (IV-3-9) சுருதியில் ஸ்வயம் ஜோதிஸ் என்பதையும்

(3) पूर्णमदः पूर्णमिदं பூர்ணமத꞉ பூர்ணமிதம்=

என்கிற ஷ V-1-1வது சுருதியில் பூர்ணம் என்பதையும் அறிய வேண்டியது. பிரம்ம விஷயமாய் புருஷனுடைய பிராந்தி அதிகமானதால் அதை நிவர்த்திக்கும்பொருட்டு அதிகலக்ஷணங்கள் கூறப்பட்டன. அதினால் பிரம்மம் அநேகவிதம் என்று ஏற்படவில்லை. சகலலக்ஷணங்களும் நிர்விசேஷமான பிரம்மத்தையே கூறுகின்றன. இந்த லக்ஷணங்களை எல்லாம் சேர்த்து அறிய வேண்டியது என்கிற விஷயம் பிரம்மசூத்திரம் III வது அத்தியாயம் 3 வது பாதம் 11-13 வது சூத்திரங்களில் ஆக்ஷேப சமாதானங்களுடன் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

பிரம்மம் நிர்விசேஷம் என்பது ஷ அத்தியாயத்தில் 2 வது பாதத்தில் 11-21 வது சூத்திரங்களில் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இந்த நிர்விசேஷ பிரம்மம்தான் சத்தியஞானம் அநந்தம் பிரம்மம் என்கிற இடத்தில் கூறப்பட்டிருக்கிறது.

வி-வி:— ब्रह्मविदाप्नोतिपरं ப்ரஹ்மவிதாப்னோதிபரம் என்கிற சூத்திரரூபமான வாக்கியத்துக்கு வியாக்கியானமாயிருக்கிற ரிக்கின் முதல் பாதத்தால் பிரம்ம சப்தத்துக்கு வியாக்கியானம் செய்யப்பட்டது. இனி பாக்கியான மூன்று பாதங்களால் அதாவது योवेद யோவேத முதலிய பாகங்களால் அறிதல், பரம்பிராப்தி இவைகளின் ஸ்வரூபத்தை விவரிக்கிறார்.

(4) योवेद निहितं गुहायां परमेव्योमन् । யோவேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந் ।

(5) सोऽश्नुते सर्वान्कामान्सह । ஸோऽஶ்நுதே ஸர்வாந்காமாந்ஸஹ ॥

(6) ब्रह्मणा विपश्चितेति ॥ 2 ॥ ப்ரஹ்மணாவிபஶ்சிதேதி ॥ 2 ॥

பதவுரை.

यः ய꞉=எந்த புருஷன்

गुहायां குஹாயாம்=குகையில்

परमे வ்யோமே=ஸிரேஷ்டமான
व्योमन् வ்யோமந்=ஆகாசத்தில்
निहितं நிஹிதம்=மறைந்திருக்கிறதை
वेद வேத=அறிகிறனோ
सः ஸ:=அவன்
सर्वान् ஸர்வாந்=சமஸ்தமான
कामान् காமாந்=இச்சைகளையும்
सह ஸஹ=ஒரேகாலத்தில்
विपश्चिता விபஸ்சிதா=ஸர்வஞ்ஞமான
ब्रह्मणा ப்ரஹ்மணா=பிரம்மமாக இருந்து
अश्नुते அஸ்நுதே=அடைகிறன்.

பொழிப்புரை.—முன்விவரித்தபடி இருக்கிற பிரம்மத்தை எவன் புத்திகுகையாகிய பரமாகாசத்தில் மறைந்திருப்பதாக எவன் அறிகிறனோ அவன் சர்வஞ்ஞமான பிரம்மஸ்வரூபத்துடன் ஒன்றுயிருந்துகொண்டு சகல கோறிக்கைகளையும் ஏககாலத்தில் அடைகிறன்.

அத்:—பிரம்மத்தை அறிதல் என்றல் என்ன.?

சு-வா.—ஆக்ஷேபம். — அறிகிறஜீவன் பிரம்மஸ்வரூபமாகவே இருப்பதால் பிரம்மத்தை அறிகிறதாக எப்படிச்சொல்லலாம் ஜீவனும் பிரம்மமும் ஒன்றுனல் ஞாதா, ஞானம், ஞெயம் ஒன்றும் ஏற்படமாட்டாது ஆகவே பிரம்மத்தை அறிதல் என்னும் பிர சக்தி எப்படி ஏற்படும்?

உத்தரம்:—பிரம்மத்தை அறிதல், கோறிக்கைகளை அடைதல் முதலிய விஷயமான வசனங்கள் ஔபசாரிகங்களே. பிரம்மத்தின் வாஸ்தவமான ஸ்வரூபம் அஞ்ஞானத்தால் தெரியாமலிருக்கிறது. இந்த அஞ்ஞானம் நீங்கினவுடன் எப்போதும் இருக்கும் ஸ்வரூபமே விளங்குகிறது. எப்போதுமிருக்கிறதை அடைவதாக அறிவதாகச் சொல்லுவது ஔபசாரிகமே. தசமன் தன்னை அறிந்துகொள்ளுவதுபோல் ஒருவன் தான் பிரம்மமே என்று தெரிந்து கொள்ளாதவரையில் பிரம்மத்தை அறிந்ததினல்மட்டும் தான்ஜீவன் என்கிற பிராந்தி நிவிர்த்தியாகிறதில்லை. ஆகையால் தன்னுடைய புத்தி குஹையிலிருக்கிற பிரத்தியகாத்மாவே பிரம்மம் என்று ஒருவன் தெரிந்துகொள்ளவேண்டியது.

அவ்வியாகிருதமே பரமமான ஆகாசம்.

गुहायां குஹாயாம்=குஹா என்னும் பதம் குஹ் என்னும் பகுதியினின்றும் வருகிறது, இதற்கு மறைக்கிறது என்று அர்த்தம். புத்தியில் ஞாதா, ஞேயம், ஞானம் ஆகிய எல்லாம் மறைந்திருக்கிறபடியால் புத்தியானது குஹை என்று சொல்லப்படுகின்றது. அல்லது புருஷார்த்தங்களாகிற போகமோக்ஷங்கள் இதில் மறைந்திருக்கின்றபடியால் புத்தி குஹை எனப்படுகிறது.

परमेव्योमन् பரமே வ்யோமந் :—இந்த புத்தி குஹையில் அவ்வியாகிருதமென்கிற சிரேஷ்டமான ஆகாசமிருக்கிறது. तद्धिपरमेव्योमैतस्मिन्खल्वक्षरे गार्ग्याकाश; தத்விபரமேவ்யோமைதஸ்மிந்கல்வக்ஷரே கார்க்யாகாச: (அதாவது கார்க்கியரே, இந்த அக்ஷரத்தில் சிரேஷ்டமான ஆகாசமிருக்கிறது.) என்கிற பிரஹதாரணியக (III-8-11) சுருதிப்படி அக்ஷரத்துக்குச் சமீபத்திலிருக்கிறதினால் இந்த ஆகாசம் அவ்வியாகிருதமே. (ஆ:—பூதாகாசம் காரியமானதால் பரமாகமாட்டாதாகையாலும், அவ்வியாகிருதாகாசம் காரணமானதால் பரமமாயிருக்கலாமாகையாலும் சதபதப் பிராமணத்தில் அவ்வியாகிருதம் பிரம்மத்துக்குச் சமீபமானது என்று சொல்லியிருப்பதாலும், வியோமசப்தத்தால் அவ்வியாகிருதத்தையே அறியவேண்டியது.)

---

வி:-இவ்விடத்தில் சத்தியம் ஞானம் அநந்தம் பிரம்ம என்கிற வாக்கியத்தால் பிரம்ம சப்தத்தின் அர்த்தம் விவரிக்கப்பட்டது. ஹிருதயகுஹையில் இருக்கிறது என்கிற ஞானத்தைக்கூறும் योवेद निहितंगुहायां யோவேத நிஹிதம்குஹாயாம் என்கிற வாக்கியத்தால் वेत् வித்=என்கிற சப்தத்தின் அர்த்தம் சொல்லப்படுகிறது.

परमेव्योमन्सोऽश्नुते பரமேவ்யோமந்ஸோஸ்நுதே என்கிற வாக்கியத்தால் आप्नोति ஆப்நோதி=என்கிற சப்தத்தின் அர்த்தம் கூறப்படுகின்றது.

परमेव्योमन् பரமேவ்யோமந்=ஆகாச சப்தத்தால் கூறப்படும் அப்பிராகிருதமானபரமபதமென்று அர்த்தம்.

---

து:-(4) இரண்டாவதுசங்கைக்கு உத்தரம்:—

गुहां குஹாயாம்=ஈசுவரன் ஒரு அளவில் அடங்காதவராயிருந்தாலும், தன்னுடைய சக்தியாலும், ஜீவனிடத்தில் தனக்கு இருக்கிற பிரயத்தினத்தாலும், பிரியமிருப்பதினால் தயையாலும், ஹிருதய குஹையிலிருக்கிற

परमे பரமே=உத்கிருஷ்டமான

व्योमन् व्योम्नि வ்யோமந்வ்யோம்நி =ஆகாசத்தில்

அ:-சு-வா:—ஆ:—புத்திகுஹையில் பரமமான ஆகாசத்தில் பிரம்மம் மறைந்திருக்கிறது என்று சொன்னதினால் சுருதியானது உள்ளதத்துவத்தைச் சொல்லுகிறது. எப்படியெனின், சத்திய ஞான அநந்தம் என்று சொல்லப்பட்ட பிரம்மத்தைத் தவிரவேறு யாதொன்றும் புத்தியிலிருப்பதாக பிரமாணமில்லை. புத்திக்குக் காரணமான அவ்வியாகிருதத்தில் பிரம்மம் மறைந்திருக்கிறது என்னும் சுருதியின் உபதேசத்தைக் கேட்டவுடன், பிரம்மவித்தையைத் தேடுகிற உபாசகன் அசத் ஜடதுக்கரூபமான சகலபதார்த்தங்களினின்றும் மனதைத்திருப்பி முதலில் பிரம்மத்தைக்காரணமாக பாவிக்கிறான். பிறகு சசல காரியங்களும் அவைகளின் அபாவமும் மித்தையே, காரணமான பிரம்மத்தைத் தவிரவேறு ஒன்றுமில்லை என்பதை அறிந்து, இந்தகாரண பிரம்மமும் காரியமாயும் காரணமாயுமிராத பிரம்மத்தைவிட வேறல்ல வென்பதையும் அறிந்து, புத்திசாக்ஷியானது சத், சித், ஆநந்த, அநந்த பிரம்மத்தைத் தவிரவேறில்லை என்று நிச்சயம் செய்கிறான். இந்த பிரம்ம ஆத்ம ஐக்கியத்தைச் சாக்ஷாத்கரிக்கும் பொருட்டு சுருதியானது "குஹையில் பரமாகாசத்தில் மறைந்திருக்கிறது" என்கிற வசனத்தால் காரியகாரணாதீதமான பிரம்மத்தை, காரியத்தில் காரணம் மறைபட்டிருப்பது போல், புத்தியிலிருக்கிற பிரம்மத்தில் அதாவது அவ்வியாகிருதத்திலிருப்பதாக உபதேசிக்கிறது.)

(வி-வி:—அன்னமயம் முதலிய ஐந்துகோசங்களின் சமுதாயமே குஹை. பஞ்சதசிபிரகரணத்தில் III-2ல் தேகத்துக்குள்ளிருப்பது பிராணன், பிராணனுக்குள்ளிருப்பது மனது; அதற்கும் உள்ளேயிருக்கிறவன் கர்த்தா அவனுக்கும் உள்ளே இருக்கிறவன் போக்தா என்று சொல்லியிருக்கிறது. இந்த பரம்பரையே குஹை எனப்படும். இந்த பஞ்சகோசங்களின் உபாதானமான அவ்வியாகிருதமே ஆகாசம் என்பதாகச்சொல்லப்படுகின்றது. இந்தஅவ்வியாகிருதமானது ஸ்தூலசூக்ஷ்ம சரீரங்களுக்குக் காரணமென்றும், ஆத்மவிஷயமான அஞ்ஞானமென்றும், ஆபாசரூபமென்றும் ஞானிகளால் சொல்லப்படுகின்றது.

பிரஹதாரணியக (1-4-7) சுருதியானது

तद्धेदंतर्ह्यव्याकृतमासीत् ।

தத்தேதம்தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத்।

---

வி:—सर्वान्कामान्सहब्रह्मणाविपश्चिता ஸர்வான்காமான்ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா=என்கிற வாக்கியத்தால் பிராப்பியம் அதாவது அடையத்தகுந்த வஸ்து சொல்லப்பட்டது.

---

து: निहितं நிஹிதம்=ஜீவர்களின் கலியாணத்தின் பொருட்டு அவர்களை பிரேரணை செய்துகொண்டு இருக்கிற பிரம்மத்தை

यः वेद யஃ வேத=எவன் அறிகிறானோ

அத்:-அதாவது, நிச்சயமாய் அவ்வியாகிருதமே அப்போது இருந்ததுஎன்கிற வசனத்தால் சகலஜகத்தும் உற்பத்திக்குமுன் அவ்வியாகிருதமாயிருந்தது என்று கூறுகிறது. அஸ்பஷ்டமாய் இருப்பதே அவ்வியாகிருதம் என்று அர்த்தம். அவ்வியாகிருதமும் ஆகாசமும் அமூர்த்தமாயிருப்பதால், அவ்வியாகிருதம் ஆகாசம் என்பதாய் அக்ஷரப்பிராமணத்தில் யாஞ்ஞவல்கிய கார்க்கி பிரச்னோத்தரத்தில் (பிரஹ-IV-8-11) கூறப்பட்டிருக்கிறது. உலகப்பிரசித்தமான ஆகாசாதி பஞ்சமஹா பூதங்களுக்கும் இந்த அவ்வியாகிருத ஆகாசம் காரணமாயிருப்பதால் இது பரம் சிரேஷ்டம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில் இருப்பது பிரம்மம். அவிநாசியாயும், அக்ஷரசப்தத்தால் கூறப்பட்டும், சகலத்துக்கும் அதிஷ்டானமாயுமிருக்கிற பிரம்மத்தினிடத்தில், அவ்வியாகிருதம், பஞ்சமஹாபூதங்கள் ஜகத்து எல்லாம் ஆரோபிதமாயிருப்பது வாஸ்தவமே. ஆயினும் ஜிஞ்ஞாசுவின் புத்தியானது பாஹியமான ரூபம் ரஸம் முதலிய விஷயங்களைவெறுத்து அன்னமயாதிகள் மூலமாக அவ்வியாகிருதம்வரையில் பிரவேசித்து நிஷ்பிரபஞ்சமானபிரம்மத்தை சாக்ஷாத்கரிக்கிறது. ஆகையால் ஜிஞ்ஞாசுவின் திருஷ்டியை உத்தேசித்து பிரம்மம் பரம ஆகாசத்திலிருப்பதாகச் சொல்லியிருக்கிறது.)

(இதுவரையில் குஹையையும் ஆகாசத்தையும் வெவ்வேறாக பாவித்து அர்த்தம் சொல்லப்பட்டது. இனி ஒன்றாகபாவித்து அர்த்தம் சொல்லுகிறார்.)

ச-பா:—அல்லது, சாமானாதிகரணியத்தினால் அவ்வியாகிருத ஆகாசமே குஹைஎன்று வைத்துக்கொள்ளலாம். அவ்வியாகிருதம் காரணமாயிருப்பதினாலும் அத்தியந்தம் சூட்சுமமாயிருப்பதினாலும் அதினிடத்தில் மூன்று காலங்களிலுள்ள சகலபதார்த்தங்களும் அடங்கியிருக்கின்றன. அதினிடத்தில் பிரம்மம் மறைந்திருக்கிறது.

(மிருத்தாகிறகாரணம் கடமாகிற காரியத்திலிருப்பதுபோல் அவ்வியாகிருத பிரம்மம் புத்தியிலிருக்கிறது என்பது முதலாவது அர்த்தம். காரியங்களெல்லாம் காரணத்தில் அடங்கியிருப்பதுபோல் அவ்வியாகிருத பிரம்மமாகிற குஹையில் எல்லாம் அடங்கியிருக்கிறது என்பது இரண்டாவது அர்த்தம். இப்படி பிறர்கள் செய்யும் வியாக்கியானத்தைச் சொல்லி இனி பாஷ்யகாரர் தன்னுடைய அர்த்தத்தைச் சொல்லுகிறார்.)

---

வி:-कामान् காமாந் இச்சிக்கத்தகுந்த கலியாண குணங்களை சகல விஷயங்களினின்றும் வைராக்கியத்தை அடைந்த முக்தன் கல்யாண குணங்களைவிட வேறு வஸ்துக்களை இச்சிக்கிறதில்லை. ஆகையால் காம பதத்துக்குக் கலியாண குணமென்று அர்த்தம்.

அத்:-இந்த பரம ஆகாசத்தால் ஹிருதயாகாசத்தை அறிவதே யுக்தம். ஏனெனின் ஹிருதயாகாசம் பிரம்மத்தை அறியசாதகமாயும் உபாசகனுக்குச் சாதகமாயும் சொல்லப்பட்டிருக்கிறது.

योवैसबहिर्धा पुरुषादाकाशो ।
योवैसोन्तःपुरुषआकाशो ।
योऽयमन्तर्हृदय आकाशः ।

𑌯𑍋𑌵𑍈𑌸𑌬𑌹𑌿𑌰𑍍𑌧𑌾 𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌦𑌾𑌕𑌾𑌶𑍋 ।
𑌯𑍋𑌵𑍈𑌸𑍋𑌨𑍍𑌤𑌃𑌪𑍁𑌰𑍁𑌷 𑌆𑌕𑌾𑌶𑍋 ।
𑌯𑍋𑌽𑌯𑌮𑌨𑍍𑌤𑌰𑍍𑌹𑍃𑌦𑌯 𑌆𑌕𑌾𑌶𑌃 ।

அதாவது:—புருஷனுக்கு வெளியே எந்த ஆகாசமிருக்கிறதோ அதுவே புருஷனுக்குள்ளே யிருக்கிறது. இந்த ஆகாசமே ஹிருதயத்திலிருக்கிற ஆகாசம்.

என்பதாய் சாந்தோக்கியம் III-12-7, 8, 9 ல் சொல்லியிருக்கிறது. இந்த சுருதியில் பரமஆகாசம் ஹிருதயாகாசம்தான் என்று தெரியவருகிறது. ஹிருதயாகாசம் என்பது ஹிருதயத்திலிருக்கிற பூதாகாசத்தைக் கூறுகிறது. இந்த ஹிருதயாகாசத்தில் புத்தியாகிற குஹையிலிருக்கிறது. அதில் பிரம்மமிருக்கிறது. புத்தியின் விருத்தியால் பிரம்மமானது அறியப்படுகின்றது. பிரம்மம் எங்கும் வியாபித்திருப்பதாலும் நிர்விசேஷமாயிருப்பதாலும், புத்தி சம்பந்தமன்றியில் வேறுவிதமாய் பிரம்மம் தேசகால சம்பந்தத்தை அடையமாட்டாது.

(வி-வி:—ஹிருதய புண்டரீகத்துக்குள் கட்டைவிரல் பரிமாணமுள்ள யாதொரு ஆகாசமிருக்கிறதோ அதுவே இவ்விடத்தில் கூறிய பரமாகாசம். ஜாகரணவியவஹாரத்துக்கு ஹேதுவாயும் இருக்கிற பாஹிய ஆகாசத்தையும் சரீரத்துக்குள்ளிருக்கும் ஆகாசத்தையும் அபேக்ஷித்து சகலதுக்கங்களற்ற சுஷுப்தி சமாதிகளுக்கு ஸ்தானமாயிருக்கிற ஹிருதயாகாசமானது சிரேஷ்டம் என்று சொல்லுவது யுக்தம். இந்த ஆகாசத்திலிருப்பது புத்தியாகிற குஹை. அதில் ஞாதிரு ஞேயஞானரூப திருபுடியும்; பிராந்தியால் ஏற்படும் போகம், விவேகத்தால் ஏற்படும் மோக்ஷம், இவைகளும் இருக்கின்றன. ஆகையால் புத்தியானது குஹையாகச்சொல்லப்பட்டது. புத்தியால் பிரம்மம் அறியக்கூடியதாக இருப்பதால் பிரம்மம்அதிலிருப்பதாகச்சொல்லப்படுகின்றது. அவ்விடத்தில் தான் பிரம்மம் பிரத்தியக் ரூபமாயிருக்கிறது. பிரம்மம் ஒருவனுடைய ஸ்வரூபமாயிருந்தாலும், காமம், அவித்தை, முதலியவைகளால் மூடப்பட்

அத்:-டிருப்பதால், பஹிர்முகர்களால் பிரம்மம் அறியப்படுகிற தில்லை. அந்தர்முகர்களுக்கு இந்த மறைவு இல்லாதபடியால் பிரம்மம்அவர்களால் அறியப்படுகிறது.)

(ஆ:—புத்தியால் பிரம்மம் அறியப்படுவதால் ஹிருதயாகாசமாகிற புத்தியில் பிரம்மம் இருக்கிறதாகச் சொன்னது அர்த்தமே யுக்தமானது. ஏனெனின் இப்படிச் சொல்லுவதினால் பிரம்மம் அபரோக்ஷம் என்று ஏற்படுகிறது. அவ்வியாகிருத (மாயை) த்தில் பிரம்மமிருக்கிறதாகச் சொன்னால் அது பரோக்ஷமென்று ஏற்படும். அபரோக்ஷமான சம்சார பிராந்தியை பரோக்ஷஞானம் நீக்கமாட்டாது.

அபரோக்ஷமான திரஷ்டாவின் சைதன்னியமும் பிரம்மமும் ஒன்று. அது ஹிருதயத்தில் பிரத்தியக்ஷமாயிருக்கிறது என்று உபதேசிப்பது சுருதியின் கருத்தானதால், ஆகாச சப்தத்தால் ஹிருதயாகாசத்தை அறிவதே யுக்தம், அப்போதுதான் பிரம்மத்தின் சாக்ஷாத்ஞானத்தை சுருதியானது உபதேசிக்க முடியும்.)

வி-வி:—யோவேத யொவெத எவன் அறிகிறானோ என்று சொல்லியிருக்கிறது. ஜீவனும் பிரம்மமும் ஒன்றானால், அறிகிறவன், அறியப்பட்டது, அறிவு, என்கிற வித்தியாசமேயில்லையே, எப்படி ஜீவன் பிரம்மத்தை அறிகிறான் என்று சொல்லலாம் ?

அறிதல், சகல கர்மங்களையும் அடைதல், முக்தி, முதலிய சகல வியவஹாரங்களும் ஔபசாரிகங்களே. ஞாதா முதலிய பேதங்களில்லாவிடினும், நீ பத்தாவது மனிதன், என்கிற வாக்கியத்தால் தான் தசமன் என்பதை ஒருவன் அறிகிறான். அதுபோலவே தான்பிரம்மம் என்பதையும் அறியவேண்டும். பிரம்மத்தைத்தானாக அறியாதவரையில், பிரம்மத்தை மட்டும் அறிந்ததினால் தான் ஜீவன் என்கிற பிராந்தி நிவிர்த்தியாகமாட்டாது. ஆகையால் குஹையிலிருக்கிற சைதன்னியத்தையே பிரம்மம் என்பதால் அறியவேண்டும்)

ஆ:—ஜீவனும் பிரம்மமும் ஒன்றானால், ஜீவன் சம்சாரியாவது போல் பிரம்மமும் சம்சாரியாகுமேயெனின், ஜீவனே காலாந்திரத்தில் தான் சம்சாரியன்று, பிரம்ம ஸ்வரூபம் என்றுதெரிந்துகொண்டு அசம்சாரியாகும்போது, பிரம்மம் சம்சாரி யென்று சொல்லுவதற்கு இடமுண்டா? சுத்தமாயில்லை. ஆகையால் ஜீவனும்பிரம்மமும் ஒன்று என்று சொன்னதில் தோஷமில்லை.

அத்:-(வி-வி:—இதுவரையில் யோவேத நிஹிதம்...வ்யோமந் யோ வேத நிஹிதம்... வ்யோமந்=என்பதற்கு அர்த்தம் செய்யப்பட்டது. இனி ஸோऽஶ்நுதே ஸோऽஶ்நுதே என்பதற்கும் அர்த்தம் சொல்லுகிறார்).

இப்படி பிரம்மத்தை அறிகிறவனைப்பற்றி என்ன? ஸோऽஶ்நுதே ஸர்வாந்காமாந் ஸோऽஶ்நுதே ஸர்வாந்காமாந்:—அவன் சகல காமங்களையும் அதாவது ஒன்றையும் மிச்சம் விடாமல் அனுபவிக்கிறான்.

ஸஹ ப்ரஹ்மணா ஸஹ ப்ரஹ்மணா நாம் புத்திரன், ஸ்வர்க்கம் முதலியவைகளை அனுபவிக்கிறதுபோல், அவனும் ஒன்றுக்குப்பின் ஒன்றை அனுபவிக்கிறானா? இல்லை. ஒரே க்ஷணத்தில் சகலத்தையும் ஒரே ஞானத்தால் அறிகிறான். இந்த ஞானம் சூரியனுடைய தேஜஸ் போல் நித்தியமாயும் சத்தியம் ஞானம் அநந்தம் என்று சொல்லப்பட்ட பிரம்ம ஸ்வரூபத்தைவிட வேறாகாததாயுமிருக்கிறது. இது தான் ஸஹ பிரம்மணா என்பதின் அர்த்தம். ஞானியானவன் பிரம்மமேயாகிறான். இந்த பிரம்ம ஸ்வரூபமாயிருந்துகொண்டே சகல கர்மங்களையும் அவன் ஏககாலத்தில் அனுபவிக்கிறான். சாதாரணமான மனிதனுடைய ஸ்வரூபம் உபாதியால் வளைபட்டிருக்கிறது. ஜலத்தில் காணப்படும் சூரியன் போல் பிரதிபிம்பமாயிருக்கிறது. இவன் சம்சாரி. தர்மாதி நிமித்தங்களை அபேக்ஷித்தும் சக்ஷுஸ் முதலிய இந்திரியங்களை அபேக்ஷித்தும் இவன் கர்மங்களை ஒன்றுக்குப்பின் ஒன்றாக அனுபவிக்கிறான். இப்படி ஞானி அனுபவிக்கிறதில்லை. அப்படியானால் அவன் எப்படி அவைகளை அனுபவிக்கிறான்? முன் சொன்னபடி சர்வஞ்ஞமாயும், சர்வ வியாபியாயும் சர்வாத்மாவாயும் இருக்கிற நித்தியப்பிரம்ம ஸ்வரூபமாகவே தான் இருந்துகொண்டு தர்மாதி நிமித்தங்களையும் சக்ஷுஸ் முதலிய இந்திரியங்களையும் அபேக்ஷிக்காமல், சகல கர்மங்களையும் ஒரேகாலத்தில் அனுபவிக்கிறான்.

---

து-:(5) மூன்றாவது சங்கைக்குச் சமாதானம்:—

ஸ: ஸ:=அந்த அதிகாரி(தான்)

அர்த்த:-विपश्चिता விபஶ்சிதா=மேதாவியான சர்வஞ்ஞமான சர்வது என்று ஞமாயிருக்கிறதோ அதுதான் விபச்சித் ஆக இருக்கமுடியும், தான் சர்வஞ்ஞனும் பிரம்மமாயுமிருந்துகொண்டு அவன் அனுபவிக்கிறான்.

इति ஊதி:-இந்த சப்தம் மந்திரம் முடிந்ததைக்காட்டுகிறது

(சு-வா:—தான் கர்த்தா என்கிற ஞானமிருக்கும் வரையில்ஒரே காலத்தில் சகலத்தையும் அனுபவித்தல் என்பது ஏற்படமாட்டாது. ஆகையால் பிரம்மமாகதான் சகலத்தையும் அனுபவிக்கிறான் என்று சுருதி சொல்லுகிறது. பிரம்மத்துடன் கூட தானும் சுகத்தை அனுபவிக்கிறான்—என்பது அர்த்தம்—என்பதாய் சுருதிக்கு அர்த்தம் செய்தால், துவைதம் ஏற்படும். பிரம்மமும் அந்தராத்மாவும் ஒன்றாக மாட்டா. ஆத்மாவுக்கு வேறாக சத்தியம் ஞானம் அநந்தம் என்று சொல்லப்பட்ட பிரம்மமிருக்கிறது என்று பாவிக்கமுடியாது. ஸஹ என்பதற்கு அத்துடன்கூட என்பதுதான் அர்த்தம் வேறு அர்த்தமில்லை என்று சொல்லக்கூடாது. ஆகவே பிரம்மத்தை அறிந்த ஞானி சகலத்தையும் ஏககாலத்தில் அனுபவிக்கிறான் என்பது சுருதியின் அர்த்தம். பிரம்மஞானத்தால் அநிர்தாதிகள் நிவிர்த்தியான பின் ஆத்மாவைத்தவிர வேறு ஒன்றும் மிச்சப்படுகிறதில்லை. ஆகையால் தான் பிரம்மஸ்வரூபமா யிருந்துகொண்டு சகலத்தையும் ஒரே க்ஷணத்தில் ஞானி அனுபவிக்கிறான். ஹிருதயாகாசத்தில் அந்தராத்மாவைத் தவிர வேறு ஒன்றுமில்லை. ஆகையால் பிரம்மத்தை சாக்ஷாத்கரித்தவனுக்கு பிரம்மமும் அந்தராத்மாவும் ஒன்றே. ஞானியைத் தவிர அறிய வேண்டியதாக ஒருவனுமில்லை என்பதைக்காட்டும் பொருட்டு, ब्रह्मणा विपश्चिता ப்ரஹ்மணா விபஶ்சிதா என்கிற பதங்கள் ஒரே வேற்றுமையில் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. இதினால் இரண்டும் ஒருவனையே கூறுகிறது என்று தெரியவருகிறது. அவித்தையால் இச்சைகள் ஏற்படுகின்றன. இச்சைகளால் கர்மத்தில் பிரவிர்த்தி ஏற்படுகிறது. பிரவிர்த்தியால் தர்மமும் அதர்மமும் ஏற்படுகிறது. இவைகள் துக்கத்துக்கு இருப்பிடமாகிய சரீரத்தை உண்டுபண்ணுகின்றன. ஆகவே ஞானியினிடத்தில் அவித்தை நாசமாய் விட்டபடியால் பிரவிர்த்திக் காரணமான யாதொரு மனோவிகாரமும் ஏற்படுகிறதில்லை.)

---

வி:—विपश्चिता விபஶ்சிதா=அநேக வஸ்துக்களை கிரகிக்கிற ஞானமுடைய

---

து:-(5) विपश्चिता விபஶ்சிதா=சர்வஞ்ஞமான

ब्रह्मणासह ப்ரஹ்மணாஸஹ=பரமாத்மாவுடன் அல்லது விரிஞ்சனுடன் (பிரம்மதேவருடன்)

அ:—(வி-வி:—ஸோऽஶ்நுதே ஸொऽஶ்நுதே என்கிற வசனத்தால் முன் சொன்ன பரப்பிராப்தி இன்னது என்பதை சுருதி விவரிக்கிறது. பிரம்மஞானி சகல பிராணிகளும் அனுபவிக்கிற சகல இச்சைகளையும் ஏககாலத்தில் அனுபவிக்கிறான். அஞ்ஞானியான புருஷன் தன்னுடைய கர்மத்துக்குத் தக்கபடி சரீரங்களை தரித்து, ஜலத்தில் சூரியன் தெரிவதுபோல் உபாதியால் ஆத்மாவுக்குப் பிரதிபிம்பமான ஜீவரூபத்தை அடைந்து, சக்ஷுஸ்முதலிய இந்திரியங்களால் அந்த அந்த போகங்களை அனுபவிக்கிறான். ஞானியோ சர்வஞ்ஞமான பிரம்ம ஸ்வரூபமாயிருந்து கொண்டு ஏககாலத்தில் சகலத்தையும் அனுபவிக்கிறான் என்று முன்னமேயே சொல்லியிருக்கிறோம்.

ஆக்ஷேபம்:—முண்டகோபநிஷத்தில் (III-1-4) சரீரத்தில் இரண்டு சேதனங்களிருப்பதாயும் ஒன்று கர்மபலத்தை அனுபவிப்பதாயும் மற்றொன்று சாட்சியாயிருப்பதாயும் சொல்லியிருக்கிறது. உபாதி சகிதமாயும், பிரதிபிம்பரூபமாயும், ஒரு சரீரத்தை அவலம்பித்துயிருக்கிற ஜீவன் அனுபவிக்கிறான். உபாதியற்றும், பிம்பரூபமாயும் எங்கும் வியாபித்திருக்கும் பிரம்ம சைதன்னியம் சகல போகங்களையும் விளக்கிவைக்கிறது. இது ஞானி அஞ்ஞானி இருவர்களுக்கும் சமமாயிருக்க, ஞானிதான் சகல இச்சைகளையும் அடைகிறான் என்று சொல்ல வேண்டிய விசேஷகாரண மென்ன இருக்கிறது.?

உத்தரம்:—வித்வானானவன் சர்வ போகங்களையும் பிரகாசிக்கிற பிரம்மஸ்வரூபம் தான் தான், என்று அறிந்துசந்தோஷமடைகிறான். அஞ்ஞானியோ அப்படி அடைகிறதில்லை. இதுவே இருவர்களுக்கும் வித்தியாசம்.

ஆக்ஷேபம்—பிரம்ம சைதன்னியத்தால் சகல சரீரங்களிலுமுள்ள சகல சுகங்களும் பிரகாசமாகிறதுபோல் சகல துக்கங்களும் பிரகாசமாகட்டுமே? இந்த ஞானத்தால் ஞானியும் துக்கியாவான்.

உத்தரம்:—இப்படிச் சொல்லக்கூடாது. சாக்ஷியான பிரம்மத்தினிடத்தில் துக்கலேசமேயில்லை.

---

வி:—ब्रह्मणा ப்ரஹ்மணா பிரம்மத்தோடு கூட அதின் கலியாண குணங்களை அடைகிறான். பிரம்மத்தைவிட பிரம்மகுணங்கள் முக்தர்களுக்கு யோக்கியமாகையால் பிரதானங்களாக இருக்கின்றன. ஆகவே பிரம்மத்தோடு கூடவென்றுசொல்லப்பட்டது.

---

து:—(5) सर्वान् ஸர்வாந்=சகலமான

कामान् காமாந்=போகங்களை

अश्नुते அஶ்நுதே=அனுபவிக்கிறான்

அ:—கடோபநிஷத்தில்

सूर्यो यथा सर्वलोकस्य चक्षुर्न लिप्यते चाक्षुषैर्बाह्यदोषैः।
एकस्तथा सर्वभूतान्तरात्मा न लिप्यते लोकदुःखेन बाह्यः ॥V-11॥

ஸூர்யோ யதா ஸர்வலோகஸ்ய சக்ஷுர் ந லிப்யதே சாக்ஷுஷைர் பாஹ்யதோஷை: ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா ந லிப்யதே லோகது:கேந பாஹ்ய: ॥V-11॥

அதாவது:—சகல லோகத்துக்கும் கண்ணாயிருக்கிற சூரியன் கண்களின் பாஹ்ய தோஷங்களால் பாதிக்கப்படாதது போல், சகல பூதங்களுக்கும் ஒரே அந்தராத்மாவாயிருப்பது உலக துக்கத்தால் பூசப்படுகிறதில்லை, என்பதாய் சொல்லியிருக்கிறது.

ஆக்ஷேபம்.—துக்கம்போல் சுகத்துடனும் பிரம்மம் சம்பந்தப் படமாட்டாது என்று சொல்லுகிறோம்.

உத்தரம்,—சரிதான் சுகசம்பந்த மில்லைதான். சுகமோ பிரம்மத்தின் ஸ்வரூபமே. தைத்திரீயம் III-6 ல் आनन्दं ब्रह्मेति व्यजानात् ஆநந்தம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத் (பிரம்மம் ஆநந்தம் என்று அறி) என்பதாய் சொல்லியிருக்கிறது. பிரஹதாரணியகத்தில் (III-9-28) विज्ञानमानन्दं ब्रह्म விஜ்ஞாநமாநந்தம் ப்ரஹ்ம என்று சொல்லியிருக்கிறது. ஆநந்தமானது பிரம்மஸ்வரூபமாயிருந்தாலும் சித்தவிருத்தியால் பரிச்சேதத்தை அடைந்து விஷயாநந்தம் ஏற்படுகிறது. ஒருவன் ஒரு விஷயத்தில் இச்சைகொண்டு பிரவிர்த்திக்கிறான். அதையடையாமல் துக்கப்படுகிறான். ஒருக்கால் புண்ணிய வசத்தால் அதை அடைந்தால் கோறிக்கை நிறைவேறி அவனுடைய சித்தவிர்த்தி உள் திரும்பி அசாத்விகமாகிறது. அந்த விருத்தியானது பிரம்மாநந்தத்தை அதின் ஏகதேசத்தை அறிகிறது. இதுவே விஷயாநந்தம் எனப்படும். பிரம்மாதி ஸ்தம்பபரியந்தம் சகலத்துக்கும் இந்த விஷயாநந்தமுண்டு. இந்த விஷயாநந்தங்கள்தான் பிரகிருத சுருதியில் सर्वान् कामान् ஸர்வாந்காமாந் என்பதால் கூறப்படுகின்றன.

---

வி:—इति இதி=இந்த சப்தம் மந்திரத்தின் சமாப்தியைக் கூறுகிறது. சத்தியம் ஞானம் அநந்தம் என்று சொல்லப்பட்ட வஸ்துவை அநந்தமாயும் சகலத்துக்கும் உபாதானமாயும் சர்வத்துக்கும் ஆந்தரமாயும் இருக்கிறதென்று விஸ்தாரமாகக்கூறுகிறது.

---

து:—பிரம்மத்தின் அதீனத்திலிருந்து சுகங்களை அடைகிறான் என்பது கருத்து.

(6) इति இதி=இந்த சப்தத்தை (2) ல் एषा उक्ता ஏஷா உக்தா என்பதுடன் சேர்த்துக்கொள்ள வேண்டியது.

அ:—இச்சிக்கப்பட்டவைகளே இச்சைகளாகச்சொல்லப்படுகின்றன. பிராணிகள் சுகங்களையே இச்சிக்கிறார்கள். துக்கங்களை இச்சிக்கிற தில்லை. பிரம்மஞானியானவன் ஆநந்தத்தில் விருத்தியால் ஏற்படும் பரிச்சேதத்தைப் பாதித்து, பரிச்சேதமற்ற ஆநந்தைகரஸமான பிரம மமேதான் என்று அறிந்து செய்யவேண்டியதெல்லாம் செய்தாய் விட்டது, அடையவேண்டியதெல்லாம் அடைந்தாய்விட்டது என் கிற ஞானத்தால் எப்போதும் சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறான் இந்த சந்தோஷம் அஞ்ஞானிக்கு இல்லை

இவ்விதமாக பிரம்மம், அதை அறிதல், அதை அடைதல் ஆகிய மூன்றும் வியாக்கியானம் செய்யப்பட்டன.)

இதுவரையில் சொன்னதற்கும் இனி சொல்லப்போகிறதற்கும் சம்பந்தம்.—

இந்த வல்லி முழுமையின் தாத்பரியம் ब्रह्मविदाप्नोतिपरम् ப்ரஹ்மவி தாப்நோதிபரம் என்கிற பிராமணவாக்கியத்தால் சூத்திரரூபமாய் சொல்லப்பட்டது. இந்த சூத்திரரூபமான அர்த்தம். सत्यंज्ञानं ஸத்யம்ஜ்ஞாநம்=முதலிய மந்திரபாகத்தால் சுருக்கமாய் வியாக்கியானம் செய்யப்பட்டது.

இதின் அர்த்தத்தையே விஸ்தாரமாய் நிச்சயிக்கும் பொருட்டு சுருதியே விருத்திரூபமான तस्मात् தஸ்மாத் முதலிய கிரந்தத்தை ஆரம்பிக்கிறது.

மந்திரம்-பிராமணம்:

(வி-வி.—வேதத்தில் மந்திரம் பிராமணம் என இரண்டு பாகங் களுண்டு. இந்த பிரம்மவல்லி பிராமணரூபம். பிராமணம் 8 விதம். இவைகளின் பேதம் பிரஹதாரணியகத்தில் (II-1-10) அடியில் வரு மாறு சொல்லியிருக்கிறது.

(1) இதிஹாசம்.—பிருகுவானவன் தகப்பனாரை அடைந்து கேட்டான் (தைத்திரீயம III-1)

(2) புராணம்.—சிருஷ்டியைச் சொல்லும் வாக்கியம் (ஷை.)

(3) வித்தை அல்லது உபாசனை.—மஹாசம்ஹிதைகளை எவன் அறிகிறானோ (ஷை 1-3)

---

அ:—பிரமாணவாக்கியம்

स्वयोग्यंब्रह्मविद्भुङ्क्ते विरंचेनपरेणच ।
ब्रह्मणासहतद्भस्यः सुखमेवनदुष्कृतम् ॥ यजुर्विवेके ॥

ஸ்வயோக்யம்ப்ரஹ்மவித்புங்க்தே விரிஞ்சேநபரேணச ।
ப்ரஹ்மணாஸஹதத்பஸ்ய: ஸுகமேவநது்ஷ்க்ருதம் ॥
(யஜுர்விவேகே)

அ:—(4) உபநிஷத்து.—இரகசியார்த்தோபதேசம் (ஷை I-11)

(5) சுலோகம்.—உதாகரணமாய் இனி சொல்லப்படும்வைகள்.

(6) சூத்திரம்.—பிரம்மவித்து (ஷை II-1)

(7) அனுவியாக்கியானம்.—சூத்திரத்திலுள்ள பதங்களை வரிசைப்படி வியாக்கியானம் செய்தல், சத்தியம் (ஷை)

(8) வியாக்கியானம்.—அனுவியாக்கியானத்தில் உள்ள பதங்களுக்கு விசேஷமாய் அர்த்தம் செய்தல்,

तस्माद्वाएतस्मात् தஸ்மாத்வா ஏதஸ்மாத்=முதல் अन्नात्पुरुषः அந்நாத்புருஷ: முடியும் வரையிலுள்ள பாகம் வியாக்கியான ரூபம் ஏனெனின் அனுவியாக்கியானத்தில் பிரம்மம் அநந்தம் என்று சொல்லியிருக்கிறது. எப்படி அநந்தம் என்பதைக்காட்டும் இந்த பாகத்தில் சிருஷ்டி கூறப்பட்டிருக்கிறது. இந்த அநந்தம் என்பதை, காட்டச் சாதகமாயிருக்கும் சிருஷ்டியை அடியிற்கண்ட சுருதிபாகம் விவரிக்கிறது.)

III (7) तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः ।

தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மந ஆகாஶ: ஸம்பூத: ।

(8) आकाशाद्वायुः । ஆகாஶாத்வாயு: ।

(9) वायोरग्निः । வாயோரக்நி: ।

(10) अग्नेरापः । அக்நேராப: ।

(11) अद्भ्यः पृथिवी । அத்ப்ய: ப்ருதிவீ ।

(12) पृथिव्या ओषधयः । ப்ருதிவ்யா ஓஷதய: ।

(13) ओषधीभ्योऽन्नम् । ஓஷதீப்யோऽந்நம் ।

(14) अन्नात्पुरुषः ॥ 3 ॥ அந்நாத்புருஷ: ॥ 3 ॥

பதவுரை.

(7) तस्मात् वै தஸ்மாத்வை—அந்த
एतस्मात् ஏதஸ்மாத்=இந்த
आत्मनः ஆத்மந:=ஆத்மாவினின்றும்
आकाशः ஆகாஶ:=ஆகாசம்
संभूतः ஸம்பூத:=உண்டாயிற்று.
आकाशात् ஆகாஶாத்=ஆகாசத்தினின்றும்
वायुः வாயு:=வாயு (உண்டாயிற்று)
(9) वायोः வாயோ=வாயுவிலிருந்து
अग्निः அக்நி:=அக்கினி (உண்டாயிற்று)
(10) अग्नेः அக்நே:=அக்கினியினின்றும்
आपः ஆப:=ஜலங்கள் (உண்டாயின)
(11) अद्भ्यः அத்ப்ய:=ஜலங்களினின்றும்
पृथिवी ப்ருதிவீ=பூமி (உண்டாயிற்று)
(12) पृथिव्याः ப்ருதிவ்யா:=பூமியினின்றும்

ओषधयः ஓஷதய:=ஓஷதிகள் (செடி, கொடி முதலியவைகள் உண்டாயின.)

(13) ओषधिभ्यः ஓஷதிப்ய:=ஓஷதிகளினின்றும்
अन्नं அந்நம்=அன்னம் (உண்டாயிற்று)
(14) अन्नात् அந்நாத்—அன்னத்தினின்றும்
पुरुषः புருஷ:=புருஷன் (உண்டானான்.)

மந்திரத்தின் ஆரம்பத்தில் सत्यंज्ञानं अनन्तंब्रह्म ஸத்யம்ஜ்ஞாநம் அநந்தம்ப்ரஹ்ம என்று சொல்லப்பட்டது. எப்படி பிரம்மம் சத்திய மாயும், ஞானமாயும், அநந்தமாயுமிருக்கக்கூடும்.

(ஆ.—மற்ற பதார்த்தங்களைவிட வேறான பதார்த்தம் பிரம்மம். தேசகாலவஸ்து பரிச்சேதங்கள் அவைகளுக் கிருப்பதுபோல் பிரம் மத்துக்கு மிருக்கவேண்டும். அவைகளைப்போல் பிரம்மமும் அந்ரி தம், ஜடம், அந்தம் இப்படி இருக்கவேண்டும். எப்படி சத்தியம், ஞானம், அநந்தம் என்று சொல்லலாம்.)

உத்தரம்.—அநந்தம் என்பது தேசத்தாலும், காலத்தாலும் வஸ் துவாலும் மூன்று விதமாயிருக்கிறது. ஆகாசமானது தேசத்தால் அநந்தம். அதற்கு தேசத்தில் பரிச்சேதம் (இவ்வளவுதான் என்பது) இல்லை. காலத்தாலாவது, வஸ்துவாலாவது ஆகாசத்துக்கு அநந் தத்தன்மை ஏற்படவில்லை. ஏனெனின் அது காரியம். (அதுவும்ஒரு காலத்தில் உண்டாயிருக்கிறது. அதுபோல் இதர பதார்த்தங்களு மிருக்கின்றன. ஆகையால் காலத்தாலும் வஸ்துவாலும் அது அநந்

தமன்று.) ஆகாசம்போல் பிரம்மம் காலத்தால் முடிவு வுள்ளதா யில்லை. ஏனெனின் அது காரியமன்று. எந்த வஸ்து காரியமோ அது காலத்தால் பரிச்சேதத்தை அடைகிறது. பிரம்மமோ அகாரியம், ஆகையால் காலத்தாலும் அது அநந்தம். அப்படியே வஸ்துவாலும் அது பரிச்சேதமற்றது. எப்படி வஸ்துவால் அநந்தத்தன்மை ஏற்படுகிறது? சகலமும் இதைத்தவிர வேறாக இல்லாததால், எந்த வஸ்து பின்னமாயிருக்கிறதோ அது வேறு வஸ்துவுக்கு அந்தமாயிருக்கிறது. ஒரு வஸ்துவில் புத்தியானது பிரவிர்த்தித்திருக்கும்போது வேறு வஸ்துவினின்றும் அது திரும்பிவிடுகிறது. எந்த வஸ்துவானதுவேறுவஸ்துவினின்றும் புத்தியை திருப்பிவிடுகிறதோ அது அதற்கு அந்தமாயிருக்கிறது. பசு என்கிற புத்தியானது குதிரையினின்றும் திரும்பிவிடுகிறது. ஆகையால் குதிரையால் பசுபுத்தி முடிவு பெறுகிறபடியால், பசு என்பது அந்த முள்ளதாக ஆகிறது. இந்த அந்தம் பின்ன பதார்த்தங்களில் காணப்படுகின்றது. பிரம்மத்தினிடத்தில் இப்படிப்பட்ட பேதமில்லை. ஆகையால் வஸ்துவாலும பிரம்மம் அநந்தமாயிருக்கிறது.

ஆக்ஷேபம்.—பிரம்மம் சகலத்தைவிட வேறல்லவென்று எப்படிச் சொல்லலாம்?

உத்தரம்.—சகல வஸ்துக்களுக்கும் காரணமாயிருப்பதால் சொல்லலாம். காலம், ஆகாசம், முதலிய சகல வஸ்துக்களுக்கும் பிரம்மம் காரணம்.

ஆக்ஷேபம்.—காரியத்தை அபேக்ஷித்து பிரம்மம் வேறு ஆகையால் அது அந்தமுள்ளது என்று சொல்லுகிறோம்.

உத்தரம்.—அப்படிச் சொல்லக்கூடாது. காரிய வஸ்துக்கள் பொய். காரணம் என்கிறபுத்தி விலகும்படியாக காரணத்தைவிட வேறான காரியரூபவஸ்து யாதொன்றுமில்லை. ஏனெனின் சாந்தோக்கியம் VI-1-4 ல் விகாரங்களெல்லாம் பெயர் மாத்திரமே, மிருத்தே சத்தியம், அதுபோல் சத் என்பதே சத்தியம் என்பதாய் சொல்லியிருக்கிறது. ஆகையால் ஆகாசம் முதலியவைகளுக்குக் காரணமாயிருப்பதினால் பிரம்மம் தேசத்தால் அநந்தம். ஆகாசம் தேசத்தால் அநந்தம் என்பது பிரசித்தம். அதற்கு இது காரணம். ஆகையால் ஆத்மா தேசத்தால் அநந்தம் என்பது ஏற்படுகின்றது. எங்கும் வியாபிக்காததினின்றும் எங்கும் வியாபிக்கும் வஸ்து உண்டானது லோகத்தில் யாதொன்றும் காணப்படுகிறதில்லை. ஆகையால் ஆத்மாவுக்குத் தேசத்தால் சுத்தமாய் அந்தமில்லை என்பது நிச்சயம். அப்படி

அ:—காரியமாக இராதபடியால் காலத்தாலும் அந்தம் ஏற்படுகிறதில்லை. அதைவிட வேறானவஸ்து வில்லாததாலும் வஸ்துவாலும் அந்தம் ஏற்படுகிறதில்லை. ஆகைபால் தான் அது அத்திபந்தம் சத்தியம்.

ஆ-சு-வா.—இனி வரப்போகிற கிரந்தத்தில் பிரம்மம் மூன்று விதத்திலும் அநந்தம் என்பதும் காரியகாரண பாவங்கள் பொய் என்பதும் நிரூபிக்கப்படுவதால், சுருதியானது சிருஷ்டியைச் சொல்லுவதிலும் பிரம்மத்தின் வாஸ்தவமான ஸ்வரூபத்தை நிரூபிப்பதில் கருத்து கொள்ளுகிறதே தவிர, சிருஷ்டியைப்பற்றிச் சொல்லவேண்டுமென்பதாய் கருத்துக் கொள்ளவில்லை என்று அறியவேண்டியது.)

ஆத்ம-பிரம்ம ஐக்கியம்.

तस्मात् தஸ்மாத்=இந்த பதம் சூத்திரரூபமான மூல வாக்கியத்திலுள்ள பிரம்மத்தைக் கூறுகிறது.

एतस्मात् ஏதஸ்மாத்:=இந்த சப்தம் மந்திரவாக்கியத்தில் பிந்தி விவரிக்கப்பட்ட பிரம்மத்தைக் கூறுகிறது.

---

வி:—III-(7) तस्मात्वा एतस्मात् आत्मनः தஸ்மாத்வா ஏதஸ்மாத் ஆத்மந:=பிரம்மவித் ஆப்நோதி பரம் என்கிற பிராமணத்தில் சொல்லப்பட்டும் சத்தியம் ஞானம் அநந்தம் என்கிற மந்திரத்தில் சொல்லப்பட்டுமிருக்கிற பிரம்மத்தினிடமிருந்து

आकाश: ஆகாஶ:=ஆகாசமானது

संभूत: ஸம்பூத:=உண்டாயிற்று. இவ்விடத்தில் तत्तेजऐक्षत-தத்தேஜ ஐக்ஷத=ता आपऐक्षन्त தா ஆப ஐக்ஷந்த என்கிற வாக்கியங்களில் தேஜஸ் முதலியவைகளுக்கு சாங்கற்பம் முதலியவை இருக்

---

து:—அ-கை:—பிரம்மம் ஜகத்தின் உற்பத்திக்குக் காரணம் என்று சொல்லப்பட்டது. ஜகத்தின் உற்பத்திக்குக் காரணம் பஞ்சமகாபூதங்கள். பிரம்மம் அவைகளுக்குள் இருந்துகொண்டு ஜகத்தை உண்டுபண்ணும்படியான சக்தியை அவைகளுக்குக் கொடுக்கிறது. இப்படிப்பட்ட பிரம்மத்தைக் கூறும்பொருட்டு சிருஷ்டியின் உற்பத்தியை வர்ணிக்கிறார்.

तस्मात् தஸ்மாத்=பிரம்மவித் ஆப்நோதி பரம் என்பதால் மோக்ஷ இச்சையுள்ளவன் எதை அறியத்தக்கவன் என்று முன் சொல்லப்பட்டதோ

एतस्मात् ஏதஸ்மாத்=அப்படிப்பட்ட சத்தியம் முதலிய பதங்களால் கூறப்பட்ட பரப்பிரம்மத்தினின்றும்

आकाश: ஆகாஶ:=ஆகாசமானது

संभूत: ஸம்பூத:=உண்டாயிற்று

இவ்விடத்தில் ஆகாசம் முதலிய பதங்களால் பூதங்கள், அவைகளின் அபிமானி தேவதைகள், இந்த தேவதைகளின் சரீரங்கள், இம்மூன்றுக்குள்ளிருக்கும் ஹரி இந்நான்கையும் அறியவே

அ:—तस्मात् ...सम्भृतः தஸ்மாத்...ஸம்பூத:—

முதலில் பிராமணவாக்கியத்தில் சூத்திரரூபமாய் எது சொல்லப்பட்டதோ, எது சத்தியம், ஞானம், அநந்தம், பிரம்மம் என்பதாய் பிறகு விவரிக்கப்பட்டதோ, அந்த இந்த பிரம்மத்தினின்றும், ஆத்மாவினின்றும் ஆத்மசப்தத்தால் கூறப்பட்ட பிரம்மத்தினின்றும் ஆகாசம் உண்டாயிற்று. பிரம்மமானது சகலத்துக்கும் ஆத்மா. சாந்தோக்கியம் VI-8-7 ல் तत्सत्यंसआत्मा தத்ஸத்யம்ஸஆத்மா (அது சத்தியம் அது ஆத்மா) என்று சொல்லியிருப்பதால் பிரம்மம் ஆத்மா. நம்முடைய ஆத்மாவாக நம்மிடத்திலிருக்கிற பிரம்மத்தினின்றும் ஆகாசம் உண்டாயிற்று.

(சு-வா.— ब्रह्मविदाप्नोतिपरं ப்ரஹ்மவிதாப்நோதிபரம் என்பதில் பிரம்மத்தை அறிகிறவன் பிரம்மத்தை அடைகிறான் என்று சுருதி சொல்லுகிறது. ब्रह्मणाविपश्चिता ப்ரஹ்மணாவிபஶ்சிதா என்கிற இடத்தில் விபச்சித் (ஞானி) என்னும் பதமும் பிரம்ம பதமும் ஒரே வேற்றுமையில் உபயோகிக்கப்பட்டிருப்பதால், பிரம்மமும் ஞானியும் ஒன்று என்பதை சுருதி காட்டுகிறது. ஆகையால் ஆத்மாவும் பிரம்மமும் ஒன்று. பிரகிருத வாக்கியத்திலும் तस्मात्एतस्मात् தஸ்மாதேதஸ்மாத் என்கிற பதங்கள் ஒரே வேற்றுமையில் உபயோகிக்கப்பட்டிருப்பதால் பிரம்மமும் ஆத்மாவும் ஒன்று என்று தெரியவருகிறது. என்னிடமிருந்து சகலமும் "உண்டாகிறது என்னிடம் லயமாகிறது நான்தான எல்லாவற்றையும் தரிக்கிறேன்" என்று சுருதி சொல்லுவதாலும் பிரபஞ்சத்துக்கு இரண்டு காரணங்களிருக்கமாட்டாதாகையாலும் பிரம்மமும் ஆத்மா அதாவது அந்தராத்மாவும் ஒன்று என்பது தெரியவருகிறது.

(வி-வி.—அது என்பது விலகியிருக்கும் விஷயத்தைக் கூறுமானதால் तस्मात् தஸ்மாத் என்பது விலகியிருக்கிற சூத்திரத்திலுள்ள பிரம்ம சப்தமும் பரசப்தமும் எதைக் கூறுகின்றனவோ அதைக்கூறுகிறது. இது என்பது சமீபத்திலிருக்கிறதைக் கூறுமானதால் एतस्मात् வா தஸ்மாத் என்பது சமீபத்திலிருக்கிற சூத்திரவியாக்கியான ரூபமான ரிக்கிலுள்ள சத்தியம் முதலிய பதங்களாலும் நிஹித சப்தத்தாலும் எந்த வஸ்து கூறப்பட்டதோ அதைக் கூறுகிறது. वै வை சப்தம் நிச்சயத்தைக் கூறுகிறது. இந்த மூன்று பதங்களும் ரிக்கினாலும் சூத்திரத்தாலும் பிரதிபாதிக்கப்பட்ட வஸ்து ஒன்று என்பதாய் தெரியவருகிறது.

---

வி:—கிறதாக சொல்லியிருப்பதால், ஆகாசம், வாயு, தேஜஸ் முதலியசப்தங்களுக்கு அவைகளைசரீரமாக உடைய பரமாத்மாவென்று அர்த்தம். அப்படியே तेजोऽतस्तथाह்याह தேஜோऽதஸ்ததாஹ்யாஹ என்கிற பிரம்மசூத்திர (II-3-10) அதிகரணத்தில் சித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது.

---

து:—ண்டியது. ஹரியானவர் இம்மூன்றுக்கும் சக்தி முதலியவைகளைக் கொடுப்பதினால் அவைகளுக்குள் இருக்கிறார் என்று அறியத்தக்கது.

அல்லது, பரோக்ஷத்தைக்கூறும் तत् தத் சப்தம் சாஸ்திரத்தால் தெரியக்கூடிய பிரம்மத்தைக்கூறுகிறது. वै வை சப்தம் அந்த பிரம்மம் சகல வேதாந்தங்களிலும் பிரசித்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது என்பதைக் காட்டுகிறது. பிரத்தியக்ஷத்தைக் கூறும் एतद् ஏதத் சப்தம் பிரத்தியக்ஷானுபவத்தால் தெரியக்கூடிய பிரத்தியகாத்ம ஸ்வரூபத்தைக்காட்டுகிறது. இதை தெளிவாக்கும் பொருட்டு आत्मनः ஆத்மந: என்னும் பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஐந்தாம் வேற்றுமையின் பிரயோகமும் இதையே காட்டுகிறது.

## பிரம்மம் உபாதான காரணம்.

சகல பிராணிகளுக்குள் யாதொரு பிரத்தியகாத்மாவான (அந்தராத்மாவான) பரப்பிரம்மமுண்டோ அதுவே ஆகாசம் முதலிய சகல வஸ்துக்களும் உண்டாவதற்குக் காரணமான பிரகிருதி என்பது (ஆத்மந:) என்னும் ஐந்தாம்வேற்றுமை பிரயோகத்தால் தெரியவருகிறது. ஐந்தாம் வேற்றுமையானது உபாதானத்தைக்கூறும் என்று பாணினீ சொல்லியிருக்கிறார். பிரம்மத்தினின்றும் ஆகாசம் உண்டாயிற்று என்பதினால் ஆகாசத்துக்கு பிரம்மம் உபாதானகாரணம் என்று ஏற்படுகிறது. பிரகிருதி என்பது எதினால் காரியமானது விசேஷமாய்ச் செய்யப்பட்டிருக்கிறதோ அது என்று அர்த்தம். மிருத் முதலியதுபோலும். கடவிஷயத்தில் குயவனும் காரணமாயிருந்தாலும் மிருத்போல் அவன் கடத்திலேயே சேர்ந்திருக்கவில்லை. ஆகையால் அவன் உபாதானகாரணமன்று. ஒரு காரியம் உண்டாகிற விஷயத்தில் உபாதானமே முக்கியமானதால், உபாதானத்தையே பிரகிருதி என்று அறியவேண்டியது.

ஆக்ஷேபம்.—மாயையை பிரகிருதியாகச் சொல்லலாம், பிரம்மத்தை எப்படிச்சொல்லலாம்? சுவேதாசுவதரத்தில் IV-10 ல் मायान्तुप्रकृतिं विद्यात् मायिनन्तुमहेश्वरम् மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாத் மாயிநந்து மஹேஸ்வரம் (மாயையை பிரகிருதி என்றும், மஹேசுவரனை மாயையையுடையவரென்றும் அறி.) என்று சொல்லியிருக்கிறது.

---

து:-சம்பூதசப்தத்தால் எவ்விடத்தில் எப்படி உற்பத்தி உண்டாகிறதோ அவ்விடத்தில் அப்படி அறியவேண்டியது. (திருஷ்டாந்தம்:—ஆகாசத்தில் ஹரியின் ரூபம் பிரகடமாகுதல் ஆகாசத்தின் அபிமானி தேவதைக்கு ஆகாசத்தில் அபிமானம் உண்டாகுதல்; இந்த அபிமானி தேவதைக்கு தேகமும் பூதாகாசரூபமும் பரிணமித்தல் ஆகிய இவைகளை அறியவேண்டியது.

உத்தரம்.—இதில் தோஷமில்லை. மாயையானது பிரம்மத்தின் சக்தியே. அது ஸ்வதந்திரமாக இல்லை. அது சக்தி என்பதும் அந்த உபநிஷத்திலேயே VI-8 ல் परास्य शक्तिः பராஸ்யஶக்தி: என்பதாய் சொல்லியிருக்கிறது. சக்தியானது ஆசிரயத்தை விட்டுத் தனியாக இருப்பதாய் ஒரு இடத்திலும் காணப்படவில்லை. ஆகையால் சக்திரூபமான மாயையானது பிரகிருதி என்று சொல்லுவது சக்தியுடன் கூடின பிரம்மமானது பிரகிருதி என்று சொல்லுவதற்குச் சமானமே. வேறு சுருதியில் கூறப்படும் பிரகிருதி ரூபமான பரமாத்மாவே மாயீயே மஹேசுவரனே இவ்விடத்தில் ஆத்மந : என்னும் ஐந்தாம் வேற்றுமைபதத்தால்கூறப்பட்டிருக்கிறான். அந்த மாயியான பரமாத்மாவினிடமிருந்து ஆகாசம் உண்டாயிற்று. பரமாத்மாவே ஆகாசம் வாயு முதலிய ஆகாரமாகத் தோன்றுகிறார் என்பது கருத்து.

### சிருஷ்டிவிஷயமாய் 3-வித அபிப்பிராயங்கள்.

(1) மிருத் ரூபமான உபாதானகாரணம் தனக்கு அன்னியமான கடத்தை உண்டுபண்ணுகிறது. (2) பால்ரூபமான உபாதானகாரணம் தானே தயிராக பரிணமிக்கிறது. (3) ரச்சுரூபமான உபாதானகாரணம், அஞ்ஞானத்துடன் கூடி சர்ப்பாகாரமாகக் காணப்படுகிறது. நையாயிகர்கள் மிருத்கட திருஷ்டாந்தத்தை அனுசரித்து பிருதிவிமுதலிய சகல ஜகத்தும் பரமாணுக்களால் உண்டாகிறது என்று சொல்லுகிறார்கள். சாங்கியர்களோ பால் தயிர் திருஷ்டாந்தப்படி சத்வரஜஸ் தமோகுண ஸ்வரூபமான பிரதானமே மஹத் அகங்காரம் முதலிய ஜகதாகாரமாக பரிணமிக்கிறது என்று சொல்லுகிறார்கள். வேதாந்திகள் இரச்சு சர்ப்பம்போல் சர்வ ஜகத்கற்பனைக்கும் அதிஷ்டானமான அகண்டைகரஸமான பிரம்மமே தன்னுடைய மாயையால் ஆகாசம் முதலிய ஜகதாகாரமாகக் காணப்படுகிறதென்கிறார்கள். இவைகளில் ஆரம்ப (முதலாவது) பரிணாம (இரண்டாவது) பக்ஷங்கள் பிரம்மசூத்திரத்தில் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன.

அப்படியானால் மஹரிஷிகளால் ஏறப்பட்ட அந்த இரண்டு சிருஷ்டி விஷயமான வசனங்களுக்குப் பிரயோசனமென்ன?

மந்தபுத்தி யுள்ளவர்களுக்கு அனுக்கிரகம் செய்யும்பொருட்டு அவாந்திர சிருஷ்டிகளை இந்த வசனங்கள் கூறுகின்றனவென்று சொல்லுகிறோம். எந்த புருஷன் லோகாயதனமதத்தை அனுசரித்து (1) தேகமே ஆத்மாவென்பதாய் பாவித்து, ஸ்வர்க்கத்துக்கும் நரகத்துக்கும் போகிறவனாகிய தேகத்தைவிடவேறான ஆத்மாவை அறி



யவில்லையோ (2) ஆனதால், ஜொதிஷ்டோமாதி கர்மங்களை அனுஷ்டிக்க வில்லையோ, (3) உபாசியமான ஈசுவரனை அறியாமல், பிரம்ம லோகத்துக்குச் சாதகமான ஈசுவரோபாசனையில் பிரவிர்த்திக்கவில்லையோ, அப்படிப்பட்டவன் ஜீவனையும் ஈசுவரனையும் அறியவேண்டுமென்கிற கருத்துடன் கௌதமரிஷியானவர் பரமாணுக்களினின்றும் பிருதிவீ முதலியவைகள் உண்டாயின வென்று சொன்னார். மூலகாரணமான பரப்பிரம்மத்தினின்றும் ஆகாசம், காலம், திக்கு, பரமாணுக்கள் எப்போது உண்டாயினவோ, அப்போது அவைகளினின்றும் சிருஷ்டியானது கௌதமர் சொல்லியபடி உண்டாகக்கூடும். இந்த மதத்தால் வேதாந்த மதத்துக்குப்பாதகம் உண்டாகவில்லை. மாயாவாதத்துக்கு ஒன்றும் தோஷமில்லை. பிரம்மாமுதல் ஸ்தம்ப பரியந்தம் சகல பிராணிகளுக்கும் விசித்திர சம்சார பிராந்தியைக் கொடுக்கும் மாயையே திருசியமான கௌதம மதபிராந்தியை உண்டுபண்ணுகிறபடியால் மாயாவாதம் பாதிக்கப்படவில்லை. திருசியமானதா யிருப்பதாலேயே அது பிராந்தி ரூபமாயிருக்கிறது.

இந்த நியாயப்படி வேதாந்திகள் கூறும் சிருஷ்டியும் பிராந்தி ரூபமா யிருக்கவேண்டுமே. பிராந்திதான். சகல சிருஷ்டிகளும் பிராந்தி என்று உபதேசிக்கும் பொருட்டே வேதாந்தம் பிரவிர்த்தித்திருக்கிறது. எப்படி கௌதமர், தேகத்தைவிட வேறாயும், ஸ்வர்க்கத்தை அடைய யோக்கியனாயும், கர்த்தாவாயும் ஜீவன் இருக்கிறான் என்பதை மந்தபுத்தி யுள்ளவர்களுக்கு உபதேசிக்க யத்தனித்தாரோ அப்படி மத்தியமாதிகாரிகள் பிரம்மத்தைஅறியும்பொருட்டு, கர்த்தாவாக இராமலும், சாக்ஷியாயும், சித்ரூபமாயும், அசங்கமாயுமிருக்கிற ஆத்மாவை போதிப்பதற்காக சாங்கிய சாஸ்திரத்தை ஏற்படுத்தினார். சாங்கிய சாஸ்திரத்தில் பரமாணுக்களுக்கு முன்னிருந்த அவாந்திர சிருஷ்டியானது சித்அசித் இவைகளை பிரித்தறியும் பொருட்டு கூறப்பட்டிருக்கிறது. அகண்டா காரமான பிரம்மத்தினிடத்தில் மாயையால் சித், ஜடங்களின் பேதம், சித்ஸ்வரூபமான ஜீவர்களின் பரஸ்பர பேதம், சத்வம் முதலிய குணங்களின் பேதம், இவைகள் ஏற்படுகின்றன. இவைகளுக்குப் பிறகு உண்டாகிற சிருஷ்டியானது சாங்கியர் சொல்லிய கிரமத்தை அனுசரிக்கிறது. உபாசியமான ஈசுவரனை பிரித்தறியும் பொருட்டு சைவாகமங்களில் சாங்கியர்களின் 25 தத்துவங்களுக்கு முன் 11 தத்துவங்களிருந்தன வென்பதாய் சொல்லியிருக்கிறது.

சுருதியானது சிருஷ்டியைப்பற்றி திருஷ்டாந்தம் சொல்லுவதற்காக ஆகாசம் முதல் ஸ்வல்பம் கூறுகிறது. சிருஷ்டியை முழுமையும் சொல்லவும் முடியாது, பிரயோசனமுமில்லை. பிரம்மத்தை அறிவதற்கு அது மார்க்கமாயிருப்பதால் அது கூறப்படுகிறது. அந்தமார்க்கம் ஸ்வல்பத்தைக் கூறுவதாலும் சித்திக்கிறது. இதுதான் சிருஷ்டியைச் சொன்னதின் பிரயோசனமென்பது ஸ்ரீ கௌடபாதாசாரியாரும் மாண்டூக்கிய காரிகையில் (III-15) சொல்லியிருக்கிறார். சிருஷ்டியை உபாசி என்றாவது அறி என்றாவது ஒரு விடத்திலும் சொல்லப்படாதபடியால், சுருதி, ஸ்மிருதி, புராணம் ஆகமம் இவைகளில் சிருஷ்டி பரஸ்பரம் விருத்தமாகச் சொல்லப்பட்டிருந்தாலும் வார்த்திககாரரால் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அவர் பிரஹதாரணியக உபநிஷத்தின் வார்த்திகத்தில் (I-4-402)

**ययायययाभवेत्पुंसां व्युत्पत्तिःप्रत्यगात्मनि ।**
**सासैवप्रक्रियेहस्यात्साध्वीसाचानवस्थिता ॥**

யயாயயாஹவேத்பும்ஸாம் வ்யுத்பத்தி: ப்ரத்யகாத்மநி ।
ஸாஸைவப்ரக்ரியேஹ ஸ்யாத்ஸாத்வீஸாசாநவஸ்திதா ॥

அதாவது:—பிரத்தியகாத்மா விஷயத்தில் எதனால் மனிதனுக்கு ஞானத்தை உண்டாக்கமுடியுமோ, அதுவெல்லாம் வேதாந்தத்தில் கிராஹ்யமே. எல்லாருக்கும் ஒரே ஒருமார்க்கம் சொல்லப்படவில்லை என்பதாய் சொல்லியிருக்கிறார். வெகுபெயர்கள் வெகு ஸ்வப்நங்களைப்பார்க்கிறார்கள். ஒன்றைத்தான் ஒப்புக்கொள்ளவேண்டியது மற்றவைகளை அங்கீகரிக்கக் கூடாதென்கிற நியமமில்லை.)

### சிருஷ்டியின் மித்தியாஸ்வரூபம்.

(சு-வா:—பிரம்மம் எந்த பதார்த்தத்தைவிடவும் வேறாக இராதபடியாலும், காரணமாகவாவது காரியமாகவாவது இராதபடியாலும், ஏகமாயிருப்பதாலும், பரப்பிரம்மத்தினின்றும் சிருஷ்டி உண்டாயிற்று என்று சொல்லக்கூடாது. பிரம்மத்தைவிட வேறான சகலமும் காரியம் என்று சொல்லவேண்டும். பிரம்மம் கூடஸ்தமானதால் காரணமாகமாட்டாது. பிரம்மத்தின் ஸ்வபாவமே காரணமென்று சொன்னால், பிரம்மம் எப்போது மிருப்பதால் ஜகத்தும் எப்போதுமிருக்கவேண்டும். ஆனால் அனுபவத்தில் அப்படியில்லை. அவித்தையே சிருஷ்டிக்குக் காரணமாயிருக்கவேண்டும். தேசகாலங்கள் அவித்தையால் ஏற்படுவதால் அவைகள் காரணமாகமாட்டா. அப்படியே கர்மம், தேவதைகள், ஈசுவரன், ஒன்றும் காரணமாகமாட்டாது. அவித்தையே காரணமாக இருக்கவேண்டும்.)

ஆகாசம்.

சப்தகுணத்தோடு கூடியும், ரூபமுள்ள பதார்த்தங்களுக்கு அவகாசம் கொடுக்கிறதாயுமிருக்கிறது ஆகாசம்.

(வி-வி.—உபாதானகாரணமாகிய மாயா விசிஷ்ட பிரம்மத்தினின்றும் உண்டாகிற ஆகாசத்தில் பிரம்மத்தின் அம்சமும் மாயையின் அம்சமும் கலந்திருக்கிறது. சத்தியம் ஞானம் பிரம்மம் என்று சொல்லியிருப்பதால் பிரம்மம் சத் அதாவது இருக்கிறது என்று ஏற்படுகிறது.

सदेवसोम्य ஸதேவஸொம்ய என்று ஆரம்பித்து

तत्सत्यं ஸத்ஸத்யம் என்பதாய் சொல்லியிருக்கிறது. ஆகாசம் अस्ति அஸ்தி என்பதினால் இருக்கிறது என்று ஏற்படுகிறது.

மாயை என்றால் ஆச்சரியம். வித்தையாடியானவள் கிரகம், பர்வதம் முதலியவைகளை விழுங்கிவிடும்போது இது என்ன மாயை, ஆச்சரியம் என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். பொத்தலன்றியில் வெங்கலம்போல் கனமாயிருக்கிற கண்ணாடியில் விசாலமான ஆகாசத்தின் பிரதிபிம்பம் தோன்றுவது எப்படி ஆச்சரியமோ, அப்படி இடவழியன்றியிலும், சத்தியஞான அநந்த ஆநந்த ஏகரஸமான பிரம்மத்தினிடத்தில் ஏற்படக்கூடாத ஆகாசம் எப்படித் தோன்றுவது ஆச்சரியமே. வீடுமுதலியவைகளை விழுங்குதல்வித்தையாடியைத்தவிர மற்ற எவனுக்கும் சத்தியமாகாதபடியால் ஆச்சரியம் என்று சொல்லப்படுகிறது. அப்படியே ஆகாசாதிகளை ஈசுவரனைத்தவிர வேறு ஒரு ஜீவனும் செய்ய முடியாதபடியால் ஆச்சரியம் என்று சொல்லப்படுகிறது. இப்படி ஆகாசம் ஆச்சரியரூபமாயிருப்பதால் மாயையின் அம்சத்துடன் கூடியிருக்கிறது.

அவகாசத்தைக் கொடுக்கும் அம்சம் ஆகாசத்தினுடையதே. பர்வதத்தின் குகை முதலிய இடங்களில் கேட்கப்படும் பிரதித்வனியானது ஆகாசத்துடன் கூடினதாகத் தோன்றுவதால் ஆகாசத்தின் குணமென்று சொல்லப்படுகிறது.

பிரம்மத்தின் காமசங்கல்பங்களால் சிருஷ்டி.

முன் சொன்னபடி சப்தமாத்திரத்தை குணமாயுடையதாயும் ரூபமுள்ள பதார்த்தங்களுக்கு அவகாசத்தைக் கொடுக்கிறதாயும் இருக்கிற ஆகாசத்தைச் சிருஷ்டிக்கிற விஷயத்தில் காமசங்கற்பங்கள் மட்டும் மாயாவிசிஷ்டமான பிரம்மத்தினுடையவை. ஆகாசத்தை சிருஷ்டிக்கிறேன் என்பதான இச்சை காமமெனப்படும். முன் சொன்ன ஸ்வரூபமாக ஆகாசம் ஏற்படும் என்கிற பாவனை சங்

அ:—கல்பமெனப்படும். பிரம்மத்துக்கு மனது இல்லாதபடியால் மனோவிருத்திரூபமான பாவனை இல்லாவிட்டாலும், அசிந்திய சக்தி ரூபமான மாயையே கர்ம சங்கற்பங்களாகிற இரண்டு விருத்திகளாகவுற்பட்டுகிறது. இந்திரியமற்ற பிரம்மத்துக்கும் சக்திபலத்தால் சகல வியவஹாரமும் கூடும் என்பது.

अपाणिपादो जवनोग्रहीता पश्यत्यचक्षुः सशृणोत्यकर्णः ।

அபாணிபாதொ ஜவநொ ஗்ரஹீதா பஶ்யத்யசக்ஷு꞉ ஸஶ்ரு ணொத்யகர்ண꞉ ।

அதாவது:—காலில்லாமல் நடக்கிறான், கையில்லாமல் கிரகிக்கிறான், கண்ணில்லாமல் பார்க்கிறான், காதில்லாமல் கேட்கிறான் என்பதாய் சுவேதாசுவதரம் III-19 ல் சொல்லியிருக்கிறது.

முந்தின சிருஷ்டியில் சகல பிராணிகளால் செய்யப்பட்டும் பக்குவமாகாமலுமிருந்த கர்மங்கள் பிரளயகாலத்தில் மாயாவிசிஷ்ட பிரம்மத்தில் இருந்துகொண்டு மெள்ள மெள்ள பக்குவமாகின்றன. கர்மங்கள் பக்குவமானவளவில் அவைகளின் பலனைக் கொடுக்கும் பொருட்டு ஜகத்தை அவர் சிருஷ்டிக்கிறார். இது தத்துவப்பிரகாசிகை என்கிற சைவாகமசார சங்கிரகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் பிராணிகளின் கர்மங்கள் பக்குவங்களாகிறதினால் பரமேசுவரனுக்கு சிருஷ்டிக்க வேண்டுமென்கிற இச்சையும், சிருஷ்டிக்க வேண்டிய பதார்த்த விஷயமான சங்கல்பமும் உண்டாகிறது. இந்த இச்சை சங்கற்பங்களை அனுசரித்து சிருஷ்டிக்கப்படவேண்டிய பதார்த்தங்கள் உண்டாகின்றன. ஆகையால் பரமாத்மா சத்தியகாமர் என்றும் சத்திய சங்கற்பர் என்றும் சொல்லியிருக்கிறது. அவர் எப்படி எப்படி சங்கற்பிக்கிறாரோ அப்படியே சகல பதார்த்தங்களும் உண்டாகின்றன.)

வாயு,

आकाशात्वायुः ஆகாஶாத்வாயு꞉ இந்த ஆகசாத்தினின்றும் தன்னுடையதான ஸ்பர்ச குணத்துடனும், முன்னுண்டான ஆகாசத்தின் குணமாகிற சப்தத்துடனும் கூடி, இரண்டு குணங்களுள்ள வாயுவானது உண்டாயிற்று.

---

து:—आकाशात् ஆகாஶாத்=நான்குவிதமான ஆகாசத்தினின்றும்
वायुः வாயு꞉=நான்குவிதமான வாயுவானது
सम्भूतः ஸம்பூத꞉=உண்டாகிறது,

அ:—(வி-வி:—ஆகாசம் காரியமானதால் அதினின்றும் வாயு உண்டாகமாட்டாது. முதலில் சிருஷ்டிக்கப்பட்ட ஆகாசமாகிற உபாதியுடன் கூடின மாயாவிசிஷ்ட பிரம்மத்தினின்றும் வாயு உண்டாயிற்று. மாயையும் பிரம்மமும் சகலத்துக்கும் சாதாரணகாரணங்கள். பிரம்மத்தின்உபாதியான ஆகாசமானதுவாயுவுக்கு அடுத்தபடியிலிருக்கிறது. இதை உத்தேசித்து ஆகாசத்தினின்றும் வாயு உண்டாயிற்று என்று சொல்லப்பட்டது. வாயுவின் குணமான ஸ்பர்சம் உஷ்ணமும் அன்று, சீதமுமன்று, ஆகாசம் அவகாசத்தைக் கொடுப்பதுபோல் வாயு வஹிக்கிறது. காரண தர்மங்களும் வாயுவில் கலந்திருக்கின்றன. வாயு இருக்கிறது என்பதில் இருக்கிறது என்னும் தர்மம் பிரம்மத்தினது இதர வஸ்துக்களில் காணப்படாமல் வாயுவில் மட்டும் காணப்படும் ஸ்வபாவம் ஆச்சரியம். ஆகையால் அது மாயையின் தர்மம். சமுத்திரதீரம் முதலிய இடங்களில் கேட்கப்படும் வாயுவின் சப்தம் ஆகாச தர்மம்.)

அக்கினி.

वायोरग्निः வாயொரக்நிஃ=வாயுவினிடமிருந்து, தன்னுடைய தான ரூப குணத்துடனும் முந்தின இரண்டு குணங்களுடனும் கூடி முக்குணமுள்ள அக்கினி உண்டாயிற்று.

(வி-வி:—முன்போலவே "வாயுவினின்றும் அக்கினி" முதலிய வாக்கியங்களுக்கும் அர்த்தம் செய்யவேண்டியது. பிரகாசம் அக்கினியின் குணம். பிரகாசித்தல் அக்கினியின் காரியம். அக்கினி இருக்கிறது என்பதில் பிரம்ம தர்மம் விளங்குகிறது. மற்ற வஸ்துக்களுக்கு இல்லாத தர்மம் இதற்கு இருப்பதே ஆச்சரியம், இது மாயாதர்மம். ஜ்வலித்துக்கொண்டிருக்கிற அக்கினியின் புக் புக் என்னும் சப்தம் ஆகாசதர்மம். உஷ்ணமான ஸ்பர்சம் வாயு தர்மம். அக்கினியின் சப்தமும் ஸ்பர்சமும் ஆகாசத்தின் சப்தத்தைவிடவும் வாயுவின் ஸ்பர்சத்தை விடவும் வேறாயிருக்கின்றன. இது ஆச்சரியம். இது மாயாதர்மம்.

ஜலம்.

अग्नेरापः அக்நேராபஃ=அக்கினியினிடமிருந்து தன்னுடைய

---

து:—वायोः வாயொஃ=நான்குவித வாயுவிலிருந்து

अग्निः அக்நிஃ=நான்குவித அக்கினி (உண்டாகிறது)

अग्नेः அக்நேஃ=நான்குவித அக்கினியிலிருந்து

आपः ஆபஃ=நான்குவித அப்பு (ஜலம்) (உண்டாகிறது)

அ:—தான ரஸகுணத்துடனும் முந்தின மூன்று குணங்களுடனும் கூடி நான்கு குணங்களுள்ள ஜலங்கள் உண்டாயின.

(வி-வி:—ஜலத்தின் விசேஷகுணம் மதுரரஸம், காரணதர்மங்களுமிருக்கின்றன. ஜலம் இருக்கிறது என்பதினால் பிரம்மதர்மம் ஸ்பஷ்டம். மற்றதைவிட வேறாயிருப்பதே ஆச்சரியம். கற்பாரைகளுள்ள நதிகளின் பிரவாஹத்தில் புல் புல் என்னும் சப்தம் கேட்கப்படுகிறது. ஸ்பர்சம் சீதளம், ரூபம் வெண்மை.)

## பிருதிவீ.

अद्भ्यः पृथिवी ஈஹூ)ஃ வுரயிவீ :—ஜலங்களினின்றும் தன்னுடைய தான கந்த குணத்துடனும் முந்தின நான்கு குணங்களுடனும் கூடி ஐந்து குணங்களுள்ள பிருதிவீ உண்டாயிற்று.

வி-வி:—பிருதிவிக்கு கந்தம் விசேஷ குணம். பிருதிவீயிருக்கிறது. கடினமாயிருப்பதால் மற்றவைகளைவிட விலக்ஷணம் ஆகையால் ஆச்சரியரூபம். அத்துடன் ஸ்தூல ரூபமுள்ள பதார்த்தம் சம்பந்தப்படுவதினால் கட கட சப்தம் உண்டாகிறது. ஸ்பர்சம் கடினம். ரூபம் நீலம், வெண்மை முதலிய அநேக விதம். இரஸம் மதுரம் முதலிய அநேகவிதம். இவ்விதமாக பஞ்சபூதங்களின் சிருஷ்டி சுருக்கமாகச் சொல்லப்பட்டது.

(ஆ:—கௌஷீதகீ உபநிஷத்தில் (III-8) 10 பூதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றவே யெனின் (வா) ஐந்து பூதங்கள் தான் முக்கியமானவை என்று சொல்லுகிறோம்.)

(சு-வா:—பிருதிவியில் மற்ற நான்கு பூதங்களின் குணங்கள் காணப்பட்டாலும், அது அந்த பூதங்களிலில்லை. அதுபோல் ஜகத்தெல்லாம் பிரம்மத்தால் உண்டானாலும், பிரம்மம் ஜகத் ரூபமன்று. ஆகவே பிரம்மம் முன் சொன்னபடி சத்தியம், ஞானம், அநந்தம், அத்வயம், அதினிடத்தில் ஒரு வியவஹாரமுமில்லை.]

## பௌதிக சிருஷ்டி

पृथिव्या ... पुरुषः வுரயிவு)ா...வ-ுா-ஷ: —பிருதிவியினின்றும் ஓஷதிகள் உண்டாயின. ஓஷதிகளினின்றும் அன்னமுண்டாயிற்று. ரேதஸாக பரிணமிக்கிற அன்னத்தினின்றும் சிரசு தலை முதலியவைகளுடன் கூடின புருஷன் உண்டானான்.

வி-வி:—ஓஷதிகள் அன்னம் புருஷன், இவைகள் பஞ்சபூதங்களால் உண்டாகிற பௌதிகங்கள். இவைகளைச் சொன்னதினால் மலை, நதி, சமுத்திரம் முதலிய சகல பௌதிக சிருஷ்டியையும் அறியவேண்டியது. பசு முதலியவைகளின் சரீரங்களும் அன்

---

து:—अद्भ्यः ஈஹூ)ஃ=நான்குவித அப்புக்களினின்றும்
पृथिवी வுரயிவீ=நான்குவித பூமி (உண்டாகிறது).

னத்தால் உண்டாகிறதா யிருந்தாலும், ஞானகர்மங்களுக்கு மனுஷிய தேஹமே பிரதானமாயிருப்பதால், சுருதியானது புருஷ சரீரத்தைக் குறிப்பிட்டுச் சொல்லிற்று.

விராட் சூத்திராத்மாக்களின் உற்பத்தி.

(சு·வா:—பூத பௌதிகங்களின் சிருஷ்டியைச் சொன்னதினால் விராட்டின் சிருஷ்டியையும் சொன்னதாக ஆய்விட்டது. எப்படி யெனின் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் அதாவது பௌதிக பதார்த்தங்களின் சமூகமே விராட்டின் சரீரம். தேவதைகளே இந்திரியங்கள். நான் எல்லாமாக இருக்கிறேன் என்கிற ஞானமுள்ளவன். ஆகையால் பௌதிக சிருஷ்டியால் விராட்டின் சிருஷ்டியும் சொன்னதாக ஆய்விட்டது.

விராட்டுக்கு முன் சூத்திராத்மாவின் உற்பத்தியையும் ஒப்புக்கொள்ளவேண்டியது. ஏனெனின், சூத்திரம் என்பது சமஷ்டி சூட்சும சரீரசமூகம். சுருதியும் சூத்திரம் இருந்துதான் விராட் ஏற்படுகிறது என்று சொல்லுகிறது.)

(வி-வி:—ஆகாசத்தின் உற்பத்தி பிரம்ம சூத்திரத்தில் இரண்டாவது அத்தியாயத்தின் 3-வது பாதத்திற் 117-வது சூத்திரங்களிலும், வாயுவின் உற்பத்தி 8-வது சூத்திரத்திலும், பிரம்மத்துக்கு உற்பத்தி இல்லை என்பது 9-வது சூத்திரத்திலும், அக்கினியின் உற்பத்தி 10-வது சூத்திரத்திலும், ஜலத்தின் உற்பத்தி 11-வது சூத்திரத்திலும், அன்னம் என்பது பிருதிவியைக்கூறுகிறது, என்பது 12-வது சூத்திரத்திலும், சகல சிருஷ்டியின் முக்கியகாரணம் பிரம்மம் என்பது 13-வது சூத்திரத்திலும், லயக்கிரமம் 14-வது சூத்திரத்திலும், சிருஷ்டி விஷயமாய் விருத்த வசனங்கள் ஏற்படவில்லை என்பது 15 வது சூத்திரத்திலும் விவரிக்கப்பட்டிருக்கிறது. விஸ்தாரபயத்தால் இவ்விடத்தில் எழுதவில்லை. வித்தியாரண்யசுவாமிகளின் அதிகரண மாலையில் சுருக்கமாய் தெரிந்து கொள்ளலாம்.)

மாயை ஈசுவரன்.

(வி-வி:—ஆகாசம் முதல் புருஷன் வரையில் உள்ள பூத பௌதிக சிருஷ்டிக்கு மாயையானது ஸ்வயம் உபாதானமாயிருக்கிறது. அதுவே தான் ஆசிரயித்துக்கொண்டிருக்கிற பிரம்மத்தையும் உபாதானமாக்குகிறது. இந்த மாயையின் ஸ்வபாவ விசேஷம் நரசிம்ம உத்தரதாபநீய உபநிஷத்தில்

அ:—मायाचतमोरूपाऽनुभूतेस्तदेतज्जडं
मोहात्मकमनन्तं तुच्छमिदं रूपमस्यास्य
व्यञ्जिकानित्यंनित्य निवृत्तापिमूढैरा
त्मैवदृष्टास्य सत्वमसत्वंच दर्शयति
सिद्धत्वासिद्धत्वाभ्यां स्वतन्त्रास्वतन्त्रत्वेन ॥

𑌮𑌾𑌯𑌾𑌚𑌤𑌮𑍋𑌰𑍂𑌪𑌾𑌽𑌨𑍁𑌭𑍂𑌤𑍇𑌸𑍍𑌤𑌦𑍇𑌤𑌜𑍍𑌜𑌡𑌂
𑌮𑍋𑌹𑌾𑌤𑍍𑌮𑌕𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌤𑍁𑌚𑍍𑌛𑌮𑌿𑌦𑌂 𑌰𑍂𑌪𑌮𑌸𑍍𑌯𑌾𑌸𑍍𑌯
𑌵𑍍𑌯𑌞𑍍𑌜𑌿𑌕𑌾𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌨𑌿𑌤𑍍𑌯𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌪𑌿𑌮𑍂𑌢𑍈𑌰𑌾
𑌤𑍍𑌮𑍈𑌵𑌦𑍃𑌷𑍍𑌟𑌾𑌸𑍍𑌯 𑌸𑌤𑍍𑌵𑌮𑌸𑌤𑍍𑌵𑌂𑌚 𑌦𑌰𑍍𑌶𑌯𑌤𑌿
𑌸𑌿𑌦𑍍𑌧𑌤𑍍𑌵𑌾𑌸𑌿𑌦𑍍𑌧𑌤𑍍𑌵𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌤𑍍𑌵𑍇𑌨 ।

என்று சொல்லியிருக்கிறது.

அர்த்தம்:—மாயை என்பது தமோ ரூபம் என்பது அனுபவத்தில் தெரியவருகிறது. அது ஜடம், மோஹஸ்வரூபம், அநந்தம், துச்சம். இது என்கிற ரூபம். இது இது என்பதாய் வியக்தமாக்குகிறது. எக்காலத்திலு மில்லாமலிருந்தாலும் மூடர்களுக்கு ஆத்மா போல் காணப்படுகிறது. அது சைதன்னியத்தின் சத்வத்தையும் அசத்வத்தையும் சித்திப்பதாலும் அசித்தியாலும், (வியக்தமாயும், அவ்யக்தமாயு மிருப்பதாலும்) ஸ்வதந்திரமாயும், அஸ்வதந்திரமாயு மிருப்பதாலும் காட்டுகிறது.

இதின் விவரம் சித்திரபட தீபிகையில் அடியில் வருமாறு கொடுக்கப்பட்டிருக்கிறது. மாயை என்பது தமோரூபம், அதாவது அஞ்ஞானம். அனுபவமே பிரமாணம் என்பதாய் சுருதி சொல்லுகிறது. அது ஜடம், மோஹஸ்வரூபம் என்பது சகலருக்கும் தெரிந்த விஷயம். சித்தாக இராத கடாதி சகல பதார்த்தங்களும் ஜடம். சுஷுப்தியில் அனுபவிக்கப்படும் ஜடத்தன்மையே ஜடம் எனப்படும். புத்தியால் எப்போது ஒரு பதார்த்தம் அறியமுடியவில்லையோ, அது மோஹம் என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். நான் அறியவில்லை என்பதாய் யாதொரு அஞ்ஞானம் விளங்குகிறதோ அதுதான் சுஷுப்தியில் ஆத்மாவை ஆச்ரயித்திருப்பது. இந்த சுஷுப்தி அவஸ்தையிலுள்ள அஞ்ஞானம், எல்லாருடைய அனுபவத்திலுமிருக்கிறது. இவ்விதமாய் மாயை ஜடம் என்பதும் மோஹஸ்வரூபம் என்பதும் சகல ஜனங்களுடைய அனுபவத்திலும் தெரியவருகிறது.

அ:—அநந்தம்:—ஞானிகள் முதல் பாலகர்கள் இடையர்கள் வரையில் சகலரும் மாயையை அனுபவிக்கிறபடியால் அது அநந்த மென்று சொல்லப்படுகிறது. அப்படியே சுஷுப்தியின் அஞ்ஞான மும் சகலருடைய அனுபவத்திலு மிருக்கிறது. ஜாக்கிராவஸ்தை யில் அஞ்ஞானத்துக்குள் அகப்படாதது ஒன்றுமில்லை. ஆகையால் மோஹம் அநந்தம். ஆகவே, மாயை அநந்தமாயும் ஜடமாயும் மோஹ ஸ்வரூபமாயு மிருக்கிறதாக அனுபவத்தில் தெரியவருவ தால், ஜகத் சிருஷ்டிக்கு மாயை காரணம் என்று சுருதி சொல்லு வதில் அனுபவ விருத்தம் யாதொன்றுமில்லை. பிரம்மம் அத்வை தம் என்று உபதேசிக்கும் பொருட்டே சுருதியானது பிரபஞ்சம் தமோரூபமான மாயை என்பதாய் உபதேசிக்கிறது.

துச்ச் த-ஊம்;—இப்படி மாயை ஒவ்வொருவனுடைய அனுப வத்திலும் வந்திருந்தாலும், யுக்தியால் பார்க்கும்போது அது சத் தும் அன்று அசத்துமன்று, அநிர்வசனீயம், அதாவது இன்ன தென்று சொல்லமுடியாது. அது இருக்கிறதாகத் தோன்றுவதால் இல்லை யென்றும் சொல்லக்கூடாது. துவைதமே யில்லை என்று சுருதி சொல்லுகிறதினால் அது இருக்கிறதென்றும் சொல்லக் கூடாது. மேலும் சுஷுப்தியில் ஸ்வயம்பிரகாசமான சைதன் னியத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லாமலிருக்க, எப்படி அத்து டன் மாயை சம்பந்தப்பட்டிருக்கும் என்பதும் தெரியவில்லை. ஞா னதிருஷ்டியால் பார்க்கும்போது மாயை எப்போது மில்லாதபடி யால் அது துச்சம் என்பதாய் சுருதி சொல்லுகிறது.

சுஷுப்தியில் அனுபவிக்கப்படும் இந்த மாயை (அவித்தை) யில் சகல ஜகத்தும் வாசனாரூபமாய் அடங்கியிருக்கிறது. (1) சுரு திப்படி இது சுத்தமாய் இல்லவேயில்லை. ஞானிகளுடைய ஞா னத்தால் இல்லை என்று தெரியவருகிறது; (2) யுக்தியால் அநிர்வச நீயம் அதாவது இன்னதென்று சொல்லமுடியாததாயிருக்கிறது. (3) அனுபவத்தில் இருக்கிறதாயிருக்கிறது. இப்படி மாயை மூன்று விதமாயிருக்கிறது. (வாஸ்தவம், அநிர்வசனீயம் துச்சம் என் மூன்று ரூபங்களாம்.)

இந்த மாயையானது ஜீவனிடத்திலும் இல்லை. ஈசுவரனிடத் திலுமில்லை. ஜீவ ஈசுவரபாவங்கள் அவித்தையால் கற்பிக்கப்படு கின்றன. ஆகையால் இவைகளை மாயை ஆசிரயித்திருக்கமாட் டாது. பின்னையோவெனின், சுத்த சைதன்னியத்தை அது ஆசிர யித்துக்கொண்டிருக்கிறது. ஜீவேசுவர் முதலிய பாவங்களுக்கு ஆசிரயமான அவித்தையானது சைதன்னியத்தை ஆசிரயித்தும் அதையே விஷயமாக்கிக்கொண்டு மிருக்கிறது.

அ:—நான் என்னை அறிந்துகொள்ளவில்லை என்கிற அனுபவத்தினால் அஞ்ஞானம் ஆத்மாவை சுத்த சைதன்னியத்தை ஆசிரயித்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. இந்த சுத்த சைதன்னியத்துக்குப் பதிலாக பிரபஞ்சம் தான் தெரியவருகிறது. இப்படி ஆத்மாவை அவித்தை ஆசிரயித்திருந்தாலும் அவித்தையால் ஆத்மா பாதிக்கப்படுகிறதில்லை. நெருப்பில் விடப்பட்ட நெய்போல் ஆத்மா சர்வசாக்ஷி என்பதாய் ஆத்ம பிரகாசத்தையே அது விருத்தி செய்கிறது. நெருப்பானது நெய்யை நாசம் செய்து விடுவதுபோல் ஆத்மாவும் அவித்தையை நாசம் செய்துவிடுகிறது. அப்படியானால் அவித்தையான பிரபஞ்ச காரணம் என்று எப்படி சொல்லலாமெனின், வாஸ்தவத்தில் அது இல்லாவிட்டாலும் அஞ்ஞானிகள் அது இருக்கிறதென்றும் ஆத்மாவுடன் ஒன்றாக இருக்கிறதென்றும் பாவிக்கிறபடியால் அவர்களுடைய திருஷ்டியை அனுசரித்து அவித்தை ஜகத்காரணம் என்று சொல்லலாம். சுத்த சைதன்னியம் இருக்கிற தென்றாவது இல்லை என்றாவது சொல்ல முடியாவிட்டாலும், மாயை இருக்கிறது என்று காட்டுவது மூலமாக சுத்த சைதன்னியம் விளங்குகிறபடியால் அந்த சைதன்னியம் இருக்கிறதென்பதை மாயை தெரிவிக்கிறது. அஞ்ஞானிக்கு மாயையால் சைதன்னியம் மறைபட்டுப் போகிறது. சைதன்னியம் வியக்தமாகும்போது அது சத்தாயிருக்கிறது; வியக்தமாயிராதபோது அது அசத்தாயிருக்கிறது. ஆகாசத்தில் வியாபித்திருக்கும் பிரகாசமானது ஒரு பதார்த்தத்துடன் சம்பந்தபட்டு விளங்குகிறதுபோல், சுத்த சைதன்னியமும் அவித்தியா சம்பந்தத்தால் அவித்தையை விளக்கி வைப்பதினால் தானும் விளங்குகிறது. சுத்த சைதன்னியம் ஸ்வயம் ஜோதி ரூபமாயிருந்தாலும் ஜடத்வயம் மேலிடும்போது அது விளங்குகிறதில்லை. ஆத்மா விளங்கினால் ஸ்வதந்திரமாகக் காணப்படுகிறது; விளங்காவிட்டால் அசுவதந்திரமாக இருக்கிறது. மாயையையே விளங்கும்படிச் செய்வதால் மாயையை உத்தேசித்து ஆத்மா ஸ்வதந்திரமே. சைதன்னியம் அதை ஆசிரயித்திருக்கிற மாயைக்குள்பட்டது என்பதாக எப்போது தோன்றுகிறதோ அப்போது ஆத்மா அஸ்வதந்திரம். இப்படி ஒரே சைதன்னியம் ஈசுவர ரூபமாயும் ஜீவரூபமாயும் விளங்குகிறது.

சித்திரமெழுதிய வஸ்திரமானது பிரிபடுவதும் சுருட்டப்படுவதும் போலும். இந்த ஜகத்தின் சிருஷ்டியாலும், பிரகாசத்தாலும் அது இருக்கிறதென்றும், இல்லை என்றும் மாயை காட்டு

அ:-கிறது. சைதன்னியத்தை விட்டு விலகுகிறதாக மாயை தெரிய வராததால் அது அஸ்வதந்திரமே. அசங்கமான ஆத்மாவை ஜகத்தாகக்காட்டுவதாலும் ஜீவேசுவரகற்பனைகளைச் செய்வதாலும் மாயை சுவதந்திரமாயு மிருக்கிறது. கூடஸ்தனை பாதிக்காமலே மாயையானது ஜகத்தை உண்டுபண்ணுகிறது. இது என்ன ஆச்சரியம் அக்கினிக்கு உஷ்ணத்வமும் கல்லுக்கு காடின்னியமும் ஜலத்துக்கு திரவத்வமும் எப்படி சஹஜ குணமோ அப்படி இல்லாததை இருக்கிறதாகச் செய்வது மாயையின் தர்மமே. மாயாவியால் காட்டப்பட்ட வேடிக்கையை ஒருவன் அறியாதவரையில் அது ஆச்சரியமாகத் தோன்றுகிறது. அதை அறிந்த மாத்திரத்தில் அது மாயை என்றே அதினிடத்தில் பிராந்தி விட்டுப்போகிறது. ஜகத்தை வாஸ்தவம் என்று சொல்லுகிறவர்கள் தான் ஜகத்விஷயமாய் கேள்வி கேட்கலாம். மாயை விஷயமாய் கேள்வி கேட்கக் கூடாது. ஏனெனின், அதுவே ஆச்சரியகரமா யிருக்கிறது. கேள்வி ரூபமாயிருக்கிறது. புத்திமான்கள் மாயா விஷயமாய் பரிகாரத்தைத் தேடவேண்டியதே தவிர கேள்வி கேட்கக் கூடாது.

### பிரபஞ்சம் மாயை.

பிரபஞ்சம் மாயை என்பதை நிச்சயம்செய்ய வேண்டியது. பிரபஞ்சத்தில் எதை மாயையாகச் சொல்லுகிறோமோ எது மனதிற்கு விளங்குகிறதோ ஆனால், நிரூபிக்க முடியாதோ அதைமாயை என்று சொல்லுகிறார்கள். திருஷ்டாந்தம் இந்திரஜாலம். இந்த ஜகத்தும் நன்றாக விளங்குகிறது. அது இன்னது என்று சொல்ல முடியாது. ஆகையால் பக்ஷபாத மன்றியில் பார்த்தால் ஜகத்தானது மாயா மாத்திரமே,

பண்டிதர்களெல்லோரும் அதை நிருபிக்க யத்தனித்தார்களே யானால் அஞ்ஞானம் எங்கேயாவது அவர்கள் முன்னிலையில் நிற்கிறது. வீரியத்தினின்றும் தேகம், இந்திரியங்கள் முதலியுவை எப்படி உண்டாயின வென்று கேட்டால் என்ன உத்தரம் கொடுப்பாய்; எப்படி சைதன்னியம் அவ்விடத்தி லிருக்கிறது என்று கேட்டால் என்ன சொல்லுவாய். வீரியத்தின் ஸ்வபாவமென்று சொன்னால், அது தான் உனக்கு எப்படித் தெரிந்தது. வீரியமிருந்தால் தேகாதிகளிருக்கின்றன. இல்லாவிட்டால் இல்லை என்றும் சொல்லக்கூடாது. ஏனெனின், வீரியமிருந்தும் வியர்த்தமாய்ப் போகிறதுண்டு. ஆகையால் நான் அறியமாட்டேன் என்றே நீ சொல்லவேண்டும். ஆகையால்தான் பெரியோர்கள் இதை இந்

அ:திர ஜாலம் என்றுசொல்லுகிறார்கள். கர்ப்பத்திலிருக்கிற ரேதஸ் சேதனத்துடன் கூடினதாகி, அதினின்றும் கைகால் முதலியவைகளின் அங்குரங்கள் முளைத்து, அதற்கு சிசுத்வம், யௌவனம், ஜரை முதலியவைகளை அடைந்து, பார்த்தல் புஜித்தல், கேட்கல், வாசனை கிரகித்தல், போகுதல், வருதல், இப்படிப்பட்ட காரியங்களையும் செய்து கொண்டு, ரேதஸ் இருக்குமேயானால் இதைவிட என்ன ஆச்சரியம் வேண்டும். தேகம் போல் விரை, மரம் முதிலியவைகளையும் நன்றாக விசாரித்துப்பார். விரை எங்கே, மரம் எங்கே, ஆகையால் பிரபஞ்சம் மாயை என்று நிச்சயமாய் நம்பு.

தார்க்கிகர்களும் மற்றவர்களும் யுக்தியால் பிரபஞ்சத்தை நிரூபித்ததாக நினைக்கிறார்கள். ஹர்ஷமிச்ராதிகள் இவர்களைக் கண்டித்திருக்கிறார்கள். எது அசிந்தியமோ, அதின் விஷயத்தில் யுக்தி உபயோகப்பட மாட்டாது. ஜகத்து இன்ன விதமானது என்று மனதால்கூட நினைக்க முடியாது. மாயையானது சிந்திக்கக் கூடாததை உண்டு பண்ணுகிற சக்தியுடன் கூடின விரை என்று நிச்சயமாய் நம்பு. சுஷுப்தியில் தோன்றுவது இந்தமாயா பீஜமே.

## ஈசுவரன்.

சுவேதாசுவதரர்கள் மஹேசுவரனை இப்படிப்பட்ட மாயைக்கு அதிஷ்டானமானவர் என்றும் சொல்லுகிறார்கள். சுவேதாசுவதர உபநிஷத்தின் IV-9ல் மாயியான ஈசுவரன் ஜகத்தை சிருஷ்டிக்கிறார் என்று சொல்லியிருக்கிறது.

சிருஷ்டி, அதின் பிரயோசனம், இவைகள் விஷயமாய் அநேக மதங்கள் மாண்டூக்கிய உபநிஷத்தின் காரிகையில் (I-7-9) ஸ்ரீகௌடபாதாசாரியரால் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

1-வது:—ஈசுவரன் தன்னுடைய மஹிமையைக் காட்டும் பொருட்டு ஜகத்தை சிருஷ்டித்தார் என்று சிலர் சொல்லுகிறார்கள்.

2—எப்படி ஸ்வப்நம் விசாரமன்றியில் தற்செயலாய் காணப்படுகிறதோ அப்படி ஜகத்து என்பது சிலருடைய அபிப்பிராயம்.

3-வது: இந்திரஜாலரூபமான மாயையானது எப்படி பிரபஞ்சத்தில் ஆச்சரியகரமாயிருக்கிறதோ அப்படி ஜகத்தும் இருக்கிறதென்று காட்டும் பொருட்டு இது உண்டாயிருக்கிறதென்று சிலர் அபிப்பிராயப்படுகிறார்கள்.

4-வது:—ஈசுவரனுடைய இச்சையால் சிருஷ்டி உண்டானதாக சிலர் சொல்லுகிறார்கள். குயவனுடைய இச்சையால் கடம் உண்டாவது போலும்.

அ:—5-வது—வசந்த காலத்தில் சிலபுஷ்பங்கள் உண்டாவது போல் கால வசத்தால் சிருஷ்டி உண்டாகிறதாக சிலருடைய மதம்.

6-வது:—வேளாண்மை முதலியவைகள் ஸ்வபோகத்தின் பொருட்டு செய்யப்படுவதுபோல் ஜகத்தும் செய்யப்படுகிறது என்று சிலருடைய மதம்.

7-வது:—சொக்கட்டான் முதலியவைகள்போல் கிரீடையின் பொருட்டு ஜகத்து ஏற்பட்டதாக சிலர் சொல்லுகிறார்கள்.

இவ்விதமாய் சிருஷ்டியையே முக்கியமாய் கவனிக்கிறவர்கள் பலவித மதங்களைக்கொள்ளுகிறார்கள். மோக்ஷத்தை இச்சிக்கும் பெரியோர்கள் சிருஷ்டியை இந்திரஜாலமாக பாவித்து அதை கவனிக்காமல் பரம சத்தியத்தையே விசாரிக்கிறார்கள்.

8-வது:—எப்படிபிரம்மத்தின் ஸ்வபாவம் ஸச்சிதாநந்தைகரஸமோ, அப்படி மாயாவிசிஷ்ட பிரம்மத்துக்கு சிருஷ்டி ஸ்திதி சம்ஹாரங்கள் ஸ்வபாவங்கள். ஆகையால் இச்சையற்ற பிரம்மம் ஒரு பிரயோசனத்தை உத்தேசித்ததாகக் கற்பிக்க வேண்டியதில்லை. இதுவே பரமரஹஸியம்.

கர்மங்களே தங்களுடைய பலனைக் கொடுக்கும் பொருட்டு பிராணிகளின் தேகங்களை உண்டாக்குகின்றன. ஈசுவரனால் ஆகவேண்டியதென்னவென்று சிலர் ஆக்ஷேபிக்கக்கூடும். ஈசுவரன்தான் பலத்தைக் கொடுக்கப்பட்டவர் என்பது வேதாந்த சூத்திரம் III-வது அத்தியாயம் 2-வது பாதம் 38—41வது சூத்திரங்களில் விவரிக்கப்பட்டிருக்கிறது. விஸ்தார பயத்தால் இங்கு எழுதவில்லை. வியாசாதிகரணமாலையில் சுருக்கத்தைப் பார்க்கலாம்.

ஈசுவரனே நிமித்தகாரணம் உபாதான காரணமேன்பது பிரம்மசூத்திரம் முதலானது அத்தியாயம் 4-வது பாதத்தில் 23—27 வது சூத்திரங்களில் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. இதுதான் வேதாந்த நிசசயம் என்பதும், விரோதபரிஹாரமும் IV வது பாதம் 14-15-வது சூத்திரங்களில் கூறப்பட்டிருக்கிறது.

பரமாணுக்கள் முதலியவை காரணமாகமாட்டாவென்பது I—2—28-வது சூத்திரத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

இந்த வேதாந்த சமன்வய (நிச்சயத்) தில் காணப்படும் ஸ்மிருதி விரோதமும் தர்க்க விரோதமும் 2-வது அத்தியாயத்தின் 1-வதுபாதத்தில்13-வது அதிகரணங்களில் பரிகரிக்கப் பட்டிருக்கின்றன. இரண்டாவது பாதத்தில்8அதிகரணங்கள் இதர மதங்களை

அ:—இராகரித்துபிரம்மமே ஜகத்காரணம் என்பது ஸ்தாபிக்கப்படு றது. மூன்றுவது பாதத்தின் 9 அதிகரணங்களில் ஆகாசாதிகளின் சிருஷ்டியானது விசாரிக்கப்பட்டிருக்கிறது.

(சு.வா:-இவ்விதமாக ஆகாசாதிகளின் சிருஷ்டிசுருதியின் கருத்து விவரிக்கப்பட்டது. இனி பிருதிவியினின்றும் ஒஷதிகளின் சிருஷ்டியைக் கூறும் சுருதியின் கருத்தைச் சொல்லுவோம்.

पृथिव्या ओषधयः ப்ருதிவ்யா ஓஷதய: :—பூமியுடன் ஜலம் (மழை) சம்பந்தப்படுவதால் ஐந்து குணங்களுள்ள விரீஹி முதலிய தானியங்கள் உண்டாகின்றன.

ओषधिभ्यः अन्नं ஓஷதிப்ய: அந்நம் =இவைகளினின்றும் புஜிக்க யோக்கியமான அன்னம் உண்டாகிறது.

கோசங்கள்.

வி-வி:—இவ்விதமாக மாயாவிசிஷ்ட பிரம்மத்தினின்றும் ஆகாசம் முதல் புருஷன் வரையிலுள்ள பிரபஞ்சம் உண்டானதாக நிருபிக்கப்பட்டது. காரணத்தை விட்டு காரியமிருக்கமாட்டாதாகையால் பிரம்மமும் தேசகாலவஸ்து ஸ்வரூபம் என்று தெரியவருவதால், பிரம்மம் அநந்தம் என்பதும் சித்தித்தது. இவ்விதமாக சத்தியம் ஞானம் அநந்தம் என்பதிலுள்ள அநந்தத்தை நிருபித்து, यो वेद निहितं गुहायां யோவேத நிஹிதம் குஹாயாம் என்பதில்குறையிலிருப்பதாக யாதொன்று சொல்லப்பட்டதோ, அதை விவரிக்கும் பொருட்டு அன்னமயாதி கோசங்கள் விசாரிக்கப்படுகின்றன.

(சு-வா:—சிருஷ்டியைச் சொன்னபிறகு சம்சாரதுக்கத்தை நாசம் செய்யவேண்டுமென்பது சுருதியின் கருத்து. இந்த கருத்துடன் ஐந்து கோசங்கள் விவரிக்கப்படும். ஒவ்வொரு கோசத்தையும் அதற்குக் காரணமாயிருப்பதில் லயப்படுத்துவதினுல் மூலகாரணத்தின் ஞானம் ஏற்பட்டு, காரியகாரண பாவமற்ற பிரம்மத்தையும், ஜீவபிரம்ம ஐக்கியத்தையும் புருஷன் அறிகிறுன். சகல சம்சாரமும் அவித்தையால் ஏற்படுகிறது.

இடைவிடாமல் தியானம் செய்வதால் ஒருவன் ஞானத்தை அடைகிறுன். இனி அன்னமயமான முதலாவது கோசத்தை விசாரிப்போம்.

---

पृथिव्याः ப்ருதிவ்யா: =நான்குவித பூமியினின்றும்
ओषधयः ஓஷதய: —நான்குவித ஓஷதிகள் (உண்டாகின்றன)
ओषधीभ्यः ஓஷதீப்ய: =நான்குவித ஓஷதிகளினின்றும்
अन्नं அந்நம் =நான்குவிதமான அன்னம் (உண்டாகிறது.)

அன்னமயகோசம்.

(15) स वा एष पुरुषोऽन्नरसमयः ॥4॥ ஸ வா ஏஷ புருஷோऽன்னரஸமய: ॥ 4 ॥

பதவுரை.

सः ஸ:=அந்த

वै வை=பிரசித்தமான

एषः ஏஷ:=இந்த

पुरुषः புருஷ:=புருஷன்

अन्नरसमयः அன்னரஸமய: = அன்னரஸத்தால் உண்டானவன்.

ச-பா:—புருஷன் அன்னரஸவிகாரம் சகல அங்கங்களினின்றும் உண்டாகும் சாரம் ரேதஸ். இதில் புருஷாகிருதி பாவனை பதிந்திருக்கிறது. இதுவே பீஜம். இதினின்றும் உண்டாகிறதும் புருஷாகிருதியாகவே யிருக்கிறது. சகல ஜாதிகளிலும் ஜநகனுடைய ஆகிருதியே காணப்படுகிறது.

---

வி:—पुरुषः புருஷ:=சரீரம் என்று அர்த்தம். மற்றது ஸ்பஷ்டம்.

सवा एष पुरुषः ஸவாஏஷபுருஷ:=இந்த தேகமானது अन्नरसमयः அன்னரஸமய:=அன்னரஸத்தின் பரிணாமம். சாப்பிடப்பட்ட அன்னமானது மூன்றுவிதமாக பரிணமிக்கிறது. அந்த அன்னத்தின் ஸ்தூலாம்சம் மலமாக ஆகிவிடுகிறது. மத்தியாம்சம் மாம்சமாக ஆகிவிடுகிறது. ஜாடராக்கினியால் பாகம் பண்ணப்பட்ட அன்னரஸத்தால் உண்டான மாம்சமயம் இந்த சரீரம் என்பது கருத்து.

---

து:—अन्नात् அன்னாத்=நான்குவித அன்னத்தினின்றும்

पुरुषः புருஷ:=தேகம், அதின் அபிமானியான ஜீவன், இவ்விரண்டிற்குள்ளிருக்கும் ஹரி இம்மூன்றும் உண்டாகின்றது. (அன்னத்தினின்றும் ரேதஸ், ரேதஸினின்றும் புருஷன் என்பது அத்வைதபாடம்)

**कारणत्वेन चाकाशादिषु यथाव्यपदिष्टोक्तेः।**

காரணத்வேந சாகாசாதிஷு யதாவ்யபதிஷ்டோக்தே:।

என்கிற (I-4-15) பிரம்மசூத்திரத்தினாலும்

அ :-अन्नात्पुरुषः: அந்நாத்புருஷ: புஜிக்கப்பட்டுப் பக்குவமான அன்னத்தினின்றும் ரஸமுண்டாகிறது. ரஸத்தினின்றும் இரக்தமுண்டாகிறது. இரக்தத்தினின்றும் மாம்சமுண்டாகிறது. மாம்சத்தினின்றும் மேதஸ் (கொழுப்பு) உண்டாகிறது. மேதஸினின்றும் எலும்பு உண்டாகிறது. எலும்பினின்றும் மஜ்ஜை உண்டாகிறது. மஜ்ஜையினின்றும் சுக்கிலம் உண்டாகிறது. இது மாதாவின் [அசிர்ஜ்) இரக்தத்துடன் கலந்து பீஜமாகிறது. புருஷன் ஸ்திரீயை ஆலிங்கனம் செய்யும்போது கர்மஞானங்களை அநுசரித்து இந்த சுக்கிலமானது நாடி வழியாய் யோனியில் விழுகிறது, ஸ்வல்பதினத்தில் கலலா என்றும் புத்புதமென்றும் அவஸ்தையை

---

து:-तेजोतस्तथाह्याह தேஜோதஸ்ததாஹ்யாஹ என்கிற (II-2-30) பிரம்மசூத்திரத்தாலும் ஆகாசாதிபதங்களுக்கு முன் சொல்லிய நான்கு அர்த்தங்களும் சித்திக்கின்றன.

பிரமாணவாக்கியம்:—

यएषभगवान्विष्णुर्भूतस्रष्टागुणाधिकः ।
सएवान्नात्मनजातो ह्यजातोपियतोविभुः ।

யஏஷபகவாந்விஷ்ணுர்பூதஸ்ரஷ்டாகுணாதிக: ।
ஸஏவாந்நாத்மநஜாதோ ஹ்யஜாதோபியதோவிபு: ।

(ஜகத்தின்ஸ்திதி).

அ-கை:—பிரம்மம் ஜகத்தின் உற்பத்திக்குக் காரணமென்று சொல்லப்பட்டது. பிரம்மம் ஜகத்தின் சம்ரக்ஷணைக்கும் காரணம் என்பதாயும் சம்ஹாரத்துக்கும் காரணமென்பதாயும் சத்தியசப்தத்தால் விளங்குவதாய் யாதொன்று முன் சொல்லப்பட்டதோ அதை விவரிக்கிறார்.

सः ஸ:=ஆத்மந: என்பதினால் சர்வ பூதங்களுக்கும் காரணமாக எவன் கூறப்பட்டானோ அந்த

वै வை=இது பிரசித்தியைக் கூறுகிறது.

एषः ஏஷ:=ஆகாசாதி பதங்களால் முக்கியமாய் கூறப்பட்ட பிரகிருத

पुरुषः புருஷ: =ஜீவனுடைய தேகத்திலிருக்கிற புருஷன் என்று பெயருள்ள ஹரியானவர்

अन्नरसमयः அந்நரஸமய:—

அன்னசப்தம் (a) பூதங்களை ஜீவிக்கும்படிச் செய்தல், (b) ரூபாதிகளை பக்ஷித்தல் (c) பூதங்களை பக்ஷித்தல், (d) ரூபங்களை சம்ஹரித்தல், இவைகளைக்கூறுகிறது. ரஸசப்தம் சாரத்தைக்கூறுகி

அ:-பீஜம் அடைகிறது. புத்புதத்தினின்றும் பேசிஎன்றும் ஸ்திதி ஏற்படுகிறது. இதினின்றும் கனம்என்கிற ஸ்திதி ஏற்படுகிறது. கனமான அவஸ்தை சரீரமாகிறது. இதில் மயிர்கள் காணப்படுகின்றன. முந்தின ஜன்மத்திலிருந்த பூதங்களும் இந்திரியங்களும் இந்த சரீரத்திலும் வந்து சேருகின்றன.

அவித்தியா கிரஸ்தனான ஜீவன் தன்னுடைய முந்தினஸ்தூல சரீரத்தைவிட்டு லிங்க சரீரமாகிற உபாதியுடன் ஸ்திரீயின் யோனியில் சேருகிறான். ஸ்திரீயால் புஜிக்கப்பட்ட அன்னத்தின் அதிசூட்சுமமான அம்சம் மனது, புத்தி, இந்திரியங்களாக பரிணமிக்கிறது அவளால் புஜிக்கப்பட்ட ஜலரூப பதார்த்தத்தினின்றும் பிராணன் உண்டாகிறான். தேஜோரூப பதார்த்தத்தினின்றும் வாக்குமுதலிய கர்மேந்திரியங்கள் உண்டாகின்றன. இவைகளின் சூட்சும அம்சங்களினின்றும் ரக்தம் மாம்சம் மஜ்ஜை உண்டாகின்றன. ஸ்தூல அம்சத்தினின்றும் எலும்பு மூத்திரம் புரீஷம் உண்டாகின்றன.

நான் சுரோத: என்கிற பாவனையால் சுரோத்திரேந்திரியம் உண்டாகிறது. இப்படியே சகல இந்திரியங்களு முண்டாகின்றன. இந்தஸ்தூலசரீரம்கர்ப்பத்தில் விருத்தியாய்க்கொண்டிருக்கும்போதே லிங்கசரீரமும் விருத்தியாய் வருகிறது. ஒன்பதாவது மாதத்தில் சகல இந்திரியங்களும் பக்குவமாகி முந்தின ஜன்மங்களின் வாசனைகளெல்லாம் தேஹியின்முன்பாக வரிசையாகக் காணப்படுகின்றன. இவைகளைக் கண்டவுடன் தன்னுடைய பூர்வானுபவங்களை யெல்லாம் அறிந்து கர்ப்பவாசம் முதலிய சகலதுக்கங்களையும் கண்டு புருஷன் ஜனிக்கும்முன் வியசனப்படுகிறான். பிறகு அவன் பூமியில் விழுகிறான். இந்த சரீரம் ஜனிக்கும்போது ஆத்மாவும் ஜனித்ததாகச் சொல்லப்படுகிறான். கடம் உண்டாகும்போது கடாகாசம்

---

து:-றது. ஆகவே அன்னங்களில் அன்ன சப்தார்த்தங்களில் ரஸம் அதாவது சாரம் அன்னரஸம். மயட்பிரசுர்யத்தை (அதிகம்என்பதை) கூறுகிறது. ஆகவே, சகலபூதங்களும் ஜீவிக்கும்படியும் நசிக்கும்படியும் செய்வதினால் அன்னரஸமய சப்தவாச்சியன் பரமாத்மா. அன்னவிகாரமான தேகத்திலிருக்கிற அபிருத்தன் என்று அர்த்தம். அன்ன பதத்திற்கு அன்னம் என்று அர்த்தம் ஆகாமலிருக்கும் பொருட்டு அன்னமய என்று சொல்லாமல் அன்னரஸமய என்று சுருதி சொல்லுகிறது. அன்னரஸமயத்துக்கு மேற்சொன்ன அர்த்தத்தினால் சத்திய பதத்துக்குச் சொன்ன அர்த்தமும் பொருந்துகிறது என்று அறியவேண்டியது.

அ:-உண்டாகிறதாகச் சொல்லப்படுவதுபோலும். ஆத்மாவுக்கு வாஸ்தவத்தில் ஜன்மமில்லாதபடியால், இதரவிகாரங்களுக்கும் ஆத்மா உட்படுகிறதில்லை.

ஆக்ஷேபம்:—சகலமும் அன்னரஸத்தால் ஏற்பட்டு பிரம்மத்தினின்றும் உண்டாயிருந்தால், புருஷனைமட்டும் ஏன் சொல்லியிருக்கிறது?

உத்தரம்:—அவன் பிரதானமானதால்

ஆக்ஷேபம்:—எப்படி பிரதானம்.

உத்தரம்:—இவன் கர்மஞானங்களுக்கு அதிகாரி, புருஷனே இவைகளில் சாமர்த்தியமுள்ளவன், பலத்தை இச்சிக்கிறவன், நிஷேதிக்கப்படாதவன், புருஷனே பலத்தை இச்சிக்கக் கூடியவனும் உபதேசத்தைப் பெற்றுக்கொள்ள சமர்த்தனுமிருப்பதால் இவனே கர்மஞானங்களுக்கு அதிகாரியாகிறான். ஐதரேய ஆரண்யகத்திலும் (II-3-2-5):—

புருஷனிடத்தில் ஆத்மா விசேஷமாய் விளங்குகிறது. ஏனெனின் அவன் பிரஞ்ஞையுடன் விசேஷமாய் கூடியிருக்கிறான். அறிந்ததைச் சொல்லுகிறான், அறிந்ததைப் பார்க்கிறான், நாளைவரப்போகிறதை அவன் அறிகிறான். சுவர்க்க நரகங்களை அறிகிறான். நாசமடையக்கூடியதால் நாசமாகாததை இச்சிக்கிறான், மற்ற பசுக்களோ பசிதாகம் இவைகளை மட்டும் அறிகின்றன.

என்பதாய்ச் சொல்லி யிருக்கிறது. இந்த புருஷன் சரீரத்துக்குள் கடைசியிலிருக்கிற பிரம்மத்தை வித்தையால் அறியவேண்டுமென்று சுருதிக்கு இஷ்டம்.

---

து:—பிரமாணவாக்கியம்:—

अन्नात्मनिशरीरेसौ व्यज्यतेसुविवेकिभिः ।
अन्नसारभूतोयं शरीरस्यचकेशवः ।
अन्ननामाचान्नसंस्थः शरीरेषुचसंस्थितः ।
अत्तृत्वात्सवलोकाना मन्नमित्युच्यतेहरिः ।
उपजीव्यश्चभूताना मितिचान्नंजनार्दनः ।
सज्यायान्सर्वभूतेभ्य स्तस्मात्सर्वौषधंस्मृतः ।
संसारेदह्यमानाना माश्रयत्वात्सऔषधं ।
प्रचुरंमय इत्युक्त' प्रचुरात्तायतोहरिः ।
प्रचुरैःसेव्यतेनित्य मतोन्नमयइ रितः ॥ तत्वनिर्णयं ॥

அ:-புருஷனுள்பட சகல பிராணிகளும் பிரம்மத்தினின்றும் உண்டாகி அன்னத்தால் ஏற்பட்டிருந்தாலும் புருஷனே கர்மஞானங்களுக்கு அதிகாரியாயிருப்பதால், புருஷனைப்பற்றியே இவ்விடத்தில் கூறியிருக்கிறது. அநேக அனர்த்தங்களுக்கு இருப்பிடமாகிய சம்சார சாகரத்தில் முழுகியிருக்கிற புருஷனை தான்தான் பிரம்மம் என்பதாக அறியும்படி பிரம்ம வித்தையை உபதேசிக்க வேண்டியது என்பது சுருதியின் கருத்து.

இந்த பிரம்ம வித்தையை கோச நிரூபணத்தால் சுருதி உபதேசிக்கிறது. ஒரு மரத்தின் கிளையின் நுனியை முதலில் காண்பிவித்து அதற்கு அப்பால் சந்திரன் இருக்கிறான் என்று காட்டுகிறோம். அதுபோல் கோசங்களை உபதேசித்து இவைகளை அதிக்கிரமித்திருப்பதே பிரம்மம் என்பதாய் சுருதி போதிக்கிறது. அநாதியான சம்சாரத்தால் புருஷன் அநேக வாசனைகளுடன் கூடியிருப்பதால், அவனுக்குத் தகுந்த உபாயத்தால் போதிக்க வேண்டியது.

பிரத்தியகாத்மா எப்போதும் அத்வைதம். இதைத்தவிர வேறு ஒன்றுமில்லை. அவித்தையால் அதினிடத்தில் ஜீவஜடபேதங்கள் காணப்படுகின்றன. ஆத்மாவின் வாஸ்தவமான ஸ்வரூபம் எப்போது தெரியவில்லையோ அப்போது ஆத்மா ஜீவன் போலும் ஜடம் போலும் அவித்தையால் காணப்படுகிறான். இந்த விகார பாவங்கள் அவித்தையால் ஏற்படுவதால் மித்தையே, ஆத்மா எப்போதும் அத்வைத சத்திய ஸ்வரூபமே.

அன்னமய, பிராணமய, மனோமய, விஞ்ஞானமய, ஆநந்தமய என கோசங்கள் ஐந்து. நான்தான் அன்னமயன், நான்தான் பிராணமயன், இப்படி ஐந்துவிதமாக ஆத்மா விளங்குகிறான். அப்படியே அன்னம், பிராணன், மனது, விஞ்ஞானம், ஆநந்தம், ஆகிய ஐந்திலும் ஆத்மா விளங்குகிறான். ஆகவே அன்னம் முதலிய ஐந்து தத்துவங்கள் காணப்படுகின்றன.

---

து:- [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

([illegible])

அ:—அன்னமேவிராட், இந்திரிய கோசரமான ஸ்தூலம். இது பிராணத்தினின்றும் விர்த்தியாகிறது.

பிராணன், மனது, விஞ்ஞானம், இம்மூன்றும் சேர்ந்து சூத்திராத்மா வாகின்றன. இந்த சூத்திராத்மா கிரியாசக்தியர்கிற பிராணனாலும், ஞானசக்தியாகிற மனது, விஞ்ஞானம் இவைகளாலும் ஏற்படுகிறான். சங்கல்பகஞானத்தைக் கொடுக்கும் சத்தியுள்ள அந்தக்கரணத்துக்கு மனது என்று பெயர். இந்த மனதினின்றும்பிராணன் உண்டாகிறது. நிர்விகல்பகஞானத் தைக் கொடுக்கும் சக்தியுள்ள அந்தக்கரணம் விஞ்ஞான மெனப்படும். இது நிச்சயஞானஸ்வரூபம் இம்மூன்றும் சூத்திராத்மாவாகின்றன.

ஞானகர்மங்களின் பலனாக ஏற்படுவது ஆநந்தம். இவ்விதமாக அன்னம் என்பது விராட்கோசமாகவும் பிராணன் மனது விஞ்ஞானம் இம்மூன்றும் சூத்திராத்மாவாகவும், ஆநந்தம் காரண கோசமாகவும் ஏறப்படுகின்றன. பிரஹதாரணியகத்தில் இந்த கோசங்களில் அன்னமயத்துக்கு விராட்டென்றும், விஞ்ஞான மயத்துக்கு வாக்கு என்றும், ஆநந்த மயத்துக்கு அவ்வியாகிருத மென்றும் பெயர் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

அன்னமயாதிகளைவிட அன்னாதிகள் அத்தியந்தம் வேறன்று. காரணம் காரியத்திலிருப்பதால் பிராணாதிகளைவிட அன்னாதிகள் வேறன்று. இந்த உபதேசத்தால் புருஷன் முதலில் மூலகாரணமே எல்லாம் என்று அறிந்து, பிறகு காரியகாரண பாவமற்ற பிரம்மமே தான் என்பதாய் அறிகிறான்.

இவைகளில் ஒவ்வொரு கோசமும், சிரசு, இரண்டு பக்ஷங்கள் மத்திய பாகம், வால் ஆகிய ஐந்து விதமாக உபாசனையின்பொருட்டு வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

---

(வி—வி:—எந்த पुरुषः புருஷஃ புருஷாகிருதி, சிரசு, கை, முதலிய ஆகிருதியுடன் சிருஷ்டியின் ஆரம்பத்தில் ஆகாசாதிகளுக்குப் பிறகு சிருஷ்டிக்கப்பட்டதோ सएवएषः ஸவஏவஏஷஃ அந்த ஆகிருதியையே ஒருவன் தன்னுடைய சரீரமாக பாவிக்கிறான் இந்த ஆகிருதியே சிருஷ்டியின் ஆரம்பத்தில் உண்டாயிராவிட்டாலும், ஆகாசாதிகளுக்குப் பிறகு உண்டான அன்னத்தின் காரியமான ஆகிருதிபோல் இதுவும் இருக்கிறதினால், "அவன்தான் இவன்" என்பதாய் சொல்லப்பட்டது. இந்த அபிப்பிராயத்தை விளக்கி வைக்கத்தான் अन्नरसमयः அன்னரஸமயஃ என்கிற பதம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது.

அ:-அன்னத்தால் ஸ்தூல சரீரம் உண்டாயிற்று என்று சொன்னதைக்கொண்டு சூட்சுமதேகத்தையும் சேர்த்து அறியவேண்டியது. இது அபஞ்சீகிருத பூதகாரியமாயும் அன்னாதிகளால் போஷிக்கப் பட்டுமிருக்கிறது. अपञ्चीकृतपञ्चमहाभूतानि तत्कार्यञ्च सप्तदशकं लिङ्गं भौतिकम् அபஞ்சீக்ருத பஞ்சமஹாபூதாநி தத்கார்யஞ்ச ஸப்ததசகம் லிங்கம் பௌதிகம் அதாவது பஞ்சீகிருதங்களாகாத ஐந்து மஹா பூதங்களும் அவைகளின் காரியங்களும் சேர்ந்து பதினேழுதத்துவங்களுள்ளது (5 பூதங்கள் + 5ஞானேந்திரியங்கள் + 5 கர்மேந்திரியங்கள் + மனது + புத்தி ஆகிய 17) தத்துவங்களுள்ளது லிங்க சரீரம் என்று ஆசாரியார் சொல்லி யிருக்கிறார்.

சாந்தோக்கிய உபநிஷத்தில் VI—5—4ல்

अन्नमयंहिसोम्यमन आपोमयःप्राणास्तेजोमयीवाक्।

அந்நமயம்ஹி ஸோம்ய மந ஆபோமய:ப்ராணஸ்தேஜோமயீவாக்

அதாவது:— மனது அன்னமய மென்றும், பிராணன் ஜலமய மென்றும் வாக்கு தேஜோமயமென்றும் சொல்லி யிருக்கிறது.

ஒருவன் உபவாசம் செய்வதால் மனது சக்தியற்றதாக ஆகிறது. பாரணை செய்வதால் அது சக்தியை அடைகிறது.

வழி நடப்பதால் பிராணன் சக்தியை கொஞ்சம் இழந்து வருகிறான். ஜலபானத்தால் மறுபடியும் சக்தியுண்டாகிறது.

கானம் செய்கிறவர்கள் நெய் எண்ணெய் முதலிய உஷ்ணமான பதார்த்தங்களைப் புஜித்து தொண்டையை சுத்திசெய்து வாக்கைவிருத்தி செய்கிறார்கள். இவ்விதமாகப் பிரபஞ்சத்தில் கண்டிருக்கிறோம். மனது, பிராணன், வாக்கு முதலியவைகளால் ஏற்பட்ட லிங்க தேகத்துடன் கூடிய, அன்னவிகாரமான ஸ்தூல சரீரத்தையே ஆத்தியாத்மிகமென்று அதாவது நம்முடைய சரீரமென்று சொல்லுகிறோம். இதனால் அதிதைவிகமான வைராஜ தேகத்தையும் அதாவது பிரம்மாண்டம் என்பதையும் ஊகிக்கலாம்.

மரத்தின் கிளையின் நுனியைக்கொண்டு சந்திரனைக் காண்பிப்பதுபோல், பிரம்மதத்துவத்தை உபதேசிக்கும்பொருட்டு இந்த அன்னமயகோசம் வர்ணிக்கப்பட்டது.

## அன்னமயத்தின் உபாசனை.

(வி-வி) யஞ்ஞத்தின் அக்கினியானது சிரசு, இரக்கைகள், மத்தியபாகம், வால் ஆகிய ஐந்து அவயவங்களுள்ள பக்ஷியாக வர்ணிக்கப்படுவதுபோல் அன்னமயகோசமும் உபாசனையின் பொருட்டு ஐந்து அவயவங்களுள்ளதாக இனி வர்ணிக்கப் படுகிறது.

அ:- V (16) तस्येदमेव शिर: । தஸ்யேதமேவ ஶிர: ।

(17) अयं दक्षिण: पक्ष: । அயம் தக்ஷிண: பக்ஷ: ।

(18) अयमुत्तर: पक्ष: । அயமுத்தர:பக்ஷ:।

(19) अयमात्मा । அயமாத்மா ।

(20) इदं पुच्छं प्रतिष्ठा ॥ 5 ॥ இதம் புச்சம் ப்ரதிஷ்டா ॥ 5 ॥

பதவுரை.

(17) इदंएव இதம்ஏவ=இதுவே
तस्य தஸ்ய=அவனுடைய
शिर: ஶிர:=சிரசு
(18) अयं அயம்=இது
दक्षिण: पक्ष: =தக்ஷிண:பக்ஷ:=வலது இரக்கை
अयं அயம்=இது
उत्तर:पक्ष: உத்தர: பக்ஷ:=இடது இரக்கை
(20) अयं அயம்=இது
आत्मा ஆத்மா=ஆத்மா
(21) इदं இதம்=இது
प्रतिष्ठा ப்ரதிஷ்டா=ஆதாரமான
पुच्छं புச்சம்=வால்

ச-பா:—ஆத்மாவுக்கு பாஹ்யமாயிருக்கிற சரீரம், கோசம் முதலிய ஆகாரங்களை ஆத்மாவாக பாவிக்கும் புத்தியானது சரீரமாகிற விசேஷத்தைப் பிடித்துக்கொள்ளாமல், யாதொரு ஆதாரமுமற்ற சகலத்துக்கும் அந்தரமான பிரத்தியகாத்மாவை ஜடிதியில் கிர

வி:—तस्य தஸ்ய=இந்ததேகத்துக்கு
इदं एव இதம்ஏவ=பிரத்தியக்ஷமாகக் காணப்பட்டதே

து:-அ-கை:—அன்னமய கோசத்திலிருக்கிற, அநிருத்த என்று பெயருள்ள, அன்னமய சப்தத்தால் கூறப்படும் பரமாத்மாவின் சிரசுமுதலிய அவயவங்களின் ஸ்தானங்களை तस्येदमेवशिर: தஸ்யேதமேவஶிர: என்பதுமுதல் சொல்லுகிறார்.

तस्य தஸ்ய=அன்னரஸமயரான அநிருத்தருக்கு
इदंएव இதம்ஏவ=அன்னவிகாரத்தினால் உண்டாகிற சரீரத்தின் சிரசே

அ:—கிக்கச் சமர்த்தமாகமாட்டாது. ஆகையால் சந்திரனைக் காண்பிக்க இச்சிக்கிறவன் மரத்தின் கிளையின் நுனியைமுதலில் காட்டிப் பிறகு சந்திரனைக் காட்டுவதுபோல், சுருதியும் பிரம்மத்தை உபதேசிக்கும்பொருட்டு, பிரத்தியக்ஷமாய்த் தெரியும் அன்னமயமாகிற ஸ்தூல சரீரத்தைக்காட்டி, இதுபோலவே இதற்குள் ஒன்றுக்குள் ஒன்றாக இருக்கும் பிராணமயாதிகோசங்களையும் காட்டி, கடைசியில் இவைகளுக்குள் பிரம்மமிருக்கிறதாக உபதேசிக்கிறது.

(ஆ:—பிராணமயம் முதலிய கோசங்களையும் பக்ஷிரூபமாக வர்ணிக்கும்பொருட்டு அன்னமய கோசமும் அப்படியே வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இதனால் புத்தியானது பாஹ்ய விஷயங்களினின்றும் விலகி ஆத்மா விடத்திலேயே ஸ்திரமாகும். உபாசனையின் பொருட்டுஇது விதிக்கப்படவில்லை. ஆரம்பத்திலும் முடிவிலும் பிரம்மாத்மைக்கியமே பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் கிரந்தமத்தியில் உபாசனை விதிக்கப்பட்டதாகச் சொல்லுவது வாக்கியபேதமாகும். ஆகையால் முழுசுருதியின் கருத்து ஜீவபிரம்ம ஐக்கியத்தைப் பிரதிபாதிப்பதை அன்னமயாதிகளின் பிரத்யேக ஸ்துதியும் பிரம்மவித்தையை அடையும்பொருட்டே, பின்னால் வருவதில் புத்தி ஸ்திரப்படுவதினால் முன்னால் போனதில் புத்தி விட்டுப்போகிறது. கடைசியில் ஆத்மாவில் புத்தி ஸ்திரப்படுகிறது.

**तस्यइदमेवशिरः** தஸ்ய இதமேவ ஶிர:

ச:—அன்னரஸத்தாலுண்டான இந்த புருஷனுடைய பிரத்தியக்ஷமாய் காணப்படும் சிரசே சிரசு. பிராணமயாதி கோசங்கள் விஷயத்தில் எது வாஸ்தவத்தில் சிரசாக இல்லையோ அது சிரசாக வர்ணிக்கப்படுகிறது. அன்னமய விஷயத்திலும் இப்படியே அர்த்தம் என்பதாய் கிரகிக்காமலிருக்கும்பொருட்டு **इदमेवशिरः** இதமேவஶிர: என்பதாய் சுருதியானது நிச்சயமாகச் சொல்லுகிறது. இப்படியே பக்ஷங்கள் முதலிய விஷயங்களிலும் அறியவேண்டியது.

வி:—**शिरः** ஶிர:=சிரசு.

து:—**शिरः** ஶிர:=சிரசு. வஸ்திரத்தினால் மூடப்பட்ட முழங்காலைப் பார்த்து இது முழங்கால் என்று சொல்லுவதுபோல், நமக்குத் காணப்படும் சரீரத்தின் யாதொரு மஸ்தகம் உண்டோ அதினுள்ளிருப்பதினால் அதினால் மறைப்பட்டது போலிருக்கிற ஹரிக்கு சிரசு உபசாரமாகச் சொல்லப்படுகிறது. முழங்காலைக் குறிப்பிடுவதுபோல் சிரசும் குறிப்பிடப்படுகிறது. இப்படியே பின்னும் அறியவேண்டியது. மனுஷிய சிரசே அவனுடைய சிரசு என்று அர்த்தமல்ல. மனுஷிய சிரசுக்குள் அவனுடைய சிரசு இருக்கிறது என்று அர்த்தம்.

அ:—अयंदक्षिण: पक्ष: அயம் தக்ஷிண: பக்ஷ:=கிழக்குமுகமாய் நிற்கிறவனுடைய வலதுகை வலது பக்ஷம் (இரக்கை.)

अयंउत्तर:पक्ष: அயம்உத்தர:பக்ஷ:=இந்த இடதுகை இடது இரக்கை.

अयं आत्मा அயம்ஆத்மா=இந்த தேகத்தின் மத்தியபாகம்ஆத்மா. मध्यंह्येषामङ्गानामात्मा மத்யம்ஹ்யேஷாமங்காநாமாத்மா=(அங்கங்களின் மத்யபாகம் ஆத்மா) என்று சுருதி சொல்லுகிறது.

इदंपुच्छंप्रतिष्ठा இதம்புச்சம் ப்ரதிஷ்டா:—நாபிக்குக்கீழ் எந்த பாகமிருக்கிறதோ அது புச்சம். பசுவின் வாலானது கீழ் தொங்குவதுபோல் இதுவும் கீழாகஇருப்பதால் புச்சம்போலிருக்கிறது. ஆகையால் புச்சம் என்று சொல்லப்பட்டது. இது பிரதிஷ்டை அதாவது ஆதாரம், அதாவது எதனால் மனிதன் ஸ்திரமாய் நிற்கிறானோ அது.

---

வி:—இரண்டுகைகளும் இரக்கைகள்

கழுத்துக்குக்கீழ் நாபிக்குமேல் காணப்படுகிற இந்த மத்தியபாகமானது आत्मा ஆத்மா=அங்கங்களை ஆத்மா தரித்துக்கொண்டிருப்பதால் பிரதானமாக இருக்கிறதென்று அர்த்தம்.

मध्यंह्येषामगानामात्मा மத்யம்ஹ்யேஷாமங்காநாமாத்மா = அதாவது இந்த அங்கங்களுக்கு ஆத்மா மத்தியம் என்கிற சுருதி இதற்கு ஆதாரம்.

इदं இதம்=நாபிக்குக் கீழாகக்காணப்படுகிற இரண்டு கால்களும்

पुच्छं புச்சம்=புச்சம்போல் ஆதாரமாயிருப்பதால் வால் என்று அர்த்தம்.

---

து:—अयं அயம்=பார்க்கப்படுகிற அன்னவிகாரமான தேகத்தில் சம்பந்தப்பட்டிருக்கிற

दक्षिण:पक्ष: தக்ஷிண:பக்ஷ:=வலதுகை அன்னரஸமயனை அநிருத்தனுடைய வலதுகை. அதற்குள்ளிருக்கிறது என்பது கருத்து.

து:—अयं उत्तर:पक्ष: அயம் உத்தர: பக்ஷ:=காணப்படுகிற தேகத்தில் சம்பந்தப்பட்டிருக்கிற இடதுகை அன்னரஸமயனை அநிருத்தனுடைய இடதுகை. அதற்குள் இருக்கிறது என்று அர்த்தம்.

अयं आत्मा அயம்ஆத்மா=ஜீவனுடைய தேகமத்தியபாகம் அன்னரஸமயனுக்கு மத்தியதேகம்.

इदं இதம்=ஜீவனுடையசரீரத்தின் இரண்டு பாதங்கள்

प्रतिष्ठा ப்ரதிஷ்டா=இருக்கவேண்டிய காரணம்

पुच्छं புச்சம்=அன்னரஸமயனுடைய பாதங்களிலிருக்கிறது

அ:—(வி-வி:—உபாசிக்கவேண்டிய அன்னமயத்துக்கு கழுத்துக்கு மேல் பிரசித்தமாக எது காணப்படுகிறதோ அதுவேசிரசு. இவ்விடத்தில் உபசாரமொன்றுமில்லை. காணப்படுகிற கைகளே பக்ஷங்களாக தியானிக்கத்தக்கவை. கழுத்துக்குக்கீழும் நாபிக்குமேலும் எந்தபாகம் காணப்படுகிறதோ அதுவே ஆத்மா ஜீவனிருக்கக்கூடிய ஸ்தானம். மனுஷிய சரீரத்தில் நாபிக்குக் கீழ்ப்பட்ட பாகம் மேல் பாகத்துக்கு ஆதாரமா யிருப்பதால் இது பிரதிஷ்டை யென்று சொல்லப்படுகிறது. இது பக்ஷியாகிற ஆதாரத்துக்கு வால்போல் இருக்கிறது.

प्रातितिष्ठातिअस्यांइतिप्रतिष्ठा 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿 𑌅𑌸𑍍𑌯𑌾𑌂 𑌇𑌤𑌿𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾— அதாவது எதில் ஸ்திரமாயிருக்கிறதோ அது பசு முதலியவைகளின் சரீரத்தில் வாலானது ஈ முதலியவைகளை வெரட்டிவிட சாதகமாயிருப்பதால் வாலானது ஆதாரமாயிருக்கிறது. வாலை ஆதாரமாகச் சொன்னதானது உபாசனையின் பொருட்டே.

அன்னமயத்தை அனுசரித்து பிராணமயம் முதலிய இனி சொல்லப்போகிற கோசங்களும் ஏற்பட்டிருக்கின்றன. கருவில் விடப்பட்ட காச்சின தாம்பிரமானது விக்கிரகமாக ஆகிறதுபோலும்.

சு-வா:—வாஸ்தவத்தில் பிராணமயாதிகளுக்கு சிரசு முதலியவைகளில்லாவிட்டாலும் உபாசனையின் பொருட்டு இவைகள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன.

வி-வி:—உபாசிக்கவேண்டிய அன்னமய கோசத்தின் ரூபம் இவ்விதமாக பிரதிபாதிக்கப்பட்டது. இந்த பிராமணபாகத்தில் சொன்ன கோசம், உபாசனை இவைகளை மந்திரத்தால் ஸ்திரப்படுத்தும் பொருட்டு சுருதி சுலோகத்தைக் கூறுகிறது.)

---

து:—(வால் என்று அர்த்தம் செய்யக்கூடாது) அன்னத்தினால் சித்திக்கும் சரீரம், அதின் அவயவங்கள், எல்லாம் அநிருத்தன் என்கிற பரமாத்மாவின் ஆதீனமாயிருக்கிறது என்பது கருத்து.

பிரமாண வாக்கியம்.

देहस्यैवशिरस्यस्य शिरोविष्णोःप्रतिष्ठितं ।
बाह्वाःपक्षौतथामध्ये मध्यंपश्चात्तनोतथा ।
पुच्छमित्यषभगवाननिरुद्धःस्वयंहरिः ।
तस्यांतरंपररूप मभिन्नमपिभिन्नवत् ॥ तत्वनिर्णय ॥

𑌦𑍇𑌹𑌸𑍍𑌯𑍈𑌵 𑌶𑌿𑌰𑌸𑍍𑌯𑌸𑍍𑌯 𑌶𑌿𑌰𑍋𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂।
𑌬𑌾𑌹𑍍𑌵𑍋𑌃 𑌪𑌕𑍍𑌷𑍌𑌤𑌥𑌾𑌮𑌧𑍍𑌯𑍇 𑌮𑌧𑍍𑌯𑌂𑌪𑌶𑍍𑌚𑌾𑌤𑍍𑌤𑌨𑍋𑌤𑌥𑌾 ।
𑌪𑍁𑌚𑍍𑌛𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌷𑌭𑌗𑌵𑌾𑌨𑌨𑌿𑌰𑍁𑌦𑍍𑌧𑌃𑌸𑍍𑌵𑌯𑌂𑌹𑌰𑌿𑌃 ।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌂𑌤𑌰𑌂𑌪𑌰𑌂𑌰𑍂𑌪𑌮𑌭𑌿𑌨𑍍𑌨𑌮𑌪𑌿𑌭𑌿𑌨𑍍𑌨𑌵𑌤𑍍 ॥

(தத்வநிர்ணயே

அ:—[21) तदप्येषश्लोको भवति ||6||-தத³ப்யேஷ ஶ்லோகோ ப⁴வதி

(इति प्रथमोनुवाकः)

(இதி ப்ரத²மோ(அ)நுவாக:)

तदपि தத³பி=இந்த விஷயத்தில்

एष: ஏஷ:=இந்த

श्लोक: ஶ்லோக:=சுலோகம்

भवति ப⁴வதி=இருக்கிறது.

(இப்படி முதலாவது அனுவாகம் முற்றிற்று.)

பிராணத்தால் சொல்லிய அர்த்தத்தில் அன்னமய கோசத்தில் ஸ்தூலசரீரத்தின் ஆத்மாவை (ஸ்வரூபத்தை)பிரகாசிக்கும்படியான அடியிற்கண்ட சுலோகமாகிற மந்திரமிருக்கிறது. இப்படி முதலாவது கண்டம் முற்றிற்று.

(வி-வி:—சொன்ன அர்த்தத்தில் ஸ்திரபுத்திவர வேண்டுமென்பதே மந்திரத்தைச் சொல்லுவதின் கருத்து. अन्नाद्वैप्रजाः அந்நாத்³வை ப்ரஜா: முதல் तस्मादन्नं तदुच्यते தஸ்மாத³ந்நம் தது³ச்யதே=முடியும் வரையிலுள்ளது சுலோகம்.

---

வி:—இவ்விடத்தில் புருஷ சப்தத்தால் கூறப்படும் மனுஷியனுடைய கைமுதலிய அவயவங்களை இரக்கை முதலியதாக வர்ணித்து இலகுவாகத் தெரிந்துகொள்ளும் பொருட்டென்று அறியவும்

तदपि தத³பி=மேற்சொன்ன பிராமணத்தால் சொல்லப்பட்ட அர்த்தத்தையே

एष: ஏஷ:=இந்த மந்திரமானது கூறுகிறது என்று அர்த்தம். || 1 ||

---

## து:—5. அன்னமயப்பிரகரணம்.

அ·கை:—சத்தியபதத்துக்கு ஜகத்தின் சிருஷ்டி, ஸ்திதிலயங்களின் ஹேது என்கிற அர்த்தங்களில் ஜன்மத்துக்கு ஹேதுவென்பது आत्मन: आकाश: ஆத்மந: ஆகாஶ: என்பதினால் கூறப்பட்டது. மற்ற இரண்டு அர்த்தங்களும் सवाएष ஸவா ஏஷ முதலியவைகளில் விவரிக்கப்பட்டன. இம்மூன்று அர்த்தங்கள் விஷயத்தில் சுருதி ஒரு சுலோகத்தை உதாஹரிக்கிறது. तदप्येषश्लोक தத³ப்யேஷ ஶ்லோக என்பதினால்

तत् தத்=சொன்ன அர்த்தத்தில்

एष:श्लोक:भवति ஏஷ:ஶ்லோக:ப⁴வதி=இந்த சுலோகமுமிருக்கிறது.

அ:—अपि அபி=முன் சூத்திரத்தில் அதாவது பிரம்மவித்தானவன் பிரம்மத்தை அடைகிறான் என்று சொன்ன அர்த்தத்தில் ரிக்கு உதாஹரிக்கப்பட்டது. அதையெல்லாம் சேர்த்து இப்போது சொல்லுவதால் அபி என்கிற சப்தம் உபயோகிக்கப்பட்டிருக்கிறது. இந்த சுலோகமானது 14 பாதங்களுள்ளது. சாதாரணமாய் உலகத்தில் விளங்குகிற சந்தஸ் இந்த சுலோகத்தில் காணப்படாவிட்டாலும், இந்த சந்தஸ் வேதத்தில் பொருந்தியிருக்கலாம்.

முதலாவது அநுவாகம் முற்றிற்று.

## இரண்டாவது அநுவாகம்.

(1) अन्नाद्वै प्रजाः प्रजायन्ते । அந்நாத்வை ப்ரஜா: ப்ரஜாயந்தே ।

(2) याः काश्च पृथिवीं श्रिताः । யா: காஶ்ச ப்ருதிவீம் ஶ்ரிதா: ।

(3) अथो अन्नेनैव जीवन्ति । அதோ அந்நேநைவ ஜீவந்தி ।

(4) अथैनदपि यन्त्यन्ततः । அதைநதபி யந்த்யந்தத: ।

(5) अन्नं हि भूतानां ज्येष्ठम् । அந்நம் ஹி பூதாநாம் ஜ்யேஷ்டம் ।

(6) तस्मात्सर्वौषधमुच्यते । தஸ்மாத்ஸர்வௌஷதமுச்யதே ।

(7) सर्वं वै तेऽन्नमाप्नुवन्ति । ஸர்வம் வை தே(அ)ந்நமாப்நுவந்தி ।

(8) येऽन्नं ब्रह्मोपासते । யே(அ)ந்நம் ப்ரஹ்மோபாஸதே ।

(9) अन्नं हि भूतानांज्येष्ठम् । அந்நம் ஹி பூதாநாம் ஜ்யேஷ்டம் ।।

(10) तस्मात्सर्वौषध मुच्यते । தஸ்மாத்ஸர்வௌஷத முச்யதே ।।

(11) अन्नाद्भूतानि जायन्ते । அந்நாத்பூதாநி ஜாயந்தே ।

(12) जातान्यन्नेन वर्धन्ते । ஜாதாந்யந்நேந வர்தந்தே ।

(13) अद्यतेऽत्ति च भूतानि । அத்யதே(அ)த்தி ச பூதாநி ।

(14) तस्मादन्नं तदुच्यतइति ॥1॥ தஸ்மாதந்நம் ததுச்யத இதி॥ 1॥

பதவுரை:—

(2) याः काः च யா: கா: ச=எவை எவை
पृथिवीं ப்ருதிவீம்=பிருதிவியை
श्रिताः ஶ்ரிதா:=ஆசிரயித்திருக்கின்றனவோ
ताः தா:=அந்த

அ:—(1) प्रजा: ப்ரஜா:=பிரஜைகள், பிராணிகள்
अन्नात् அந்நாத்=அன்னத்தினின்றும்
प्रजायन्ते ப்ரஜாயந்தே=உண்டாகின்றன
वै வை=நிச்சயம்
(3) अथ அத=உண்டானபிறகு
अन्नेनएव அந்நேநைவ=அன்னத்தாலேயே
जीवन्ति ஜீவந்தி=ஜீவிக்கின்றன
(4) अथ அத=பிறகு
एनत् ஏநத்=இதையே
अन्ततः அந்தத:=முடிவில்
अपियन्ति அபியந்தி=அடைகின்றன.
(5)अन्नं हि அந்நம் ஹி=அன்னமானதே
भूतानां பூதாநாம்=பிராணிகளுக்கு
ज्येष्ठम् ஜ்யேஷ்டம்=முன்னமேயே உண்டாயிற்று
(6) तस्मात् தஸ்மாத்=ஆகையால்
सर्वौषधं ஸர்வௌஷதம்=சகலத்துக்கும் ஔஷதமாக
उच्यते உச்யதே=சொல்லப்படுகின்றது.
(7)ये யே=எவர்கள்
अन्नं அந்நம்=அன்னத்தை
ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மமாக
उपासते உபாஸதே=உபாசிக்கிறார்களோ
(8) ते தே=அவர்கள்
सर्वं ஸர்வம்=சமஸ்தமான
(9) अन्नं அந்நம்=அன்னத்தை
आप्नुवन्ति ஆப்நுவந்தி=அடைகிறார்கள்
वै வை=நிச்சயம்
अन्नं அந்நம்=அன்னமானது
भूतानां பூதாநாம்=பிராணிகளுக்கு
ज्येष्ठंहि ஜ்யேஷ்டம் ஹி=முதலில் உண்டானதாக இருக்கிறது.
(10) तस्मात् தஸ்மாத்=ஆனதால்
सर्वौषधं ஸர்வௌஷதம்=சகலத்துக்கும் ஔஷதம் என்று
उच्यते உச்யதே=சொல்லப்படுகிறது.
(11) अन्नात् அந்நாத்=அன்னத்தினின்றும்
भूतानि பூதாநி=பிராணிகள்
जायन्ते ஜாயந்தே=உண்டாகின்றன-

அ:—(12) जातानि ஜாதாநி=உண்டானவைகள்
अन्नेन அந்நேந=அன்னத்தால்
वर्धन्ते வர்த்தந்தே=விர்த்தியாகின்றன
(13) अद्यते அத்யதே=(அன்னம்) பக்ஷிக்கப்படுகின்றது
भूतानि பூதாநி=பிராணிகளை
अत्ति च அத்திச=பக்ஷிக்கிறது
तस्मात् தஸ்மாத்=ஆனதால்
(14) तत् தத்=அது
अन्नं इति அந்நம் இதி=அன்னம் என்று
उच्यते உச்யதே=சொல்லப்படுகிறது.

விராட்.

(1) (2):—

(a) ச—பா:—ரஸம் முதலியவைகளாக பரிணமிக்கிற அன்னத்தினின்றும் ஸ்தாவர ஜங்கமரூப பிராணிகள் உண்டாகின்றன. பூமியில் இருக்கிற சகல பிராணிகளும் அன்னத்தினின்றுமே உண்டாகின்றன.

(b) வி—வி:—ஜராயுஜ அண்டஜ முதலிய பிருதிவியிலிருக்கிற சகல பிராணிகளும் அன்னத்தினின்றுமே உண்டாகின்றன. இது முன்னமேயே சொல்லப்பட்டிருக்கிறது.

(3) अथो ... जीवन्ति அதோ ... ஜீவந்தி =

ச—பா:—உண்டானவைகளும் அன்னத்தாலேயே பிராணனை தரிக்கின்றன. விருத்தி அடைகின்றன வென்பது அர்த்தம்.

---

து—:அ-கை:—அதையே अन्नाद्वै அந்நாத்வை என்பதினால் விவரிக்கிறார்.

याः काश्च पृथिवीं श्रिताः யா: காஶ்ச ப்ருதிவீம் ஶ்ரிதா:=பிருதிவியை ஆசிரயித்துக்கொண்டு அதாவது பூமியில் எந்த பிராணிகள் இருக்கிறார்களோ

(ताः தா:=அந்த)

प्रजाः ப்ரஜா:=பிரஜைகள்

अन्नात् அந்நாத்=அன்னத்தினால் சித்திக்கும் தேகத்திலிருக்கிற அந்நிருத்த என்று பெயருடைய பரமாத்மாவிடமிருந்து

प्रजायन्ते ப்ரஜாயந்தே=உண்டாகிறார்கள், தேகசம்பத்துடன் உண்டாகிறார்கள்.

वै வை=இது பிரசித்தம்

(3) अथो அதோ=உண்டான பிரஜைகள்

अन्नेनएव அந்நேநைவ=அந்நரஸமயனால்

जीवन्ति ஜீவந்தி=ஜீவிக்கிறார்கள், பிராணனை தரிக்கிறார்கள்

அ:—(4) अथ...अन्ततः 𑌅𑌥 ... 𑌅𑌨𑍍𑌤𑌤𑌃=

ச—பா:—முடிவில் அதாவது ஜீவன லக்ஷணமான விருத்தி யானது முடிவு பெறும்போது அவைகளே அன்னத்தை உத்தே சித்துப்போகின்றன. அதாவது அன்னத்தில் லயமாய் விடுகின் றன என்பது அர்த்தம்.

வி–வி:—ஜீவித்ததற்குப் பிறகு ஆயுளின் முடிவில் அன்னத் தில் லயமாகின்றன. மிருகாதிகளின் சரீரங்கள் புலி முதலியவை களுக்கு அன்னமாகிறதினால் அன்னத்தில் லயம் காணப்படுகின் றது.

(5) अन्नं...श्रेष्ठं 𑌅𑌨𑍍𑌨𑌂...𑌶𑍍𑌰𑍇𑌷𑍍𑌠𑌂=

ச—பா:—ஏனெனின், அன்னம் பிராணிகளுக்கு முன்னமே யே உண்டானது. அன்னமயாதிகளான இதர பிராணிகளுக்கு அன்னம் காரணம். ஆகையால் சகல பிராணிகள் அன்னத்தினின் றும் உண்டாகி அன்னத்தால் ஜீவித்து அன்னத்தில் லயமாகின் றன.

(6) तस्मात् ...उच्यते 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍...𑌉𑌚𑍍𑌯𑌤𑍇=

ச-பா:—இப்படி யிருப்பதால் சகல பிராணிகளின் தேகத்தி லுள்ள தாஹத்தைச்சாந்தி செய்யும் அன்னம் ஔஷதம் என்று சொல்லப்படுகின்றது.

---

து:—(4) अथ 𑌅𑌥 பிறகு

अन्ततः 𑌅𑌂𑌤𑌤𑌃=பிரளயத்தில்

एतत् 𑌏𑌤𑌤𑍍=அந்நரஸமயனென்கிற அபிருத்தனை

अपियन्ति 𑌅𑌪𑌿𑌯𑌂𑌤𑌿=மற்றவர்களுக்குத் தெரியாத விதமாக பிரவேசிக்கிறார்கள் என்பது கருத்து.

(5) अन्नं हि 𑌅𑌨𑍍𑌨𑌂𑌹𑌿=அன்னரஸமயன் என்கிற அபிருத்தன்

भूतानां 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂=பிராணிகளுக்குள்

ज्येष्ठं 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌂 சிரேஷ்டன்

(6) तस्मात् 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍=இப்படி இருப்பதினால்

सर्वौषधं उच्यते 𑌸𑌰𑍍𑌵𑍌𑌷𑌧𑌂 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇=சம்சாரத்தில் தஹிக் கப்பட்டவர்களுக்கு ஆசிரயம், சம்சார பயத்தை நிவிர்த்திசெய்பவர் என்று சொல்லப்படுகிறான்.

---

## 2-வது அனுவாகம்.

வி:—I-(5) ज्येष्ठं 𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌂=சர்வ பூதங்களுக்கும் உபகாரமாயிருப்ப தால் முந்தினதாக இருக்கிறது.

(6) तस्मात् 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍=பசிமுதலான வியாதிகளை நிவிர்த்தி செ ய்கிறபடியால் அன்னமே

सर्वौषधं 𑌸𑌰𑍍𑌵𑍌𑌷𑌧𑌂=பசிமுதலான எல்லாவற்றிற்கும் மரு ந்தாக

அ:—வி-வி:—சகல பிராணிகளுக்கும் அன்னம் காரணமாயிருப்பதால், அது பசியாகிற ரோகத்தை நிவிர்த்தி செய்கிறதாயிருக்கிறது. பசியாகிற ரோகம் நிவிர்த்தியானவளவில், ஜீவித்தலாகிய ஸ்திதி ஏற்படுகிறது. இந்த ஸ்திதிக்குக் காரணமாயிருப்பதால் அன்னம் ஔஷதமாகச் சொல்லப்பட்டது. இவ்விதமாக சுருதியானது அன்னம் பிராணிகளின் உற்பத்தி ஸ்திதிலயங்களுக்குக் காரணமென்று சொல்லி அன்னமய கோசத்தை விவரித்தது.

(சு-வா:—சகல பிராணிகளுக்குமுன் விராட் உண்டானதால் விராட்டே அன்னம், ஜேஷ்டம். பசியாகிற அக்கினியை அன்னம் சாந்தம் செய்யாத பக்ஷத்தில், அந்த அக்கினி சரீரத்திலுள்ள தாதுக்களை பக்ஷித்து விடும். ஆகையால் அது ஔஷதமாகச் சொல்லப்பட்டது.)

## விராட்டின் தியானப்—பலம்.

அன்னத்தைப் பிரம்மமாக அறிகிறவனுக்கு உண்டாகும் பலன் இனி சொல்லப்படுகின்றது.

सर्वं... उपासते ஸர்வம்... உபாஸதே—

ச-பா:—எவர்கள் அன்னப் பிரம்மத்தை முன் சொன்னபடி உபாசிக்கிறார்களோ அவர்கள் சமஸ்தமான அன்னத்தையும்

---

வி:—उच्यते உச்யதே=சொல்லப்படுகின்றது. அன்னமானது ஓஷதிகளின் பரிணாமமாகையால் அன்னத்தை ஔஷதம் என்று சுருதி கூறுவதாக அறியவும். (மற்ற பதங்களுக்கு அர்த்தம் அத்வைதத்தில் போலவே)

ते தே=அன்னத்தை பிரம்மம் என்று உபாசிக்கிறவர்கள்
अन्नं அன்னம்=வேண்டியவரையிலும் அன்னத்தை
आप्नुवन्ति ஆப்நுவந்தி=அடைகிறார்கள்.

---

து:—அ-கை:—அன்னமயனை பிரம்மமாக அறிகிறவனுக்கு सर्वं ஸர்வம் முதலியதால் பலத்தைக் கூறுகிறார்:—

ये யே=எந்த அதிகாரிகள்
अन्नं அன்னம்=அன்னரஸமயன் என்கிற அநிருத்தனை
ब्रह्म ப்ரஹ்ம=குணங்களால் பரிபூர்ணனாக
उपासते உபாஸதே=உபாசிக்கிறார்களோ
तेवै தேவை=அவர்களே
सर्वं ஸர்வம்=பூர்ணமாக
अन्नं அன்னம்=அன்னரஸமயனான ஹரியை
आप्नुवन्ति ஆப்நுவந்தி=அடைகிறார்கள்.

அ:—அடைகிறார்கள். நான் அன்னத்தினின்றும் உண்டாகி, அன்னத்தில் ஸ்திதியடைந்து அன்னத்தில் பிரளயத்தை அடைகிறேன். ஆனதால் அன்னம் பிரம்மம். (அன்னமய சரீரத்தின் உற்பத்திஸ்திதி நாசங்களுக்கு அன்னம்காரணம், பிரம்மம்சகலத்தின் உற்பத்தி ஸ்திதிலயங்களுக்குக் காரணமாயிருப்பது போல் அன்னமும் அன்னமயத்துக்குக் காரணமா யிருக்கின்றது. அன்னபிரம்மமாகிற விராட்டும் தானும் ஒன்று என்று அறியாதவரையில் சகல அன்னத்தையும் அடைய முடியாது. ஆகையால்தான் அன்ன பிரம்மம் ஒருவன் உபாசிக்க வேண்டியது.)

வி-வி:—எவர்கள் அன்னத்தைப் பிரம்மத்தின் பிரதீகமாக பாவித்து, இப்படி பாவிக்கப்பட்ட அன்னம் தேகாகாரமாகப் பரிணமித்து சிரசு முதல் வாய் வரையிலுள்ள அவயவங்களோடு கூடியிருப்பதாக எவர்கள் தியானிக்கிறார்களோ, அவர்கள் சகல அன்னத்தையும் அடைகிறார்கள். அல்லது:—பிரம்மம்முதல் ஆகாசாதி பரம்பரையாக உண்டான அன்னமானது மானிடசரீர முதலிய ஆத்தியாத்மிக சரீரமாகவும் ஆதி தெய்வமாகிற விராட்டாகவும் விளங்குகிறது. அன்ன உபாதியுடன் கூடின பிரம்மத்தை உபாசிக்கிறவர்கள் சர்வஸ்வரூபமான விராட் ஸ்வரூபத்தை அடைந்து பிரம்மாதி ஸ்தம்பபரியந்தமுள்ள சகல பிராணிகளுமடையக் கூடிய அவரவர்களுக்கு ஏற்பட்ட சகல அன்னத்தையும் அடைகிறார்கள்.

(9) அன்ன...ஜ்யேஷ்ட ...

ச-பா:—அன்னத்தை ஆத்மாவாக உபாசிப்பதால் சர்வ அன்னத்தை அடைந்த பலனுண்டாகிறதாக எப்படிச் சொல்லலாம். அன்னமானது பிராணிகளுக்குள் முதலானது என்று சுருதி சொல்லுகிறது.

---

வி:—(9) அன்னத்தை பிரம்மம் என்று உபாசனைக்குக் காரணமானபிரம்மத்தின் காம்மியத்தை அன்னம் ஹி என்கிறவாக்கியம் கூறுகிறது. பிரம்மமும் சகலரோகத்துக்கும் நிவர்த்தகமாகையால் சகலமருந்தாக இருக்கிறதென்பது கருத்து. உற்பத்தி விர்த்தி இவைகளுக்குக் காரணமாக இருக்கும்தன்மை அன்னத்துக்கும் பிரம்மத்துக்கும் சமமாக இருக்கிறதென்று அர்த்தம்.

---

து:—(9) அ—கை:—அன்னம் ஹி பூதானாம் ஜ்யேஷ்டம் ... என்பதினால் உபசம்காரம் செய்கிறார். அல்லது தாற்பரியத்தை கூறும்பொருட்டு அன்னம் முதலியது மறுபடியும் கூறப்படுகிறது

அ:—(10) तस्मात् .. उच्यते தஸ்மாத்...உச்யதே=

ச-பா:—பூதங்களுக்கு முன் அன்னம் உண்டானதால் ஜ்யேஷ்டம் என்று சொல்லப்படுகின்றது. ஆகையால் அது ஔஷதம் என்று சொல்லப்படுகின்றது. ஆகையால் சகல அன்னத்தையும் ஆத்மாவாக உபாசிக்கிறவன் சகல அன்னத்தையும் அடைவதாகச் சொன்னது யுக்தமே.

(வி·வி:—(9) (10):—முன் தத்துவத்தை அறிய இச்சிக்கிறவனை உத்தேசித்து, அறிய சாதகமான அன்னமய கோசத்தை பிரதிபாதிக்கும் பொருட்டு अन्नं हि भूतानां அன்னம்ஹிபூதாநாம் என்று சொல்லப்பட்டது. இப்போது உபாசிக்கத்தக்க வஸ்துவை ஸ்துதிக்கும் பொருட்டு அதுவே மறுபடியும் கூறப்படுகின்றது. நாம் முதல் விராட் வரையிலுள்ள சகல பிராணிகளின் தேகங்களுக்கும் அன்னம் காரணமாகையால் அது சகல சம்சார வியாதியை நிவிர்த்திக்கத்தக்க ஔஷதம். இப்படி உபாசிக்கிறதினால் ஒருவன் விராட்டை அடைந்து மோக்ஷத்தையும் அடைகிறான்.

(11)(12) अन्नात् ...वर्धन्ते அன்னாத்...வர்த்தந்தே:—

ச-பா:—அன்னத்தினின்றும் பிராணிகள் உண்டாகிறார்கள் உண்டானவர்கள் அன்னத்தால் விர்த்தியாகிறார்கள். இப்படி மறுபடியும் சொன்னதானது முடிவைக் கூறுகிறது.

---

து:—हि ஹி=எக்காரணத்தால்

अन्नं அன்னம்=அன்னரஸமயனான பரமாத்மா

भूतानांज्येष्ठं பூதாநாம்ஜ்யேஷ்டம் பூதங்களுக்குள் சிரேஷ்டரோ

(10) तस्मात् தஸ்மாத் =அக்காரணத்தால்

सर्वौषधं उच्यते ஸர்வௌஷதம் உச்யதே=சம்சாரபய நிவர்த்திகர் என்று சொல்லப்படுகிறார்

(11) अन्नात्भूतानिजायन्ते அன்னாத்பூதாநிஜாயந்தே=அர்த்தம் முன் போலவே

(12) जातानि ஜாதாநி=உண்டான பிராணிகள்

अन्नेन அன்னேன=அன்னரஸமயனென்கிற அநிருத்தனால்

वर्धन्ते வர்த்தந்தே=விருத்தி அடைகின்றன.

அ:—(13)अद्यते …அத்₃யதே=

(a)ச-பா:—இப்போது அன்னசப்தத்தின் அர்த்தம்கூறப்படுகின்றது.

வி-வி:—சகல பிராணிகளின் தேகங்களின் உற்பத்திக்கும் அபிவிர்த்திக்கும் காரணமாயிருப்பதால் உபாசியமான அன்னரூப விராட் லக்ஷ்யமாகச் சொல்லப்பட்டது. அன்ன சப்தத்தின் அர்த்தத்தைப் பரியாலோசனை பண்ணிபார்க்கும் போதும் அது லக்ஷியமாக இருக்கிறது.

(14) ச-பா:—சகல பிராணிகளால் அது புஜிக்கப்படுகிறது. தான் ஸ்வயம் சகல பிராணிகளையும் புஜிக்கிறது· இப்படி புஜிக்கப்படுவதாயும் புஜிக்கிறதாயுமிருப்பதால் அது அன்னம் என்று சொல்லப்படுகின்றது. इति இதி சப்தம் முதல் கோசம் முடிந்தது என்பதைக் காட்டுகின்றது.

---

வி:—(13)(அன்னத்தின் காரணப்பெயரை இனிகூறுகிருர்.)

अद्यते அத்₃யதே=உயிருடன் இருக்குங்காலத்தில் அன்னபானது பிராணிகளால் புஜிக்கப்படுகின்றது.

**अन्नमृत्युतमुजीवातुमाहुः ।**

அன்னம் ம்ருத்யுதமு ஜீவாதுமாஹு: ।

அன்னத்தை மிருத்தியுவென்றும் பிழைத்திருக்கக் காரணமென்றும் சொல்லுகிறுர்கள் என்கிற சுருதியில் சொன்னபடி ஜீர்ணமாகாதகாலத்தில் விபரீத பரிணாமத்துக்கு ஹேதுவாயிருப்பதால் அன்னமே பிராணிகளை புஜிக்கிறதென்று அறியவும்.

(14) இந்தப்படி ஆகாசம் முதலாக அன்னமயமான ஸ்தூல சரீரம் வரையிலுமுள்ள பிரபஞ்சத்துக்கு மந்திரத்திலும் பிராமணத்திலும் சொல்லப்பட்ட பிரம்மம் உபாதானமாகவும் आत्मन:आकाश

---

து:—(13) भूतानि பூ₄தாநி= பிராணிகளால்

अद्यते அத்₃யதே=பக்ஷிக்கப்படுகிருன். அதாவது அவருடைய யோகத்தால் பிராணிகள் ஜீவிக்கிறுர்கள்

अत्ति அத்தி=பரமாத்மா பிராணிகளை பக்ஷிக்கிறுர். அதாவது சம்ஹாரிக்கிறுர். இந்த சம்ஹாரமானது சிலந்திப் பூச்சியானது நூலைதனக்குள் இழுத்துக்கொள்வதற்குச் சமானமாயிருப்பதால் அத்தி என்று சொல்லப்பட்டது.

(14) तस्मात् தஸ்மாத்=பக்ஷிக்கப்படுவதாயும், பக்ஷிக்கிரதாயுமிருப்பதால்

तत् தத்=அந்த ரூபம்

அ:—வி-வி:—ஜீவிக்கிறதற்காகச் சகல பிராணிகளும் அன்னத்தைப் புஜிக்கிறார்கள். சகல பிராணிகளையும் அன்னம் சம்ஹரிக்கிறது. சாப்பிடப்பட்ட பதார்த்தங்கள் ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பதால் சரீரத்தில் ரோகம் உண்டாகி ஜனங்கள் சாகிறார்கள் என்பது ஜகத்பிரசித்தம்.

இதி சப்தம், உதாகரிக்கப்பட்ட சுலோகம் முடிந்தது என்பதையும், கோசம் முடிந்தது என்பதையும் சூசிப்பிக்கிறது.

## அன்னமய கோச ஞானத்தால் பிரம்ம ஞானம்.

எவன் குஹையில் மறைந்திருக்கிற பிரம்மதத்துவத்தை அறிய இச்சிக்கிறானோ, அவனை உத்தேசித்து, பிரம்மத்தை அறிவதற்குத் துவாரமாகிற அன்னமயகோசம் கூறப்பட்டது. எப்படி துவாரமெனின் புத்திர, மித்திர, களத்திர, கிரஹ, பூமி முதலிய பாஹ்ய விஷயங்களில் ஆசக்தியை நிவிர்த்தி செய்து, தேஹமே ஆத்மா என்கிற புத்தியை மட்டும் கொடுப்பதினால் அன்னமய கோசம் பிரம்மத்தை அறிய துவாரமாகிறது. சாதாரணமாய் ஒவ்வொருவனும் புத்திராதிகளே தான் என்பதாய் வியவஹரிக்கிறான். தன்னைவிட வேறான புத்திராதிகளில் தான் என்பதை உபயோகிப்பது தேவதத்தன் சிங்கம் என்பது போலும். புத்திராதிகளான பாஹ்யங்களே ஆத்மா என்கிற புத்தியை நீக்கி சரீரமே தான் என்பதாய் மட்டும் ஒருவன் அறியவேண்டிய நிமித்தியம் அன்னமய கோசம் நிலாகிக்கப்பட்டது. இது இனி விவரிக்கப்படும். பாஹ்ய விஷயங்களிலுள்ள ஆசக்தியின் வாசனை பலத்தால் அன்னமய ஆத்மாவை ஒரு உபதேசத்தால் எவன்தெரிந்துகொள்ளவில்லையோ அவன் அதில் ஸ்திரபுத்தியை அடையும் பொருட்டு, அதின் உபாசனை உபதேசிக்கப்படுகிறது. எவன் அன்னமய ஆத்மா நிரந்தரமாக உபாசிக்கிறானோ அவன் பாஹ்ய விஷயங்களினின்றும் திரும்பி, அன்னமயத்திலேயே ஸ்திரபுத்தியை அடைகிறான். அல்பாயுசாக இருந்து மேல் கோசங்களை விசாரிக்காமல் இறந்துபோய்

---

வி:- ஸூத்ர நஃ ஸூக்ஷ்ம:=என்கிற இடத்தில் ஆத்ம சப்தமிருப்பதால் அந்தர்யாமியாகவும் இருக்கிறதென்று சொன்னதாக ஆய்விட்டது.

---

அ:—अन्नं அன்னம்=அன்னம்

इति இதி=என்று

उच्यते உச்யதே=சொல்லப்படுகிறது.

इति இதி=இந்த சப்தம் एषश्लोकः ஏஷச்லோக:=என்பதுடன் அன்வயிக்கிறது.

அ:—விட்டானேயானால், அவன் சர்வான்னத்தையும் முன் சொன்னபடி அடைகிறான். இந்த கருத்தை மனதில் வைத்துக்கொண்டே பகவான் ஸ்ரீகிருஷ்ணன் பகவத்கீதை VI—41 ல்

**प्राप्यपुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीःसमाः ।**
**शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टो ऽभिजायते ॥**

ப்ராப்யபுண்யக்ருதாம் லோகாநுஷித்வா ஶாஶ்வதீ: ஸமா:।
ஶுசீநாம்ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோ ऽபிஜாயதே ॥

அதாவது:—புண்ணிய புருஷர்களுடைய லோகங்களை அடைந்து வெகுகாலம் அங்கிருந்து, சுசியாயும் ஸ்ரீமானாயுமிருக்கிறவனுடைய வீட்டில் யோகப்பிரஷ்டன் பிறக்கிறான் என்பதாய் சொல்லியிருக்கிறார்.

இவ்விதமாக பாஹிய விஷயங்களினின்றும் புத்தியை திருப்பும் பொருட்டு சுருதியானது முதலில் அன்னமய கோசத்தை உபதேசித்தது. பிரசங்கத்தில் அதின் உபாசனையும் பலனும் கூறப்பட்டன. இனி, விஷயங்களினின்றும் திரும்பினவன், அன்னமய கோசத்துக் குள்ளிருக்கும் பிராணமய கோசத்தில் பிரவேசிக்கும் பொருட்டு சுருதியானது பிராணமய கோசத்தை உபதேசிக்கிறது.

## பிராணமயகோசம்.

(15) तस्माद्वा एतस्मादन्न रसमयात् । தஸ்மாத்வா ஏதஸ்மாதந்ந ரஸமயாத் ।

(16) अन्योऽन्तर आत्मा प्राणमयः । அந்யோऽந்தர ஆத்மா ப்ராணமய: ।

(17) तेनैषपूर्णः ॥ 2 ॥ தேநைஷ பூர்ண: ॥ 2 ॥

பதவுரை:—

(15) तस्मात् वै एतस्मात् தஸ்மாத்வை ஏதஸ்மாத்=இப்படி முன் சொல்லப்பட்டது.

अन्नरसमयात् அந்நரஸமயாத்=அன்னரஸ விகாரமான பிண்டத்தைவிட

(16) अन्यः அந்ய:=வேறானது

अन्तरः அந்தர:=உள்ளே யிருக்கிற

प्राणमयः ப்ராணமய:=பிராண விகாரமான

आत्मा ஆத்மா=ஆத்மா

(17) तेन தேந=இந்த பிராணமய ஆத்மாவால்

एषः ஏஷ:=இந்த அன்னமயம்

पूर्णः பூர்ண:=நிறைந்திருக்கிறது.

(15) ச—பா:—அவதாரிகை:—கோத்திரவ தானியத்தின் மேல் தோல்களை எடுத்து விடுவதினால் உள்ளே யிருக்கிற அரிசியை எப்படி ஒருவன் பிரத்தியக்ஷமாய் காட்டுகிறானோ, அப்படி சுருதி யானது வித்தையால் அதாவது அவித்தையால் ஏற்பட்ட ஐந்து கோசங்களை நிவிர்த்தி செய்வதினால், அன்னம் முதல் ஆநந்த மயம் வரையிலுள்ள ஆத்மாக்களுக்குள் இருக்கிற பிரம்மத்தை பிரத்திய காத்மாவாக உபதேசிக்கும் பொருட்டு இனி கிரந்தத்தை ஆரம் பிக்கிறது.

முன் சொன்ன பிரகாரம் அன்ன ரஸத்தால் ஏற்பட்ட ஸ்தூல சரீரத்தை விட வேறானதாயும், பிராணனால் ஏற்பட்டும், ஒரு ஆத்மா அன்னமயத்துக்குள் இருக்கிறது. ஸ்தூலபிண்டம் எப்படி ஆத்மாவாக மித்தையாக பாவிக்கப்பட்டதோ அப்படி இதுவும் மித்தையாகவே ஆத்மாவாக பாவிக்கப்படுகின்றது. பிராணன் என்றால் வாயு; அதனால் உண்டானவன் பிராணமயன். இந்தபிராணமய ஆத்மாவால் அன்ன ரஸமய ஆத்மா நிறைந்திருக்கிறது. காற்றினால் துருத்தியானது நிறைந்திருப்பதுபோலும்.

---

### பிராணமய.

வி:—(15) இவ்விதமாக ஆகாசாதிகளுக்கு பிரம்மமே ஆத்மாவென்றும்உபாதானமென்றும் சொல்லி அந்த ஆத்மாயாரெனின் ஆநந்தமயனே என்று காட்டும்பொருட்டு ஸ்தூலாருந்ததி நியாயப்படிஸ்தூல தேகத்துக் குள்ளிருக்கிற பிராணமயனை ஆத்மாவென்று சுருதி காட்டுகிறது.

---

### 6. பிராணமயபிரகரணம்.

து:—அ-கை:—சத்தியம் ஞானம் என்கிற லக்ஷணவாக்கியத்திலுள்ள சத்திய பதத்தினால் (1) ஜகத்தை சிருஷ்டிக்கும் தன்மை (2) ஜகத்தை ஜீவிக்கும்படிச் செய்யும் தன்மை, (3) ஜகத்தைப் பிரவிர்த்திக்கும்படிச் செய்யும் தன்மை (4) சம்ஹரிக்கும் தன்மை ஆகிய நான்கு அர்த்தங்களை சொல்லவந்ததில் (1)(2)(3) ஆகிய மூன்றும் ஆகாசத்தினின்றும் உற்பத்திபிரகரணத்திலும் அன்னமய பிரகரணத்திலும் விவரிக்கப்பட்டன. ஜகத்தை பிரவிர்த்திக்கும்படி செய்யும் தன்மையையும் ஜகத்தை ஜீவிக்கும்படிச்செய்யும் தன்மையையும் முன் சொல்லப்பட்டிருந்தாலும் அதையும் ஸ்பஷ்டமய்விவரிக்கும் பொருட்டு தேகத்திலிருக்கிறபிரதியும்ன என்கிற ரூபத்தையும் பிரதிபாதிக்வேண்டியதற்காக இந்த பிரகரணம் ஆரம்பிக்கப்படுகின்றது,

அ:—(சு வா:—

तस्मात् தஸ்மாத்=இந்த சப்தம் தூரத்திலிருக்கிற விராட்டை கூறுகிறது. அதாவது அன்னத்தால் ஏற்பட்ட ஆத்தியாத்மிக ஜீவனைவிட ஸ்தூலபிருகிருதியானது வேறு.

वै வை=இந்த சப்தம் சொன்ன விராட்டையே ஞாபகப் படுத்துகிறது.

एतस्मात् ஏதஸ்மாத்=இந்த சப்தம் சமீபத்திலிருக்கிற அத்தியாத்ம தேகத்தைக் கூறுகிறது.

तस्मात् एतस्मात् தஸ்மாத்ஏதஸ்மாத்=இவ்விரண்டு பதங்களையும் ஒரே வேற்றுமையில் உபயோகித்ததினுல் அத்தியாத்ம புருஷனும் விராட்டும் ஒன்று என்பதை சுருதி போதிக்கிறது. இது போலவே பின் வரும் வாக்கியங்களிலும் பிராணமயாதி விகாரங்கள் பிராணுதி விகாரங்களைவிட வேறல்லவென்பதைத் தெரிந்து கொள்ள வேண்டியது. அப்படியில்லாவிடின் அதாவது காரியம் காரணத்துடன் ஒன்முக இராவிட்டால் பிரம்மமும் பிரபஞ்சமும் வெவ்வேறா யிருக்கவேண்டும். அப்போது சாங்கியருடைய துவைதமே ஏற்பட்டு சுருதியுக்தி விரோதங்கள் சம்பவிக்கும். மேலும் காரணமான பிராணமயம் காரியமான அன்னமய மன்றியி லிருக்கக்கூடும். ஆனால் காரியம் காரணத்தைவிட்டு விலகியிருக்க மாட்டாது. ஆகையாலும் காரியம் காரணத்தைவிட வேறு அன்று காரணம்தான் என்பது சித்திக்கிறது.

---

து:—(15)तस्मात् தஸ்மாத்=சத்தியத்தால் கூறப்பட்டிருக்கிற

एतस्मात् ஏதஸ்மாத்=முந்தின இரண்டு பிரகரணங்களால் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிற

अन्नरसमयात् அன்னரஸமயாத்=அன்ன விகாரமான தேகத்தில் அதை நியமனம் செய்துகொண்டிருக்கிற, அன்னரஸமய என்று பெயருள்ள அநிருத்தனைவிட்டு வேறு

அ.—अन्योऽन्तरआत्मा அந்யோऽந்தர ஆத்மா:—பிராணமய கோசம் அன்னமயத்தைவிட வேறு லக்ஷணமுள்ளது. எப்படி அன்னமயம் ஆத்மாவாக பாவிக்கப் படுகிறதோ அப்படி இதுவும் ஆத்மாவாக பாவிக்கப் படுகின்றது.

அன்னமயம் எப்படி நான்கு கோசங்களால் வியாபிக்கப்பட்டிருக்கிறதோ அப்படி பிராணமயம் 3 கோசங்களாலும் மனோமயம் இரண்டு கோசங்களாலும். விஞ்ஞானமயம் ஒரு கோசத்தாலும் வியாபிக்கப்பட்டிருக்கின்றன.

तेनएषपूर्णः தேநைஷ பூர்ண:=பாம்பானது இரச்சுவால் பூரிக்கப்பட்டிருப்பதுபோல் இந்த பிராணமயத்தால் அன்னமயமானது பூர்ணமாயிருக்கிறது. அன்னமயம் கற்பனா ரூபகாரியமே; வார்த்தை மட்டுமே.)

(வி-வி:—

பரமாத்மாவே ஆகாசாதிக்கிரமமாக அன்னமயமானார் என்று. பிராமண வாக்கியத்திற் சொல்லப்பட்டதே சுலோகத்தாலும் வியக்தமாக்கப்பட்டது.

---

வி:—अन्यः அந்ய:=தேகத்தைவிட வேறாகவும்

अन्तरः அந்தர:=தேகத்துக்குள்ளிருக்கிறவனாகவும் இருக்கிற

प्राण मयः ப்ராணமய:=பிராணமயன்

स एव ஸ ஏவ=அவனே

आत्मा ஆத்மா=ஆத்மன: ஆகாச: ஸம்பூத: என்கிற வாக்கியத்தால் சகலத்துக்கும் உபாதானமாகவும் அந்தர்யாமியாகவும் சொல்லப்பட்ட ஆத்மா என்று அர்த்தம்.

---

து:—अन्यः அந்ய:=வேறான

अन्तरस्थः அந்தரஸ்த:=அதினிடத்திலிருக்கிற

आत्मा ஆத்மா=வியாபகன்

प्राणमयः ப்ராணமய:=வாயுவிகாரமானபிராணமய கோசத்திலிருக்கிறவன் (பிராணந்தி—அநேந) என்கிற வித்பத்தியால் பிராணமய சப்தத்தால் கூறப்படும் பிரத்யும்ன என்கிறபெயருள்ள பரமாத்மா இருக்கிறார் என்பது கருத்து.

तेन தேந=பிராணமயகோசத்திலிருக்கிற பிரத்யும்னனால்

एषः ஏஷ:=அன்னமயகோசத்திலிருக்கிற அன்னரஸமயன் என்கிற அநிருத்தன்

पूर्णः பூர்ண:=இடைவழியன்றியில் பூரிக்கப்பட்டிருக்கிறான்

அ:—तस्मात् தஸ்மாத்=பிராமணத்தில் சொன்னதை விடவும் एतस्मात् ஏதஸ்மாத்=சுலோகத்தில் சொன்னதை விடவும், நான் மனுஷ்யன்என்கிற அனுபவத்தை விடவும்வேருக உள்ளே பிராண மய என்கிற ஆத்மா இருக்கிருன்.

தேகத்துக்குள் சிரசுமுதல் பாதம் வரையில் பிராணமயன் வியாபித்திருக்கிருன்.

லிங்க சரீரத்தில் ஞானசக்தி என்றும் கிரியாசக்தி என்றும் இரண்டு சக்திகள் இருக்கின்றன. கிரியாசக்தியின் காரியம் தான் பிராணன் என்று பெயருள்ள பதார்த்தம். இந்த பிராணனுடைய விகாரம் பிராணமய கோசமென்கிற ஐந்து விருத்திகளின் சமூ கம். இந்த விருத்திகள் பிராண அபான வியான உதான சமானங்க ளாம். இவைகள் பிராண பதார்த்தத்தின் வியாபார விசேஷங்கள். இவைகள் முறையே ஹிருதயத்திலும், குதத்திலும், சர்வ சரீரத் திலும், கண்டத்திலும், நாபியிலும் இருக்கின்றன. இந்த விருத்தி சமூகமான பிராணமயம் ஆத்மாவினிடத்தில் ஆரோபிக்கப்பட்டி ருக்கிறது. நான் சுவாசம் விடுகிறேன் என்பதாக ஒருவன் சொல் லுகிருன். இந்த சுவாசம் விடும் கிரியை ஆத்மாவில் ஆரோபிக்கப் பட்டிருக்கிறது. ஆகையால் பிராணமயமே ஆத்மா என்கிற பிரா ந்தி பிரயோகம் ஏற்பட்டது. புத்திரன் முதலான பாஹ்ய விஷயங் களை அபேக்ஷித்து சமீபத்திலிருக்கிற அன்னமய தேகமே ஆத்மா என்று உபதேசித்தவுடன் எப்படி அவைகளில் முக்கிய ஆத்ம புத்தி விட்டுப் போகிறதோ, அப்படி தேகத்துக்குள் இருக்கிற

---

பாஷ்யகாரர் अन्वयादितिचेत्स्यादवधारणात् அந்வயாதிதிசேத்ஸ்யாதவ தாரணாத்=என்கிற (III-3:17) சூத்திரத்தில் அன்னமயனை விட ஆந்தரமான பிராணமயனிடத்தில் முதலில் பரமாத்மபுத்தி யானது உண்டாயிற்று. பிறகு மனோமயனிடத்திலும் கடைசியில் ஆநந்தமயத்தினிடத்திலும் பரமாத்மபுத்தியானது உண்டாயிற்று என்று சொல்லியிருக்கிருர்.

இவ்விடத்தில் பஞ்சவிருத்திகளையுடைய பிராணனுக்கு பிரா ணன்வியாபாரம் அதிகமாக இருப்பதால் பிராணமயத்வம் இருக் கிறதென்று அறியவும்.

(17) तेन தேந=பிராணமய ஆத்மாவினல்

एषः ஏஷ:=அன்னரஸமய ஆத்மாவானவன்

पूर्णः பூர்ண:=வியாபிக்கப்பட்டவன் சகலதேகத்திலும்பிரா ணன் வியாபித்திருக்கிருன் என்பது கருத்து.

அ:—பிராணமய ஆத்மாவை உபதேசித்தவுடன் தேகமே ஆத்மா என்கிற புத்தி விட்டுப்போகிறது. இந்த பிராணமயத்தை உபதேசிப்பதால் தேகமே ஆத்மாஎன்கிற புத்தி மித்தை என்பது சித்தித்தது. இது பிரம்ம சூத்திரத்தின் 3-வது அத்தியாயத்தின் 3-வது பாதத்தில் 53-வது சூத்திரத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஸ்தூல சரீரத்தில் அநாத்மாவாயிருக்கிற பிராணன் உற்பத்தியுடையவனென்பது வேதாந்த சூத்திரம் II-4-8 ல் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. பிராணன் என்பது ஒரு தத்துவம் இது II-4-(9-12) ல் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. பிராணன் அல்ப பரிமாணமுள்ளவன் என்பது II-4-13ல் விவரிக்கப்பட்டிருக்கிறது. விஸ்தார பயத்தால் இவ்விடத்தில் எழுதவில்லை. வேண்டுமானால் வியாசாதி கரணமாலையில் சுருக்கத்தைப் பார்த்துக்கொள்ளலாம்.)

## பிராணமயத்தின் உபாசனை.

வி-வி:—அவதாரிகை:—

தேகமே ஆத்மா என்கிற பிராந்தியானது அனேக ஜன்மங்களில் தொடர்ந்து வந்து பிரபலமாயிருக்கிறது. பிராணமயத்தை உபதேசித்த மாத்திரத்தில் அந்த பிராந்தி புத்தி போய்விடமாட்டாது. ஆகையால் இப்படிப்பட்ட புத்தியுள்ளவனை உத்தேசித்து, வேறு உபாசனையை வாதிக்கும் பொருட்டு உபாசிய ஸ்வரூபத்தை சுருதி கூறுகிறது.

II (18) स वा एष पुरुषविध एव । ஸ வா ஏஷ புருஷவித ஏவ ।

(19) तस्य पुरुष विधताम् । தஸ்ய புருஷவிததாம் ।

(20) अन्वयं पुरुषविधः । அந்வயம் புருஷவிதः ।

(21) तस्य प्राण एव शिरः । தஸ்ய ப்ராண ஏவ ஶிரः ।

(22) व्यानो दक्षिणः पक्षः । வ்யானோ தக்ஷிணः பக்ஷः ।

(23) अपानउत्तरःपक्षः । அபான உத்தரः பக்ஷः ।

(24) आकाश आत्मा । ஆகாஶ ஆத்மா ।

(25) पृथिवी पुच्छं प्रतिष्ठा ॥3॥ ப்ருதிவீ புச்சம் ப்ரதிஷ்டா ॥3॥

பதவுரை:—

அ:—(18) सः ஸ:= அந்த

वै வை=நிச்சயம்

एषः ஏஷ:= இந்த (பிராணமய ரூப ஆத்மா)

पुरुषविधः एव புருஷவிதஏவ=புருஷாகாரமே.

(19) तस्य தஸ்ய= அந்த அன்னமயத்தின்

पुरुषविधतां புருஷவிததாம்=புருஷாகாரத்தை

(20) अनु அநு=அனுசரித்து

अयं அயம்= இவன்

पुरुषविधः புருஷவித:=புருஷாகாரமாயிருக்கிறான்.

(21) तस्य தஸ்ய=அவனுக்கு

प्राणः एव ப்ராண: ஏவ=பிராணனே

शिरः ஶிர:=தலை

(22) व्यानः வ்யாந:=வியானன்

दक्षिणः पक्षः தக்ஷிண:பக்ஷ: = வலதுகை

(23) अपानः அபாந:=அபானன்

उत्तरः पक्षः உத்தர:பக்ஷ:=இடதுகை

(24) आकाशः ஆகாஶ:=ஆகாசம்

आत्मा ஆத்மா =ஆத்மா

(25) पृथिवी ப்ருதிவீ=பிருதிவீ

पुच्छं புச்சம்=வால்

प्रतिष्ठा ப்ரதிஷ்டா = ஆதாரம்.

(18-20) सः ... पुरुषविधः ஸ:...புருஷவித:—

ச-பா—இந்த பிராணமய ஆத்மா சிரசு முதலியவைகளால் புருஷாகாரமாகவே யிருக்கிறான். தான் ஸ்வயமே அப்படி யிருக்கிறானோ வெனின், இல்லை என்று சுருதி சொல்லுகிறது. அன்னரஸத்தால் உண்டான ஆத்மா புருஷாகாரமென்பது பிரசித்தம். இந்த அன்னரஸமய ஆத்மாவின் புருஷாகாரத்தை அனுஸரித்து

வி:—(18) இந்த பிராணமயனும் புருஷாகிருதியே, கைகால்முதலிய அவயவங்களுடன் கூடியிருப்பதால் இந்தப் பிராணமயனும் புருஷாகிருதியாக இருக்கிறான் பிராந்தியை விருதி பிந்தினவாக்கியத்தால் நிராகரிக்கிறது.

(19) तस्य தஸ்ய=அன்னமயனுடைய

पुरुषविधतां புருஷவிததாம்= புருஷாகிருதியை

து:—सः एषः ஸஏஷ:=பிராணமய கோசத்திலிருக்கிற பிராணமயன் என்று பெயருள்ள பிரத்யுமனன்

पुरुष विधः एव புருஷவிதஏவ=புருஷாகிருதியே

वै வை=பிரசித்தம்

तस्य தஸ்ய= பிராணமயனென்கிற பிரத்யுமனனுடைய

पुरुष विधतांअनु புருஷவிததாம் அநு-புருஷாகாரத்தை அனுசரித்து

அ:—பிராணமய புருஷாகாரம் கருவில் வார்த்து விடப்பட்ட தாம்பிரம் அந்த ஆகாரத்தையே அடைவதுபோல், ஏற்படுகின்றது. ஸ்வத: அதற்கு ஒரு ஆகாரமுமில்லை. இப்படியே கீழ் கீழ் இருக்கும் ஆத்மாவின் புருஷாகாரத்தை அனுசரித்து மேல் மேல்வரும் ஆத்மாவின் புருஷாகாரம் ஏற்படுகின்றது. முன்னுலிருப்பது பின்னுலிருப்பதால் பூர்ணமாயிருக்கிறது.

வி-வி:—தேகத்துக்குள் இருக்கிறதாகச் சொல்லப்பட்டவனும் நான் சுவாசம் விடுகிறேன் என்கிற அனுபவத்தால் நம்மால் அறியப்பட்டவனுமிருக்கிற பிராணமயம் புருஷாகாரமே. சிரசு முதலிய அவையவங்கள் இவனுக்கு ஸ்வத: ஏற்பட்டிராவிடினும் அவைகளைக் கற்பித்து, புருஷாகாரனையே உபாசிக்கவேண்டியது. இது முடியாது என்றும் சங்கிக்க வேண்டியதில்லை. அன்னமய புருஷாகாரத்தை அனுஸரித்து, அதில் பூரித்திருப்பதால், இந்த பிராணமயனும் புருஷாகாரமென்று சொல்லலாம். கருவில் விடப்பட்ட தாம்பிரம் பிரதிமையின் ஆகாரத்தை அடைவது போலும்.)

21तस्य:शिर:... தஸ்ய...ஶிர:

ச-பா:—எப்படி பிராணமயன் புருஷாகாரமானவன்? வாயு விகாரனானவனுக்கு முகம், மூக்கு இவைகளினின்றும் வெளிப்படும். பிராணனுடைய விருத்தி விசேஷமே சிரசு என்பதாய் கற்பிக்கப்படுகிறது. இதற்குச் சுருதிதான் ஆதாரம். இரக்கை முதலியவைகளுக்கும் சுருதிதான் ஆதாரம்.

---

வி:—(20) अनु அநு=அனுசரித்து

अयंपुरुषविध: அயம் புருஷவித:=(21–23) இந்த பிராணமயனும் புருஷாகிருதி என்று அர்த்தம். ஆகையால் அன்னமயம்போல் சிரசு, பக்ஷம், புச்சம் முதலிய அவயவங்களுடன் கூடி இருப்பதால் பிராணமயனும் அஞ்சுவிதமாக இருக்கிறுன் என்று அர்த்தம்

(4) आकाशआत्मा ஆகாஶஆத்மா:—

**यथाकाशस्थितोनित्यं वायुस्सर्वत्रगोमहान् ।**

யதாகாஶஸ்திதோ நித்யம் வாயுஸ்ஸர்வத்ரகோ மஹாந்।

---

து:—अयं அயம்=அன்னமய கோசத்திலிருக்கிற அன்னமயனென்று பெயருள்ள அபிருத்தன்

पुरुषविध: புருஷவித:=புருஷாகிருதியாயிருக்கிறுன்.

அ-கை:—பிராணமய சப்தத்தால் கூறப்பட்ட பிரத்யும்னனுடைய அவயவங்களின் ஸ்தானங்களை तस्यप्राणएवशिर: தஸ்ய ப்ராண ஏவ ஶிர:=என்பதினுல் சொல்லுகிறுர்.

அ:—(22) வியான விருத்தி வலதுகை
(23) அபான விருத்தி இடதுகை.

பிராணவிருத்திகளைப்பற்றிச்சொல்லிய இடத்தில் ஆகாச சப்தம்பிர யோகிக்கப்பட்டிருப்பதால்: அது ஆகாசத்திலிருக்கிறஅதாவது சரீர மத்தியிலிருக்கிற சமானன் என்கிற விருத்திவிசேஷத்தைக் கூறுகிறது. இதர விருத்திகளை அபேக்ஷித்து இது மத்தியிலிருப்பதால். சமானன் ஆத்மாவாக இருக்கிறது. மத்தியபாகம் ஆத்மாவென்பது मध्यं ह्येषामङ्गानामात्मा மத்⁴யம் ஹ்யேஷாமங்கா³நாமாத்மா (அங்கங்களின் மத்தியபாகம் ஆத்மா) என்கிற சுருதியால் தெரியவருகிறது. பிருதிவீ என்பது பிருதிவீதேவதை ஆத்தியாத்மிக (சரீரத்திலிருக்கிற) பிராணனை தரிப்பது; ஏனெனின், பிராணனுடைய ஸ்திதிக்கு அதுவேகாரணம்.

सैषा पुरुषस्यापानमवष्टभ्येति हि

ஸைஷா புருஷஸ்யாபாநமவஷ்டப்⁴யேதி ஹி ।
என்று சுருதியிற் சொல்லியிருக்கிறது.

இந்த ஆதாரம் இல்லாவிடின் உதான விருத்தியால் தேகம் மேல் கிளம்பிவிடும்; அல்லது பளுவாயிருப்பதால் கீழ் விழுந்துவிடும். ஆகையால் பிராணமய் ஆத்மாவுக்கு பிருதிவீதேவதைவால், ஆதாரம் என்று சொல்லப்பட்டது.

வி:—அதாவது:—எப்படி ஆகாசத்தில் வாயுவானவன் எப்போதுமிருந்துகொண்டு எங்கும் சஞ்சரிக்கிறானோ என்கிற ஸ்மிருதிப்படி ஆகாசமானது வாயுவிகாரமான பிராணாபானன் முதலியவைகளை தரித்துக் கொண்டிருப்பதால் ஆத்மா இருக்கிறது.

(25) பூமியில் ஆகாசமிருப்பதால் அந்தபூமி புச்சமா இருக்கிறது.

---

து:—तस्य தஸ்ய=பிராணமய சப்தத்தால் கூறப்படும் பிரத்யும்னனுடைய

प्राण एव शिरः ப்ராண ஏவ ஶிர:=பிராணனே, அதாவது பிரேரணை செய்கிற, பிராணன் என்று பெயருள்ள இவனே

शिरः =சிரசு

व्यानः வ்யாந: (விசேஷேணா அநிதீதி) விசேஷமாய் கொண்டு போகிறவியானனிடமிருக்கிற வியானன் என்றுபெயருள்ளஇவனே

दक्षिणः पक्षः த³க்ஷிண: பக்ஷ:=வலதுகை

अपानः அபாந:= (அபாநீதி இதி அபாந) கீழ்முகமாய் பிரேரணை செய்கிற அபானனிடமிருக்கிற, அபானன் என்று பெயருள்ள இவன்

வி-வியாக்கியானம்

(21) ஹிருதயத்துக்கு மேல்முகம் மூக்கு இவைகளில் சஞ்சரிக்கிற பிராணன் என்கிற விருத்திவிசேஷம் சிரசாக சிந்திக்கத்தக்கது.

(22) சகல நாடிகளிலும் சஞ்சரிக்கிற வியானன் என்கிற விருத்தி விசேஷம்.

(23) ஹிருதயத்தினின்றும் கீழ்நோக்கும் அபானன் என்கிற விருத்தி விசேஷம்

இவ்விரண்டும் இரண்டு இரக்கைகளாக சிந்திக்கத்தக்கவை.

(24) ஆகாசசப்தம் உதரத்துக்குமத்தியிலிருக்கிறதாயும்நாபிக்கு சமீபத்தி லிருக்கிறதாயு மிருக்கிற தேசவிசேஷத்தைக் கூறுகின்றது. அதினால் அவ்விடத்திலிருக்கிற சமானன் என்கிற வாயு உபலக்ஷிதமாகிறது. இந்த வாயு பிராணமய கோசத்தின் மத்திய பாகம்

(25) பிருதிவீசப்தத்தால் பாக்கியாயிருக்கிற உதானவாயு கூறப்படுகின்றது. முக்கியார்த்தத்தைக் கிரகிப்பதில் பிரகிருதம் விட்டுப்போகிறது. எப்படி பிருதிவீயானது பிராணிகள் இருக்கிறதற்குக் காரணமாயிருப்பதால் பிரதிஷ்டை (ஸ்திரமான ஆதாரம்) இருக்கிறதோ, அப்படி உதானவாயுவும் பிராணுதி வாயுக்கள் தேகத்திலிருப்பதற்குக் காரணம். எது வரையில் இந்த உதானவாயு வெளியே போகவில்லையோ, அதுவரையில் பிராணுபாணுதிகள்

---

து:—उत्तरः पक्ष உத்தரஃபக்ஷஃ=இடதுகை

आकाशपृथिवी ஆகாஶப்ருதிவீ=சப்தங்களால் உதானசமானங்களை கிரகிக்கவேண்டியது.

आकाशः ஆகாஶஃ=உதானத்திலிருக்கிற உதானனென்று பெயருள்ள இவன்

आत्मा ஆத்மா=பிராணமயன் என்கிற பிரத்யும்னனுடையதேக மத்தியபாகம்

पृथिवी ப்ருதிவீ =சமானனிடமிருக்கிற சமானன் என்று பெயருள்ள

प्रतिष्ठा ப்ரதிஷ்டா=நிமிர்ந்துநிற்கக்காரணமான

पुच्छं புச்சம்=உள்ளிருக்கும் பிரத்யும்னனுடைய இரண்டு பாதங்கள்.

பிராணமயகோசம், பிராணுதிகள், பிரத்யும்னனுடைய ஆதினம் என்பது கருத்து.

அ:—தேகத்திலிருக்கின்றன. ஆகையால் அது பிரதிஷ்டை. பக்ஷிரூபமாய் தியானிக்கப்படும் பிராணமய கோசத்துக்கு உதானன் வால் ஸ்தானத்திலிருக்கிறது. இந்த விஷயம் மைத்திரேயோபநிஷத்தில் ஸ்பஷ்டமாய் சொல்லி யிருக்கிறது.

(26) तदप्येषश्लोको भवति ||4|| தத³ப்யேஷ ஶ்லோகோ ப⁴வதி ||4||

इति द्वितीयोऽनुवाकः।

இதி த்³விதீயோ(அ)நுவாக꞉

பதவுரை:—

तदपि தத³பி=அந்த அர்த்தத்திலேயே
एषः ஏஷ꞉=இந்த
श्लोकः ஶ்லோக꞉=சுலோகம்
भवति ப⁴வதி=இருக்கிறது.

ச—பா:—பிராணமய ஆத்மா விஷயத்தில் அடியில் வரும் சுலோக மிருக்கிறது.

(வி-வி.—முன் சொன்ன அன்னமயத்திற்குப்போல் பிராணமய விஷயத்திலும் சுருதியானது சுலோகத்தை உதாஹரிக்கிறது.

இரண்டாவது அனுவாகம் (கண்டம்) முற்றிற்று.

(சு-வா பிராணமய கோசத்தின் பிராணன் முகத்திலிருக்கிறான் என்கிற மேன்மையைக் கொண்டு சிரசாகச் சொல்லப்படுகிற வியானன் சர்வ சரீரத்தையும் வியாபிக்கிறபடியால் பலிஷ்டன் ஆகையால் அது வலதுகையாக வர்ணிக்கப்பட்டது. அவ்வளவு பலசாலியாக இராதபடியால் அபானன் இடதுகையாகக்கூறப்பட்டது. ஆகாசம்போல் சமானன் எங்கும்வியாபிக்கிறதினால் அது ஆகாசம் அது பிராணவிருத்திகளுக்கு ஆத்மா. ஏனெனின் சகல பிராணன்களும் இதிலிருக்கின்றன.)

---

## 7 - (சுலோகம்)

அ:—तत्अपि தத்³அபி=ஜகத்தைப் பிரவிர்த்திக்கும்படி செய்கிற, சம்ரக்ஷிக்கிற காரணமான பிராணமய கோசத்திலிருக்கிறவன் பிரத்யும்னன் என்கிற அர்த்தத்தைக் கூறுகிற விஷயத்தில்

एषःश्लोकःभवति ஏஷ꞉ஶ்லோக꞉ப⁴வதி= இந்த சுலோகமிருக்கிறது.

## 3-வது அனுவாகம்.

(1) प्राणं देवा अनुप्राणन्ति । ப்ராணம் தேவா அநுப்ராணந்தி

(2) मनुष्याः पशवश्च ये । மநுஷ்யா꞉ பஶவஶ்ச யே ।

(3) प्राणो हि भूतानामायुः । ப்ராணோ ஹி பூதாநாமாயு꞉ ।

(4) तस्मात्सर्वायुषमुच्यते । தஸ்மாத்ஸர்வாயுஷமுச்யதே ।

(5) सर्वमेव त आयुर्यन्ति । ஸர்வமேவ த ஆயுர்யந்தி ।

(6) ये प्राणं ब्रह्मोपासते । யே ப்ராணம் ப்ரஹ்மோபாஸதே ।

(7) प्राणो हि भूतानामायुः । ப்ராணோ ஹி பூதாநாமாயு꞉ ।

(8) तस्मात्सर्वायुषमुच्यत इति ॥ 1 ॥ தஸ்மாத்ஸர்வாயுஷமுச்யத இதி ॥ 1 ॥

பதவுரை:—

(1) देवाः தேவா꞉=தேவதைகளும்
(2) मनुष्याः மநுஷ்யா꞉=மனுஷியர்களும்
पशवः च பஶவஶ்ச=மிருகங்களும்
ये யே=எவர்களோ
(ते தே=அவர்கள்)
(1) प्राणं अनु ப்ராணம் அநு=பிராணனை அனுசரித்து
प्राणन्ति ப்ராணந்தி=ஜீவிக்கிறார்கள்
(2) प्राणः ப்ராண꞉=பிராணன்
भूतानां பூதாநாம்=பிராணிகள்
आयुः ஆயு꞉=ஆயுஸ்
हि ஹி=நிச்சயம்.
(4) तस्मात् தஸ்மாத்=ஆகையால்
सर्वायुषं ஸர்வாயுஷம்=சகலத்துக்கும்ஆயுஸாக
उच्यते உச்யதே=சொல்லப்படுகின்றது.
(5) ये யே=எவர்கள்
प्राणं ப்ராணம்=பிராணனை
ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மமாக
उपासते உபாஸதே=உபாசிக்கிறார்களோ
(5) ते தே=அவர்கள்
सर्वं एव आयुः ஸர்வமேவாயு꞉=சர்வ ஆயுளையுமே
यान्ति யந்தி=அடைகிறார்கள்.

(7)प्राण: ப்ராண:=பிராணன்

भूतानां பூதாநாம்=பூதங்களின்

आयु: ஆயு:=ஆயுஸ்

हि ஹி=நிச்சயம்

(8) तस्मात् தஸ்மாத்=ஆகையால்

सर्वायुषं ஸர்வாயுஷம்=சர்வாயுசாக

उच्यते உச்யதே=சொல்லப்படுகின்றது.

इति இதி= இவ்விதமாக (சுலோகம் முடிந்தது.)

ச—பா:—பிராணனை அனுசரித்து தேவதைகள் ஜீவிக்கிறார்கள். தேவதைகள் அக்கினி முதலானவைகள், ஜீவன சக்தியுடன் கூடின வாயுஸ்வரூபமான பிராணனை, அதாவது இந்த பிராணனால் ஏற்பட்டவர்களாய் பிராண (சுவாசம் விடுகிறதாகிய) கர்மத்தைச் செய்கிறார்கள். அதாவது சுவாசம் விடுதல் என்னும் கிரியையால் கிரியையுடன் கூடினவர்களாகிறார்கள். அல்லது பிரகிருதம் ஆத்தியாத்மிகபரமானதால் தேவதைகள் இந்திரியங்கள். இவைகள் முக்கியப் பிராணனை அனுசரித்து சேஷ்டிக்கின்றன என்றுவது அர்த்தம்.

(2) அப்படியே மனிதர்களும் மிருகங்களும் பிராண வியாபாரத்தால் காரியங்களைச்செய்கிறவர்களாகிறார்கள். ஆகையால்பிராணிகள் பரிச்சின்னமான (வெவ்வேறாய் தனித்தனியே யிருக்கிற அவயவங்களுடன் கூடின) அன்னமய ஆத்மாவால், ஆத்மாவை யுடையவர்களாக (ஜீவிக்கிறவர்களாக) ஆகிறதில்லை. பின்னேயோ வெனின் அதற்குள்ளிருந்து, சகல சரீரத்தையும் ஒரே ரீதியாய் வியாபிக்கிற பிராணமயத்தாலும் பிராணிகள் ஆத்மாவையுடையவர்களாக ஆகிறார்கள். அப்படியே சகல பிராணிகளும் ஒன்றைவிட ஒன்று சூட்சுமமாகவும் அவித்தையால் ஏற்பட்ட ஆகாசாதி பூதங்

---

3-வது அநுவாகம்.

வி:—(1-8)அத்வைதத்தில் போலவே அர்த்தம்.

---

து:—येमनुष्या: पशव: देवा:च யே மநுஷ்யா: பசவ: தேவா:ச=எவர்கள் மனுஷியர்களாயும் பசுக்களாயும் தேவர்களாயு மிருக்கிறார்களோ

(ते தே=அவர்கள்)

प्राणं ப்ராணம்=பிராணமயனை

अनुप्राणन्ति அநுப்ராணந்தி=அனுசரித்து அதாவது பிராணமயனுடைய பிரேரணையால் சேஷ்டிக்கிறார்கள் ஹிதத்தை அடையும்படிக்கும் அஹிதத்தை பரிஹரிக்கும் படிக்கும் பிரவிர்த்தியுள்ளவர்களாக ஆகிறார்கள், ஜீவிக்கிறார்கள் என்று அர்த்தம்,

அ:—களால் உண்டானவைகளாகவு மிருக்கிற மனோமயம் முதல் ஆநந்தமயம் வரையிலுள்ள கோசங்களால் ஆத்மாவை யுடையவர் களாயிருக்கிறார்கள். அவர்கள் ஆகாசதிகளுக்குக் காரணமாயும் நித்யமாயும், விகாரமற்றதாயும், எங்கும் வியாபித்தும், சத்தியஞான அநந்தரூபமாயும், பஞ்சகோசத்தை அதிக்கிரமித்துமிருக்கிற சர்வத்துக்கும் ஆத்மாவான பரமாத்மாவாலும் ஆத்மாவை யுடையவர் ளாகிறார்கள். அவரே வாஸ்தவத்தில் சகலத்துக்கும் ஆத்மா. ஒரு கோசத்தை உத்தேசித்து மற்றொரு கோசம் ஆத்மாவாகச் சொல்லப்படுகிறதே தவிர வாஸ்தவத்தில் அது ஆத்மாவல்ல. எல்லா கோசங்கள் மித்தியா ரூபங்களே.)

(3) பிராணனை அனுசரித்து தேவதைகள் ஜீவிக்கிறார்கள் என்று சொல்லப்பட்டது. அது எப்படி? பிராணன் பிராணிகளின் ஆயுஸ்.

**यावद्ध्यस्मिन्शरीरेप्राणोवसति तावदायुः**

யாவத்ஃயஸ்மிஞ்ஶரீரேப்ராணோவஸதி தாவதாயு:।

அதாவது இந்த சரீரத்தில் பிராணன் எதுவரையிலிருக்கிறதோ அதுவரையில் ஆயுஸ் இருக்கிறது என்பதாய் வேறு சுருதியில் (கௌஷீதகி உபநிஷத்து (II—2-ல்) சொல்லி யிருக்கிறது.

(4) ஆகையால் சகலருக்கும் பிராணன் ஆயுஸ் என்று சொல்லப்படுகிறது. ஏனெனின், பிராணன் போய்விட்டால் மரணம் உண்டாகிறது என்பது எல்லாருக்கும் தெரிந்ததே. பிராணன் சகலருக்கும் ஆயுளை ஏற்படுத்துகிறது என்பதும் உலகத்தில் பிரசித்தமே.

(5-6) ஆகையால் இந்த பாஹ்யமாயும் அசாதாரணமாயு மிருக்கிற அன்னமயத்தினின்றும் வெளிக்கிளம்பி (அதாவது ஒரே மாத்ரியாக இராமல் பல அவயவங்களோடு கூடியிருக்கிற அன்னமயமே ஆத்மா என்கிற புத்தியை விட்டு) உள்ளே (சகல இந்திரியங்

---

(3) து:—प्राणः हि ப்ராண:ஹி = இந்த பிராணமயன்

(4) भूतानांआयुः பூதாநாமாயு: = ஜீவனத்துக்குக் காரணம்

तस्मात् தஸ்மாத் = பிராணிகள் பிழைத்திருக்கக்காரணமாக இருப்பதினால்

सर्वायुषंउच्यते ஸர்வாயுஷமுச்யதே = எல்லாருடைய ஆயுஸ் என்று சொல்லப்படுகிறான்

(5) அ-கை:—பிராணமயனை அறிவதின் பலனை

सर्वमेव ஸர்வமேவ = என்பதினால் சொல்லுகிறார்.

ये யே = எந்த அதிகாரிகள்

அ:—களும் போஷிக்கிறதினால்) ஒரே மாதிரியாயிருக்கிற பிராணமய ஆத்மாவை பிரம்மமாக உபாசிக்கிறார்களோ அதாவது சகலபூதங்களின் ஜீவனத்துக்கு ஹேதுவாயிருப்பதால் பிராணனாகிற நான் சகல பிராணிகளுக்கும் ஆத்மா என்பதாய் எவர்கள் தியானிக்கிறார்களோ, அவர்கள் சகல (பூர்ண) ஆயுளையும் இந்த லோகத்தில் அடைகிறார்கள். தங்களுக்கு ஏற்பட்ட ஆயுஸ் முடியும் முன் அபமிருத்யுவால் அவர்கள் மரணமடைகிறதில்லை. சர்வாயுஸ் என்பதால் 100வருஷ என்று அறியத்தக்கது.

(7—8) பிராணன் பூதங்களின் ஆயுஸ் ஆகையால் சகலத்துக்கும் ஆயுஸ் என்று சொல்லப்படுகிறது.

இப்படி இரண்டாவது தடவை சொன்னதாவது, எவன் எந்த குணத்துடன் கூடினதாக பிரம்மத்தை உபாசிக்கிறானோ அவன் அந்த குணத்துடன் கூடினவனாக ஆகிறான் என்பதால் உபாசனையின் பலன் கிடைக்கும் என்பதைக் காட்டுகிறது.

(சு வி:—பிராணமய ஆத்மாவை, சகலத்துக்கும் பிராணன் என்கிற குணத்துடன் கூடினதாக எவர்கள் உபாசிக்கிறார்களோ, அவர்கள் அந்த பிராணனையே அடைகிறார்கள்.)

## வி—வியாக்கியானம்.

(1-2) சாத்விகர்களான அக்கினி, இந்திரன் முதலான தேவதைகள், இராஜஸர்களான பிராமண க்ஷத்திரியாதி மனிதர்கள், தாமஸங்களான மிருகங்கள் எல்லோரும் அவர்களுடைய சரீரத்தில் சேஷ்டித்துக் கொண்டிருக்கிற பிராணனை அனுசரித்து தாங்களும் சேஷ்டிக்கிறார்கள். பிராணன் தான் தேகத்தை சலிக்கும்படி செய்கிறது. அப்படியே கௌஷீதகீ உபநிஷத்தில் (V-3) சொல்லியிருக்கிறது. பிரச்னம் II-3-யும் பார்க்க.

---

(6) து:—प्राणं ப்ராணம்=பிராணமய கோசத்திலிருக்கிற பிராணமய சப்தத்தால் கூறப்பட்ட பிரத்யும்ன என்கிறவனை

ब्रह्म ப்ரஹ்ம=தேசகால குணங்களால் பரிச்சேத மடையாததினால் பிரம்ம சப்தத்தால் கூறப்பட்டவனாக

उपासते உபாஸதே=உபாசித்து அறிகிறார்களோ

(5) ते தே=அவர்கள்

सर्वमेव ஸர்வமேவ=எல்லாருமே

आयुः ஆயு:—மோக்ஷத்தை

यन्ति யந்தி=அடைகிறார்கள்.

அ:—(3=4) தேவ மனுஷிய மிருக சரீரங்களைச் சலிக்கும்படிச் செய்யும் பிராணன் சகலத்தின் ஆயுளுக்கும் ஹேதுவாயிருப்பதால் சர்வாயுள் என்று சொல்லப்படுகின்றது.

(5=6) இந்த பிராணமய கோசஞானத்தால் மட்டும் அன்னமய கோசத்தை நான் என்பதாய் பாவிப்பதினால் ஏற்பட்ட வாசனையை விட்டுவிட முடியாதவர்கள் அந்த வாசனையை நிவிர்த்தி செய்யும் பொருட்டு பிராணனை உபாதியாயுடைய பிரம்மத்தை உபாசிக்கிறார்கள். அவர்கள் ஆத்தியாத்மிக (சரீரத்திலிருக்கிற) பிராணனை உபாதியாயுடைய பிரம்மத்தை உபாசிப்பதினால் இந்த ஜன்மத்தில் அபமிருத்யுவை அடையாமல் பூர்ண ஆயுளை அடைகிறார்கள். அதிதைவிக பிராணனாகிற ஹிரணியகர்ப்பனை உபாதியாயுடைய பிரம்மத்தை உபாசிப்பதினால் ஜன்மாந்திரத்தில் தாங்களே ஹிரணியகர்ப்பரூபமாகி மஹாப்பிரளயபரியந்தம் பூர்ண ஆயுளை அடைகிறார்கள்.

(7=8) கோசத்தை ஸ்துதிக்கும் பொருட்டு பிராணன் பிராணிகளின் ஆயுஸ் என்று முன் சொல்லப்பட்டது. உபாசனையை சிலாகிக்கும் பொருட்டு அதுவே மறுபடியும் கூறப்படுகின்றது.

(வி-வி:—பிராணமய கோசத்தின் தாற்பரியத்தை இனி சுருதியானது கூறுகிறது.)

(9) तस्यैष एव शारीरआत्मा । தஸ்யைஷ ஏவ ஶாரீரஆத்மா।

(10) यः पूर्वस्य ॥ 2 ॥ யஃ பூர்வஸ்ய ॥ 2 ॥

பதவுரை

(9) पूर्वस्य பூர்வஸ்ய=முன்ன சொன்னதற்கு

तस्य தஸ்ய அந்த

यः एषः एव யஃ ஏஷஃ ஏவ=இவனே

शारीरः आत्मा ஶாரீரஃ ஆத்மா=சரீரசம்பந்தமுள்ள ஆத்மா

---

(7) து:—அ-கை:—प्राणो हि ப்ராணோ ஹி=என்பதினால் உபஸம்ஹாரம்செய்கிறார். அல்லது தாற்பரியத்தைக்கூறும்பொருட்டு சொன்னதையே சொல்லுகிறார். அல்லது சகல ஆயுளையும் கொடுப்பதில் காரணத்தைச் சொல்லும்பொருட்டு மறுபடியும் சொல்லுகிறார் (8) इति இதி=சப்தத்தை इत्येषश्लोकः இத்யேஷஶ்லோகஃ=என்பதுடன் அன்வயிக்கவேண்டும். அல்லது பிராணமய சமாப்தியை அது கூறுவதாக வைத்துக்கொள்ளலாம் அல்லது இதி சப்தத்தால் சுலோகத்தை முடித்து பிராணமயனுடைய வேறு தர்மத்தை உபநிஷத்துச் சொல்லுகிறதாக வைத்துக்கொள்ளலாம்.

ச—பா:—முன்சொன்ன அன்னமயத்துக்கு பிராணமயமே அன்னமயத்தை சரீரமாயுடைய ஆத்மா.

(வி—வி;— இப்போது சொல்லப்பட்ட பிராணமயமே முன் சொன்ன அன்னமய சரீரத்திலிருக்கிற ஆத்மா. எப்போது பிராண மயம் ஆத்மா என்பதாய் திருட நிச்சயம் உண்டாகிறதோ அப் போது அன்னமயமே நான் என்கிற பிராந்தி போய்விடுகின்றது. அன்னமயம் சரீரம். பிராணமயம் சரீரீ; தான் தான் தன்னுடைய ஆத்மா, என்கிற நிச்சயம் ஜனிக்கிறது. ஏனெனின் இரண்டிலும் ஆத்மபுத்தி ஏற்படமாட்டாது.

---

வி:—(9) இந்தப்பிரகாரம் பிராணமயன் ஆகாசம்முதல் அன்னம யம்வரையில் உள்ளவஸ்துக்களுக்கு அந்தராத்மாவாக இருக்கிறான் என்கிற புத்தியை உண்டுபண்ணி பிறகு அந்தபுத்தியை சுருதி நிவ ர்த்திசெய்கிறது.

पूर्वस्य பூர்வஸ்ய=அன்னமயனுக்கு

यः आत्मा யஃஆத்மா=எவன் ஆத்மாவாக இருக்கிறானோ

एषःएव ஏஷஃஏவ=இவனே

तस्यशरीरः தஸ்ய ஶரீரஃ=பிராணமயனுக்குச் சரீரசம்பந்த மான ஆத்மாவென்று அர்த்தம்.

இதனால் ஆத்மசப்தமானது ஸ்வரூபத்தைக் கூறுகிறதென்கிற பிராந்தி நிராகரிக்கப்பட்டதாக ஆய்விட்டது.

ஆகவே அன்னமய பிராணமய இரண்டு கோசங்களும் ஒரு அத்மாவை உடையவை. அன்னமயனுக்கு பிராணமயன் ஆத்மா வல்ல வென்று அர்த்தம்

---

(9-10) து:—पूर्वस्य பூர்வஸ்ய=அன்னவிகாரகோசத்தில்

यः யஃ=எந்த அநிருத்தன் சரீர ஆத்மாவாக இருக்கிறானோ அதாவது அன்னவிகார தேகத்தை சரீரம்போல் செய்து அதிலி ருக்கிறானோ

तस्य தஸ்ய=அன்னமய கோசத்திலிருக்கிற அன்னமயனென் கிற பெயருள்ள அநிருத்தனுக்கு

एषःएव ஏஷஃஏவ=பிராணமய கோசத்திலிருக்கிற பிரத்யும் னனே

शरीरआत्मा ஶரீரஆத்மா=தேகியாகிற ஆத்மா. அன்னமயமெ ன்கிற கோசத்திலிருக்கிற அநிருத்தனை தேகம் போலவும், அதிலி ருக்கிற பிராணமயகோசத்திலிருக்கிற பிரத்யும்னனை தேஹி (தேக த்தைஉடையவன்)போலவும் அறியவேண்டியதுஎன்பதுகருத்து.பா

## மனோமய கோசம்.

அ:—(வி:—அவதாரிகை:...அன்னமய கோசத்தினின்றும் திரும்பின அதிகாரியானவன் பிராணமய கோசத்துக்கும் உள்ளே பிரவேசிக்கும் பொருட்டு மனோமய கோசத்தை சுருதி உபதேசிக்கிறது)

III 3 (1) तस्माद्वा एतस्मात् प्राणमयात् । தஸ்மாத்வா ஏதஸ்மாத் ப்ராணமயாத் ।

अन्यो ऽन्तर आत्मा मनोमयः । அந்யோऽந்தர ஆத்மா மநோமயः ।

तेनैष पूर्णः ॥ 3 ॥ தேநைஷ பூர்ணः ॥ 3 ॥

பதவுரை:—

तस्मात् தஸ்மாத்=அதைவிட

वै வை=நிச்சயம்

प्राणमयात् ப்ராணமயாத்=பிராணனுலுண்டான

एतस्मात् ஏதஸ்மாத்=இதைவிட

(12) अन्यः அந்யः=வேருய்

अन्तरः அந்தரः=உள்ளே

मनोमयः மநோமயः=மனதால் உண்டான

आत्मा ஆத்மா = ஆத்மா (இருக்கிறுன்)

(13) तेन தேந=அவனல்

एषः ஏஷः=இவன்

पूर्णः பூர்ணः=நிறைந்திருக்கிறுன்.

---

### மனோமயம்.

வி:—அ-கை:—ஆனல் அன்னமயன் பிராணமயன் இவர்களுக்கு ஆத்மா யாரெனின் அதை तस्मात् தஸ்மாத் என்கிற வாக்கியம்கூறுகிறது.

मनोमयः மநோமயः=மனது, புத்தி, சித்தம், அஹங்காரம்என்கிற நான்கு விருத்திகளுக்குள் மனோவிருத்தி அதிகமாக இருப்பதால் மனோமயன் என்று அர்த்தம்.

तेन एषपूर्णः தேநைஷபூர்ணः அர்த்தம் முன்போலவே,

---

து:—மாத்மாவின் ரூபங்களில் பேதமில்லா விட்டாலும் அதிஷ்டானமான கோசங்கள் வெவ்வேருயிருப்பதினுலும்ஒன்றுக்குள்ஒன்று இருப்பதினுலும், அவைகளிலிருக்கிற பகவத்ரூபங்களுக்கும் அம்மாதிரியாகவே உபசாரமாகச் சொல்லப்பட்டது. அல்லது பேதத்

ச—பா:—

(11—13): மனது என்பது சங்கற்பாதி ஸ்வரூபமான அந்தக்கரணம் (உள்ளேயிருக்கும் ஞானகருவி) அதினால் ஏற்படுவது மனோமயம். அன்னமயம் எப்படியோ அப்படி இந்த மனோமயம் பிராணமயத்துக்குள்ளிருக்கும் ஆத்மா. மற்ற பதங்களுக்குமுன் போலவே அர்த்தம் செய்துகொள்ளவும்.

வி. வியாக்கியானம்.

பிரம்மத்தை ஆசிரயித்தும், ஜகத்துக்கு உபாதான ரூபமாயுமிருக்கும் மாயை மூன்று குணமுள்ளது. தமோகுணம் அன்னமயத்துக்குக் காரணமாயிருப்பதால், அன்னமய கோசத்தில் ஜாட்டியம் தான் விசேஷமாய் காணப்படுகின்றது. கிரியாசக்தியாவது ஞானசக்தியாவது அதிலில்லை. ரஜோகுணம் பிராணமயத்துக்குக் காரணமாயிருப்பதால் பிராணமயத்தில் கிரியா சக்தி காணப்படுகின்றது. ஸத்வகுணம் மனோமயம்முதலிய மூன்றுகோசங்களுக்கும் காரணமாயிருப்பதால் இந்த மூன்று கோசங்களிலும் ஞான சக்தி காணப்படுகின்றது.

தமஸுடன் கூடின சத்வகுணம் மனோமயத்துக்குக் காரணம். ஆனதால் மனோமயத்தில் தாமஸாம்சத்தின் தர்மங்களான இராகத்துவேஷாதிகள் காணப்படுகின்றன.

---

து:—தைச் சொன்னதினாலும் ஐசுவரியத்தினாலும்முக்கியம்என்பதையாவது கிரகிக்கவேண்டும். இப்படியே பின் வாக்கியங்களிலும் அறியவேண்டியது.

பிரமாணிவாக்கியம்:—

तस्यांतरंपररूप मभिन्नमपिभिन्नवत् ।
प्रद्युम्नाख्यंप्राणमयं प्रणेतृत्वात्प्रकीर्तितं ।
शिरस्तस्यप्राणगतं प्राणइत्येवनामतः ।
व्यानाख्योदक्षिणःपक्षो व्यानगश्चोत्तरस्तथा ।
अपानाख्योपानगत आकाशस्थंचमध्यमं ।
आकाशाख्यंतथापुच्छं पृथ्व्यांपृथ्विनामकं ।
उदानाकाशनामासमानः पृथिवीतिच ।
प्रणेतृत्वात्प्राणनाम शिरोविष्णोः प्रकीर्तितं ।
विशेषाच्चेष्टयेद्यस्मा द्व्यानाख्योदक्षिणःकरः ।
यस्मादपनयेद्दोषा नपानःसव्यउच्यते ।
आकाशस्त्ववकाशत्वा न्मध्यदेहोमहात्मनः ।
पृथिवीपुच्छमस्योक्तं सर्वस्यापिप्रधारणात् ।
सएवजगतामायु स्तस्मिन्संकर्षणःस्थितः (तत्वनिर्णये)

அ:—இரஜஸ்ஸுடன் கூடின சத்வகுணம் விஞ்ஞானமயத்துக்குக் காரணம். ஆனதால் விஞ்ஞானமயத்தில் யஞ்ஞம் முதலிய வைதிக கர்மங்களையும், வேளாண்மை முதலிய லௌகிக கர்மங்களையும் நான் செய்கிறேன் என்பதான கர்த்திருத்வம் காணப்படுகின்றது.

சுத்த சத்துவகுணம் ஆநந்தமயத்துக்குக் காரணம். ஆகையால் அதில் பிரியம் முதலிய சப்தங்களால் கூறப்படும் சுகவிசேஷங்களே காணப்படுகின்றன.

ஞானசக்தியானது ஸ்வரூபத்தில் ஒன்றாகவே யிருந்தாலும் அதற்குள் (a) கரணசக்தி (இந்திரியசக்தி) (b) கர்த்திரு (கர்த்தா) சக்தி (c) போக சக்தி என மூன்று விதங்கள் காணப்படுகின்றன.

இவைகளில் கரண சக்தியால் ஏற்படுவது மனது. அதினால் உண்டாவது மனோமயம். இது காமம் சங்கற்பம் முதலிய விருத்திகளின் சமூகம். பிரஹதாரண்ணியகம் I–5-3ல் காமம், சங்கற்பம், சந்தேகம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், இலஜ்ஜை புத்தி, பயம், இவைகளெல்லாம் மனது என்பதாய் வாஜஸநேயிகள் சொல்லியிருக்கிறார்கள். தாகம், சிநேகம், ரோகம், லோபம் முதலியவைகளும் வேறு சுருதியிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்த மனோமயம் பிராணமயத்துக்குட் பட்டது. சகலத்துக்கும் உள்ளிருக்கிற ஆத்மா சைதன்னியம் சமீபத்தி லிருக்கிறதினால் மனதில் விளங்குகிறது. அப்படி விளங்குகிறபடியால்தான் மனோமயம் பிராணமயத்துக்கு ஆத்மா எனப்படுகிறது.

---

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

அ:—இப்படி உள்ளேயிருக்கிற மனோமயத்தால் பாஹ்யமான பிராணமயன் பூரிக்கப்பட்டிருக்கிறது. எப்படி கிரியா சக்தியானது பாதம் முதல் மஸ்தகம் வரையில் வியாபித்திருக்கிறதோ அப்படி ஞானசக்தியும் வியாபித்திருக்கிறது.

உள்ளிருக்கும் ஞானசாதகமான மனதால் வெளியிலிருக்கும் வாக்கு சக்ஷுஸ் முதலிய பத்து இந்திரியங்களையும்சேர்த்து அறிய வேண்டியது. ஆகையால் மனோமயகோசத்தில் சகலமான ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் அடங்கி யிருப்பதாக அறியவேண்டியது.

இந்திரியங்களுக்கு உற்பத்தி இருக்கிறதென்பது பிரம்ம சூத்திரம் II-4-(1-4)லும். அவைகள் பதினொன்று என்பது II-4-(5-6லும், அவை வியாபகங்களன்று என்பது II-4-(8=13) லும் இந்திரியங்கள் தேவதைகளுக்கு ஸ்வாதீனங்கள் என்பது II-4-(14-16) லும், அவைகள் பிராணனைவிட வேறு என்பது II-4-(17-19)லும்

---

## 8. மனோமயபிரகரணம்.

து:—அ-கை:—இவ்விதமாக லக்ஷணவாக்கியத்திலுள்ள சத்திய பதத்தின் அர்த்தத்தை மூன்று பிரகரணங்களில் விவரித்து இப்போது சாமான்னிய விசேஷமான சகல வஸ்துக்களையும் விஷயமாக்கும் ஞானம் என்கிற இலக்ஷணத்தை விவரிக்கிறார்.

तस्मात् தஸ்மாத்=மந்திர வர்ணத்தில் சொல்லிய அதாவது சத்தியம் முதலிய பதங்களால் கூறப்பட்ட

एतस्मात् ஏதஸ்மாத்=பிராணமய பிரகரணத்தில் வர்ணிக்கப்பட்ட, பிராணமய கோசத்திலிருக்கிற பிராணமயன் என்கிற பெயருள்ள பிரத்யும்னனைவிட

अन्य: அந்ய:=வேறான

अन्तर: அந்தர:=அவனுக்குள்ளிருக்கிற

आत्मा ஆத்மா—சர்வவியாபகமான

मनोमय: மநோமய:=(मनसाज्ञानेन + प्रचुर: मनोमय: மநஸா=ஞானேந+ப்ரசுர:=மநோமய:=சகல வஸ்துக்களின் சாமன்னியஞானத்தால் நிறைந்திருக்கிற காரணத்தினால் மனோமயன் என்று பெயருள்ள, மனோமயம் என்கிற கோசத்திலிருக்கிற; சங்கர்ஷணனிருக்கிறான்.

तेन தேந=அந்த மனோமயன் என்கிற சங்கர்ஷணனால்,

एष: ஏஷ:=பிராணமய கோசத்திலிருக்கிற பிராணமயன்

पूर्ण: பூர்ண:=இடை விடாமல் பூர்த்தியாயிருக்கிறான்

அ:—விவரிக்கப்பட்டிருக்கிறது. சுருக்கத்தை வியாசாதிகரணமாலையில் பார்த்துக்கொள்ளலாம்.

இந்த பதினொரு இந்திரியங்களுக்குள் மனது முக்கியமானதால் இந்த கோசம் மனோமய கோசம் என்ற பெயரை வஹித்தது.

வாக்கு முதலிய இந்திரியங்கள் தங்கள் தங்கள் வியாபாரங்களில் மனதினால் பிரவிர்த்திக்கின்றன. ஆகையால் மனது பிரதானம். பார்க்கவேண்டும் கேட்கவேண்டும் இப்படிப்பட்ட மனோவிர்த்தியை முன்னிட்டுக் கொண்டுதான் வாக்கு முதலியவைகள் வியவஹரிக்கின்றன. ஆகவே, மனதிருந்தால் வாக்காதிகள் வியவஹரிக்கிறதாயும், மனது இல்லாவிடின் அவைகள் வியவஹரிக்காமலுமிருப்பதால் மனது முக்கியம் என்பது ஸ்பஷ்டம்.

## மனோமயத்தின் உபாசனை.

(வி-வி:—சகல இந்திரியங்களின் ஸமூஹமான மனோமயகோசம் ஒருவனுடைய ஆத்மா வென்பதாய் உபதேசித்து, அதையே ஹிருதயத்தில் திருடமாய் ஸ்தாபிக்கும் பொருட்டு சுருதியானது உபாசனையை விதிப்பதற்காக அதின் ஸ்வரூபத்தைக் குறிப்பிடுகிறது.

(14) स वा एष पुरुष विध एव । ஸ வா ஏஷ புருஷவித ஏவ ।

(15) तस्य पुरुष विधताम् । தஸ்ய புருஷவிததாம் ।

(16) अन्वयं पुरुषविधः । அந்வயம் புருஷவித: ।

(17) तस्य यजुरेव शिरः । தஸ்ய யஜுரேவ ஶிர: ।

(18) ऋग्दक्षिणः पक्षः । ருக்தக்ஷிண: பக்ஷ: ।

(19) सामोत्तरः पक्षः । ஸாமோத்தர: பக்ஷ: ।

(20) आदेश आत्मा । ஆதேஶ ஆத்மா ।

(21) अथर्वाङ्गिरसः पुच्छं प्रतिष्ठा ॥ 4 ॥ அதர்வாங்கிரஸ: புச்சம் ப்ரதிஷ்டா ॥ 4 ॥

பதவுரை:—
(14) सः ஸ:=அந்த
वै வை=நிச்சயம்
एषः ஏஷ:=இவன்

அ:—पुरुषविध: एव புருஷவிதஃ ஏவ=புருஷாகாரனே
(15) तस्य தஸ்ய=அவனுடைய
पुरुषविधतां புருஷவிததாம்=புருஷாகாரத்தை
(16) अनु அநு=அனுசரித்து
अयं அயம்=இவன்
पुरुषविध: புருஷவிதஃ=புருஷாகாரமானவன்
(17) तस्य தஸ்ய=அவனுக்கு
यजु:एव யஜுரேவ=யஜுஸே
शिर: ஶிரஃ=சிரசு
(18) ऋक् ருக்=ரிக்கு
दक्षिण:पक्ष: தக்ஷிணஃபக்ஷஃ=வலதுகை
(19) साम: ஸாமஃ=ஸாமம்
उत्तर:पक्ष: உத்தரஃபக்ஷஃ=இடதுகை
(20) आदेश: ஆதேஶஃ=விதிவாக்கியம்
आत्मा ஆத்மா=ஆத்மா
(21) अथर्वाङ्गिरस: அதர்வாங்கிரஸஃ=அதர்வாங்கிகள்
पुच्छं புச்஛ம்=வால்
प्रतिष्ठा ப்ரதிஷ்டா=ஆதாரம்
சு= பா:—
(14—15—16:—முன் போலவே)

(17) அவனுக்கு யஜுஸே சிரசு எழுத்துக்கள், பாதங்கள், முடிவுகள் இத்தனை தான் என்பதாய் கணக்கில் அகப்படாத மந்திரங்கள் யஜுஸ் எனப்படும். இப்படியிருக்கிற வசனம் யஜுஸ் என்று சொ

---

வி:—तस्य தஸ்ய=அந்தக்கரணத்துக்கு
(17)यजुरेवाशिर: யஜுரேவஶிரஃ=யஜுர்வேதத்தின்ஞானத்தை உண்டு பண்ணும் மனோ வியாபாரம் சிரசு என்று அர்த்தம்.

---

(14) து:—स: ஸஃ=மனோமய கோசத்திலிருக்கிறமனோமயனென்கிற பெயருள்ள சங்கர்ஷணன்
पुरुषविध: एव புருஷவிதஃஏவ=புருஷாகாரனே.
(15) तस्य தஸ்ய=அந்த சங்கர்ஷணனுடைய
पुरुष विधतां புருஷவிததாம்=புருஷாகாரத்தை
(16) अनु அநு=அனுசரித்து
अयं அயம்=இந்த பிராணமயன்
पुरुषविध: புருஷவிதஃ=புருஷாகாரனாயிக்கிறான். அதினின்றும் உண்டானவன் என்றும் தியானிக்கத்தக்கது

(17) அ-கை:உத்தனென்கிறநாமத்திலிருக்கிற மனோமயன் என்கிறபெயருள்ள சங்கர்ஷணனுடைய சிரசு முதலிய அவயவங்களின் ஸ்தானங்களை तस्ययजु: தஸ்யயஜுஃ முதலியதால் சொல்லுகிறார்.

அ:—சொல்லப்படுகிறது. அது பிரதானமாயிருப்பதால்சிரசு என்பதாகச் சொல்லப்படுகின்றது. யாகம் முதலியவைகளில்ஸ்வாஹா முதலியசப் தங்களாகிற யஜுஸால் ஹவிஸ் கொடுக்கப் படுகிறபடியால், யஜுஸ் உபயோகமாயிருக்கிறது. ஆகையால் அது பிரதானம் (அல்லது) சிரசு முதலியவைகளெல்லாம் சாஸ்திரத்தின் கற்பனைகளே. ஸ்தானம், பிரயத்தினம், நாதம், ஸ்வரம், இவைகளுடன் கூடின அக்ஷரம், பதம், வாக்கியம் இவைகளை விஷயமாக்குகிறதாயும், சங்கற்ப ஸ்ரூபமாயும், சுரோத்திரம் முதலிய இந்திரியங்கள் மூலமாக விளங்குகிறதாயுமிருக்கிற மனோவிருத்தி யஜுஸ் என்று சொல்லப் படுகின்றது. இப்படியே ரிக்கு, இப்படியே சாமம்.

இவ்விதமாக மந்திரங்கள் மனோ விருத்தியாக இருப்பதாலும், விருத்தியானது ஆவர்த்தனமாகக் கூடுமாகையாலும், மானசிகஜபம் ஏற்படக்கூடும். இப்படி ஆவர்த்தனம் செய்ய முடியாவிடின் கடாதிகள் போல் மந்திரங்களின் ஜபமும் ஆவர்த்தனமாக மாட்டாது. ஆ

---

வி:—யஜுர்பதத்தின் முக்கிய பதார்த்தமான யஜுர் வேதத்துக்கு மனஸ்ஸம்பந்த மிருப்பதால் மற்றதைக்குறித்து சிரஸாகச் சொல்வது சரியல்ல. ஆகவே மேற்சொன்னபடி தான் யஜுஸ் பதத்துக்கு அர்த்தம் என்று அறியவும். இந்தப்படியே அடியில் வரும் வாக்கியங்களுக்கும் அர்த்தம் என்று அறியவும்.

---

து:—तस्य தஸ்ய=மனோமய கோசத்திலிருக்கிற சங்கர்ஷணனுக்கு

शिरः ஶிர:=சிரசு

यजुःएव யஜுரேவ=யஜுர் வேதத்திலிருக்கிற யஜுஸ் என்று பெயருள்ள பரமாத்மா ஏனெனின் யஜுர் வேதப்படி அந்த சிரசானது யஞ்ஞியத்தை ஸ்வீகரிக்கிறது.

एव ஏவ=இந்த சப்தம் யஜுஸ் சப்தத்தின் முக்கியார்த்தத்தைக் கூறுகிறது.

(18) दक्षिण: पक्ष: தக்ஷிண: பக்ஷ:=வலதுகை

ऋक् ருக்=ரிக்வேதத்திலிருக்கிற ரிக் என்று பெயருள்ள பரமாத்மா ஏனெனின் ரிக்வேதப்படி பூஜையை அவர் கிரகிக்கிறார்.

(19) उत्तर:पक्ष உத்தர:பக்ஷ:=இடதுகை

साम ஸாம=சாமவேதத்திலிருக்கிற சாம என்று பெயருள்ள பரமாத்மா, ஏனெனின் சாமவேதப்படி அவர் தோஷங்களினின்றும் सम्यक् ஸம்யக்=அதாவது நன்றாய் செய்கிறார் அதாவது தோஷத்தைப் போக்கடிக்கிறார்.

அ:—கையால் மானசிக ஜபமே ஏற்பட மாட்டாது. ஆனால் கர்மங்களில் மந்திரங்களை திருப்பித் திருப்பிச் சொல்லும்படியாய்வெகு தடவை சொல்லியிருக்கிறது.

ஆக்ஷேபம்:—அக்ஷரங்களின் ஸ்மரணையின் ஆவிர்த்தியே மந்திரத்தின் ஆவிர்த்தி. (அதாவது:—மந்திரத்தின் ஆவிர்த்தி சித்திக்க மாட்டாது. அதின் அர்த்தத்தை மனதில் திருப்பி திருப்பி தரிப்பதினால் மந்திரமே ஆவிர்த்தியானதாகச் சொல்லுகிறோம்.

சு-வா:—உத்தரம்—அப்படியல்ல. முக்கியார்த்தம்சித்திக்காமல்போய் விடும். "முதலாவது ரிக்கை 3 தடவை சொல்லட்டும்; கடைசியான ரிக்கை 3 தடவை சொல்லட்டும்" என்று விதி ஏற்பட்டிருக்கிறது. ரிக்கைத் திருப்பிச் சொல்லாமல் அதின் அர்த்தத்தை மட்டும் ஸ்மரிக்கிறதாயிருந்தால், விதிக்கப்பட்ட விதியால் முக்கியார்த்தம் விட்டுப் போகும். ஆகையால் மனோவிர்த்தியாகிற உபாதிகளால் பரிச்சின்னமாயும், மனோ விருத்தியி லிருக்கிறதாயும் (அதாவது விளங்குகிறதாயும்) அனாதியாயும் அநந்தமாயும், யஜுஸ் சப்தத்தால் கூறப்படும் இருக்கிற ஆத்மவிஞ்ஞானமே மந்திரங்கள். இப்படிச் சொன்னால் தான் வேதங்கள் நித்தியம் என்பது பொருந்தும், இல்லாவிடின், அதாவது ரூபம் முதலியவைகள் போல் வேதங்கள் விஷயங்களானால் அநித்தியங்களாகும். இது யுக்தமன்று.

**सर्ववेदायत्रैकं भवन्ति समानसीन आत्मा**

ஸர்வெவேதாயத்ரைகம் ஹவந்தி ஸமானஸீந ஆத்மா ॥

(அதாவது சகல வேதங்களும் எவனிடத்தில் ஒன்றாய் விடுகின்றனவோ அவன்மனதிலிருக்கிற ஆத்மா) என்கிற தைத்திரீயஆரணியக (III-II) சுருதி வசனம் நித்தியமான ஆத்மாவுடன் வேதங்கள் ஒன்று என்று சொல்லுகிறது. ரிக்முதலிய வைகள் நித்தியமாயிருந்தால் தான் இந்த சுருதி வசனம் பொருந்தும்.

**ऋचो अक्षरेपरमे व्योमन्यस्मिन्देवा अधिविश्वेनिषेदुः**

ருசோ அக்ஷரெபரமெ வ்யோமந்யஸ்மிந்தேவா அதிவிஶ்வெ நிஷெதுஃ

அதாவது ரிக்குக்கள் அக்ஷரத்தில், சகல தேவதைகளு மிருக்கிற மேன்மையான ஸ்வர்க்கத்தில்இருக்கின்றனஎன்பதாய்தைத்திரீய ஆரணியக மந்திரம் சொல்லுகிறது.

அ:—(20) ஆதேசமானது பிராமண பாகத்தைக் கூறுகிறது. இந்த பாகம் இன்ன விஷயங்கள் இப்படிச் செய்யத் தக்கவை என்பதாய் விதிகளை கூறுகிறது.

(21) அதர்வனாலும் அங்கிரஸனாலும் பார்க்கப்பட்ட மந்திரங்களும், பிரமாண பாகமும் மனிதனுக்குச் சாந்தியையும் புஷ்டியையும் கொடுக்க ஹேதுவாயிருக்கிற கர்மங்களை முக்கியமாய் விதிப்பதால் புச்சமாயிருக்கின்றன. ஆதாரமாயிருக்கின்றன.

---

(20) வி:—आदेश ஆதேஶ:=இதைசெய், இதைச் செய்யாதேயென்பதான விதி நிஷேதமாகிற ஆஜ்ஞை.

இவ்விடத்தில் விதி நிஷேத வாக்கியங்களால் உண்டான ஞானத்துக்குக் காரணமாகிற அந்தக் கரண விருத்தியானது ஆதேச சப்தத்தால் கூறப்படுகின்றது.

(21) अथर्वांगिरस: அத²வாங்கி³ரஸ:= அதர் வாங்கிரஸ் என்கிற ரிஷியால் பார்க்கப்பட்ட மந்திரம் पुच्छंप्रतिष्ठा புச்ச²ம்ப்ரதிஷ்டா=ஸ்திதிக்குக்காரணமான புச்சமென்று அர்த்தம்.

இவ்விடத்திலும் அதர் வாங்கிரஸ் சப்தங்களுக்கு அனவகளாலுண்டான ஞானத்துக்குக்காரணமான மனோ வியாபாரம் என்று அர்த்தம்.

3-வது அனுவாகம் முற்றிற்று.

---

(20) து:—आत्मा ஆத்மா=மத்தியபாகம்

आदेश: ஆதேஶ:= நூறுகோடியாக விஸ்தாரமானதாலும், உபதேசம் செய்கிறது என்பதினாலும் ஆதேச என்று பெயருள்ள ஆதேச சப்தத்தால் கூறப்பட்ட பஞ்சராத்திர கிரந்தத்திலிருக்கிற பரமாத்மா

(21) अथर्वांगिरस: அத²ர்வாங்கி³ரஸ:= அதர்வண வேதத்திலிருக்கிற அதர்வ அங்கிரஸ என்கிற பகவானுடைய இரண்டு ரூபங்கள், அதர்வாங்கிரஸத்திலிருக்கிறரூபங்கள்

पुच्छं புச்ச²ம்=வால்போல் கடைசியில் இருக்கிற

प्रतिष्ठा ப்ரதிஷ்டா:=பாதங்கள்

யஜுஸ் முதலியவைகள் பகவானுடைய சிரசுமுதலிய வெவ்வேறு அவயவங்களை பிரதிபாதிக்கின்றனவே தவிர, பகவானுடையஸ்வரூபத்தைமுழுமையையும்பிரதிபாதிக்கச்சமர்த்தங்களானா என்பது கருத்து (ஆகையால் அவைகள் ஒவ்வொரு அவயவத்தைத்தான் வர்ணிக்கின்றன)

அ—கை:—யஜுர்வேதம் முதலியவைகள் பகவானை முற்றிலும் பிரதிபாதிக்க முடியாதவைகள் என்பதாய் முன் சொன்னவிஷயத்தில் சுலோகத்தைச்சொல்லி. அப்படி அறிந்தவனுக்குப் பலனையும் சொல்லுகிறார்,

அ:—(சு-வா—ஆ:—யஜுஸ் சப்தம் சாதாரணமாய் யஜுஸ்ஸென்ற பெயருள்ள சப்தசமூகத்தைக் கூறினாலும், இவ்விடத்தில், இது மனோ விர்த்தியைத் தான் கூறுகிறது. நாம் எந்த யஜுஸ்ஸைச் சொல்லுகிறோமோ அது பதங்கள் வாக்கியங்கள் ரூபமாக சுரோத்திரியம் முதலியவைகள் மூலமாக விளங்கும் ஈசுவரனுடைய மனோவிருத்தி விசேஷமே. எல்லாம் மனோ விருத்திகளாக விளங்கும் பிரக்ஞானஸ்வரூபங்களே.

மந்திரம் மனோவிருத்தியாக இராத பக்ஷத்தில், அதாவது கடம் போல், கிரியையைத்தவிர வேறு ஒன்றாக இருக்கும் பக்ஷத்தில், எப்படி ஒரு கடத்தை அநேகமாகச் செய்ய முடியாதோ, அப்படி மனோ விருத்தியையும் திருப்பி திருப்பி ஏற்படுத்த முடியாது. மனதானது தன்னைச் சேர்ந்ததையே பாதிக்கக் கூடும். தனக்கு வெளியேயிருக்கிறதை ஒன்றும் செய்யமாட்டாது. ஆகையால் மந்திரமானது மனதிற்கு வெளியே போயிருந்தால், மந்திராவிர்த்தி என்பதே ஏற்படமாட்டாது.

மந்திரங்களை ஆவிர்த்தி பண்ணும்படி விதி ஏற்பட்டிருப்பதால் அவைகள் விருத்திகள் என்றும் ஆகையால் ஆவிர்த்திக்கத் தக்கவைகளென்றும் சித்திக்கிறது.

ஒரு ரிக்கின் அர்த்தத்தை ஆவிர்த்தி பண்ணுகிறோம் என்று சொன்னால், அது விதிக்கு முக்கியார்த்தமாகமாட்டாது. ரிக்கும் ரிக்கின் அர்த்தமும் வெவ்வேறு. ரிக்கை ஆவர்த்தனம் செய்யும்படி விதியிருக்க, அர்த்தத்தை ஆவர்த்தனம் செய்வது இரண்டாம் பக்ஷம் தான்.

ஆகவே மந்திரங்கள் மனோவிர்த்தி ரூபங்களானதாலும், சகல மனோவிர்த்திகளிலும் ஆத்ம சைதன்னியம் அனுஸ்யூதமாயிருக்கிற படியாலும் ஆத்ம சைதன்னியமும் ஒன்று. இப்படி மந்திரங்களை விருத்திகளாக பாவித்தால் தான் அவைகளின் ஆவர்த்தனமும் சம்பவிக்கும். வேதம் நித்தியம் என்பதும் ஆத்மாவுடன் ஒன்று என்பதும் தெளிவாகும். வேதம் சைதன்னிய ஸ்வரூபமானதால் அது ஜடமான பதமன்று, தர்மாதிகளையும் விளக்கக்கூடியது.

வி-வி:—(14—21)

(14) பிராண மயத்துக்குள் ஆத்மா எந்தமனோமயம் என்பதாய் உபதேசிக்கப்பட்டதோ, நான் சங்கற்பிக்கிறேனென்பதாய் எது அனுபவிக்கப்படுகிறதோ அது உபாசனையின் பொருட்டு ஐந்து அவயவங்களுடன் கூடின புருஷாகாரமாகவே இருக்கிறது. (15—16) கருவில்

விடப்பட்ட தாமிரம்போல் பிராணமயத்தை அனுசரித்து இதுவும் புருஷாகாரமா யிருக்கிறது.

(17—20) யஜுஸ் முதலியவைகள் மூன்று வேதங்களிலுள்ள மந்திரங்களைக் கூறுகின்றன. ஆதேச சப்தம் பிராமண பாகத்தைக் கூறுகிறது.

(21) அங்கிரன் என்கிற மஹாரிஷியால் பார்க்கப்பட்ட நான்காவது வேதத்தின் மந்திரங்கள் அதர்வாங்கிரஸ் எனப்படும். இஷ்டப் பிராப்திக்கும் அநிஷ்ட நிவிர்த்திக்கும் அவைகள் சாதகங்களாகஇருப்பதால் பிரதிஷ்டை. யஜுஸ் முதலியவைகள் சப்தஸ்வரூபங்கள், மனோ ரூபமன்று. ஆயினும், அவைகளை ஆலோசிக்கும் மனோவிர்த்திகள் யஜுஸ் முதலிய சப்தங்களால் கூறப்படுகின்றன.

(வி:...முன்போல் இந்த மனோமய விஷயத்திலும் சுருதியானது சுலோகத்தை உதாஹரிக்கிறது.)

(22) तदप्येषश्लोकोभवति ॥5 ॥ ததப்யேஷ ஶ்லோகோ பவதி ॥5

इतितृतीयःखण्डः

இதி த்ருதீய: கண்ட:



பதவுரை.—

तदपि ததபி=அந்த விஷயத்திலும்

एषः ஏஷ:= இந்த

श्लोकः ஶ்லோக:=சுலோகம்

भवति பவதி=இருக்கிறது.

ச—பா=முன் போலவே இந்த சுலோகமானது மனோமயாத்மாவை பிரகாசம் செய்கிறது.

4-வது அனுவாகம்.

(1) यतो वाचो निवर्त्तन्ते । யதோ வாசோ நிவர்த்தந்தே ।

(2) अप्राप्य मनसासह । அப்ராப்ய மநஸா ஸஹ ।

(3) आनन्दं ब्रह्मणो विद्वान् । ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ।

(4) नबिभेति कदाचनेति ॥1॥ நபிபேதி கதாசநேதி ॥ 1 ॥

பதவுரை:—

து:—(22)तत् अपि தஸ்மிந்அபி=முன் சொன்ன அர்த்தத்திலும் एषःश्लोकः भवति ஏஷ:ஶ்லோக:பவதி=இந்த சுலோகமிருக்கிறது

அ:—(1) वाचः வாசஃ=வாக்கு (கள்)
(2) मनसा सह மநஸா ஸஹ=மனத்துடன்
(1) यतः யதஃ=எதினின்றும்
(2) अप्राप्य அப்ராப்ய=அடையாமல்
(1) निवर्त्तन्ते நிவர்த்தந்தே=திரும்பி விடுகின்றனவோ
(2) ब्रह्मणः ப்ரஹ்மணஃ=(அந்த) பிரம்மத்தின்
आनन्दं ஆநந்தம்=ஆநந்தத்தை
विद्वान् வித்வாந்=அறிகிறவன்
(कदाचन கதாசந=எக்காலத்திலும்
नबिभेति நபிபேதி=பயப்படுகிறதில்லை
इति இதி=என்று (சமாப்தி.)

(சு:—வா:—முன் சொன்ன மனோமய ஸ்வரூபத்துக்கு சாக்ஷியாக இந்த சுலோகம் கூறப்படுகின்றது. அதாவது வேதங்கள் முன் சொன்னபடி என்பதைக் காட்டும் பொருட்டு இந்த சுலோகம் கூறப்படுகின்றது. பிரம்மந்தான் வாக்குக்கும் மனதுக்குமெட்டாதது. மற்றதெல்லாம் இவைகளுக்கு விஷயங்களாகின்றன. பிரம்மத்தைப் பற்றி பிரஸ்தாப மில்லாததால் இந்த சுலோகம் மனதைப் பற்றிச் சொல்லுவதற்காகவே ஏற்பட்டது. மனோமயத்தில் அடங்கினது மனதும் வாக்கும். இவைகளுக்கு விஷயமாகாதது பிரம்மம் மட்டுமே.

---

4-வது அனுவாகம்.

வி:—(3) विद्वान् வித்வாந் :–दृश्यतेत्वग्र्यया बुद्ध्या मनसा तु विशुद्धेन த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்த்யா மநஸா து விஶுத்தேந அதாவது சலனமற்ற தீக்ஷ்ணமான புத்தியால் காணப்படுகிறார். சுத்தமான மனதினால் அறியத்தகுந்தவர், என்கிற சுருதியிற் சொன்னபடி சுத்தமான மனதினால் அறிந்தவர்.

---

து:—यतः யதஃ=எந்த பிரம்மத்தினின்றும்

IV (1) वाचः வாசஃ=ரிக்வேத முதலியவைகள்
(2) मनसासह மநஸாஸஹ=மனது இந்திரியம் இவைகளுடன்
अप्राप्य அப்ராப்ய=முற்றிலும் தெரிந்துகொள்ளாமல்
निवर्तन्ते நிவர்த்தந்தே=திரும்பிவிடுகின்றனவோ
(3) (ततः ததஃ=அப்படிப்பட்ட)
ब्रह्मणः आनन्दं ப்ரஹ்மணஃ ஆநந்தம்=ஆநந்த ஸ்வரூபமான பிரம்மத்தை
विद्वान् வித்வாந்=அறிகிறவன், ஞானி,
(4) कदाचन கதாசந=ஒருக்காலத்திலும்

அ:—ஆ:—பிரகிருத பிரஸ்தாபம் மனோமய கோசத்தைப் பற்றி யானதால், இவ்விடத்தில் சொல்லியது பரப்பிரம்மமாக மாட்டாது. மனதானது வாக்குக்கு வெளியே யிருக்கிறது. அதாவது மனது வி ளங்குகிறதற்கு வாக்கு முதலிய சாதகங்கள் வேண்டியதில்லை. மனது மனதுக்கும் வெளியே இருக்கிறது. ஏனெனின் தன் விர்த்திக்குத் தான் விஷயமாக மாட்டாது. சூத்திராத்மா மஹத்தா யிருப்பதாலும் மனது தத்ஸ்வரூபமா யிருப்பதாலும், மனதிற்கு பிரம்ம சப்தமும் பொருந்தும். மனோமய பிரம்மத்தை உபாசிப்பதின் பலம் ஆநந்தம் என்று அறிந்து உபாசனையால் பிரம்மாநந்தத்தை அடைந்து ஹி ரணியகர்ப்ப ஸ்திதியை அடைந்தவன் எந்த காலத்திலும் எதற்கும் பயப்பட வேண்டியதில்லை.

(வி—வி:—பிரம்மத்தின் ஸ்வரூபமான ஆநந்தம் சப்தங்களா லும் மனதாலும் அடையப்பட மாட்டாது. ஆகையால் இதினின்றும் அவைகள் திரும்பி விடுகின்றன; இப்படிப்பட்ட மனோமய உபாதி யுடன் கூடின பிரம்மத்தின் ஆநந்தத்தை தியானிக்கிறவன் ஒருக்கா லும் பயப்படமாட்டான். பிரம்மமானது ஜாதி குணம் முதலியவைக ளற்றதால் சப்த பிரவிர்த்திக்கே இடமில்லை.

மனதானது பதார்த்தங்களை நினைக்கும்போது அவைகள் இப் படிப்பட்டவை, அப்படிப்பட்டவை என்பதாய் நினைக்கிறது. இப்படி ஒருவிதமாயும் பிரம்மத்தை நினைக்க முடியாது. ஆகையால் மனது பிரம்மத்தினின்றும் திரும்பி விடுகின்றது.

முன் அன்னமய, பிராணமய உபாதிகளுடன் கூடின பிரம்மத் தின் உபாசனை கூறப்பட்டது. அப்படியே இப்போது மனோமய உபா தியுடன் கூடின பிரம்மத்தின் உபாசனை கூறப்படுகின்றது. இல்லா

---

வி:—(1-4) மற்ற பதங்களுக்கு அர்த்தம் அத்வைதத்திற் போல வே இவ்விடத்தில் பிரம்மாநந்தமானது சுத்த மனதிற்கு விஷ யமாக இருக்கிறதென்று கூறப்பட்டிருப்பதால் அந்த பிரம்மா நந்தம் மனதிற்கு விஷயம் என்று அறியவும்.

---

து:—न बिभेति நபிபேதி=பயப்படுகிறதில்லை. அவன் பயமற்றவ னாய் முக்தனாகிறான்.

எப்படி அறிந்து முக்தனாகிறான் எனில், பிரம்மம் மனதிற் கும் வாக்குக்கும் எட்டாதது, அபரிச்சின்னம் என்பதாய் அறிய வேண்டியது.

इति இதி சப்தம் एषश्लोकःभवति வஷச்லோகோபவதி என்பது டன் அபகரித்துக்கொள்ளவும்.

அ:—விடின், யஜுஸ் முதலியவைகளை சிரசு முதலியவைகளாகச் சொன்னது வியர்த்தமாகும். வித்வான் என்பதின் வித் என்னும் பகுதி பதத்திற்கு உபாசனை என்பது அர்த்தம். ஸ்ரீபாஷ்யகாரரே வேதாந்த சூத்திரம் IV—I-Iன் பாஷ்யத்தில் இதைவிவரித்திருக்கிறார்.

இந்த உபாசனையால் இவ்விடத்திலும் பயனில்லை. பிறகும் பயனில்லை, நிரந்தரம் உபாசிக்கிறவனுக்கு இராகத்துவேஷாதிகளே சம்பவிக்க மாட்டாவாகையால் இவ்விடத்தில் பயனில்லை. கிரமமுக்தி சித்திக்கக் கூடியதால் பிறகும் பயனில்லை. இந்த இரண்டுவித பயமுமில்லை என்பதை कदाचन கதாசந என்கிற பதம் காட்டுகிறது.

வி—வி:—மனோமயத்தின் உபதேசத்தின் தாற்பரியத்தை சுருதி கூறுகிறது.

(5) तस्यैष एव शारीर आत्मा । தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா ;

(6) यः पूर्वस्य ॥ 2 ॥ யஃ பூர்வஸ்ய ॥ 2 ॥

பதவுரை:—

(6) पूर्वस्य பூர்வஸ்ய=முன்சொன்ன

(5) तस्य தஸ்ய=அதற்கு

(5—6) यःएषः एव யஃ ஏஷஃ ஏவ=இவனே நிச்சயம்

(5) शारीरःआत्मा ஶாரீரஃ ஆத்மா=சரீரத்துக் குள்ளிருக்கும் ஆத்மா.

ச—பா.—

முன்சொன்ன அதாவது பிராணமயனுக்கு மனோமயனே ஆத்மா. இவன் பிராணமயத்தை சரீரமாயுடையவன் (முன் சொல்லியபடியே அர்த்தத்தை விவரித்துக் கொள்ளவும்.)

வி—வி.—பிராணமயம் சரீரம். அதின் ஸ்வாமி மனோமய ஆத்மா. இப்படி திருடமான நிச்சயம் ஏற்படுகிறது. பிராணன் அனாத்மா என்பது பிரஹதாரணியம் III—15—ல் ஒருகதை மூலமாக விவரிக்கப்பட்டிருக்கிறது.)

---

வி:—(6) पूर्वस्य பூர்வஸ்ய=முன் சொன்ன பிராணமயனுக்கு

यः யஃ= எவன் ஆத்மாவோ

(5) एषःएव ஏஷஃஏவ=அவனே

---

து:—(5) அ-கை:—மனோமயஸ்திதியை तस्यैष தஸ்யைஷ=என்பதினால் சொல்லுகிறார்.

पूर्वस्य பூர்வஸ்ய=அன்னரஸமயனாகிற அநிருத்தனுக்கு

## விஞ்ஞானமய கோசம்.

(வி—வி:—பிராணமயத்தினின்றும் புத்தியை பூராவாக திருப்பினவன் மனோமயத்தினின்றும் புத்தியை திருப்பி உள் செலுத்தும் பொருட்டு சுருதியானது விஞ்ஞானமய கோசத்தை உபதேசிக்கிறது.)

(7) तस्माद्वा एतस्मान्मनोमयात् । தஸ்மாத்³வா ஏதஸ்மாந்மநோமயாத் ।

(8) अन्योऽन्तरआत्मा विज्ञानमयः । அந்யோऽந்தர ஆத்மா விஜ்ஞாநமய: ।

(9) तेनैष पूर्णः ॥ ३ ॥ தேநைஷ பூர்ண: ॥ 3 ॥

பதவுரை.—

(7) तस्मात् वै एतस्मात् தஸ்மாத்³வை ஏதஸ்மாத்=இப்படி முன் சொல்லப்பட்ட

मनोमयात् மநோமயாத்=மனோமயத்தைவிட

(8) अन्यः அந்ய:=வேறானது

अन्तरः அந்தர:=உள்ளேயிருக்கிற

विज्ञानमयः விஜ்ஞாநமய:=விஞ்ஞான விகாரமான

आत्मा ஆத்மா=ஆத்மா

(9) तेन தேந=அதினால்

एषः ஏஷ:=இது

पूर्णः பூர்ண:=பூர்ணமாயிருக்கிறது.

---

வி:—(5) तस्य தஸ்ய=மனோமயனுக்கும்

आत्मा ஆத்மா=ஆத்மாவென்று அர்த்தம். அன்னமய பிராணமய மனோமய இந்த மூன்று கோசங்களுக்கும் ஆத்மா ஒன்றே என்பது கருத்து.

(7) அந்த ஆத்மா யாரென்பதை तस्मात् தஸ்மாத் என்கிற வாக்கியம் கூறுகிறது.

(8) विज्ञानमयः விஜ்ஞாநமய:=ஜீவன். இவ்விடத்தில் விஞ்ஞானமய சப்தத்திற்கு ஜீவன் என்பது அர்த்தம், புத்தி மாத்திரம் அர்த்தமல்ல.

---

து:—(6) यः ய:=பிராணமயனுகிற பிரத்யும்னன் ஆத்மாவானுனே

तस्य தஸ்ய=அந்த பிரத்யும்னனுக்கு

(5) एषः ஏஷ:=இந்த மனோமயனை சங்கர்ஷணன்

शारीरआत्मा ஶாரீர ஆத்மா=தேகியாகிய ஆத்மா அதாவது அன்

ச—பா·=

(7) तस्मात् वै एतस्मात् தஸ்மாத்வை ஏதஸ்மாத்= இதற்கு முன்போலவே அர்த்தம் செய்யவேண்டியது.

---

து.—னமயனை சரீரமாய் பாவிக்கும்போது எப்படி பிராணமயனை சரீரியாக பாவித்தோமோ அப்படி பிராணமயனை சரீரமாக பாவிக்கும்போது மனோமயனை சரீரியாக பாவிக்கவேண்டியது என்பது கருத்து.

பிரமாணவாக்கியம்:—

सएषजगतामायु स्तस्मिन्संकर्षणःस्थितः ।
शिरस्तस्ययजुर्नाम यज्ञानांहरणात्स्मृतं ।
यजुःसंस्थंचबहु ऋकसामान्तस्थितौसदा ।
ऋगचनायाः स्वोकारात्सामदोषान्समीकृतेः ।
पंचरात्रगतंमध्य मादेशाख्यंसुविस्मृतः ।
अथर्वाख्यंतथापुच्छं मधरंचांगिनारसः ।
मनोवाचामगम्यतं ज्ञाद्यानंदस्वरूपिणं ।
कुतश्चिन्नविभेत्येव वासुदेवोतरस्ततः ।। तत्त्वनिर्णये ।।

ஸஏஷஜகதாமாயு꞉ஸ்தஸ்மிந்ஸங்கர்ஷண꞉ஸ்தித꞉ ।
ஶிரஸ்தஸ்யயஜுர்நாம யஜ்ஞாநாம் ஹரணாத்ஸ்ம்ருதம் ।
யஜு꞉ஸம்ஸ்தம்சபஹு ருக்ஸாமாந்தஸ்திதௌஸதா ।
ருக்ரசநாயா꞉ ஸ்வீகாராத்ஸாமதோஷாத்ஸமீக்ருதே꞉ ।
பஞ்சராத்ரகதம்மத்ய மாதேஶாக்யம்ஸுவிஸ்ம்ருதே꞉ ।
அதர்வாக்யம்ததாபுச்சம் மதரம்சாங்கிநாரஸ꞉ ।
மநோவாசாமகம்யந்தம் ஜ்ஞாநாநந்தஸ்வரூபிணம் ।
குதஶ்சிந்நபிபேத்யேவ வாஸுதேவோந்தரஸ்தத꞉ ॥
(தத்த்வநிர்ணயே)

மனோமய கோச பிரகரணம்
முற்றிற்று.

விஞ்ஞானமய பிரகரணம்.

(7) அ-கை:—எந்த வாக்கியத்தினால் பிரம்மத்தின் லக்ஷணம் கூறப்பட்டதோ அந்த வாக்கியத்திலுள்ள ஞான சப்தத்துக்கு அர்த்தம், தன்னுடையவும் பிறருடையவும் விசேஷங்களை சம்பூர்ணமாய் அறிவதே என்கிற அபிப்பிராயத்துடன் அதை இனி வர்ணிக்கிறார். तस्मात् தஸ்மாத் என்பதினால் முன்போலவே வியாக்கியானம் செய்துகொள்ளவேண்டியது.

அ:—(8) अन्यो ...विज्ञानमयः அந்ய:...விஜ்ஞாநமய: :—

மனோமயத்துக்குள் இருக்கும் ஆத்மா விஞ்ஞானமயம். மனோமயம் என்பது வேதஸ்வரூபம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. வேதார்த்தத்தின் நிச்சயம் விஞ்ஞானமயம். இந்த நிச்சய ஞானமும் அந்தக்கரணத்தின் தர்மம், தன்மயம் அதாவதுபிரமாணஸ்வரூபங்களான நிச்சய விஞ்ஞானங்களால் ஏற்பட்டது விஞ்ஞானமய ஆத்மா. பிரமாணங்களால் ஸ்வரூபங்களைத் தெரிந்துகொண்டுதான் ஒருவன் யாகாதிகளைச் செய்கிறான், இந்த விஞ்ஞானம் யாகாதிகளுக்குக் காரணமென்பது அடியில் வரும் சுலோகம் கூறுகிறது.

சு—வா.—வேதஸ்வரூபமாகச் சொல்லப்பட்ட மனோமயம் மனதின் விர்த்திகளால் ஏற்பட்டது. இந்த விருத்திகளை உடையவன் விஞ்ஞானமயன். வியவசாயம் அதாவது நிச்சய ஸ்வரூபமான புத்தியானது இந்த விருத்திகளை உடையவனாகச் சொல்லப்படுகின்றது. புத்தியானது யாகத்தைச் செய்கிறது என்பதாய் சுருதி சொல்லுகிறது.

புத்தியானது விருத்திகளை உடைய கர்த்தாவாக இராத பக்ஷத்தில் இந்த சுருதிக்கு அர்த்தம் ஏற்பட மாட்டாது. ஆத்மா நிர்விகாரமானதால் சுத்த ஆத்மாவை அறியக்கூடாது. ஆகையால் ஆத்ம சைதன்னிய ஆபாசத்துடன் கூடியிருக்கிற புத்தியானதுகர்த்தா. ஆத்மா கர்த்தாவாக இருக்கமாட்டா தாகையால் விஞ்ஞானம் கர்த்தாவாக இருக்கவேண்டும். விஞ்ஞானம் கர்த்தாவாக இராத பக்ஷத்தில் யாகாதிகளே ஏற்படமாட்டா.)

வி—வியாக்கியானம்:—

கர்மம், சங்கல்பம், முதலிய விருத்தி சமூகரூபமான மனோமயமானது பிரத்தியகாத்மாவுக்கு உபாதியாக இருப்பதால் ஆத்மாவாகச் சொல்லப்பட்டது. நான் இச்சிக்கிறேன், நான் சங்கற்பிக்கிறேன் என்கிற அனுபவத்திற்கு வேறான விஞ்ஞானமய ஆத்மாவென்று வேறு ஒன்று இருக்கிறது. உள்ளே யிருக்கிற விஞ்ஞான மயத்தால் வெளியே யிருக்கிற மனோமயன் பூரிக்கப்பட்டிருக்கிறான். சத்துவ குண காரியமான ஞானசக்தியில் தமஸ் சேர்ந்தவுடன் இராகதுவேஷாதி தாமஸ தர்மங்களுடன் கூடின மனது ஏற்படுகிறது. அப்படியே இரஜஸ் சேர்ந்தவுடன், இராஜஸமான கர்த்திருத்வ தர்மத்துடன் (அதாவது நான் கர்த்தா வென்கிற ஞானம் விஞ்ஞானம் ஏற்படுகிறது.

---

து.-(8)विज्ञानमयः விஜ்ஞாநமய:=விசேஷமான ஞானத்தால் நிறைந்திருப்பதினால் விஞ்ஞானமய சப்தத்தால் கூறப்பட்ட, விஞ்ஞானமய கோசத்திலிருக்கிறவன் வாசுதேவன்.

அ:—மனோவிர்த்திகளுக்குள் நான் கர்த்தாவென்கிற ஒருவிர்த்தி ஞானமிருக்கிறது. இந்த தர்மம் எதில் சம்பந்தப்பட்டிருக்கிறதோ அதுதான்விஞ்ஞானம். அதின்விகாரம் விஞ்ஞானமயம்.ஜனங்கள் "நான்" என்பதாய் எதை சாதாரணமாய் அறிகிறார்களோ அதுவே இரஜோகுணத்துடன் சேர்ந்த சத்வகுணகாரியம். இது தான் "நான்" என்பதாய் விளங்குகிறது. மனதுக்கு விஷயமானது இரண்டுவித பாவங்கள். ஒன்று "இது" என்பது. மற்றொன்று "நான்" என்பது. இதுவென்பது பிரமாதாவு (அறிகிறவனு) க்கு வெளியே யிருக்கிற, பிரமாதாவைவிட வேறான ஒன்றைக் கூறுகிறது. நான் என்பது உள்ளே யிருக்கிற பிரமாதாவையே கூறுகிறது. எவ்வித பிரமாணத்தால் எந்த ஞானம் ஏற்பட்டாலும், அதை உடையவன் நான் "நான்" என்று சொல்லப்படுகிறான். அவன்தான் விஞ்ஞானமயன். இதை மனதில் வைத்துக்கொண்டுதான் ஆதர்வணிகர்கள் (பிரச்னோபநிஷத்து IV-8, 9 பார்க்க) சக்ஷுஸ் முதலிய சாதகங்களையும், அவைகளால் தெரியக்கூடியவைகளையும் சொல்லி, சர்வ வியவஹாரங்களையும் செய்கிறவனைத் தனியாக அதாவது இவன் திர்ஷ்டா, சுரோதா, வென்பதாகச் சொல்லுகிறார்கள். கௌஷீதகர்களும் (கௌஷீதகி உபநிஷத்து III—68 பார்க்க) அப்படியே சொல்லுகிறார்கள்.

ஆக்ஷேபம்:—சகலவியவஹாரங்களையும் செய்கிறவன் ஆத்மா, விஞ்ஞானமய கோசமன்று. அப்படியே வியாசர் II—3—33-ல்சொல்லியிருக்கிறார்.

உத்தரம்:— இந்த ஆக்ஷேபம் சரியன்று. உபாதி மூலமாகத்தான் ஆத்மா கர்த்தாவாகிறான் என்பது II—3—40-ல் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இதில் சொல்லியிருக்கிறதாவது:— தச்சன் எப்படி ஆயுதங்களால் வீட்டைக் கட்டுகிறானோ, எவைகளன்றியில் கட்டவில்லையோ, அப்படி ஆத்மா ஸ்வயம் அசங்கனாயிருந்தாலும் வாக்கு முதலிய இந்திரியங்களுடன் சேர்ந்து கர்த்தாவாகிறான்.

ஆக்ஷேபம்:—அப்படியானால், பாஹிய ஆந்தர இந்திரியங்களின் சமூகமான மனோமயத்துடன் சேர்ந்து ஆத்மா கர்த்தாவாகிறான் என்று சொல்லவேண்டும். விஞ்ஞானமயத்தால் பிரயோஜனமென்ன?

---

து:-(9)तेन தேந=இந்த விஞ்ஞானமயன் என்கிற வாசுதேவனால்
एष: ஏஷ:=இந்த மனோமயன்
पूर्ण: பூர்ண:=இடம்விடாமல் பூரிக்கப்பட்டிருக்கிறான்,

அ:—உத்தரம்:—இது சரியன்று. அப்போது தச்சனும் வேண்டிய தில்லை. பிராமணன் முதலான்வர்களும் ஆயுதங்களை வைத்துக்கொண்டு வீட்டைக் கட்டிவிட்டால் தச்சனால் ஆகவேண்டியதென்ன. வீடுகட்டவேண்டியதற்காக வேண்டிய ஞானம் தச்சனிடத்தில் தான் இருப்பதால் அவன் எப்படி அவசியம் வேண்டியவனோ, அப்படி சகல வியவஹாரங்களைச் செய்யவும் அறியவும் விஞ்ஞானமயன் வேண்டியது. அசங்கனான ஆத்மாவில் இவ்விரண்டும் ஏற்பட மாட்டாது. விஞ்ஞானமயஉபாதியுடன்கலந்து தான் ஆத்மா செய்கிறவனும் அறிகிறவனும் சொல்லப்படுகிறான். கடத்தை ஒரு இடத்தினின்றும் மற்றொரு இடத்துக்குக் கொண்டு போனாலும் கடாகாசம் போகிறது என்று சொல்லுவது போலும். விஞ்ஞானமய உபாதியிலிருக்கிற கர்த்திருத்வமே ஆத்மாவில் ஆரோபிக்கப்படுகிறது. கர்த்திருத்வ சக்தியுடன் கூடின விஞ்ஞானமயம் கரணத்வ சக்தியுடன் கூடின மனோமயத்துக்குள்ளிருக்கிறது.

ஆக்ஷேபம்:—மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் இவைகள் அந்தக்கரணத்தின் விர்த்தி விசேஷங்களே. வெவ்வேறு காலங்களில் இருக்கிறவைகள். அப்படி யிருக்க, மனோமயமும் விஞ்ஞானமயமும் வெவ்வேறு என்றும், ஒன்றுக்குள் மற்றொன்று இருக்கிறதென்றும் எப்படிச் சொல்லலாம்.

உத்தரம்:—அப்படி சொல்லக்கூடாது. ஒன்று காரணரூபம் என்றும் மற்றொன்று கர்த்தா ரூபம் என்றும் நாம் ஒப்புக்கொண்டிருக்கிறோம். நீ சொன்ன நான்கும் கரணத்தின் வியாபாரவிஷயங்களே. கர்த்தா கரணத்தைவிட வேறு. அவன் சில இடங்களில் புத்தி சப்தத்தாலும், சில இடங்களில் விஞ்ஞான சப்தத்தாலும், சில இடங்களில் (அஹம்) நான் என்கிற சப்தத்தாலும் கூறப்படுகிறான். இதுவும் இந்த மனோமயமும் விஞ்ஞானமயமும் வெவ்வேறு என்பதும், ஒன்றுக்குள் மற்றொன்று இருக்கிறதென்பதும் கடோபநிஷத்தில் I—3வது வல்லியில் ஸ்பஷ்டமாய் தெரியவரும்.

சித்தின் சாயையுடன் கூடின அகங்காரமே இவ்விடத்தில் விஞ்ஞானமய சப்தத்தால் கூறப்படுகின்றது. அன்னமயத்தில் பிராணமயம் நிறைந்திருக்கிறது. பிராணமயத்தில் மனோமயம் நிறைந்திருக்கிறது. மனோமயத்தில் விஞ்ஞானமயம் நிறைந்திருக்கிறது. இப்படிப்பட்ட அன்னமயத்தில் ஆபாத மஸ்தகம் வரையில் நான் மனுஷ்யன் என்கிற ஞானம் வருகிறது.

## விஞ்ஞானமய உபாசனை.

அ:—(வி—வி:—அவதாரிகை:—விஞ்ஞானமயம் ஆத்மா என்கிற புத்தி பலப்படும் பொருட்டு, அதின் உபாசனையை விதிப்பதற்காக, அதின் ஸ்வரூபத்தை சுருதி கூறுகிறது.

(10) स वा एष पुरुष विधएव । ஸ வா ஏஷ புருஷ விய ஏவ।

(11) तस्यपुरुष विधतां । தஸ்ய புருஷவியதாம் ।

(12) अन्वयं पुरुषाविधः । அந்வயம் புருஷவிய: ।

(13) तस्यश्रद्धेव शिरः । தஸ்ய ச்ரத்தைவ சிர: ।

(14) ऋतं दक्षिणः पक्षः। ருதம் தக்ஷிண: பக்ஷ: ।

(15) सत्यमुत्तरः पक्षः । ஸத்ய முத்தர: பக்ஷ: ।

(16) योगं आत्मा । யோக ஆத்மா ।

(17) महः पुच्छं प्रतिष्ठा ॥ 4॥ மஹ: புச்சம் ப்ரதிஷ்டா ॥ 4॥

பதவுரை:—

(10) स:वै एष: ஸ: வை ஏஷ:=அந்த இவன்
पुरुषविधःएव புருஷவிய: ஏவ=புருஷாகாரமே
(11) तस्य தஸ்ய=அவனுடைய
पुरुषविधताम् புருஷவியதாம்=புருஷாகாரத்தை
(12) अनु அநு=அனுசரித்து
अयं அயம்=இவன்
पुरुष विधः புருஷவிய:= புருஷாகாரம்
(13) तस्य தஸ்ய=அவனுக்கு
श्रद्धा एव ச்ரத்தா ஏவ=சிரத்தையே
शिरः சிர:=சிரசு
(14) ऋतं ருதம்=தர்மம்
दक्षिणः தக்ஷிண:=இடது
पक्षः பக்ஷ:= இரக்கை
(15) सत्यं ஸத்யம்=சத்தியம்
उत्तरःपक्षः உத்தர: பக்ஷ:=இடது இரக்கை
(16) योगः யோக:= யோகம்
आत्मा ஆத்மா=ஆத்மா
(17) महः மஹ:= மஹத்து
पुच्छं புச்சம்=வால்
प्रतिष्ठा ப்ரதிஷ்டா=ஆதாரம்.

ச—பா:—

(13) श्रद्धा ஶ்ரத்தா=எவனுக்கு நிச்சய ஞானம் உண்டாயிருக்கிறதோ அவனுக்கு சிரத்தையானது செய்யவேண்டிய காரியங்களில் முதலில் ஏற்படுகிறது. செய்யவேண்டிய காரியங்களுக்கு முதலில் இருக்கவேண்டிய தாகையால் அது சிரசாக வர்ணிக்கப்படுகிறது.

(சு—வா:—श्रत् ஶ்ரத்=என்றால் சத்தியம், धा தா=என்றால் தரித்தல் ஆகவே சிரத்தா என்றால் பிரத்தியகாத்மாவே சத்தியம் என்கிற மனோநிச்சயம் என்பதாய் பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.)

(14-15) ரிதம், சத்தியம் இப்பதங்களுக்கு முன்னமேயே (சிக்ஷாவல்லி பார்க்க) அர்த்தம் சொல்லியாய்விட்டது;

(16) योग: யோக:=யுக்தி சமாதானம். இது ஆத்மாபோலிருக்கிறது. பிரத்தியகாத்மாவை அறியச் சாதகங்களாயிருக்கிற சிரத்தை முதலியவைகள் சமாதான மடைந்த புருஷனுக்கு (தியான விஷய

---

வி:—(13) இவ்விடத்தில் சிரத்தா, ரிதம், சத்தியம், சப்தங்கள் ஞான விசேஷத்தைக் கூறுகின்றன,

(16) योग: யோக:=—

ब्रह्मणेत्वामहसओमित्यात्मानं युंजीत

ப்ரஹ்மணேத்வா மஹஸ ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத

---

து:—(10) स: वा ...ஸவா...=முன்போலவே அர்த்தம்.

तस्यश्रद्धा தஸ்ய ஶ்ரத்தா...=அவனுடைய அவயவஸ்தானங்கள் முன்போலவே.

(13) तस्यविज्ञानमय தஸ்யவிஜ்ஞாநமய விஞ்ஞானமயனென வாசுதேவனுக்கு

शिर: ஶிர:=சிரஸானது

श्रद्धा ஶ்ரத்தா=சுருதியை தரிக்கிறதினால் சிரத்தா என்கிற பெயருள்ள, சிரத்தையிலிருக்கிற பகவானுடைய ரூபம்.

(14) दक्षिण:पक्ष:ऋतं தக்ஷிண:பக்ஷ: ருதம்=ஞானத்தைக் கொடுப்பதினால் ரிதமென்கிற பெயருள்ள ரிதத்திலிருக்கிற பகவானுடைய ஸ்வரூபம் வலதுகை.

(15) सत्यंउत्तर:पक्ष: ஸத்யம் உத்தர:பக்ஷ:=சத்துக்களை நியமனம் செய்கிறதினால் சத்தியத்திலிருக்கிற சத்திய என்கிற பெயருள்ள பகவானுடைய ரூபம் இடதுகை.

(16) योग: आत्मा யோக: ஆத்மா=பகவானுடைய ரூபம் யோகத்துக்குத்தகுந்தபடி சர்வ பிராணிகளுடனும் சேர்ந்திருப்பதினால் யோகத்திலிருக்கிற யோகம் என்கிற பெயருள்ள இந்த ரூபம் பகவானுடைய சரீரத்தின் மத்தியபாகம்.

அ:—த்தில்) அங்கங்கள் போலிருக்கின்றன. ஆகையால்விஞ்ஞான மயத்துக்கு யோகம்(அதாவது சமாதானம், தியானம்,ஆத்மா(அடிக் கட்டை ஆதாரம்) வாக இருக்கிறது.

(17) महः மஹ:=இது மஹத்தத்துவம். முதலில் உண்டானது. महद्यक्षं प्रथमजं மஹத்யக்ஷம் ப்ரதமஜம் (பெரிது, ஸ்துதிக்கத்தக்கது; முதலில் உண்டானது) என்பதாய் வேறு (பிரஹதாரணியக V-5-1) சுருதி கூறுகிறது.

पुच्छंप्रतिष्ठा புச்சம்ப்ரதிஷ்டா=விஞ்ஞானமயத்துக்கு ஆதாரமாக இருப்பதால் மஹத்து வாலாகச் சொல்லப்படுகின்றது. காரணம் காரியத்துக்கு ஆதாரம். மரம்செடி முதலியவைகளுக்கு பிருதிவீ ஆதாரமாயிருப்பது போலும். புத்தியால் தெரியக்கூடியதுயாவற்றிற்கும் மஹத்துத்தான் காரணம். ஆகையால் அந்த விஞ்ஞானமய ஆத்மாவுக்கு மஹத்தானது பிரதிஷ்டையாக இருக்கிறது;

**வி—வியாக்கியானம்.**

(10) स:एष: ஸஏஷ:=முன் சொன்னபடி சுருதி முதலியவைகளிலும் லோக வியவஹாரத்திலும் கர்த்தா வென்பதாய் எவன் கூறப்படுகிறனோ அவன்தான் "நான்" என்பது; விஞ்ஞானமயன் என்பதும் அவன்தான்.

---

வி:—என்று சொன்னபடி யோகத்துக்கு ஞான விசேஷமென்று அர்த்தம்.

(17) महः மஹ:=யோக விரோதியை தள்ளுகிற சாமர்த்தியமானது

இந்த சிரத்தை முதலானவைகள் ஆத்மாவின் குணங்கள் பிரசித்தமாகையால் அந்தந்த குணத்துடன் கடின ஆத்மஸ்ரூபம் சிரசு பக்ஷம் புச்சம் முதலியவைகளாக் கூறப்படுகின்றது என்று அறியவும், ஆகையால்

तस्मादनतिरिक्तैःसावयवैःशिरः पक्षपुच्छादरूपणपटलात्प्रकरणस्य

தஸ்மாதநதிரிக்தை: ஸாவயவைஶ்ஶிர: பக்ஷபுச்சாதிரூபணபடலாத் ப்ரகரணஸ்ய

என்கிற சூத்திரபாஷ்ய வசனத்துக்கு விரோதமில்லை.

**4-வது அனுவாகம் முற்றிற்று.**

---

(17) महःपुच्छंप्रतिष्ठा மஹ:புச்சம்ப்ரதிஷ்டா=பூஜ்ஜியங்களாயிருப்பதினால் மஹ: என்கிற பகவானுடைய இரண்டு பெயர்கள் கடைசியானபாகம்போல் கடைசியிலிருக்கிற இரண்டுபாதங்கள். சிரத்தை, ரிதம் முதலியவைகள் விஞ்ஞானமயன் என்கிற வாசுதேவனுடைய ஆதீனம் என்பது கருத்து.

அ:—(13) உபாசனையின் பொருட்டு மனோமயத்துக்கு சிரசு முத லியவைகளைக் கற்பித்ததுபோல் அதில் பூரித்திருக்கிற விஞ்ஞான மயத்துக்கும் இவைகள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன: சிரத்தை மு தலியவைகள் விருத்திகளாக இருப்பதால்மனோமயத்தின் காரியங்க ளாலும், விஞ்ஞானமயம் கர்த்தாவாக இருப்பதால், கரணம் (மன து) அதின் விர்த்திகள் இவைகள் அதையே சேர்ந்தவைகள்: ஆகை யால் சிரத்தை முதலியவைகள் விஞ்ஞானமயத்தின் சிரசு முதலிய வைகளாகச் சொல்லப்பட்டன.

குருவாலும் சாஸ்திரத்தாலும் சொல்லப்பட்ட தத்துவம் வா ஸ்தவம், அதை அறியச் சாதகங்களாகச் சொல்லப்பட்டஉபாயங்க ளும் வாஸ்தவம், என்கிற பரமநம்பிக்கையே சிரத்தை.

(14–15) ரிதசத்திய பதங்கள் இந்த விர்த்திகளுடன் சம்பந் தப்பட்ட கர்த்தாவைக் கூறுகின்றன,

(16) திருபுடி லக்ஷணமான சம்பிரஞ்ஞாத சமாதியையும், தி ருபுடியற்ற அசம்பிரஞ்ஞாத சமாதியையும் யோகசப்தம் கூறுகிற து. சித்த விருத்தி நிரோதமே யோகம் என்பதாய் யோக சாஸ்திரத் தில் (I--2)சொல்லியிருக்கிறது.

(17) மஹ என்பது அவ்வியாகிருத்தினின்றும் உண்டான மஹத்து தத்துவம்; அதாவதுஹிரணியகர்ப்பனைக்கூறுகிறது. இது "நான்" என்கிற கர்த்தாக்களின் சமஷ்டி ரூபமாயிருப்பதால் விஞ் ஞான மயத்துக்கு பிரதிஷ்டையாயிருக்கிறது.)

(வி–வி:—இந்த விஞ்ஞானமய விஷயத்திலும் முன்போல் சுலோகத்தை சுருதியானது கூறுகிறது.)

(18) तदप्येषश्लोकोभवति ।5।

(18) தத³ப்யேஷஶ்லோகோப⁴வதி ॥ 5 ॥

(इतिचतुर्थोनुवाकः)

(இதிசதுர்தோ²நுவாக:)

பதவுரை:—

तदपि தத³பி = அந்த அர்த்தத்திலும்

एषः ஏஷ: = இந்த

श्लोकः ஶ்லோக: = சுலோகம்

भवति ப⁴வதி = இருக்கிறது.

ச-பா:—முன் போலவே. அன்னமயம்முதலியவைகளைப் பற

து:-(18)तदप्येषश्लोकः தத³ப்யேஷஶ்லோக:= இந்தஅர்த்தம்பின்வரும் சுலோகத்திலிருக்கிறது:

அ:—இ பிராண பாகத்தில் சொல்லியவைகளை பிரகாசம் செய்ய சுலோகங்கள் இருந்தன; அப்படியே விஞ்ஞானமய விஷயத்திலும் சுலோக மிருக்கிறது.

4-வது அநுவாகம் முற்றிற்று.

## 5-வது அநுவாகம்.

1 1 (1) विज्ञानं यज्ञं तनुते । விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே ।

(2) कर्माणि तनुतेऽपि च । கர்மாணி தநுதேऽபி ச ।

(3) विज्ञानं देवाः सर्वे । விஜ்ஞாநம் தேவா: ஸர்வே ।

(4) ब्रह्म ज्येष्ठ मुपासते । ப்ரஹ்ம ஜ்யேஷ்ட முபாஸதே ।

(5) विज्ञानं ब्रह्म चेद्वेद । விஜ்ஞாநம் ப்ரஹ்ம சேத்வேத ।

(6) तस्माच्चेन्न प्रमाद्यति । தஸ்மாச்சேந்ந ப்ரமாத்யதி ।

(7) शरीरे पाप्मनो हित्वा । ஶரீரே பாப்மநோ ஹித்வா ।

(8) सर्वान् कामान् समश्नुत इति ॥1॥ ஸர்வாந் காமாந் ஸமஶ்நுத இதி ॥ 1॥

பதவுரை:—

(1) विज्ञानं விஜ்ஞாநம்=வேதாந்தத்தில் நிச்சயமடைந்த புத்தி
यज्ञं யஜ்ஞம்=யஞ்ஞத்தை
तनुते தநுதே=செய்கிறது
(2) कर्माणि अपिच கர்மாணி அபிச=கர்மங்களையும் கூட
तनुते தநுதே—செய்கிறது
(3) सर्वे ஸர்வே=சகலமான
देवाः தேவா:=தேவதைகள்
विज्ञानं விஜ்ஞாநம்=விஞ்ஞானத்தை
(4) ज्येष्ठं ஜ்யேஷ்டம்=முதலாவதான
ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மமாக
उपासते உபாஸதே=உபாசிக்கிறார்கள்.
(5) विज्ञानं விஜ்ஞாநம்=விஞ்ஞானத்தை
ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மமாக
वेदचेत् வேதசேத்=ஒருவன் அறிந்தால்
(6) तस्मात् தஸ்மாத்=அதினின்றும்
नप्रमाद्यतिचेत् நப்ரமாத்யதிசேத்=நழுவாமலிருந்தால்·

(7) शरीरे ஶரீரே=சரீரத்தில்
पाप्मनः பாப்மநஃ=பாபங்களை
हित्वा ஹித்வா = விட்டு
(8) सर्वान् ஸர்வாந்=சமஸ்தமான
कामान् காமாந்=இச்சைகளை
समश्नुते ஸமஶ்நுதே=அடைகிறான்
इति இதி (சமாப்தியைக் கூறுகிறது.)

ச—டா:—

(1) விஞ்ஞான முடையவன் தான் யஞ்ஞத்தை சிரத்தையுடன் செய்கிறான். ஆகையால் விஞ்ஞானம் கர்த்தாவாகச் சொல்லப்பட்டது.

(2) (அது லௌகிக) கர்மங்களையும் செய்கிறது. சகலமும் விஞ்ஞானத்தால் அறியப்படுகிறபடியால் விஞ்ஞானமய ஆத்மா பிரம்மம் (சூத்திராத்மா) என்று சொல்வது யுக்தமே.

## 5-வது அனுவாகம்.

வி:—(1) विज्ञानं விஜ்ஞாநம்=ஜீவன். ஆத்மஸ்வரூபம் பிரகாசமாயிருப்பதால் ஞானமென்றே நிரூபிக்கத்தகுந்தது. ஆகவே, விஞ்ஞானத்தால் சொல்லப்படக்கூடும். இந்த சப்தம் கேவல விஞ்ஞான மாத்திரத்தைக்கூறும்பக்ஷத்தில் यज्ञं तनुते कर्माणि तनुतेऽपि च யஜ்ஞம் தநுதே கர்மாணி தநுதேபி ச=அதாவது யஞ்ஞத்தைச் செய்கிறான் கர்மங்களையும் செய்கிறான் என்று சொல்லப்பட்ட வைதிகலௌகிக கர்மங்கள், இவைகளைக்குறித்து கர்த்தாவாக இருக்குந்தன்மை அந்த விஞ்ஞானத்துக்கு சம்பவிக்கமாட்டாது.

அந்தர்யாமி பிராமணத்தில் यो विज्ञाने तिष्ठन् யோவிஜ்ஞாநே திஷ்டந்=என்கிற காண்வபாடத்தில் ஆத்ம சப்தஸ்தானத்தில் விஞ்ஞான சப்தமானது உபயோகிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, விஞ்ஞானசப்தமானது ஜீவாத்மாவைக் கூறுகின்றது.

து:-(1)அகை:—விஞ்ஞானம் என்பதினால் அதையேசுலோகத்தினால் ஸ்பஷ்டமாய்ச் சொல்லுகிறார்.

विज्ञानं விஜ்ஞாநம்=விஞ்ஞானமய கோசத்திலிருக்கிற வாசுதேவன்

यज्ञं யஜ்ஞம்=யஜமானன், ரித்விக்குகள், முதலான சகலமான பெயர்களிடமிருந்து யஞ்ஞங்களையும்,

(2) कर्माणि च கர்மாணி ச=அவைகளுக்கு அங்கங்களான கர்மங்களையும்

அ:—(3) இந்திரன் முதலான சகல தேவதைகளும் முதலில் உண்டானதால் அல்லது சகல பிரவிர்த்திகளுக்கும் முன்னாலேயே உண்டானதால், ஜேஷ்டமாயிருக்கிற விஞ்ஞான—பிரம்மத்தை உபாசிக்கிறார்கள், தியானிக்கிறார்கள். இந்த விஞ்ஞானமய பிரம்மமே தான் என்பதாய் பாவித்து உபாசிக்கிறார்கள் என்று அர்த்தம். மஹத்தாகிற பிரம்மத்தை உபாசிக்கிறதினால் ஞானத்தையும் ஐசுவரியத்தையும் அவர்கள் அடைகிறார்கள்.

(சு—வா:—பிரம்மம் தான் இவ்விடத்தில் விஞ்ஞான பிரம்மம் என்பதாய் கூறப்படுகின்றது. புத்தியானது கடாதிகளுடன் ஒன்றாகி அவைகளைப் பிரகாசிப்பிக்கிறது. அதுபோல் புத்தி பிரம்மத்துடன் ஒன்றாகி, சுத்த சைதன்னியமான அதை பிரகாசிப்பிக்கவேண்டும்.

(ஆ:—பிரம்மத்தைப் புத்தியுடன் சேர்ந்ததாக சுருதி சொல்வதினால் மோக்ஷ இச்சையுள்ளவன் பிரம்மஞானத்தை சுலபமாய் அடையலாம், என்பதை சுருதி காட்டுகிறது. (சு-வர அக்கினி முதலான தேவதைகள் இந்த முதலிலுண்டான பிரம்மத்தை அடையும் பொருட்டு இதை உபாசிக்கிறார்கள்.)

வி-வியாக்கியானம்.

(1) கர்த்திருத்வ சக்தியுள்ள விஞ்ஞானம் ஜோதிஷ்டோமம் முதலிய யஞ்ஞங்களைச் செய்கிறது. இதனால் செய்யப்பட்டதானது சாக்ஷியாகிற சிதாத்மாவினிடத்தில் பிராந்தியால் ஆரோபிக்கப்படுகின்றது.

(2) அப்படியே வேளாண்மை, வியாபாரம் முதலிய கர்மங்களும் விஞ்ஞானத்தாலேயே செய்யப்படுகின்றன.

---

வி:—(3) सर्वेदेवाः ஸர்வே தேவா:=எல்லா தேவதைகளும்
(1) विज्ञानं விஜ்ஞாநம்=ஜீவனை
(4) ब्रह्मज्येष्ठं ப்ரஹ்மஜ்யேஷ்டம்=பிரம்மத்தைவிட ஜேஷ்டமாக
उपासते உபாஸதே=பிரஜாபதி வித்தையில் சொன்னபடி உபாசிக்கிறார்கள்.

---

து:—तनुते தநுதே=செய்துவைக்கிறார்.
(3) विज्ञानं விஜ்ஞாநம்=விஞ்ஞானமயனான வாசுதேவனை
सर्वेदेवाः ஸர்வே தேவா:=சகலதேவதைகளும்
(4) ज्येष्ठं ஜ்யேஷ்டம்=சிரேஷ்டமான
ब्रह्म ப்ரஹ்ம=குணங்களால் பூர்ணனானவனாக
उपासते உபாஸதே=உபாசிக்கிறார்கள்.

அ:—(3) இந்த லௌகிக வைதிக சகல கர்மங்களையும் செய்கிற ஆத்தியாத்மிக (சரீரத்திலிருக்கிற) விஞ்ஞானத்தை இந்திரன் முதலான சகல தேவதைகளும், எவனுடைய சரீரம் முதலில் உண்டானதால் எவன் ஜேஷ்டனாயிருக்கிறானோ அப்படிபட்ட ஹிரணிய கர்ப்பன் என்று பெயருள்ள மஹத்தத்துவமாகிற பிரம்மமாக உபாசிக்கிறார்கள்.]

ஹிரணியகர்ப்ப உபாசனைபலன்.

ச—பா:—

(5-6) இந்த விஞ்ஞான—பிரம்மத்தை ஒருவன் அறிந்தானேயானால், அது மட்டுமல்ல, அறிந்தபின் அதினின்றும் அவன் தவறாமலிருந் தானேயானால்—ஏனெனின்பாஹியமான அன்னாத்மாக்களை ஆத்மாவாக பாவித்திருந்தபடியால், விஞ்ஞானமயமே ஆத்மா என்கிற பாவனை நழுவிப்போகக்கூடும். ஆகவே அன்னமயம் முதலியவைகளில் ஆத்ம பாவனையை விட்டு, கேவலம் விஞ்ஞான மய பிரம்மமே ஆத்மா என்கிற பாவத்துடன் இருந்தால், அப்போது என்ன உண்டாகிறதெனின்,

---

வி:—(5) எவன் ஜீவஸ்வரூபத்தை

ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மமாக

वेद வேத=அறிகிறானோ

(6) तस्मात् தஸ்மாத்=அந்த ஜீவனிடத்தினின்றும் ஞானத்தின் முடிவு வரையிலும்

नप्रमाद्यातिचेत् நப்ரமாத்யதிசேத்= தவறாமலிருந்தானேயானால்

---

து:—(5) चेत्वेद சேத்வேத=சேத்வேத இப்படி அறிந்தால், அதாவது சாக்ஷாத்கரித்தால்

(6) तस्मात् தஸ்மாத்= ஞானத்தினின்றும்

नप्रमाद्यातिचेत् நப்ரமாத்யதிசேத்=பிரமாதமடையாமலிருந்தால் அதாவது அதை மறக்காமலிருந்தால் மற்றது ஸ்பஷ்டம். முன்போலவே அர்த்தம்.

பிரமாண வாக்கியம்:—

वासुदेवोंतरस्ततः ।
श्रद्धाख्यंश्रुतिधत्वा च्छद्धायांतच्छिरःस्मृतं।
ऋतंज्ञानततदाता चर्तस्थोदक्षिणःकरः।
वामःसत्यस्थितःसत्यं सतांयस्मान्नियामकः ।
योगाख्यंसर्वलोकस्य योगादत्रैवयोगगं ।
मध्यंपुच्छंमहोनाम महनीयत्वतःसदा ॥ तत्वनिणये ॥

அ:—(7-8) சரீரத்தில்பாபங்களை விட்டு விடுகிறான். சரீரமே நான் என்கிற அபிமானத்தால்தான் சகல பாபங்களும் உண்டாகின் றன. விஞ்ஞானமய பிரம்மமே ஆத்மா என்கிறபாவனை ஏற்பட் டவுடன் அந்தபாபங்கள் இல்லாமற் போவது யுக்தமே. குடையை எடுத்து விடுவதினால் சாயை விலகிப்போவது போலும். ஆகை யால் சரீராபிமானத்தால் சரீரத்திலுண்டாகிற சகல பாபங்களையும் சரீரத்திலேயே விட்டு விஞ்ஞானமய பிரம்ம ஸ்வரூபத்தை அடை ந்தவன், விஞ்ஞானமய ஆத்மாவாக இருந்துகொண்டு சகல காம ங்களையும் அடைகிறான்.

(சு—வா:—நாமரூப கிரியாத்மகமான சரீரத்தில் சகல பாப ங்களும் சம்பவிக்கின்றன. சரீரத்தைத் தியாகம் செய்வதினால் பாபங்களும் விட்டுப்போகின்றன. நான் விஞ்ஞானம்தான் என் கிற திருடமான நிச்சயத்தால் பாபங்கள் சரீரத்திலேயே இருந்து விடுகின்றன. அணிமாதிசக்தியுள்ள ஹிரண்யகர்ப்பனுடன் ஒன்றாகி சகல இச்சைகளையும் உபாசகன் அடைகிறான்.)

வி—வி:—இந்திராதி தேவதைகள் போல் எவன் விஞ்ஞான உபாதியுடன் கூடின பிரம்மத்தை உபாசிக்கிறானோ, அப்படி மர ணம் வரையில் அந்த பிரம்மத்தினின்றும் நழுவவில்லையோ, அதா வது, முன் சொன்ன பிரம்மம் தான் தான் என்கிற ஞானத்தை விட்டு, தான் மனுஷ்யன், கர்த்தா, போக்தா, சுகீ, துக்கீ இப்படி சாதாரண ஜனங்கள் போல் பாவிப்பதே பிரமாதம்; இப் படிப்பட்ட பிரமாதத்தை அடையவில்லையோ, அவன் இந்த சரீ ரத்திலிருக்கும் போதே, துக்க ரூபமான மேல் ஜன்மத்துக்குக் காரணமான பாபத்தை விட்டுவிட்டு, பிரம்ம லோகத்தில் சங்கற்ப த்தால் சித்திக்கக்கூடிய சகல போகங்களையும் அடைந்து, தத்துவ ஞானத்தை அடைந்து, மோக்ஷமடைகிறான்.

---

வி:—(7) சரீரத்திலிருந்துகொண்டே ஆகாமி சஞ்சித பாபங்க ளற்றவனாய்

(8) அத்வைதத்தில் போலவே அர்த்தம்.

---

வாஜஸநேயோத்தரஸ்து: ।

ப்ரஜாபத்யம் ப்ரஜாபதியை த்ரு-க்வாஜ்ஜாயாம் தஜ்ஜிரஃஸ்யந்தம்।
ஜதம்ஜூாநதெதஃத்ாதா வதூஷேஷாஃக்ஷிணஃகாஃ ।
வாஃஸதஷி்தஃ ஸத்ஸதாஃயஷூநியாஃகேஃ।
யொமாவஷஸவஹோகஸ்ஷ யொமாஃசெதுவயொமஹம் ।
உயஷவஹஷமஃஹொநாஃ உஹநீயகதஃஸஃா॥

(தைத்திரீயே)

அ:—ஸ்திரீ சூத்திரர்கள் போல் இந்திரன் முதலான தேவதைகளுக்கு வேதாத்தியயனத்தில் அதிகாரமிரா விட்டாலும் பிரம்ம வித்தையில் அதிகாரமுண்டு. ஸ்திரீ சூத்திரர்கள் புராணாதிகள் மூலமாய் பிரம்ம வித்தையை அடையலாம். பிரம்ம சூத்திரம் I-3-26-33-ல் தேவதைகளுக்கு பிரம்ம வித்தையில் அதிகாரம் உண்டென்பதும் I—3—(34-38)ல் சூத்திரர்களுக்கு அதிகாரமுண்டா என்பதும் விசாரிக்கப்பட்டிருக்கிறது. (சுருக்கமாக வியாசாதிகரணமாலையில் அறியலாம்). சகுணப் பிரம்ம உபாசகன் மரணத்துக்கு முன்னமேயே புண்ணிய பாபங்களை விட்டு விடுகிறான் என்பது II-3-(27-28)ல் விசாரிக்கப்பட்டிருக்கிறது.)

விஞ்ஞானமய கோசஞான பலன்.

வி-வி:—விஞ்ஞானமயத்தை அறிந்து உபாசிக்கிறவனுக்கு மனோமயம் சரீரம்தான் என்கிற புத்திநிச்சயமாகிறது என்பதாய் சுருதி இனி கூறுகிறது.

(9) तस्यैष एव शारीरआत्मा । தஸ்யைஷ ஏவ ஶாரீர ஆத்மா

(10) यः पूर्वस्य॥2॥ ய: பூர்வஸ்ய ॥ 2॥

பதவுரை :—

पूर्वस्य பூர்வஸ்ய=முந்தின

तस्य தஸ்ய=அவனுக்கு

यःएषःएव ய:ஏஷ: ஏவ=இவனே

शारीरआत्मा ஶாரீர ஆத்மா=சரீரத்துக்குள்இருக்கிற ஆத்மா.

ச-பா:—மனோமயத்துக்கு விஞ்ஞானமயமே ஆத்மா—மனோமயம் சரீரம்

வி—வி:—உலகத்தில் கோடாலி முதலிய கருவியை ஆத்மாவாகச் சொல்லுகிறதில்லை.

அப்படியே கருவியாகிற மனோமயம் ஆத்மாவாக மாட்டாது. அதை சரீர கோடியிலேயே சேர்க்கவேண்டியது.

ஆநந்தமய கோசம்.

V-3:—வி—வி விஞ்ஞானமய கோசமும்ஆத்மாவல்லவென்பதைக் காட்டும்பொருட்டு சுருதியானது ஆநந்தமய கோசத்தை இனி உபதேசிக்கிறது

(11) तस्माद्वा एतस्माद्विज्ञानमयात् । தஸ்மாத்வா ஏதஸ்மாத்விஜ்ஞாநமயாத் ।

(12) अन्योऽन्तर आत्माऽऽनन्दमयः । அந்யோऽந்தர ஆத்மா ऽऽநந்தமய: ।

(13) तेनैष पूर्णः ॥ 3 ॥ தேநைஷ பூர்ண: ॥ 3 ॥

பதவுரை :—

அ:—(11) तस्मात् वै वएतस्मात् தஸ்மாத்வைஏதஸ்மாத்=அந்தஇந்த

विज्ञानमयात् விஜ்ஞாநமயாத்=விஞ்ஞான மயத்தைவிட

(12) अन्य: அந்ய:=வேறாயும்

अन्तर: அந்தர:=உள்ளேயுமிருக்கிற

आत्मा ஆத்மா=ஆத்மா

आनन्दमय: ஆநந்தமய:=ஆநந்தமயன்

(15) तेन தேந= அவனால்

एष: ஏஷ:=இவன்

पूर्ण: பூர்ண:=பூர்ணமானவன்.

(சு-வா:— ஆத்மா கர்த்தாவன்று என்கிற புத்தியை உபதேசிக்கும்பொருட்டு சுருதியானது ஆநந்தமயத்தை அதாவது ஆநந்த ரூபமாக விளங்குகிற அந்தக்கரண உபாதியுடன் கூடின பிரத்தியகாத்மஸ்வரூபத்தைக் கூறுகிறது. விஞ்ஞானமய என்பதால் ஆத்மா கர்த்தாவென்பதாய் சுருதி பிரஸ்தாபித்தது. இப்போது விஞ்ஞான மயத்துக்குள்ளிருக்கிற போக்தாவாக சுருதி ஆத்மாவைக் கூறுகிறது. ஆத்மா சுவயம் சுத்தமானாலும் புத்தி உபாதியுடன் கலந்து அவித்தையால் போக்தாவாகக் காணப்படுகிறான்.)

## ஆநந்தமயம் பிரம்மமன்று.

சு-வா:—(விர்த்திகாரர் ஆநந்தமயத்தால் பரப்பிரம்மத்தையே அறிகிறார். ஏனெனின் பிருகுவல்லியில் பிருகுவும் வருணனும் ஆநந்தமயத்துடன் விகாரத்தை முடித்துவிடுகிறார்கள். மேலும் சுருதியானது அடிக்கடி ஆநந்த சப்தத்தால் பிரம்மத்தைக் கூறுகிறது. ஆகையால்தான் உபநிஷத்தின் இந்த பாகத்துக்கு ஆநந்தவல்லி என்ற பெயர் கிடைத்தது.)

ச—பா:—ஆநந்தமய சப்தத்தால் பிரகிருத பிரஸ்தாபத்தைக் கொண்டும் மயட் என்னும் சப்தத்தைக்கொண்டும் காரியமான தத்துவத்தை அறிகிறோம். (1) அன்னம் முதலிய பௌதிகங்களான காரிய தத்துவங்கள் பிரகிருதத்தில் பிரஸ்தாபிக்கப்படுகின்றன. இந்த ஆநந்தமயமும் இந்த வகுப்பிலேயே சேர்ந்திருக்கிறது.

(2) அன்னமயம் என்பதில் போல் மயட் சப்தம் விகாரத்தை (காரியத்தைக்) கூறுகிறது. ஆகையால் ஆநந்தமயம் காரிய ஸ்ரூபத்தைக் கூறுவதாக அறியத்தக்கது.

அ:—(சு-வா:—அப்படி யன்றியில் மயட் சப்தம் பிராசுர்யத்தை அதாவது அதிகம் என்பதைக் கூறினால் ஒரே இடத்தில் மயட் இரண்டு அர்த்தங்களைக் கொள்ளவேண்டும். (ஆ- ஒரே அர்த்தம் செய்யவும் முடியும் ஆகையால் அதையே கிரகிக்கவேண்டியது).

(3) மேலும்

**आनन्दमयमात्मानमुपसंक्रामति**

ஆநந்தமயமாத்மாநமுபஸங்க்ராமதி

(II–8) அதாவது ஆநந்தமய ஆத்மாவை அடைகிறான் என்பதாய் பின்னால் சொல்லியிருக்கிறது. இப்படி ஆநந்தமயத்தை அடைகிறதாகச் சொல்லியதைக் கொண்டும் ஆநந்தமய சப்தத்தால் காரிய ஸ்வரூபத்தைத்தான் கிரகிக்கவேண்டியது. அநாத்மாக்களான காரியஸ்வரூபங்களை அடைவதாகக் காணப்படுகிறது. எப்படி அன்னமயத்தை அடைகிறானோ அப்படி ஆநந்தமயத்தை அடைகிறான் என்பதாய்ச் சுருதி சொல்லுகிறது. ஆத்மாவையே அடைதல் என்பது ஏற்படமாட்டாது. ஏனெனின் பிரகிருதத்துக்கு விரோதம் வரும் ; இது சம்பவிக்கவும் மாட்டாது. தன்னைத்தானே அடைதல் என்பது ஏற்படமாட்டாது; ஏனெனில் தன்னிடத்தில் பேதமில்லை. அடைகிறவனுடைய ஆத்மாவே பிரம்மம்.

(4) மேலும் ஆநந்தமயத்துக்கு சிரசு முதலியவைகள் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. காரிய கோடியில் சேராமலும் ஆகாசாதிகளுக்குக் காரணமாயும் சத்தியம் ஞானம் ஆநந்தம் என்பதாயும் கூறப்பட்டதை சிரசு முதலியவைகளுடன் கூடினதாகக் கற்பிப்பது அனுசிதம். தைத்திரீயம் II-7-வது சுருதி பிரம்மத்தை பார்க்கப்படாதது என்றும், இன்னது என்று சொல்லப்படாதது என்றும், ஆதார மற்றது என்றும் சொல்லுகிறது. பிரஹதாரணியக (III-8-8) சுருதி ஸ்தூலமன்று அணுவுமன்று என்று சொல்லுகிறது. ஷை II-3-6-வது சுருதி இப்படி இல்லை, அப்படி இல்லை என்று சொல்லுகிறது. இப்படி சகல விசேஷங்களும் அதினிடத்தில் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றன.

(சு-வா:—அப்படியிருக்க சிரசு முதலியவைகளை எப்படி கற்பிக்கலாம்)

(5) மேலும், மந்திரத்தின் உதாஹரணமும் பொருந்தாது. பிரியமாகிற சிரசு முதலியவைகளுடன் கூடியும் பிரத்தியக்ஷமாய் அனுபவிக்கப்பட்டுமிருக்கிற ஆநந்தமயம் பிரம்மமாயிருந்தால், அது இருக்கிறது என்கிற விஷயத்தில் சந்தேகமில்லை. அப்படியிருக்க,

அ:—असन्नेव सभवति असद्ब्रह्मेति वेदचेत्।

ஃஸஂநேவஸஹவதி ஃஸஂ ப்ர஧்மேதிவெேெஜ ।

அதாவது:— எவன் பிரம்மமில்லை என்று சொல்லுகிறானோ அவன் இல்லாமலே போகிறான், என்பதாய் II-6-வது சுருதி ஏற்படவேண்டியதில்லை.

சு-வா:-அதாவது சுருதியானது ஆநந்தமயத்தைக் குறிப்பாகச் சொல்லுகிறது. அது இருக்கிறதா இல்லையா வென்கிற சந்தேகமில்லை. பிரம்மமிருக்கிற விஷயத்தில் ஒரு சந்தேகத்தை சுருதி கூறுகிறது. ஆகையால் பிரம்மமும் ஆநந்தமயமும் ஒன்றல்ல.

(6) மேலும் பிரம்மம் புச்சம், பிரதிஷ்டை என்று சொல்லியிருக்கிறது. பிரம்மம் ஆநந்தமயத்தை விட வேறாகாதபக்ஷத்தில் அதை ஆதாரமாகச் சொல்லுவது அயுக்தம்.

ஆகையால் ஆநந்தமயம் காரியகோடியில்தான் சேருகிறது, பரமாத்மாவன்று.

சு-வா:—ஆநந்த மயத்தைக் காரிய ரூபமாய் அறிந்தாலும் ஏன் பிருகுவானவர் ஆநந்த மயத்துடன் விசாரத்தை நிறுத்தினார் என்பதற்கு யுக்தி சொல்லலாம். ஆநந்தவல்லியில் பிரம்மம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மத்தை அடைய சாதகங்களை உபதேசிக்கும் பொருட்டு சுருதியானது பிருகுவை வருணனை பிரச்னம் செய்யும்படிச் செய்கிறது. சாத்தியமான பிரம்மத்தைச் சொன்ன பிறகு சாதகத்தைச் சொல்லவேண்டியது பாக்கியிலிருக்கிறது. இந்த சாதகங்கள் 5 கோசங்கள். இவைகளை விசாரிப்பதால் ஒருவன் பிரம்மத்தை அடைகிறான். அன்வயவியதிரேகங்களால் ஆத்ம சாக்ஷாத்காரம் சித்திக்கிறது. ஆகையால் அவைகள் சாதகங்களாகின்றன. ஆகவே ஆநந்தவல்லியானது ஜீவனும் பிரம்மமும் ஒன்று என்று நிரூபித்தபின், பிருகுவல்லியானது ஒன்று என்பதை அறிய சாதகங்களை உபதேசித்தபடியால் ஆநந்தத்தின் விசாரத்துடன் விசாரத்தை நிறுத்தினது யுக்தமே.

மேலும், பிருகுவல்லியிற் சொல்லிய ஆநந்தத்தை பிரம்மமாக அறிந்தாலுங் கூட பாதகமென்ன. பரப்பிரம்மம் ஆநந்த ஸ்வரூபமல்லவா? பிரியம் முதலிய விசேஷங்களற்றும், மனதுக்கு எட்டாததாயுமிருக்கிற ஆநந்தத்தைத்தான் பிரம்மம் என்கிறோம். இந்த ஐந்து கோசங்களும் அஞ்ஞான காரியங்களானதால் பிரம்ம

அ:—மாக மாட்டா. அப்படியிருக்க ஆநந்தமய கோசத்தைவாக்குக்கும் மனதிற்கும் எட்டாத பிரம்மமாக எப்படிச் சொல்லுகிறது. மற்ற கோசங்கள் பிரம்மத்தினின்றும் உண்டானதுபோல் ஆநந்தமயமும் பிரம்மத்தினின்றும் உண்டாயிருக்கிறது. ஆகையால் ஆநந்தமயம் என்கிற பெயர் சித்தித்தது.)

ச-பா:—ஆநந்தம் என்பது வித்தை, கர்மம், இவைகளின் பலன். இதின் விகாரம் ஆநந்தமயம். இது விஞ்ஞான மயத்துக்குள்ளிருக்கிறது. ஏனெனின் யஞ்ஞாதிகளுக்கு ஆதாரமான விஞ்ஞானமயத்துக்குள்ளிருப்பதாகச் சுருதிசொல்லுகிறது. ஞான கர்மங்களின் பலன் போக்தாவின் பிரயோஜனத்துக்காக ஏற்பட்டபடியால், அது விஞ்ஞான மயத்துக்குள்ளிருக்கிறது. (காரியம் செய்தபின் பலன் ஏற்படுவதால் பலன் கர்த்தாவுக்குள் அடங்கியிருக்கிறதாகச் சொல்லப்படுகின்றது). ஆநந்தமயாத்மா மற்ற எல்லாவற்றிற்கும் உள்ளேயிருக்கிறது. மேலும்வித்தையும் (உபாசனை) கர்மமும் பிரியம் முதலியவைகளைச் சம்பாதிக்கத்தான் ஏற்பட்டிருக்கின்றன. ஆகையால், வித்தை கர்மங்களினின்றும் சித்திக்கும்; பிரியம் முதலியவைகள் ஆத்மாவுக்குச் சமீபத்திலிருப்பதினால், ஆநந்தமயம் விஞ்ஞானமயத்துக்குள் ளிருப்பதாகச் சொல்வது யுக்தமே. பிரியம் முதலியவைகளின் வாசனையால் ஏற்படும் ஆநந்தமயம் விஞ்ஞான மயத்துடன் ஸ்வப்னத்தில் காணப்படுகிறது.

(சு-வா:—ஸ்வப்னத்தில் பிரத்தியகாத்மாவுக்கு விஷயமாகிறதினால் ஆநந்தமயம் பிரம்மமாக மாட்டாது)

## வி-வியாக்கியானம்.

(11-12) ஆநந்தம் என்பது பரப்பிரம்மத்தின் ஸ்வரூபம். இந்த ஆநந்தத்தின் விகாரம் இனி சொல்லப்போகிற பிரியம் முதலியவைகளின் சமூகமான ஆநந்தமயம். பிரம்மஸ்வரூபமான ஆநந்தத்துக்கு விகாரம் இல்லாவிட்டாலும், கடாதி உபாதிகளால் ஆகாசத்துக்கு விகாரம் ஏற்படுவதுபோல் சாத்விக அந்தக்கரண விருத்திகளாகிற உபாதிகளால் பிரியம் முதலிய ரூபங்களாக ஆநந்தம் விகார மடைகிறது.

இந்த ஆநந்தமயன் கர்த்தாவாக பாவிக்கப்படும் விஞ்ஞான மயத்துக்குள்ளும், அதைவிட வேறாயும் இருக்கிறான்.

அ:—(13) ஆநந்தமயத்தால் விஞ்ஞானமயம் பூர்ணமாயிருக்கிறது, (a) பிராண மயத்தால் வியாபிக்கப்பட்ட முழு சரீரத்திலும் பிராண காரியமான சலனம் எப்படி அறியப்படுகிறதோ, (b) மனோமயனால் வியாபிக்கப்பட்ட முழு பிராணமயத்திலும் மனதின் காரியமான, சேதனரூப ஞானசக்தியானது எப்படி அறியப்படுகின்றதோ, (c) விஞ்ஞான மயத்தால் வியாபிக்கப்பட்ட மனது பிராணன் இவைகளுடன் கூடின முழுசரீரத்திலும் நான் கர்த்தாவென்பதாய் கர்த்திருத்வம் எப்படி அறியப்படுகிறதோ, (d) அப்படி ஆநந்தமயத்தால் வியாபிக்கப்பட்ட விஞ்ஞானம் மனது பிராணன் இவைகளுடன் கூடின முழு சரீரத்திலும் கைகால் முதலியவைகளில் சுகவிசேஷங்கள் அனுபவிக்கப்படுகின்றன. இது தான் ஆநந்தமயத்தால் பூர்ணம் என்பதற்கு அர்த்தம்.

ஆக்ஷேபம்:—சுகம்போல் துக்கமும் கைகால்களில் அனுபவிக்கப்படுகிறதே.

உத்தரம்:— பாதகமென்ன? மனோமயத்தின் தர்மம் துக்கம்; ஆநந்த மயத்தின் தர்மம் சுகம். இது இனி விவரிக்கப்படும். சரீரத்தில் மனோமய மிருப்பதால் துக்கம் தெரியவருகிறது.

ஆநந்தத்தைப் பற்றி ஸ்வல்பம் விசாரிப்போம். ஆநந்தம் என்பது துக்கமற்ற தன்மையா அல்லது பாவரூபமா? சிலர் துக்கமற்ற தன்மையென்று சொல்லுவது சரியன்று. துக்கமில்லாதவிடத்திலும் ஆநந்தம் உண்டாவதாலும், இதில் அநேக தாரதம்மியங்கள் இருப்பதாலும் அது துக்கத்தின் அபாவ ரூபமன்று, பாவரூபமே.

இந்த ஆநந்தம் கிரியா ரூபமா குணரூபமா? எதனுடையதாவது பிரதிபிம்பமா? அஸ்வதந்திர பதார்த்தமா அல்லது ஸ்வதந்திர பதார்த்தமா?

சிலர் கிரியாரூபம் என்று சொல்லுகிறார்கள். ஏனெனின் ஒரு காரியத்தைச் செய்கிறதினால்தான் ஆநந்தம் உண்டாகிறது. இது சரியன்று. ஏனெனின் நீ சொல்லும் கிரியைஅதிக்கிரமித்த ஆநந்தம் இவ்விடத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

வைசேஷிகர்கள் கர்த்தாவாயும் போக்தாவாயு மிருக்கிற ஆத்மாவுக்கு மனதின் சம்பந்தத்தால் ஏற்படும் க்ஷணிககுணம் ஆநந்தம் என்கிறார்கள்.

சாங்கியர்கள் ஆத்மா அசங்கனானதால் சுகம் சத்வகுண காரியம் என்கிறார்கள்.

அத்:—நையாயிகர்களில் சிலர் விஷய சுகமெல்லாம் துக்கரூபமே மோக்ஷம் தான் தேடத்தக்கது என்கிறார்கள்.

வேதாந்திகள் சொல்லுகிறதாவது:— வைசேஷிகாதி பக்ஷங்களெல்லாம் புருஷ புத்தி கற்பனைகளே. சுருதியானது விஷயாநந்தத்தை ஆத்மஸ்வரூபமான நித்தியா நந்தத்தின் லேசமாகச் சொல்லுகிறது. (பிரஹ—IV-3-32 பார்க்க)

இந்த ஆநந்த லேசம் பிரம்மத்தின் பிரதிபிம்ப ரூபம் என்று சொல்லலாம். அல்லது ஜீவ உபாதியால் ஏற்பட்டது என்றும் சொல்லலாம். பிரதிபிம்ப ரூபமாயும், உபாதியால் ஏற்படாமலு மிருக்கிற ஆநந்தமே ஸ்வயம் முக்கியம். இதை அறிவதால் தான் துக்கநிவிர்த்தி ஏற்படும் (சாந்தோக்கியம் VII—23—1 பார்க்க.)

## ஆநந்தமயத்தின் உபாசனை.

(வி—வி:—இந்த ஆநந்தத்தின் விகாரமாயும், பிரியம் முதலிய ரூபமாயு மிருக்கிற ஆநந்தமயமே ஆத்மா என்கிற புத்தி திருடப்படும் பொருட்டு உபாசிக்க வேண்டிய ஸ்வரூபத்தை சுருதியானது கூறுகிறது.

(14) स वा एष पुरुषविध एव। ஸ வா ஏஷ புருஷவித ஏவ।

(15) तस्य पुरुषविधतां। தஸ்ய புருஷவிததாம்।

(16) अन्वयं पुरुषविधः। அந்வயம் புருஷவித:।

---

விஞ்ஞானமய பிரகரணம்
முற்றிற்று.
11-ஆநந்தமய பிரகரணம்.

து:--(11) அ-கை:—பிரம்மத்தைக் கூறும் லக்ஷணவாக்கியத்திலுள்ள அநந்த பதத்துக்கு தேசகால குணங்களால் பரிச்சேதமடையாதரூபம் என்று அர்த்தம் சொல்லப்பட்டது. அதை எந்த பிரமாணத்தால் அறியலாம் எனின் பூர்ணாநந்தனை பகவான் இருப்பதால் என்கிற அபிப்பிராயத்துடன் तस्मात् தஸ்மாத் என்பது முதல் சொல்லுகிறார்.

அர்த்தம் முன்போலவே

(12) आनन्दमयः ஆநந்தமய:=விசேஷ ஆநந்தத்தால் ஆநந்தமயன் என்கிற பெயருள்ள, ஆநந்தமயகோசத்திலிருக்கிற நாராயணன் இருக்கிறார் என்பது அர்த்தம்.

(13) तेन தேந=முன்போலவே

(17) तस्य प्रियमेवाशिरः । தஸ்ய ப்ரியமேவ ஶிர: ।

(18) मोदो दक्षिणः पक्षः । மோதோ தக்ஷிண: பக்ஷ: ।

(19) प्रमोद उत्तरः पक्षः । ப்ரமோத உத்தர: பக்ஷ: ।

(20) आनन्द आत्मा । ஆநந்த ஆத்மா ।

(21) ब्रह्म पुच्छं प्रतिष्ठा ॥4॥ ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்டா ॥ 4॥

பதவுரை

(14) सः वै एषः ஸ: வை ஏஷ:=அந்த இவன் நிச்சயமாய்
पुरुषविधः एव புருஷவிதஃ ஏவ=புருஷாகாரமே
(15) तस्य தஸ்ய=அவனுடைய
पुरुषविधतां புருஷவிததாம்=புருஷா காரத்தை
(16) अनु அநு=அனுசரித்து
अयं அயம்= இவன்
पुरुषविधः புருஷவித:=புருஷாகாரம்
(17) तस्य தஸ்ய=அவனுக்கு
प्रियं एव ப்ரியம்ஏவ=பிரியமே
शिरः ஶிர:=சிரசு
(18) मोदः மோத:=சந்தோஷம்
दक्षिणः पक्षः தக்ஷிண:பக்ஷ:=வலது இரக்கை
(19) प्रमोदः ப்ரமோத: =விசேஷ சந்தோஷம்
उत्तरःपक्षः உத்தர:பக்ஷ:=இடது இரக்கை
(20) आनन्दः ஆநந்த:=ஆநந்தம்
आत्मा ஆத்மா=ஆத்மா
(21) ब्रह्मपुच्छंप्रतिष्ठा ப்ரஹ்மபுச்சம்ப்ரதிஷ்டா=பிரம்மம் வால், ஆதாரம்.

சு-பா-:—

(17) இஷ்டமான புத்திரன் முதலானவர்களைப் பார்ப்பதினால் ஏற்படும் பிரியம் பிரதானமாயிருப்பதால் ஆநந்தமயகோசத்துக்கு சிரசாக வர்ணிக்கப்படுகிறது.

---

(17) प्रियं ப்ரியம்=இஷ்டவஸ்துவின் பார்வையால் உண்டான சுகமானது சிரசு

---

து:-(17) तस्य தஸ்ய=இந்த ஆநந்தமயன் என்கிற நாராயணனுக்கு
शिरः:ஶிர:=சிரசு

प्रियएवं ப்ரியம்ஏவ=பிறர்களால் प्राप्य (ப்ராப்ய)=) அடையக்கூடியவராகையால் பிரிய என்கிற பெயருள்ள, உபகாரத்தினால் உண்டாகக்கூடிய பிரியம் என்கிற சுகத்திலிருக்கிற பசுவானுடைய ரூபம்.

அத்:—(18) பிரியமானதை அடைவதால் உண்டாகும் சந்தோஷம் மோதம் எனப்படும்.

(19) இந்த சந்தோஷத்தின் ஆதிக்கியமே பிரமோதமெனப் படும்.

(20) ஆநந்தம் என்பது சுகசாமான்னியம். பிரியம் முதலிய சுகஸ்வரூபங்களில் அது சேர்ந்தே இருப்பதால் அவைகளுக்கு ஆத்மாவாக இருக்கிறது. ஆநந்தம் என்பது பரப்பிரம்மம். மனதானது தமஸால் மூடப்படாமல் சுத்தமாயிருக்கும்போது, சுபகர்மத்தால் புத்திரன் முதலானவர்களின் ஞாபகம் அந்தக்கரணத்தில் வருமளவில், இந்த ஆநந்தம் விளங்குகிறது. இது விஷயசுகம் என்பதாய் உலகத்தில் பிரசித்தம். இப்படிப்பட்ட விருத்தியை உண்டாக்கும் கர்மம் அஸ்திரமாயிருக்கிறபடியால் சுகமும் க்ஷணிகமாயிருக்கிறது. இந்த அந்தக்கரணம் தமஸை போக்கடிக்கும். தபஸாலும், வித்தை(உபாசனை)யாலும், பிரம்மசரியத்தாலும், சிரத்தையாலும் மேல்மேல் சுத்தமாக சுத்தமாக பிரசன்னமாகிறது. அப்படி அந்தக்கரணத்தில் ஆநந்தமும் மேல்மேல் விளங்குகிறது.

(1) रसोवैसः । रसंह्येवायं लब्ध्वाऽऽनन्दी भवति ।

(1) ரஸொவெஸஃ । ரஸஂஹ்யெவாயம் லப்த்வாऽऽநந்தீ பவதி ।

---

வி:—(18) मोदः மோதஃ= இஷ்டவஸ்துவின் லாபத்தாலுண்டான சுகமானது வலது இரக்கை

(19) प्रमोदः ப்ரமோதஃ=கிடைத்த வஸ்துவின் உபயோகத்தாலுண்டான சுகம் இடது இரக்கை.

(20) आनन्दः ஆநந்தஃ=சுகவிசேஷமானது ஆத்மா. அதாவது மத்தியசரீரம்.

---

து:-(18) मोदः மோதஃ=(கனிஷ்ட) விஷயத்தினால் உண்டாகிறசுகத்திலிருக்கிற, சுகப்படுத்துவதினால் மோத என்று பெயருள்ள பகவத்ரூபம்.

(19) प्रमोदः ப்ரமோதஃ=சிரேஷ்டமான விஷயத்தினால் உண்டாகிற சுகத்திலிருக்கிற, விசேஷமான சுகப்படுத்துவதினால் பிரமோத என்று பெயருள்ள பகவத்ரூபம்.

(20) आनन्द आत्मा ஆநந்த ஆத்மா=சர்வ வியாபகமாயிருப்பதினால் ஆத்மா என்று பெயருள்ள மத்தியபாகம் ஆநந்தரூபம். அதாவது அவர் ஸ்வரூபாநந்தத்திலிருக்கிறார் என்று அர்த்தம்.

அத்:—அவன் ரஸமே-(அமிருதமே). ரஸத்தை அடைந்து அவன் ஆநந்தமய பொருளாகிறான் என்பதாய் தைத்திரீய (II - 6) சுருதி சொல்லுகிறது.

(2) एषह्येवानन्दयाति

(2) ஏஷஹ்யேவாநந்தயாதி

அதாவது:—இவனே ஆநந்தத்தைக் கொடுக்கிறான் என்பதாய் ஷை சுருதியே சொல்லுகிறது.

(3) एतस्यैवानन्दमयस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति ।

(3) ஏதஸ்யைவாநந்தமயஸ்யாந்யாநி பூதாநி மாத்ராமுபஜீவந்தி

அதாவது:—இந்த ஆநந்தமயத்தின் ஸ்வல்ப பாகத்தைக் கொண்டு இதர பிராணிகள் ஜீவிக்கிறார்கள் - என்பதாய் பிரஹதாரணிய (IV-3-32) சுருதி சொல்லுகிறது.

காமமானது எவ்வளவுக்கெவ்வளவு சாந்தமாகிறதோ அவ்வளவுக்கவ்வளவு ஆநந்தம் நூறுநூறு மடங்கு அதிகப்படுகிறதாக சுருதி இனி சொல்லப்போகிறது.

(21) பரமார்த்த பிரம்ம ஞானத்தை போதிக்கவேண்டும் என்பது சுருதியின் கருத்தானதால்,

எது சத்தியம் ஞானம் அநந்தம் என்பதாய் வர்ணிக்கப்பட்டதோ, எதை அறியும்பொருட்டு அன்னமயமுதலிய ஐந்து கோசங்கள் பிரதிபாதிக்கப்பட்டனவோ, எது அவைகளுக்கெல்லாம் உள்ளேயிருக்கிறதோ, எதினால் அவைகளெல்லாம் ஆத்மாக்களாக

---

வி:—(21) பிரம்மமானது ஆதாரமான புச்சம்.

ஆக்ஷேபம்:—ஆநந்தத்துக்கும் பிரம்மத்துக்கும் பேதமிராததால் ஆநந்தத்தை நடு உடல் என்றும் பிரம்மத்தை புச்சமென்றும் எப்படி வர்ணிக்கக்கூடும்.

சமாதானம்:—பிரம்மம் ஒன்றாயிருந்தாலும் அதன்தன்மை இரண்டுவிதமாவதால், பிரம்மத்தின் தன்மையால் புச்சமென்றும், ஆநந்தத்தின் தன்மையால் நடுசரீரமென்றும் வர்ணிக்கலாம்.

---

து:—(21) पुच्छंब्रह्मप्रतिष्ठा புச்சம்ப்ரஹ்மப்ரதிஷ்டா=சிருஷ்டிசெய்து ஜகத்தை விர்த்தி செய்வதினால் பிரம்ம என்று பெயருள்ள ரூபம் கடைசி பாகம்போல் கடைசியிலிருக்கிற பாதங்கள். இந்த ரூபம் பிரம்மம் என்று பெயருள்ள முக்கியப் பிராணனிடமிருக்கிறது என்று அர்த்தம். ஆநந்தமயகோசம், பிரியம், மோதம் முதலிற வைவிசேஷம், வாயு, இவைகளெல்லாம் ஆநந்தமயனிடமிருக்கிய நாராயணனுடைய ஆதீனம் என்பது தாற்பரியம்.

அத்:—ஆகின்றனவோ, அந்தபிரம்மம் ஆநந்தமயாத்மாவுக்கு வால் ஆதாரமாயிருக்கிறது. அவித்தியா கல்பிதமான சகலதுவைதத்துக்கும் அத்வைதமான பரப்பிரம்மம் அவஸானம் அதாவது மூல ஆதாரஸ்தானமாயிருப்பதால் அது பிரதிஷ்டை (ஆதாரமாக) யாக இருக்கிறது. ஆநந்தமயம் ஏகத்வத்தில் கொண்டுபோய் விடுகிறபடியால், அவித்தையால் ஏற்படும் துவைதத்துக்கு இருப்பிடமாக அத்வைத பிரம்மம் ஒன்று இருக்கிறது. அதுதான் ஆநந்தமயத்தின் வால் ஆதாரம்.

வி-வியாக்கியானம்.

(11-12) விஞ்ஞானமயத்துக்குள்ளிருக்கிற ஆநந்தமயன் எவனோ அவன் "நான் சுகீ, நான் போக்தா" என்பதாய் அனுபவமுடையவன்.

(14-16) விஞ்ஞானமயத்தின் சிரசுமுதலிய புருஷாகாரத்தை அனுசரித்து ஆநந்தமயமும் புருஷாகாரமாகவே இருக்கிறது.

---

வி:—ஆக்ஷேபம்.—ஆநந்தரூபமான பிரம்மம் எப்படி ஆநந்தமயமாக (அதிக ஆநந்தத்துடன் கூடினதாக) இருக்கக்கூடும்.

சமாதானம்:—ஆநந்தரூபமான பிரம்மம் பிரியமோதம் பிரமோதங்களாகிற சிரசுபக்ஷம் முதலியவைகளாக வர்ணிக்கப்பட்ட தர்மபூதமான ஆநந்தம் அதிகமாக இருப்பதால் ஆநந்தமயனாக இருக்கலாம்.

முந்தின நான்கு பரியாயங்களில் சொல்லப்படாமல் இந்த பரியாயத்தில் பிரம்மத்தை ஆநந்தமயனுக்கு புச்சமென்று சொன்னது பிரம்மவிதாப்நோதிபரம் என்று ஆரம்பிக்கப்பட்ட பிரம்மத்தின் உபதேசமானது ஆநந்தமய பரியாயத்தில் முடிவு பெறுகிறதென்று தெரியப்படுத்துகிறதற்காக வென்று அறியவும். ஆகவே, ஆநந்தமயனே உபக்கிரமிக்கப்பட்ட பிரம்மம்.

5-வது அனுவாகம் முற்றிற்று.

---

(22) तदप्येषश्लोकः ததப்யேஷ ச்லோக: = அ-கை:—

सवाएषपुरुषः ஸவா ஏஷ புருஷ:=என்பது முதல் ஐந்து ரூபங்களை நிரூபித்ததினால் சத்தியம் முதலிய லக்ஷணங்களை விவரித்து இப்போது ஐந்து ரூபமுள்ள பிரம்மமும் ஜீவனைவிட வேறல்லவென்று அறிகிறவர்களுக்கும், வேறு என்று அறிகிறவர்களுக்கும் இருவர்களுக்கும் பலபேதத்தைச் சொல்லி ஜீவனைவிட பிரம்மம் வேறு என்பதை ஐந்து சுலோகங்களால் ஸ்தாபிக்கிறார்.

அத்:—(17-21) பிரியம், மோதம், பிரமோதம் இவைகள் மனதின் சாத்விக விருத்தியில் பிரதிபிம்பித்த ஆநந்தம். இது விர்த்திகளுக்கு உபாதானமான அஞ்ஞானத்தில் உண்டான பிரதிபிம்பம். அது தான் மற்ற ஆநந்தங்களுக்கு பிரதிஷ்டை. அதாவது ஆதாரம். அதினின்றும் தான் ஜீவாத்மாவின் ஆநந்தம் உண்டாகிறது. பிரியம், மோதம், பிரமோதம் இவைகள் கரணமாகிற (கருவியாகிற) மனதின் விருத்தி விசேஷங்களாயிருப்பதால் கர்த்தாவான விஞ்ஞானமயத்துக்கு வெளியே யிருந்தாலும், ஸ்வல்பமான ஜீவாநந்தம் அல்லது மஹத்தான பிரம்மாநந்தம் இவைகளின் பிரதிபிம்பங்களை தகிப்பதினால் இவைகள் ஆந்தரங்கள் (உள்ளிருப்பவைகள்) ஆகின்றன. ஆகையால் விஞ்ஞானமயத்துக்குள் ஆநந்தமயம் இருக்கிறதாகச் சொல்லப்பட்டது. ஆநந்தமய ஆத்மாவை உபாசிக்கிறவன் எப்போது பாவனையால் அதை சாக்ஷாத்கரிக்கிறானோ, அப்போது புச்சமாக (வாலாக) வர்ணிக்கப்பட்ட பிரம்மத்தினிடத்தில் ஏகாக்கிரதையை அடைந்த மனோவிர்த்தியானது, பிரதிபிம்பமில்லாததால் பிரம்மத்தையே சாக்ஷாத்கரிக்கிறது. இரத்தினத்தின் காந்தியைப்பார்த்து இரத்தினம் என்று பிரமிக்கிறவன் கடைசியில் இரத்தினத்தையே நேரில் அறிகிறதுபோலும்

இப்படி கிடைத்த சாக்ஷாத்காரமே உபாசனையின் பலன் என்று நினைத்து சுருதியானது வேறு பலனைச் சொல்லாமல் பிரம்மபுச்சம் பிரதிஷ்டா என்பதாய் சர்வஜகத்துக்கும் ஆதாரமான பிரம்ம தத்துவத்தை உபதேசித்து முடிவு பெறுகிறது.

(வி-வி:—இந்த ஆநந்தமயகோசத்தில் பிரதானமான பிரம்மத்தைப் பிரதிபாதிக்கும் சுலோகத்தை இனி சுருதி உதாஹரிக்கிறது.)

तदप्येष श्लोको भवति ॥5॥ தத³ப்யேஷ ஶ்லோகோ ப⁴வதி ॥ 5 ॥

॥ इति पञ्चमोऽनुवाकः ॥

॥ இதி பஞ்சமோ(அ)நுவாக꞉ ॥

பதவுரை.

—तदपि தத³பி=அந்த அர்த்தத்திலும்
एषः ஏஷ꞉=இந்த
श्लोकः ஶ்லோக꞉=சுலோகம்
भवति ப⁴வதி=இருக்கிறது.

ஐந்தாவது கண்டம் முற்றிற்று.

(சு-வா:—இந்த சுலோகம் மூலமாக முன் உபதேசித்ததை ஒருவன் தெரிந்து கொள்ளும் பொருட்டு இந்த சுலோகத்தை சுருதி உதாஹரிக்கிறது.)

து:—तदपि ததபி=ஐந்து ரூபங்களுள்ள பிரம்மம் ஜீவனைவிட வேறு என்கிற விஷயத்தில் சுலோகமும் இருக்கிறது என்று அர்த்தம்.

(2) असद्ब्रह्म इतिवेदचेत् அஸத்ப்ரஹ்மேதி வேத³சேத் = பிரம்மம் ஜீவனைவிட வேறாக இல்லை என்று அறிந்தால்

(1) स: असन्नेवभवति ஸ꞉ அஸந்நேவ ப⁴வதி=அவன் துக்கியாகவே ஆகிறான் என்று அர்த்தம.

(3) अस्तिब्रह्मइतिवेदचेत् அஸ்தி ப்³ரஹ்மேதி வேத³சேத்=ஜீவனைவிட வேறாகபிரம்மம் இருக்கிறதென்று அறிந்தால்

(4) एनं सन्तं ஏநம் ஸந்தம்=இவனை சுகியாக, முக்தியோக்கியனாக
विदु: விது³꞉=அறிகிறார்கள்.

इति இதி=முன்போலவே அன்வயப்படுத்திக்கொள்ளவும் மற்றது ஸ்பஷ்டம். முன்போலவே,
பிரமாணவாக்கியம்:—

तस्मिन्नानंदरूपो सोऽस्थितोनारायणःसदा ।
शिरःप्रियेस्थितंतस्य परेयंप्रियनामकं ।
मोदप्रमोदयोर्बाहू मोदनाच्चप्रमोदनात् ।
मोदप्रमोदनामाना नानंदस्त्वाततस्ततः ।
मध्यमानंदसंस्थंच ब्रह्मपुच्छ्यातुबृंहयेत् ।
पुच्छंप्रधानवाच्योच ब्रह्माख्येसंस्थितंसदा ।
अभेदोप्यशेषोपि परमैश्वर्ययोगतः ।
देहदेहिवदेवासौ पञ्चधायस्थितोहरिः ।
बहिस्थोदेहवद्विष्णु रंतस्थोदेहिवत्सस्मृतः ।
अन्तर्यामिविशेषेण नतत्त्वशक्तस्ततोबहिः ।
सर्वेपिपुरुषाकारा उत्तरात्पूर्वसंभवाः ।
अत्तृत्वंचप्रणेतृत्वं बोधोविविधवृत्तता ।
आनन्दश्चयतःपूर्ण स्ततोन्नादिमयाःस्मृताः ।
अन्यादिदास्तेप्रत्येकं सर्वेसर्वगुणाअपि ।
नामभेदस्ततस्तत्क्तः सर्वनामवतामपि ।
पंचरूपंचतद्ब्रह्म जीवादन्यन्न वेद्यते ।
इतियेतुविजानन्ति तऽसंतस्तमआलयाः ।
जीवादन्यत्परंब्रह्म पंचरूपंचयेविदुः ।
संतस्तइतिविज्ञेया मोक्षयोग्याहितेध्रुवं (तत्वनिर्णये)

## 6-வது அனுவாகம்.

(1) असन्नेव स भवति । 𑌅𑌸𑌨𑍍𑌨𑍇𑌵 𑌸 𑌭𑌵𑌤𑌿 ।

(2) असद्ब्रह्मेति वेदचेत् । 𑌅𑌸𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌵𑍇𑌦 𑌚𑍇𑌤𑍍 ।

(3) अस्ति ब्रह्मेति चेद्वेद । । 𑌅𑌸𑍍𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚𑍇𑌦𑍍𑌵𑍇𑌦

(4) सन्तमेनंततो विदुरिति ॥ 1 ॥ 𑌸𑌨𑍍𑌤𑌮𑍇𑌨𑌂 𑌤𑌤𑍋 𑌵𑌿𑌦𑍁𑌰𑌿𑌤𑌿 ॥ 1 ॥

பதவுரை.

(2) ब्रह्म 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮=பிரம்மம்

असत् 𑌅𑌸𑌤𑍍=அசத்து (இல்லை)

इति 𑌇𑌤𑌿=என்பதாய்

वेदचेत् 𑌵𑍇𑌦 𑌚𑍇𑌤𑍍=அறிந்தால்

து:— [illegible]

(தைத்திரீய)

(4) ततः தத: = அதினால்
एनं ஏநம் = இவனை
सन्तं ஸந்தம் = இருக்கிறதாக
विदुः விது: = அறிகிறார்கள்
इति இதி = சமாப்தியைக் கூறுகிறது.

ச-பா:—

(1) (2):—எவன் பிரம்மத்தை அசத்தாக (இல்லை என்பதாய்) அறிகிறானோ அவன் இல்லாதவனுக்குச் சமானமாகிறான். அதாவது இல்லாதவன் யாதொரு புருஷார்த்தத்தையும் அடையாததுபோல் இவனும் யாதொரு புருஷார்த்தத்தையும் அடையமாட்டான்.

(சு-வா:—பிரம்மம் கோசங்களில் ஆத்மாவாக இருக்கிறது. பிரம்மம் இல்லையென்று ஒருவன்பாவித்து, கோசங்களையே தானாக பாவித்தால், அவன் இல்லாதவனாக ஆகிறான். ஆத்மா பிரம்மமாக இராமல் கோசமாக இல்லை. பிராந்தி சர்ப்பம் இரஜ்ஜுரூபமன்றியில் எப்படி இருக்கமுடியும்)

(3) இதற்கு எதிரிடையாக, எது சகல விகற்பங்களுக்கும் இருப்பிடமாயும், சகல பிரவிர்த்திக்கும் பீஜமாயும், சகல விசேஷணங்களற்றிருந்தாலும் இருக்கிறதாயும் இருக்கிறதோ அது பிரம்மம் என்பதாய் ஒருவன் அறிந்தானேயானால்

பிரம்மம் இல்லை என்பதாய் சங்கை எங்கிருந்து உண்டாயிற்று.? பிரம்மம் (இந்திரியங்கள் அறியக்கூடியது என்கிற) வியவஹாரத்துக்குள் அடங்காதது என்று சொல்லுகிறோம். புத்தியானது வியவஹாரத்துக்கு விஷயமாயும் வாசாரம்பண மாத்திரமாயுமிருக்கிறதை அஸ்தி (இருக்கிறது) என்பதாய் பாவிக்கிறது. இதற்கு எதிரிடையானது அதாவது வியவஹாரத்துக்கு விஷயமாகாததை இல்லை யென்றும் அதே புத்தி அறிகிறது. வியவஹாரத்திலிருக்கிற கடாதிகள் இருக்கின்றனவென்றும், வியவஹாரத்தில் வராதவைகள் இல்லை என்றும் லோகத்தில் சொல்லிக்கொள்வது போலும். அப்படியே இவ்விடத்திலும் பிரம்மம் இல்லை என்று ஒருவன் பாவிக்கக்கூடும். ஆகையால் "பிரம்மம் இருக்கிறதுஎன்று ஒருவன் அறிந்திருந்தால்" என்பதாய்ச் சொல்லப்பட்டது.

(4) அப்படி இருக்கிறதாக அறிந்தவனுக்கு என்ன? வெனின் சுருதிசொல்லுகிறது:—பிரம்மம் இருக்கிறதென்பதாய் அவன் தெரிந்துகொண்டிருப்பதினால், அவன் இருக்கிறான் என்பதாய்

பிரம்ம வித்துக்கள் அவனைப்பற்றி அறிகிறார்கள். பிரம்மத்துடன் ஒன்றாயிருப்பதால் அவன் பரப்பிரம்மம் என்றும், பரமார்த்த சத்தியமென்றும் அவர்கள் பாவிக்கிறார்கள், மற்றவர்கள் இவனை பிரம்மம்போல் பாவிக்கிறார்கள் என்பது கருத்து.

(சு-வா:—அசத்தான கோசங்களை விட வேறாக சத்தாயும் ஏகமாயும் இருக்கிற பிரம்மத்தை ஒருவன் அறிந்திருந்தால், ஆத்மா (சாக்ஷி) பிரம்மத்தைவிட வேறாயிராதபடியால் பிராமணர்கள் (பிரம்மோபாசகர்கள்) அவனை சத்தாக பாவிக்கிறார்கள். ஆகையால் ஒருவன் அஞ்ஞானகாரியங்களான கோசங்களில் ஆத்மபுத்தியை விட்டு பரமாத்மாவையே சரணமாக அடையவேண்டியது. பரமாத்மாவாயிருப்பதால் ஆத்மா ஒருக்காலத்திலும் அசத்தாகமாட்டாது ஏனெனின் கோசமன்றியில் அசத்து ஒன்றுமில்லை.)

(வி-வி:—பிரத்தியக்ஷப் பிரமாணத்தைக்கொண்டு கடம்கண்ணுக்குக் காணப்பட்டும், ஜலத்தைக்கொண்டுவரக்கூடியதாயுமிருந்தால் அது இருக்கிறதாக ஜனங்கள் சொல்லுகிறார்கள். இல்லாவிடின் கடமில்லை என்கிறார்கள். இந்த அனுபவத்தைக்கொண்டு, பிரத்தியக்ஷ ஞானத்துக்கு விஷயமாகாத பிரம்மம் இல்லை என்பதாய் மனிதன் நினைக்கிறான். விவேசனை செய்யக்கூடியவன், நம்முடைய அனுபவத்திற்குள் வரக்கூடியதெல்லாம் சுருதிஸ்மிருதி அனுபவப்படி அசத்தியமாகையால், அவைகள் (அசத்) இல்லை என்பதாய் பாவிக்கிறான். இந்த சுருதி ஸ்மிருதி ஆதாரங்களைக்கொண்டு பிரமாணங்களுக்கு விஷயமாகாததாக பிரம்மம் இருக்கிறதென்று அவன் நம்புகிறான். எவன் பிரம்மத்தை அசத்தாக நினைக்கிறானோ அவன் ஸ்வயம் அசத்தாயிருப்பான். ஏனெனின் அன்னமயாதி கோசங்கள் அநாத்மாக்கள் என்று முன்னமேயே நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இந்த கோசங்களைத் தவிர பிரம்மம் வேறாக இருக்கிறதாக அவன் ஒப்புக்கொள்ளவில்லை. கோசங்களுக்கு அதீதமான பிரம்மத்தை ஒருவன் அறிந்திருந்தால், அந்தபிரம்மமே இவனுடைய ஸ்வரூபமாகையால், இப்படி விவேசனை செய்து பார்க்கிறவன் சத்து, ஆத்மா என்பதாய் தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள்.) அல்லது, (இனி வேறுவிதமாக சுருதிக்கு அர்த்தம் செய்யப்படுகின்றது.) எவன் பிரம்மம் இல்லை என்பதாய் நினைக்கிறானோ அவன் வர்ணாசிரமங்களின் பேதத்தால் ஏற்பட்ட சகல சன்மார்க்கங்களையும் நம்பாதபடியால், அவைகள் (மார்க்கங்கள்) இல்லை என்பதாய் அவன் நம்புகிறான். இந்த மார்க்கங்கள் பிரம்மத்தை அறியு

சாதகங்கள் ஆகையால் இவைகளை நம்பாதவனை நாஸ்திகன் என்றும் அசத்து என்றும் பிரபஞ்சத்தில் சொல்லுகிறார்கள். மேலும் எவன் பிரம்மம் இருக்கிறதாக அறிகிறானே அவன் பிரம்மத்தை அறிவதற்குச் சாதகமானதும் வர்ணாசிரம தர்மத்தை அனுசரித்துமிருக்கிற சன்மார்க்கத்தில் நம்பிக்கையுள்ளவனாக சாஸ்திரத்திற் சொல்லியபடி அதை அனுசரிக்கிறான். ஆகையால் ஸாதுக்கள் இவனை சன்மார்க்கத்திலிருக்கிறவனாக அறிகிறார்கள்.

ஆகையால் பிரம்மம் இருக்கிறதென்றே அறியவேண்டியது என்பது வாக்கியார்த்தம்.

(வி-வி:—சகல சன்மார்க்கங்களும் பிரம்மத்தை அறிய சாதகங்களாய் ஏற்பட்டிருக்கின்றன. இந்த மார்க்கங்களை தூஷிக்கிறவன் நாஸ்திகனாகத்தான் இருக்கிறான். எவன் பிரம்மம் இருக்கிறதாக நம்புகிறானோ அவர்களை சத்துருவாக அறிகிறார்கள்.

வி-வி:— உபாசகனுக்கு ஆநந்தமயமே ஆத்மா என்கிற புத்தி திருடப்படும் பொருட்டும், தத்துவத்தை அறிய இச்சிக்கிறவனுக்கு பிரம்மமே ஆத்மா என்கிற புத்தி திருடப்படும் பொருட்டும் சுருதியானது

(5) तस्यैष एव शारीर आत्मा । தஸ்யைஷ ஏவ ஶாரீர

(6) यः पूर्वस्य ॥ 2 ॥ யஃபூர்வஸ்ய ॥ 2 ॥

என்று கூறுகிறது.

பதவுரை:

तस्य தஸ்ய அந்த

पूर्वस्य பூர்வஸ்ய=முன் சொன்னதிற்கு

---

## 6-வது அனுவாகம்.

வி:—முந்தின நான்கு பரியாயங்களில் உதாஹரிக்கப்பட்ட சுலோகங்கள் புச்சத்தோடு கூடின வஸ்துவை கூறுகிறபடியால் இந்த சுலோகமும் புச்சத்தோடு கூடின ஆநந்தமயனையே கூறுகிறதேதவிர புச்சபிரம்மத்தைமட்டும் கூறவில்லை. ஆகவே பிரம்மசப்தத்தால் ஆநந்தமயனே சொல்லப்படுகிறான். ஆநந்தமயனை சத் என்று அறிந்தால் மோக்ஷமுண்டாகிறது. ஆநந்தமயனை அசத் என்று அறிந்தால் சம்சாரம் உண்டாகிறது என்று அர்த்தம். ஆகாசம் முதல் விஞ்ஞானமயகோசம் வரையிலுள்ள பதார்த்தங்களுக்கு அந்தர்யாமியாகக் கூறப்பட்ட ஆநந்தமயனை பிரம்மத்துக்கும் வேறு ஆத்மா இருக்கிறானா என்கிற சங்கையை இந்த சுருதி நிவிர்த்திக்கிறது.

(6) पूर्वस्य பூர்வஸ்ய=விஞ்ஞானமயனுக்கு

यः एषः एव யஃஏஷஃஏவ=இவனே

शारीरआत्मा ஶாரீரஃ ஆத்மா=சரீரத்திலிருக்கிற ஆத்மா.

ச-பா:—

விஞ்ஞானமயனுக்கு ஆநந்தமயனே சரீர ஆத்மா - அதாவது விஞ்ஞானமய சரீரத்திலிருக்கிற ஆத்மா ஆநந்தமயம் அன்று என்கிற விஷயத்தில் சங்கையில்லை. பிரம்மம் சர்வவிசேஷ சூன்னியமாயிருப்பதாலும், சகலத்துக்கும் சாமான்னியமா யிருப்பதாலும் அது இல்லை என்பதாய் சங்கிக்க இடமுண்டு.

(வி-வி:—எவன் ஆநந்தமயனோ அவனே விஞ்ஞானமயத்துக்கு ஸ்வாமி. விஞ்ஞானமயம் சரீரம். உபாசகனை உத்தேசித்து ஆநந்தமயன் ஆத்மா வென்று சொல்லவேண்டியது.

பிரம்ம தத்துவத்தை அறிய இச்சிக்கிறவனை உத்தேசித்து இந்தவாக்கியத்துக்கு அடியில் வருமாறு அர்த்தம் செய்யவேண்டும்.

புச்சம் (வால்) என்பதாக எந்த பிரம்மம் கூறப்பட்டதோ, அதுவே முன்னிருக்கிற பிரியம் முதலான நான்குக்கும் ஆத்மா. பிரியம் முதலியவை சரீரம், அந்த சரீரத்திலிருக்கிற பிரம்மமே ஆத்மா.

இந்த ஆநந்தமயத்தைப்பற்றி பிரம்ம சூத்திரத்தில் விசாரிக்கப்பட்டிருக்கிறது. I-2-(12-19) ல் சில வேதாந்திகள் ஆநந்தமயத்தால் பரமாத்மாவை அறிகிறார்கள் என்பதும் சிலர் ஜீவனை அறிகிறார்கள் என்பதும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

முடிவு:—பிரம்மம் அநந்தம் என்பதைக் காட்டும்பொருட்டு ஆகாசாதிகளின் சிருஷ்டி கூறப்பட்டது. அது குஹையில் மறைந்திருக்கிற தென்பதைக்காட்டும் பொருட்டு அன்னமயாதி ஐந்து கோசங்கள் பிரதிபாதிக்கப்பட்டன. அறியத்தக்கது எங்கும் பிரம்மமே. அது சத்தியம் ஞானம் அநந்தம், குஹையிலிருப்பதால் பிரத்யகாத்ம ஸ்வரூபம்.

---

வி:—यः யஃ=எந்த ஆநந்தமயன் ஆத்மாவோ

(5) तस्य தஸ்ய=அந்த ஆநந்தமயனுக்கு

एषएव ஏஷஏவ=இந்த ஆநந்தமயனே

आत्मा ஆத்மா=ஆத்மா.

ஆகவே இந்த ஆநந்தமயனுக்கு வேறு ஆத்மா இல்லை என்று சொன்னதாக ஆய்விட்டது. முந்தின பரியாயங்களில் தஸ்யஏஷஏவ சாரீர ஆத்மா என்பதாய் அந்தந்த கோசங்களைவிட வேறு ஆத்மா

பின் வரும் கிரந்தத்தின்

பிரயோசனம்:—

(சு-வா. ஆ):—பிரம்மத்தை அறிந்தவன் பரத்தை அடைகிறான் என்று சொல்லியிருக்கிறது. அஞ்ஞானி அடைகிறதாக சொல்லப்படவில்லை. இந்த தத்துவத்தை விவரிக்கும் பொருட்டு சுருதி கிரந்தத்தை ஆரம்பிக்கிறது.

இவ்விடத்தில் ஒரு கேள்வி ஏற்படலாம். ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் பிரம்மம் பொதுவாய் அதாவது ஸ்வரூபமாயிருந்தால், பிரம்ம பிராப்தி அப்பிராப்திகள் இருவர்களுக்கும் சமம் என்று சொல்லலாம். இவைகளில் வித்தியாசம் ஏற்படுவதற்குக் காரணமில்லையே. வித்தியாசமிருக்கிறது என்பதைக் காட்டும்பொருட்டு மேல் கிரந்தம் ஆரம்பிக்கப்படுகிறது.

VI-3 (வி-வி:—இவ்விதமாக பிரம்மோபதேச ரூபமான சிரவண பிரகரணத்தை முடித்து, பஹிர் முகர்களானவர்களுக்கு வேண்டிய மனன பிரகரணத்தை ஆரம்பிக்கிற காலத்தில் சிஷ்யனுக்குத் தோன்றும் பிரச்னங்களை சுருதி கூறுகிறது.)

---

வி:—இருக்கிறான் என்று சொல்லியிருப்பதால் இந்தபரியாயத்தில் அவனே அவனுக்கு ஆத்மாவென்று சொன்னால் முந்தின பரியாயங்களுக்குவேறு விதமான அர்த்தம் ஏற்படும் என்று சங்கையுண்டானால், அப்படி சங்கிப்பது சரியன்று. ஏனெனின் முந்தின பரியாயங்களில் சொன்னபடியே சொல்லவேண்டுமென்கிற நியமமில்லை. முந்தின பரியாயங்களில் சொல்லப்படாத அவையவத்தன்மையானது இந்த பரியாயத்தில் பிரம்மந்நூக்குச் சொல்லியிருக்கிறது. மேலும் இந்த ஆநந்தமயனைவிட வேறு ஆத்மா இருக்கிறதாக சொல்லவில்லை. ஆகவே ஆநந்தமயனுக்கு ஆநந்தமயனே ஆத்மா என்று சொன்னது சரியே.

ஆநந்தமய பிரம்மத்தைச் சொன்னபிறகு, பிரம்மவித் ஆப்நோதி பரம் என்று உபக்கிரமத்தில் சொல்லப்பட்ட பிரம்மபிராப்தியை நன்றாகச் சொல்லும்பொருட்டு अथातो கதா தொ=என்கிற வாக்கியத்தால் கேள்விகளைக்கேட்கிறார்.

---

## அனுபிரச்னங்கள்.

து:— அ-கை:—ब्रह्मविदाप्नोतिपरं ப்ரஹ்மவிதாப்நோதிபரம் என்று சொன்னதில் உண்டான வேறு சங்கைகளை உதாஹரண மூலமாக மந்திரத்தில் சொல்லிய லக்ஷணங்களாலேயே நிவிர்த்தி செய்து, ஜீவனைவிட பிரம்மம் வேறு என்று அறிந்தவனுக்கு முக்தியையும்

(7) अथातोऽनुप्रश्नाः ॥3॥ அதாதோऽனுப்ரஶ்நா:

பதவுரை.

अथ அத=உபதேசத்துக்குப் பிறகு

अतः அத:=எந்தகாரணத்தால் சந்தேகங்கள் உண்டாகின்றனவோ அக்காரணத்தால்

अनुप्रश्नाः அநுப்ரஶ்நா:=உபதேசத்தை அனுசரித்த பிரச்னங்கள்

(क्रियन्ते க்ரியந்தே=செய்யப்படுகின்றன).

ச-பா:—

பிறகு சுரோதாவான சிஷ்யனுடைய, ஆசாரியாருடைய உபதேசத்தை அனுசரித்த பிரச்னங்கள் ஏற்படுகின்றன.

வி—வியாக்கியானம்.

உபதேசத்துக்குப் பிறகு உபதேசிக்கப்பட்ட விஷயத்தில் சிஷ்யனுடைய புத்தி தோஷத்தால், எந்த காரணத்தால் சந்தேகங்கள் உண்டாகின்றனவோ அந்தக் காரணத்தைக்கொண்டு உபதேசத்தை அனுசரித்த பிரச்னங்கள் செய்யப்படுகின்றன. अथ அத சப்தத்தால் சிரவண மனனங்களுக்குள் முதலிலிருப்பதை அறியவேண்டியது. श्रोतव्यः मन्तव्यः ஶ்ரோதவ்ய: மந்தவ்ய: (சிரவணம் செய்யத்தக்கது மனனம் செய்யத்தக்கது).

---

வி:— (7) अथ அத = ஆநந்தமயனைப் பிரதிபாதித்தபிறகு

अतः அத:=அடியில் வரும் விஷயத்தை அறியவேண்டுமென்கிற இச்சையால்

---

து:— ஜீவனைவிட பிரம்மம் வேறல்லவென்று அறிந்தவனுக்கு தமஸ்ஸாகிற நரகத்தையும் பலன்களாகச்சொன்ன சமயத்தில் பிரசங்கத்திலேற்பட்ட சில கேள்விகளை வருணன் பிரம்மாவை கேட்கிறான்:- अथातोनुप्रश्नाः அதாதோநுப்ரஶ்நா: என்பதினால்

अथ அத=பகவானுடைய அன்னமயாதி ஐந்துரூபங்களை விசாரித்த பிறகு

अतः அத:=பிரம்மவிதாப்நோதிபரம் என்கிற வாக்கியத்தினால் பிரம்மத்தை அறிந்தவன் மோக்ஷத்தை அடைகிறான் என்பதாய் சொல்லியதைக் கேட்ட வருணனால் குருவான பிரம்மாவைக் குறித்து

अनु அநு=தத்துவத்தை நிர்ணயம் செய்வதற்கு அனுகூலமான

प्रश्नाः ப்ரஶ்நா:=பிரச்னங்கள்

(कृताः க்ருதா:=செய்யப்பட்டன)

என்பதாய் பிரஹ II-4 5 சுருதி சொல்லுகிறது. சுருதி வாக்கியங்களினின்றும் சிரவணம் செய்யவேண்டியது, யுக்திகளால் மனனம் செய்யவேண்டியது என்று ஸ்மிருதியிற் சொல்லியிருக்கிறது. இவைகளின் பிரயோசனம் வெவ்வேறு என்பதாய்

**भिद्यते हृदयग्रन्थिच्छिद्यन्ते सर्व संशयाः ।**

பி⁴த்³யதே ஹ்ருத³யக்³ரந்தி²ஶ்சி²த்³யந்தே ஸர்வ ஸம்ஶயா: ।

என்கிற முண்டக II-2-8 ல் சொல்லியிருக்கிறது. உபதேசத்தால் பிரம்ம தத்துவத்தை அறிந்தவளவில் பிரத்தியகாத்மாவும் அந்தக்கரணமும் ஒன்று என்கிற பிராந்தி ரூபகிரந்தி(முடிச்சு)விட்டுப்போகிறது. யுக்திகளால் பரியாலோசனை செய்கிறதாகிய மனனத்தால் சம்சயங்கள் பேதிக்கப்பட்டுப் போகின்றன. ஆகையால் இப்போது சேதிக்கவேண்டிய சம்சயங்களைத் தெரிவிக்கும் கேள்விகள் கேட்கப்படுகின்றன என்பது கருத்து.

(வி-வி:—பிரச்னங்கள் விவரிக்கப்படுகின்றன)

(8) उताविद्वानमुं लोकं प्रेत्य ।

(9) कश्चन गच्छति ३ ।

(10) आहो विद्वानमुं लोकं प्रेत्य ।

(11) कश्चित्समश्नुता ३ उ ॥

(8) உதாவித்³வாநமும் லோகம் ப்ரேத்ய ।

(9) கஶ்சந க³ச்ச²தி ௩ ।

(10) ஆஹோ வித்³வாநமும் லோகம் ப்ரேத்ய ।

(11) கஶ்சித்ஸமஶ்நுதா ௩ உ ।

---

வி: — उताविद्वान् உதாவித்³வாந்=ஹிருதயாதி ஸ்தானத்திலிருக்கிறதாகவும் வியாபகமாகவுமிருக்கிற பிரம்மத்தை உபாசிக்கிறவித்வான்

प्रेत्य ப்ரேத்ய=மரித்து

अमुलोकं அமும்லோகம்=பரமே வியோமன்என்று சொல்லப்பட்ட பிரமலோகத்தை

---

து: — उतकश्चन ओवद्वान् உதகஶ்சந அவித்³வாந்=அஞ்ஞானிகள் யாராகிலும்

प्रेत्य ப்ரேத்ய=மரணமடைந்து

अमुं लोकं அமும் லோகம்=பரலோகத்தை, வைகுண்டத்திலிருக்கிற பரப்பிரம்மத்தை

புதவுரை.

(8) अविद्वान् அவித்வாந்=அவித்வானுன

(9) कश्चन கஸ்சந=எவனுகிலும்

(8) प्रेत्य ப்ரேத்ய=தேசத்தைவிட்டு வெளிப்பட்டு

अमु அமும்=இந்த. முன்னிருக்கிற

लोकं லோகம்=பரமாத்மாவாகிற லோகத்தை

(9) गच्छती கச்சதீ=அடைகிருனு

(8) उत உத=அல்லது

(नगच्छति நகச்சதி=அடையவில்லையா ?

(10) विद्वान् வித்வாந்=வித்வானுன

(11) कश्चित् கஸ்சித்=எவனுவது ஒருவன்

(10) प्रेत्य ப்ரேத்ய=தேகத்தைவிட்டு வெளிப்பட்டு

अमुं அமும்=இந்த

लोकं லோகம்=பரமாத்வாகிற லோகத்தை

(11) समश्नुते ஸமஸ்நுதே=அனுபவிக்கிருனு

(10-11) उ (त) आहो உ (த)ஆஹோ=அல்லது

(नसमश्नुते நஸமஸ்நுதே=அனுபவிக்கவில்லையா?)

---

வி:—गच्छति கச்சதி=அடைகிருன் என்பது ஒரு கேள்வி அல்லது லோகாந்திரத்துக்குப் போகாமல் இவ்விடத்திலேயே பிரம்மத்தை அடைகிருன் என்பது இரண்டாவதுகேள்வி. இவ்விடத்தில் வித்வானுக்கு போக்தாவாயிருக்கும் தன்மை சொல்லப்பட்டது. தவிர கெதிவிஷயம், ஸ்வரூபபேதவிஷயம் சத்பாவவிஷயம் அசத்பாவவிஷயம் இந்த நான்கு கேள்விகளும் அனுபிரச்ன: என்கிற பன்மைப்பிரயோகத்தால் சொல்லப்பட்டன.

ஆகவே இவ்வாறு விஷயங்களையும் வியாசாரியர் उपासात्रैविद्यात् உபாஸாத்ரைவித்யாத் என்கிற I-1-19 வது பிரம்மசூத்திரத்தில் ஸ்பஷ்டமாய்ச் சொல்லியிருக்கிருர்.

இந்த கேள்விகளுக்கு உத்தரம் சொல்லுவதற்காக ஜகத்காரணமான பிரம்மமே அடையத்தகுந்த வஸ்துவென்று சுருதி தெரியப்படுத்துகிறது.

---

து:— गच्छता கச்சதீ=அடைகிருர்களா

आहो ஆஹோ=இல்லாவிட்டால்

विद्वान् வித்வாந்=ஞானியே

प्रेत्य ப்ரேத்ய=மரணமடைந்து

अमुं लोकं அமும் லோகம்=வைகுண்டத்திலிருக்கிற பரப்பிரம்மத்தை

ச—பா:—

பிர்ம்மம் ஆகாசாதிகளுக்குக் காரணமாயிருப்பதால் வித்வான் அவித்வான் இருவர்களுக்கும் சமானம் ஆகையால், அவித்வானுக்கும் பிரம்மம் பிராப்தியானது சங்கிக்கப்படுகிறது. அவித்வான் இந்த லோகத்தை விட்டு இந்த பரமாத்மாவை அடைகிறானா? அல்லது அடையவில்லையா ? அனுப்பிரஸ்னா: என்று சொல்லியிருப்பதால் இரண்டாவது கேள்வியும் கேட்கப்பட்டதாக வைத்துக்கொள்ளவேண்டியது. பன்மைப் பிரயோகத்தால் வித்வான் விஷயத்திலும் இரண்டு பிரச்னங்களிருப்பதாக அறியவேண்டியது. பிரம்மம் சாமான்னிய காரணமாயிருந்தும் அதை அவித்வான் அடையாத பக்ஷத்தில் அப்போது வித்வானும் பிரம்மத்தை அடைகிறானா என்கிற சங்கை உண்டாகிறது. ஆகையால் அவனை (வித்வானைக்குறித்து) आहो विद्वान् ஆஹோ வித்வாந் என்பதாய் பிரச்னம் ஏற்பட்டது.

11-வது வாக்கியத்திலுள்ள उ உ என்பதுடன் 9-வது வாக்கியத்திலுள்ள उत உத என்பதின் त த காரத்தைச் சேர்த்து उत உத என்பதாய் ஏற்படும் பதத்தை 10-வது வாக்கியத்திலுள்ள आहो ஆஹோ என்பதற்கு முன் படிக்கவேண்டியது.

---

து:— गच्छति கச்சதி=அடைகிறானா?

இது ஒரு பிரச்னம்; இரண்டாவது பிரச்னமென்ன வெனின்

काश्चित् காஸ்சித=ஞானிகளுக்குள்ளும் எல்லாருக்கும் பிரம்மம் கிடைக்கிறதா அல்லது சிலருக்குமட்டும் கிடைக்கிறதா?

மூன்றாவது பிரச்னமென்ன வெனின்:—

समश्नुते ஸமஸ்நுதே= (सं=सम्यक्=अश्नुते ஸம்=ஸம்யக்+அஸ்நுதே) சர்வஞானிகளும் என்றுசொன்னால், எல்லாரும் பிரம்மத்தை நன்றாக (பூர்ணமாக) அடைகிறார்களா—என்பதாம்.

அ-கை:—அஞ்ஞானிகள் பிரம்மத்தை அடைகிறதில்லை. ஞானிகளே பிரம்மத்தை அடைகிறார்கள். எல்லா ஞானிகளும் பிரம்மத்தை அடைகிறார்கள். சிலர் மட்டுமல்ல; அவைகளிலும் எல்லாரும் பிரம்மத்தை செவ்வையாக அறிகிறதில்லை. இப்படி எப்போதும் அறிகிறவர் விரிஞ்சன் ஒருவரே;மற்றவர்கள் அவரவர்களுடைய யோக்கியதையை அனுசரித்து அறிகிறார்கள் என்கிற அபிப்பிராயத்துடன் பிரம்மாவானவர் उ உ=என்பதால் சுருக்கமாய் உத்தரம் கூறுகிறார்.

उ உ=சிலர் தான் செவ்வையாக அறிகிறாரா என்கிற கடைசியான பிரச்னத்துக்குப்பிறகு உ அப்படியே என்பதாய் பிரம்மா சொன்னார்.

வித்வான் பிரம்பத்தை அடைகிறுனு அல்லது அவித்வான் போல் வித்வானும் அடையவில்லையா என்பது வேறு பிரச்னம் அல்லது வித்வான் அவித்வான் இவர்கள் விஷயமாய் இரண்டு பிரச்னங்கள் தான் இருக்கின்றன. கேட்கக்கூடிய அனேகப் பிரச்னங்களை உத்தேசித்துட பன்மைப் பிரயோகம் ஏற்பட்டது.

असद्ब्रह्मेति वेदचेत् அஸத்ப்ரஹ்மேதி வேதவேத் என்பதையும்

अस्ति ब्रह्मेतिचेद्वेद அஸ்தி ப்ரஹ்மேதிவேதவேத் என்பதையும் கேட்டபிறகு இருக்கிறதா இல்லையா என்கிற சந்தேகம் வருகிறது எது இருக்கிறது எது இல்லை என்பது முதலாவது அனுப்பிரச்னம்.

(b) பிரம்மம் பக்ஷபாத மற்றதாகையால் வித்வான் அடைகிறுனு இல்லையா என்பது இரண்டாவது பிரச்னம்.

(c) பிரம்மம் சமமாயிருந்தும் அவித்வான் போல் வித்வானும் இதை அடைகிறுனு இல்லையா வென்பது மூன்றுவது அனுப்பிரச்னம். இவைகளுக்கு உத்தரம் சொல்லும் பொருட்டு கீழ்கிரந்தம் ஆரம்பிக்கப்படுகிறது.

வி—வி:—

ब्रह्मविदाप्नोतिपरम् ப்ரஹ்மவிதாப்நோதிபரம் என்பதாய் முதலில் (II - 1.) சொல்லப்பட்டது. அதைக் கேட்டவுடன் பிரம்ம வித்துக்கு எதிரிடையான அவித்வான் விஷயத்தில் இரண்டு பிரச்னங்கள் செய்யப்படுகின்றன.

उत உத சப்தம் கேள்வியைக் காட்டுகிறது.

சனா சப்தம் அபி அதாவது உம் என்கிற அர்த்தத்தைக் கூறுகிறது.

அவித்வான் எவனுவது இந்த தேகத்தைவிட்டு பரமாத்மாவை அடைகிறுனு என்பது முதல் கேள்வி, அல்லது அடையவில்லையா என்பது இரண்டாவது கேள்வி.

அப்படியே வித்வான் விஷயத்திலும் இரண்டு பிரச்னங்களுண்டு.

ஆகவே பிரச்னங்கள் நான்காம். ஜீவரூபமாக தேகத்தில் பிரவேசித்திருக்கிற சர்வ ஜகத்காரணமான பிரம்மம் வித்வானுக்கும்

---

பிரமாண வாக்கியம்:— 50-வது பக்கத்தில் (1) பார்க்க.

सोकामयत ஸோகாமயத:—அ-கை:—ஞானிகளுக்குள் சிலர் தான் பிரம்மத்தைச் செவ்வையாக அறிகிறுர்கள் என்பதாய் उ உ என்கிற அக்ஷரத்தால் சுருக்கமாய்ச் சொன்னதை रसंह्येवायं लब्ध्वानंदी भवति ரஸம்ஹ்யேவாயம் லப்த்வானந்தீ பவதி=என்கிற இடத்தில்விஸ்தாரமாய்ச் சொல்லும் பொருட்டு, விஷ்ணுவின் சுவாதந்திரியம் முதலிய மஹிமைகளை ஞாபகம் செய்வதற்காக சிருஷ்டியையும், அதில் பிரவேசத்தையும் சொல்லுகிறுர்.

அவித்வானுக்கும் சாதாரணமாயிருக்க, வித்வான் அதை அடையும்போது அவித்வானும் அடைவான், அவித்வான் அதை அடையாதபோது வித்வானும் அடையமாட்டான். இது நான்கு பிரச்னங்களின் அபிப்பிராயம்.

அல்லது வித்வான் அவித்வான் இவர்கள் விஷயமாய் பிரச்னங்கள் இரண்டே. முந்தின வாக்கியத்தில் சூசனையாகிற கேள்வியுடன் சேர்ந்து பிரச்னங்கள் என்கிற பன்மைப்பிரயோகம் ஏற்பட்டது.

(வி-வி:—முந்தின வாக்கியத்தில்
असद्ब्रह्मेति वेदचेत् அஸத்ப்ரஹ்மேதி வேதசேத் என்றும்
अस्ति ब्रह्मेति चेद्वेद அஸ்திப்ரஹ்மேதி சேத்வேத என்றும் இரண்டு விதமாய் சொல்லியிருப்பதால் பிரம்மம் இருக்கிற விஷயத்தில் முதலாவது பிரச்னம் ஏற்படுகிறது. இந்த கேள்விக்கு உத்தரம் கொடுக்கிறதினால் குருவானவர் பிரம்மம் இருக்கிறது என்பதை சாதிப்பதற்கு சிருஷ்டியைச் சொல்லுகிறார்.

(12) सोऽकामयत । ஸோऽகாமயத।

(13) बहु स्यां प्रजायेयेति । பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி ।

(14) स तपोऽतप्यत । ஸ தபோऽதப்யத।

(15) स तपस्तप्त्वा । ஸ தபஸ்தப்த்வா।

(16) इदꣳ सर्वमसृजत । இதꣳ ஸர்வமஸ்ருஜத।

பதவுரை.

(12) सः ஸ:=அந்த பரமாத்மா
(13) बहु பஹு=வெகுவாக
स्यां ஸ்யாம்=ஆகவேண்டும்.
प्रजायेय ப்ரஜாயேய=ஜனிக்கவேண்டும்
इति இதி=என்பதாய்
(12) अकामयत அகாமயத=இச்சித்தார்
(14) सः ஸ:=அந்த பரமேசுவரன்
तपः தப:=தபஸை (ஞானத்தை)
अतप्यत அதப்யத=செய்தார்
(15) सः ஸ:=அவர்
तपः தப:=தபஸை
तप्त्वा தப்த்வா செய்து
(16) इदं सर्वं இதம்ஸர்வம்=இதையெல்லாம்
असृजत அஸ்ருஜத=சிருஷ்டித்தார்.

ச-பா:—

(முன் மூன்று பிரச்னங்களைச் சொல்லி யிருந்ததில் முதலாவது பிரச்னமாகிய பிரம்மம் இருக்கிறதா இல்லையா என்பதற்கு உத்தரம் பிரம்மம் இருக்கிறது என்பதாகக் கூறப்படுகிறது.

இப்போது பிரம்மம் இருக்கிறது என்றே சொல்லப்படுகின்றது. பிரம்மம் சத்தியம் ஞானம் அநந்தம் என்று சொல்லப்பட்டது.

எப்படி சத்தியம் என்பதைச் சொல்லவேண்டும், ஸத்வம் (இருக்கிறது.) என்று சொன்னதினாலேயே சத்தியம் என்று சொல்லப்படுகின்றது. सत् एव सत्यं ஸத் ஏவ ஸத்யம் (ஸத்தே சத்தியம்) என்று சொல்லியிருக்கிறது, ஆகையால் ஸத்வம் என்று சொன்னதினாலேயே ஸத்தியத்வம் சொல்லப்படுகின்றது. இந்த கிரந்தத்துக்கு இப்படித்தான் அர்த்தம் என்று எப்படித் தெரியவருகிறதெனின்

(1) तत्सत्यमित्याचक्षते (II-6-27)
தத்ஸத்யமித்யாசக்ஷதே (II-6-27)

(2) यदेष आकाश आनन्दो न स्यात् (II-7-9)
யதேஷ ஆகாச ஆநந்தோ ந ஸ்யாத் (II-7-9)

முதலிய கீழ் வாக்கியங்கள் சப்தார்த்தத்துடன் பிரவிர்த்தித்திருக்கின்றன.

(ஆ-பிரம்மம் இருக்கிறது என்பது இல்லை என்பதை கிராகரிக்கிறதினால் சித்திக்கிறது என்கிற அபிப்பிராயத்துடன் முதலில் அசத் என்கிற சங்கையை எடுத்துக் கொள்ளுகிறார்.)

ஆக்ஷேபம்:—இப்போது பிரம்மம் அசத் என்று சங்கிக்கப்படுகின்றது. ஏனெனின், கடாதிகள் போல் எது இருக்கிறதோ அது இன்னதென்பதாய் கிரகிக்கப்படுகின்றது. முயல் கொம்பு போல் எது இல்லையோ அது அறியப்படவில்லை. இப்படியே பிரம்மமும் அறியப்படவில்லை. ஆகையால் இன்னது என்பதாய் கிரகிக்கப்படாததினால் அது இல்லை.

உத்தரம்:—இது சரியன்று. ஏனெனின் பிரம்மம் ஆகாசாதிகளுக்குக் காரணமாயிருக்கிறது. பிரம்மம் இல்லை என்பதில்லை. ஏனெனின் ஆகாசம் முதலிய சகல காரியங்களும் பிரம்மத்தினின்றும் உண்டானதாக அறியப்படுகின்றன. எதினின்றும் எதாவது உண்டானால் அது இருக்கிறதென்பதாய் உலகத்தில் கண்டிருக்கிறோம். கெடம் முளை முதலியவைகளுக்குக் காரணமான மிருத்து

விரை, முதலியவைகள் போலும். ஆகையால் ஆகாசாதிகளுக்குக் காரணமாக இருப்பதால் பிரம்மம் அஸ்தி இருக்கிறது.

அசத்தினின்றும் (இல்லாததினின்றும்) எந்த காரியமும் உண்டாகிறதாக லோகத்தில் தெரியவில்லை. அசத்தினின்றும் நாம ரூபாதிகள் உண்டானால், அவைகளுக்கு ஸ்வரூபமில்லாததினால் அவைகள் அறியப்படமாட்டா. ஆனால் அவைகள் அறியப்படுகின்றன.

ஆகையால் பிரம்மம் இருக்கிறது. அசத்தினிடமிருந்து காரியம் உண்டாகிறதாக அறியப்படாமல், அசத்துடன் கூடினதாகவே அது இருக்கும். ஆனால் அப்படி (அநுபவத்தில்) இல்லை. ஆகையால் பிரம்மம் இருக்கிறது.

कथं असतः सज्जायेत கத²ம் அஸத꞉ ஸஜ்ஜாயேத । (அசத்தினின்றும் சத் எப்படி உண்டாகும்) என்பதாய் வேறு சுருதி (சா-VI-2-2) அசத்தினின்றும் சத் உண்டாகமாட்டாது என்று யுக்தியை அநுசரித்துச் சொல்லுகிறது. ஆகையால் பிரம்மம் சத்தை என்பது யுக்தம்.

ஆக்ஷேபம்:—மிருத்து, விரை, முதலியவைகள் போல் அது காரணமானால் அது அசேதனமாகும்.

உத்தரம்:—அன்று. அது இச்சிக்கிறதாயிருக்கிறது, உலகத்தில் இச்சிக்கிறவன் அசேதனனாக இருக்கவில்லை. பிரம்மம் சர்வஞ்ஞும் என்று சொல்லியிருக்கிறோம். ஆகையால் அது இச்சிக்கிறதாகச் சொல்லுவது பொருந்தும்.

ஆக்ஷேபம்:—இச்சிக்கிறதாக இருப்பதால் நம்மைப்போல் அனாப்தகாமம் அதாவது நிறைவேறாத இச்சையுடையது என்று ஏற்படும்.

உத்தரம்:—ஏற்படமாட்டாது. ஏனெனின் அது ஸ்வதந்திரம். காமாதி தோஷங்கள் மற்றவர்களை பரவசமாக்கி காரியங்களில் பிரவிர்த்திக்கும்படிச் செய்கின்றன. பிரம்மத்தை இச்சை அப்படி பிரவிர்த்திக்கும்படி செய்யவில்லை.

ஆக்ஷேபம்:—அப்படியானால் அந்த காமங்கள் எப்படிப்பட்டவை.

உத்தரம்:—சத்திய ஞான ஸ்வரூபங்கள் பிரம்ம ஸ்வரூபமானதால் மிகவும் சுத்தம். அவைகளால் பிரம்மம் பிரவிர்த்திக்கப்படவில்லை.

(ஆ:—பிரம்மம் மாயையில் பிரதிபிம்பித்து ஜகத்துக்குக் காரணமாகிறது. மாயையின் பரிணாமங்களான காமங்களால் பிரம்மம் இச்சிக்கிறதாக ஆகிறது. இந்த காமங்கள் அவித்தையால் மூடப்படாத சித்தால் வியாபிக்கப்பட்டிருப்பதாலும், சத்திய ஞானஸ்வரூபமான பிரம்ம தாதாத்மியத்தாலும் (அதுவே இது என்பது தாதாத்மியம்) அதர்மசம்பந்தமில்லாமையால் அவைகள் சுத்தம். ஆகையால் இந்த காமங்கள் ஜீவனுடைய காமங்கள் போலில்லை என்று சித்தித்தது)

ஆக்ஷேபம்:—ஆ:—அப்படியானால் பிரம்மத்தின் காமங்கள் புண்ணியம் செய்கிறவர்களுக்குக்கூட அநிஷ்டபலத்தைக்கொடுக்க அனுகூலங்களாயிருக்குமே எனின்,

உத்தரம்:—பிராணிகளின் கர்மத்தை அபேக்ஷித்து இவைகளை பிரவிர்த்திக்கும்படி பிரம்மம் செய்கிறது. ஆகையால் பிரம்மத்துக்கு கர்மங்களில் ஸ்வாதந்திரியமிருக்கிறது. ஆகையால் பிரம்மம் அநாப்தகாமம் அல்ல.

பிரம்மத்துக்கு இதர சாதகங்களின் அபேக்ஷையுமில்லை. ஆ:—(சரீராதிகளின் சம்பந்தத்தால் காமம் உண்டாகிறது என்பது பிரசித்தமாகையால், பிரம்மத்துக்கும் சரீராதிகளின் சம்பந்தம் இருக்கவேண்டுமே எனின், மாயை பிரம்மத்துடன் சேர்ந்திருக்கிறது. ஆகையால் மாயாபரிணாமங்களான காமங்களும் பிரம்மத்துடன் சேர்ந்திருக்கின்றன. ஆகையால் பிரம்மத்துக்குச் சரீராதிகளின் அபேக்ஷையில்லை. மற்றவர்கள் விஷயத்தில் அநாத்மாக்களான தர்மாதி நிமித்தங்களை அபேக்ஷிக்கும் காமங்கள் தங்களுக்கு வேறான சரீரம் இந்திரியம் முதலிய சாதனங்களை அபேக்ஷிக்கின்றன. அப்படி பிரம்மத்தின் காமங்கள் நிமித்தம் முதலியவைகளை அபேக்ஷிக்கவில்லை. அவைகள் பிரம்மத்தைவிட வேறல்ல.

(12) स: अकामयत ஸஃ அகாமயத:—எதினின்றும் ஆகாசம் உண்டாயிற்றோ அந்த ஆத்மா இச்சித்தது. எப்படி ?

---

வி:—(12) सः ஸஃ=ஆநந்தமயனென ஆத்மாவானவன்

(13) बहुस्यां பஹு ஸ்யாம்:—வெகுவாக ஆக வேண்டும் என்பதாய்

प्रजायेय ப்ரஜாயேய:—ஒரு பதார்த்தம் வேறு பதார்த்தத்தில் பிரவேசிக்காமல் வெகுவாக ஆகுமா? ஜனிக்கவேண்டும். புத்திரனுடைய உற்பத்தியால் (குடும்பம் அதிகப்படுவது)போல், வெகுவாக ஆகுதல் என்பதால் வேறு பதார்த்தங்கள் உண்டாகிறதில்லை. ஆனால் எப்படி எனின், தன்னிடத்திலிருக்கிற, வெளிப்படாத நாம ரூபங்கள் வெளிப்படுவதால் வெகுத்வம். எப்போது ஆத்மாவில் (தன்னிடத்தில்) இருக்கிற, வியக்தமாயிராத நாம ரூபங்கள் வெளிப்படுகின்றனவோ அப்போது நாம ரூபங்கள் ஆத்ம ஸ்வரூபத்தை விடாமலேயே பிரம்மத்தைவிட வேறாக தேசகாலத்தில் சகல அவஸ்தைகளிலும் வெளிப்படுகின்றன. அப்போது அந்த நாம ரூபங்களின் தோற்றமே பிரம்மத்தின் வெகுவாக ஆனதன்மை. அவயவமற்ற பிரம்மத்துக்கு வெகுவாக ஆகுதலாவது. அல்பமாக ஆகுதலாவது வேறுவிதமாக ஏற்படமாட்டாது. ஆகாசத்தின் அல்பத்தன்மையும் பெருந்தன்மையும் கடம் முதலிய இதரவஸ்துக்களால் செய்யப்படுவதுபோலும். ஆகையால் (ஆ:—நாம ரூப சக்தி ஸ்வரூபமான மாயையின் பரிணாமமூலமாகவே) ஆத்மா வெகுவாக ஆகிறது.

ஆ:—(இப்படிப்பட்ட ஜடமானமாயையை ஒப்புக்கொண்டால் பிரதானம் போல் அது வேறு ஒரு பொருளாகுமே, அத்வைதத்துக்கு ஹானி வருமே எனின்)

---

வி:—(13) बहुः பஹு = தேவமனுஷியாதி ரூபமாக

स्यां ஸ்யாம்=கிவிடுவோம். அப்படி ஆகவேண்டியதற்காக

प्रजायेय ப்ரஜாயேய=ஆகாசாதிகளான பூதங்களாகிற பிரஜையை சிருஷ்டிப்போம்

इति இதி=என்று

अकामयत அகாமயத=வியஷ்டி சமஷ்டி விஷயமான சேதனு சேதன விஷயமான சங்கற்பத்தை பண்ணினார் என்று அர்த்தம்.

---

து:—सः ஸஃ=பிரளய காலத்திலிருக்கிற நாராயணன்

प्रजायेय ப்ரஜாயேய=ஜகத்தை சிருஷ்டிக்கிறேன்

बहु பஹு=வெகு ரூபங்களாக நான்

स्यां ஸ்யாம்=ஆகவேண்டும்

इति இதி=என்பதாய்

अकामयत அகாமயத=இச்சித்தார்.

ஆத்மாவைவிட வேறான—அனாத்மாவாயும், ஆத்மாவைவிட வேறான தேசகால முள்ளதாயும், சூட்சுமமாயும், மறைபட்டும், விலகியும், சென்ற காலத்திலிருந்ததாயும், வரப்போகிற காலத்தில் இருக்கிறதாயும், இப்போது இருக்கிறதாயும்—யாதொரு வஸ்துவு மில்லை. ஆத்மாவைவிட வேறான வஸ்து இல்லாததால் நாம ரூபங் கள், சர்வ அவஸ்தைகளிலும் பிரம்மஸ்வரூபமாகவேயிருக்கின்றன

(ஆ:—ஆத்ம தாதாத்மியத்தால்தான் நாம ரூபங்கள் சித்திக் கின்றன)

(ஆ:—அப்படியானால் பிரம்மம் பிரபஞ்சமுள்ளதாக ஆகு மோவெனின்)

பிரம்மம் நாமரூபஸ்வ ரூபமல்ல. (ஆ:—ஏனெனின் பிரம்மம் ஜடமன்று, அவைகளில்லாதபோதும் இருக்கிறது) அவைகள் பிர ம்மத்தைவிட்டு விலகியே இராதபடியால் பிரம்மஸ்வரூபம் என்று சொல்லப்படுகின்றன.

(14) स तपोऽतप्यत ஸ தபோऽதப்யத:—இந்த உபாதிகளில் ஞாதா, ஞேயம், ஞானம், சப்தம், அர்த்தம் முதலிய சகல வியவ ஹாரத்தையும் தரித்ததாக பிரம்மமாகிறது. அப்படிப்பட்ட ஆத் மாவே இவ்விதமாக (வெகுவாக வேண்டும் என்பதாய்) இச்சித்து தபஸை செய்தான். தபஸ் சப்தத்தால் ஞானம் கூறப்படுகின்றது.

यस्यज्ञानमयं तपः யஸ்ய ஞானமயம் தப: என்பதாய் ( मु I-1-9) சுருதியில் சொல்லியிருக்கிறது. ஆத்மா ஆப்தகாமனாயுமிருக்கிறான். ஆகையால் வேறுவிதமான தபஸ் ஏற்படமாட்டாது. சிருஷ்டிக்கத் தக்க ஜகத்தானது இந்த மாதிரியாக இருக்கவேண்டும் என்கிற விஷயமாய் ஆலோசனையை செய்தார்.

(15) सः ஸ:=அந்த பரமாத்மாவானவர்

तपः தப:=சிருஷ்டிக்குத் தகுந்தவஸ்து விஷயமான ஆலோ சனையை

अतप्यत அதப்யத=பண்ணினார்.

---

து:—सः ஸ:=அந்த பிரளயகாலத்திலிருந்த நாராயணன்

तपः தப:=ஆலோசனையை

अतप्यत அதப்யத=செய்தார்

ஜகத்தை சிருஷ்டித்து அதை நியமனம் செய்கிறதினால் வெகு ரூபமுள்ளவனாக ஆகிறேன் என்பதாய் ஆலோசனைசெய்தார் என்று அர்த்தம்.

அத்:—(15) அவன் இப்படி ஆலோசித்து

(16) பிராணிகளின் கர்மம் முதலியவைகளை அனுசரித்து தேசம், காலம், நாமம், ரூபம் இவைகளை அவர்கள் சகல அவஸ்தைகளிலும் எப்படி எப்படி அனுபவிக்கவேண்டுமோ அப்படி அப்படி அனுபவிக்கப் படும்படி சிருஷ்டித்தார்.

## வி—வியாக்கியானம்.

(12) ब्रह्मपुच्छं प्रतिष्ठा ப்ரஹ்மபுச்சம் ப்ரதிஷ்டா=என்பதாய் கூறப்பட்ட பிரம்மம் என்பது அன்னமயம் முதல் ஆநந்தமயம் வரையிலுள்ள ஐந்து கோசங்களுக்குள் இருக்கும் ஆத்மாவென்று சொல்லப்பட்டது. அந்த ஆத்மா சிருஷ்டிக்கு முன் ஒன்றாகவே இரண்டற்றதாய் இருந்துகொண்டு தன்னுடைய சக்தி சம்பந்தத்தால் இச்சையுள்ளவனானன். ஆத்மாவை ஆசிரயித்திருக்கிற மாயா சக்தியானது இச்சா (காம) ரூபமாக வெளிப்பட்டது என்று அர்த்தம். விகாரமடையாத ஏகரஸமான சித்தத்துக்கு மாயையன்றியில் காமம் ஏற்படமாட்டாது.

(13) இந்த காமத்தின் பிரகாரத்தையே बहुस्यां பஹுஸ்யாம் என்பது காட்டுகிறது.

प्रजायेय ப்ரஜாயேய:—ஆகாசம் கடம் முதலிய வேறு பதார்த்தங்களாகிற உபாதிகளால் அநேகமாகிறதைக் கண்டிருக்கிறோம். அத்விதீயமானது (இரண்டற்றது) எப்படி வெகுவாக ஆகும் ?

எனின்:—ப்ரஜாயேய முன்னிருக்கிற ஸ்வரூபத்தை விட அதிகமாக ஜனிக்கவேண்டும் என்பதாய் இச்சை வந்தது.

ஆக்ஷேபம்:—பிதா இருக்கிறான். அவன் புத்திரனை உண்டு பண்ணுகிறான். தானே உண்டாகிறதில்லை. அப்படியிருக்க இவ்விடத்திலும் ஜகத்தை உண்டாக்கும் பிரம்மம் தன்னையே உண்டாக்கிக்கொள்ள மாட்டாதாகையால், ஜனிக்கவேண்டும் என்று சொன்னது பொருந்தாது.

---

து:—सः ஸ:=அந்த நாராயணன்

तपः தப:=ஆலோசனையை

तप्त्वा தப்த்வா=செய்து

यत् इदं किञ्च யதிதம் கிஞ்ச=இந்த ஜகத்து யாதொன்றுண்டோ

इदं सर्वं இதம் ஸர்வம்=இதையெல்லாம்

असृजत அஸ்ருஜத=சிலந்திப்பூச்சி போல் தன்னுடைய உதரத்திலிருக்கிற ஜகத்தை வெளிப்படுத்தினர் என்று அர்த்தம்.

அத்:-உத்தரம்:—பொருந்தும், உண்டாகிற நாம ரூபங்களுக்கும் பிரம்மத்துக்கும் சுத்தமாக பேதமில்லை. சமுத்திரத்தில் உண்டான அலை முதலியவைகள் சமுத்திரத்தைவிட வேறல்ல; அப்படி பிரம்மத்தின் சக்தியாகிற மாயையிலிருக்கிற முன் வியக்தமாயிராத, நாமரூபங்கள், பிறகு வியக்தமானபோது, பிரம்மத்தின் சத்ரூபத்தை விடாமலேயே தாங்களும் சத்ரூபமாகவே விளங்குகின்றன. இந்த அபிப்பிராயம் தான் வாஜஸநேயிகள்

तद्धेदंतर्ह्यव्याकृतमासीत्तन्नामरूपाभ्यमेव व्याक्रियते தத்3தே4த3ம் தர்ஹ்ய வ்யாக்ருதமாஸீத் தந்நாமரூபாப்4யாமேவ வ்யாக்ரியதே என்பதாய் பிரஹதாரணியகத்தில் (பிர-I-4-7) சொல்லியிருக்கிறார்கள். ஆகையால் பிரம்மத்தினின்றும் தான் மாயையானது ஜகத்ரூபமானது. பிரதி பாவிக்கிறதினால் प्रजायेय ப்ரஜாயேய என்று சொன்னது பொருந்தும்.

(14) தபஸ் சப்தம் ஞானத்தைக் கூறுகிறது. கிருச்சிர சாந்திராயணாதி தபஸால் பரமேசுவரனுக்கு யாதொரு பிரயோசனமுமில்லை.

இச்சை கொண்டதினாலும், பரியாலோசனை செய்ததினாலும் ஜகத்தை சிருஷ்டித்ததினாலும் இக்காரணங்களால் பரமாத்மா சத்ரூபம் வன்று சித்திக்கிறது.

அசத்வாதி சொல்லுகிறான்:—எது எது இருக்கிறதோ அதெல்லாம் நாமரூப ஸ்வரூபம் ஆகாசாதி பூதங்களையும் தேவாதி பௌதிகங்களையும் பார்த்துக்கொள்ள பரமாத்மாவே நாமரூபங்களுக்கு வெளிப்பட்டவர். பரமாத்மா பிரம்மம் என்கிற வியவஹாரமும் பரமாத்மா இருக்கிறார் என்பதை சாதிக்கவில்லை. மனிதனுடைய கொம்பு என்பதுபோல் அது கற்பனைமட்டுமே. ஆகவே நாமரூபங்கள் எப்போது பிரம்மத்தினிடத்தில் ஏற்படவில்லையோ அப்போது அது இருக்கிறது என்பதும் ஏற்படவில்லை.

(*a*) असद्वा इदमग्र आसीत् (तै II-7-I)
அஸத்3வா இத3மக்3ர ஆஸீத் (தை II-7-1)

அசத் முன்னமே யிருந்தது

(*b*) यतो वाचो निवर्त्तन्ते (तै II-9-1
யதோ வாசோ நிவர்த்தந்தே (தை II–9-1)

எதினின்றும் வாக்கு திரும்பிவிடுகிறதோ

(*c*) अथात आदेश नेति नेति (बृ II-3-6)
அதா2த ஆதே3ஶ நேதி நேதி (ப்3ரு II-3-6)

அத்:—இல்லை இல்லை என்பதாய் உபதேசம்

(*d*) अस्थूलमनण्व ह्रस्वम् (ब III-8-8)
அஸ்தூலமநண்வ ஹ்ரஸ்வம் (ப்ரு III-8-8)

ஸ்தூலமன்று, அணு அன்று, ஹ்ருஸ்வமன்று முதலிய சுருதிகளும் முன் சொன்னதை அனுசரித்துச் சொல்லுகின்றன. ஆகையால் பிரம்மமில்லை

இந்த அசத் வாதியைக்குறித்து சத்வாதி சொல்லுகிறதாவது:—பரமாத்மா சத்ரூபம். ஏனெனின், சுவர்க்காதிகளை ஒருவன் இச்சிக்கிறதுபோல் அவரும் இச்சிக்கிறார். மந்திரியானவன் பரியாலோசனை செய்கிறதுபோல் பரமாத்மாவும் பரியாலோ யாலோசனை செய்கிறார். குயவன் போல் அவரும் சிருஷ்டிக்கிறார். நாமரூபங்கள் இருக்கின்றனவென்பதாய் நீ சொன்னயே அவைகளே நாம் கூறும் பிரம்மம். சத்ரூபமான பிரம்மமாகிற அதிஷ்டானத்தில் மாயையால் நாமரூபங்கள் கல்பிக்கப்படுகின்றன. அசத் இருந்தது என்பதாய் உதாகரித்த சுருதிகளுக்கு அர்த்தம் மேல் சொல்லுவோம்.)

## பிரம்மத்தின் ஜீவரூபம்.

(வி-வி:—சத்ரூபமான பிரம்மம் பிரவேசிக்கிறதாக இருப்பதால், கிரகம் முதலியவைகளில் பிரவேசிக்கிற அரசன்போல் என்கிற அபிப்பிராயத்துடன் சுருதியானது பிரவேசத்தைக் காட்டுகிறது.

(17) यदिदं किञ्च । யதிதம் கிஞ்ச ।

(18) तत्सृष्ट्वा । தத் ஸ்ருஷ்ட்வா ।

(19) तदेवानुप्राविशात् ॥6॥ ததேவாநுப்ராவிஶாத் ॥6॥

**பதவுரை.**

(17) यत् किञ्च इदं யத் கிஞ்ச இதம்= இது எல்லாம் எது இருக்கிறதோ

(18) तत् தத்=அதை
सृष्ट्वा ஸ்ருஷ்ட்வா=சிருஷ்டித்து

(19) तत् एव தத் ஏவ=(சிருஷ்டித்த) அதையே
अनुप्राविशात् அநுப்ராவிஶாத்=பிரவேசித்தார்.

**ச-பா:—**

மிச்சமன்றியில் இந்த ஜகத்தை எல்லாம் சிருஷ்டித்து என்ன செய்தார் எனின், சிருஷ்டித்த ஜகத்தையே பிரவேசித்தார்.

அத்:-(சு-வா:—பூ மாலையானது சர்ப்பத்தை பிரவேசிக்கிறதாகச் சொல்லப்படுவது போலும்)

(வி—வி:—ஹிரணிய கர்ப்பம் முதல் ஸ்தாவரம் வரையில் எந்த எந்த சரீரங்களுண்டோ அவைகளை எல்லாம் சிருஷ்டித்து, அப்படி சிருஷ்டித்த சரீரங்களை பரமாத்மா பிரவேசித்தார் என்று அர்த்தம்.

இவ்விடத்தில் பரமாத்மா எப்படி பிரவேசித்தார் என்பதை விசாரிக்க வேண்டியது. (சங்கரபாஷ்ய வாக்கியங்களில் சிலதை வித்தியாரணிய வியாக்கியானத்தில் விவரித்திருப்பதாலும் பாஷ்யத்திலேயே விஷயங்கள் அதிகமாயிருப்பதாலும் இரண்டையும் கலந்து அடியில் எழுதப்பட்டிருக்கிறது.)

எந்த பரமாத்மா சிருஷ்டித்தாரோ அவர் தன்னுடைய ரூபத்துடன் பிரவேசித்தாரா? அல்லது வேறு ரூபத்துடன் பிரவேசித்தாரா? சிருஷ்டித்து என்று சொல்லியிருப்பதால் சிருஷ்டிக்கும் பிரவேசத்துக்கும் கர்த்தா ஒருவன் என்றே தெரியவருவதால் சிருஷ்டித்த ரூபத்துடன் தான் பிரவேசித்தார் என்று சொல்லு

---

வி:—(17) तत् தத்=அந்த ஜகத்தை

सृष्ट्वा ஸ்ருஷ்ட்வா=சிருஷ்டித்து

तदेव தடேவ=அதிலேயே

अनुप्राविशत् அநுப்ராவிசத்=உள்ளே நுழைந்தார்.

ஆக்ஷேபம்:—எப்போதும் எங்கும் வியாபித்திருக்கிற பிரம்மம் சிருஷ்டிகாலத்தில் உள்ளே நுழைந்தது என்று எப்படி சொல்லக் கூடும்.

சமாதானம்:—சர்வ வியாபகமான பிரம்மத்துக்கு பசுவின் உதரத்திலிருக்கிற கன்றுக்குப்போல் சர்வ வஸ்துக்களிடத்திலும் தனித் தனியே நன்றாக தோன்றுதலுக்கு யோக்கியமான ஸ்திதியாகிய உள்ளே நுழைதல்கூடும்.

இதனால் योवेदानिहितंगुहायां யொவெதநிஹிதம்குஹாயாம் என்கிற மந்திரத்தால் சொல்லப்பட்ட அநந்தமான பிரம்மத்துக்கு ஹிருதய குஹையிலிருப்பதானது நன்றாக சொல்லப்பட்டதாக ஆகிவிட்டது.

---

து:—तत् सृष्ट्वा தத் ஸ்ருஷ்ட்வா = இப்படி ஜகத்தை சிருஷ்டித்து தன்னிடமிருந்து வெளிப்படுத்தி

तत् एव தத்ஏவ = அந்த ஜகத்தையே

अनुप्राविशत् அநுப்ராவிசத்=பிரவேசித்தார்

அத்:-வேமென்றால் (பூர்வபக்ஷி) அது பொருந்தாது: ஏனெனின் மிருத்பிண்டம்போல் உபாதானம் பிரவேசிக்கமாட்டாது. அதாவது மிருத் போல் பிரம்மம் காரணமானால் காரியம் காரண ஸ்வரூபமாக இருக்கிறது. ஆகையால் காரணமே காரிய ஸ்வரூபமாக பரிணமிக்கிறது. ஆகையால் காரியம் உண்டானபிறகு காரணத்துக்கு பரிணாமத்தை விட வேறான அநுப்பிரவேசம் ஏற்படமாட்டாது· மிருத்துக்கு கடாகார பரிணாமத்தைவிட வேறான பிரவேசமில்லை· கடாகாரமாக பரிணமிக்கிற மிருத்தே கடத்தில் பிரவேசிக்கிறதில்லை. அப்படி சரீராகாரமாக பரிணமிக்கிற சிருஷ்டாவுக்கு அந்த சரீரங்களிலேயே எப்படி பிரவேசம் சம்பவிக்கும்?

அப்படியானால் வேறு ரூபத்தால் பிரவேசம் ஏற்படட்டுமே. மிருத் பிண்டவிகாரமான கடத்தில் வேறு மிருத்தின் தூளிகள் பிரவேசிக்கிறது போல்,

अनेन जीवे-नात्मनाऽनुप्रविश्य (छा VI-3-2)
அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய (சா VI-3-2)

(இந்த ஜீவஸ்வரூபத்தால் பிரவேசித்து)

என்கிற வேறு சுருதியை அநுசரித்து, ஈசுவரரூபத்தால் பிரவேச மில்லாவிட்டாலும் ஜீவரூபமாக பிரவேசம் இருக்கட்டுமே·

சித்தாந்தி:—இது சரியன்று. அத்வயமான பிரம்மத்துக்கு இரண்டு ரூபங்களிருக்கமாட்டா· மிருத் ஸ்வரூபம் அனேகமாக இருப்பதாலும், அவயவத்துடன் கூடியிருப்பதாலும் கடத்தில் மிருத்தானது தூளிரூபமாகப் பிரவேசிக்கக் கூடும். தூளிகள் பிரவேசிக்காத இடமிருந்தபடியால் பிரவேசித்தன. ஜீவரூபமாய் பரமாத்மா பிரவேசிக்கிறார் என்று ஒப்புக்கொண்டாலும் பிரவேசிக்கக் கூடிய தேகமில்லையே. பரமாத்மா ஒன்றானதால் அவயவ மற்றவர். உபாதானரூபமாக சகல காரியங்களிலும் முன்னமேயே கலந்திருக்கிறார்.

(பூர்வபக்ஷி) பரமாத்மா இல்லாத இடமிராதபடியால் எவ்விடத்தில் அவர் பிரவேசிப்பார். பரமாத்மாவினிடத்திலேயே பிரவேசிக்கிறார் என்று சொல்லுவோமேயானால், तदेवानुप्राविशत् தடேவாநுப்ராவிஶத் சிருஷ்டித்த காரியத்தில் பிரவேசித்தார் என்று சுருதி சொல்லுகிறது. அப்படியானால் பிரவேசம்தான் எப்படி ஏற்படும்? சுருதி சொல்லியிருப்பதால் பிரவேசம் யுக்தமாகத்தான் இருக்க வேண்டும்· பிரவேசம் சொல்லியிருப்பதால் அவயவத்துடன் கூடினதாக இருக்கட்டுமே. அவயவ சகித முகத்தில் கை பிரவேசிக்கிறதுபோல் நாமரூபகாரியத்தில் ஜீவஸ்வரூபத்தால் பிரவேசிப்பது யுக்தமே.

அத்:—சித்தாந்தி:—இது சரியன்று. ஆத்மா இல்லாத இடமில்லை; ஆகையால் ஜீவஸ்வரூபமாக பிரவேசம் ஏற்படமாட்டாது.

(பூ) :—காரணத்தையே பிரவேசிக்கிறதாக இருந்தால்,

(சி) :—ஜீவஸ்வரூபத்தை இழந்து விடுவார். கடமானது மிருத்தை அடைந்தவுடன் கடம் என்கிற தன்மையை இழந்து விடுவது போலும்; அதையே பிரவேசித்திருப்பதாகச் சுருதி சொல்லுவதால் காரணத்தைப் பிரவேசிப்பதாகச் சொல்லக்கூடாது.

பூ:—ஜீவாத்ம ரூபமான காரியமானது நாமரூபமாக பரிணமித்த வேறு காரியத்தில் பிரவேசித்தது என்று சொல்லுவோமே.

சி:—இது விருத்தம். கடம் வேறு கடமாகிறதில்லை. நாமரூபத்தை விட ஜீவன் வேறு என்று சொல்லும் சுருதிகளுக்கு விரோதம் வரும். காரியத்தை அடையும் பக்ஷத்தில் மோக்ஷம் சித்திக்க மாட்டாது. ஒருவன் எதினின்றும் விடுபடுகிறானோ அதையே அடையமாட்டான். விலங்கிலகப்பட்ட திருடன் மறுபடியும் விலங்காகவே ஆகிறதில்லை.

அந்த காரணமான பிரம்மம் சரீரம் முதலிய ஆதாரமாயும் அதற்குள்ளிருக்கிற ஜீவஸ்வரூபமாகவும் பரிணமிக்கிறது என்று சொன்னால், அதுவும் சரியன்று. வெளியே யிருக்கிறதற்குப் பிரவேசம் ஏற்படமாட்டாது. எவன் எதற்குள்ளிருக்கிறானோ அவனே அதை பிரவேசித்திருக்கிறான் என்று சொல்லப்படுகிறதில்லை. வெளியே இருக்கிறதுதான் பிரவேசிக்க முடியும். இப்படி பிரவேச சப்தத்துக்கு அர்த்தம் கண்டிருக்கிறோம். வீட்டைக் கட்டிப் பிரவேசித்தான் என்பது போலும்.

பூ:—ஜலத்தில் சூரியன் முதலானவர்களின் பிரவேசம் போல் என்று சொன்னால்,

சி:—அதுவும் சரியல்ல. ஏனெனின் பரமாத்மா அபரிச்சின்னம், அமூர்த்தம். பரிச்சின்னமாயும் மூர்த்தமாயுமிருக்கிற சூரிய பிம்பம் தூரத்திலிருக்கிற சுத்த ஜலம் முதலியதில் பிரதிபிம்பிக்கும். பிரம்மமோ பரிச்சின்னமன்று, மூர்த்தமன்று; பிரம்மத்தை விட்டு விலகினதாக யாதொரு உபாதியுமில்லை. ஏனெனின், பிரம்மம் வியாபகம், அது பிரதிபிம்பிக்கும்படியான தேசவிசேஷ மில்லாதபடியால் பிரதிபிம்பம் போல் பிரவேசம் ஏற்படும் என்றும் சொல்லக்கூடாது.

பூ:—அப்படியானால் பிரவேசமேயில்லை. அந்த तदेवानुप्राविशत् தடுவானுப்ராவிசத் என்கிற சுருதிக்கு வேறு அர்த்தமும் தெரியவில்லை. எங்களுடைய இந்திரியங்களுக்கு விஷயமாகாததை எங்

அத்:-களுக்குத் தெரியப்படுத்த சுருதியே காரணம் (சாதகம்) பிரயாசப்படுகிறவர்களுக்குக் கூட இந்த வாக்கியத்தால்ஞானமுண்டாக மாட்டாது. இப்படி அர்த்தமில்லாததால் तत् सृष्ट्वा तदेवानुप्राविशत् தத் ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிசத் என்கிற வாக்கியம் தள்ளத்தக்கதே

(பூர்வபக்ஷம் முடிந்தது).

சித்தாந்தம்:—

இந்த ஆக்ஷேபம் சரியன்று. இந்த வாக்கியம் வேறு அர்த்தமுள்ளதாக இருக்கிறது. என் அச்சமயத்தில் ஆக்ஷேபம்? இந்தவாக்கியத்திற்குப் பிரகிருதத்திலும் வேறு அர்த்தம் இருக்கிறது. அதை அறியவேண்டியது.

ब्रह्मविदाप्नोतिपरं । सत्यं ज्ञानमनन्तं ब्रह्म । योवेद निहितंगुहायां ப்ரஹ்மவிதாப்நோதிபரம் । ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம । யோவேத நிஹிதம் குஹாயாம் ।

இந்த சுருதி வசனங்கள் பிரம்மத்தின் ஞானத்தை உத்தேசிக்கின்றன. அந்த பிரம்ம ஞானம் பிரகிருதமாயிருக்கிறது. பிரம்ம ஸ்வரூபத்தைத் தெரிவிக்கும் பொருட்டு ஆகாசம் முதல் அன்னமயம் வரையிலுள்ள காரியம் காட்டப்பட்டது.

பிரம்ம ஞானமும் ஆரம்பிக்கப்பட்டது. அன்னமய ஆத்மாவைவிட வேறும் உள்ளேயுமிருப்பது பிராணமயம், அதற்குள்ளிருப்பது மனோமயம், விஞ்ஞானமயம். அந்த விஞ்ஞான குஹையில் ஆநந்தமயத்துடன் கூடின ஆத்மா பிரவேசித்திருக்கிறான் என்பதாய் காட்டப்பட்டிருக்கிறது. அதன்பிறகு நிரதிசய ஆநந்தமுள்ள ஆத்மா சகல கற்பனைக்கும் ஆஸ்பதமாயும், நிர்விகல்பமாயும் இருக்கிறவராக இந்த குஹையிலேயே அறியவேண்டியது என்று இந்த பிரவேசம் கற்பிக்கப்படுகின்றது.

ஜகத் சிருஷ்டியைப்போல் இந்தப் பிவேசத்தையும் அறியவேண்டியது. பரமேசுவரன் மாயையால் எப்படி இந்த ஜகத்தை சிருஷ்டித்தாரோ அப்படி மாயாபலத்தாலேயே பிரவேசிக்கிறார் என்று இருக்கட்டுமே.

புத்தி குஹையைத் தவிர வேறு இடத்தில் பிரம்மம் அறியப்படவில்லை. ஏனெனின் அது நிர்விசேஷம் ஒன்றை அறிவதற்கு அது எந்த விசேஷத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிறதோ அந்த சம்பந்தம் தெரியவேண்டும். அதுவே அறிவதற்கு ஹேது. இராகுவுக்கு சந்திர சூரியனுடைய சம்பந்தம் போலும். இப்படியே அந்தக்கரண குஹையுடன் சம்பந்தம் பிரம்மத்தை அறிய ஹேதுவாயி

அத்:-ருக்கிறது. அந்தக்கரணம் சமீபத்திலிருக்கிறது, பிரகாசஸ்வரூபமாயிருக்கிறது. பிரகாசத்துடன் கூடின கடாதிகளின் ஞானமுண்டாகிறது போல், புத்தி ஞானமாகிற பிரகாசத்துடன் கூடின ஆத்மா அறியப்படுகிறான். ஆகையால் அறிவதற்கு ஹேதுவாயிருப்பதால் குஹையில் இருக்கிறதாகச் சொன்னது பிரகிருதமே. அதற்கு வியாக்கியான ரூபமாயிருக்கிற இந்த இடத்தில் तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् தத் ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிசத் என்று சொல்லியிருக்கிறது. ஒருவன் வீட்டைக்கட்டி அதற்குள் பிரவேசித்து உள்ளே இருக்கிறதாக தெரியவருகிறது. அதுபோல், ஆகாசாதிகளுக்குக் காரணமான பிரம்மம் காரியத்தை சிருஷ்டித்து, அதை பிரவேசித்தது போல் ஹிருதய புண்டரீகத்திலிருக்கிற புத்தி குஹையில் திர்ஷ்டா (பார்க்கிறவன்) சுரோதா (கேட்கிறவன்) மந்தா (மனனம் செய்கிறவன்) விஞ்ஞாதா (அறிகிறவன்) இவ்விதமாக விசேஷமாக அறியப்படுகிறது. இதுதான் அதின் பிரவேசம். ஆகையால் இவைகளுக்குக் காரணமான பிரம்மம் இருக்கிறது. இருக்கிறதினால் அது இருக்கிறதென்றே அறியவேண்டியது.

பிரவேசத்தைக்கூறும் இதர வாக்கியங்களையும் இப்படியே அறியவேண்டியது. சகல சுருதிகளையும் பரியாலோசனை செய்து பார்க்குமளவில் பரமாத்மா ஜீவரூபத்தால் பிரவேசிக்கிறார் என்று சித்திக்கிறது.

பிரம்மசூத்திரத்தின் II-4-20 ல் ஜீவன் நாமரூபங்களை சிருஷ்டிக்கவில்லை என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஷை அத்தியாயம் 3-வது பாதத்தில் 10 வது அதிகரணம் முதல் 17-வது அதிகரணம் வரையில் ஜீவவிசாரம் செய்யப்பட்டிருக்கிறது. 10-வது அதிகரணத்தில் சரீரத்துக்குத்தான் உற்பத்தி என்றும் 11-ல் ஜீவனுக்கு உற்பத்தியில்லை என்றும், 12-ல் ஜீவன் சித்ரூபம் என்றும், 13-ல் சர்வகதன் என்றும், 14-ல் கர்த்தாவென்றும், 15-ல் இந்த கர்த்திருத்வம் வாஸ்தவ மல்லவென்பதும் 16-ல் ஜீவனை பிரவிர்த்திக்கும்படி செய்கிறவன் ஈசுவரனென்றும் 17-ல் ஜீவேசுவர வியவஸ்தையும் சொல்லப்பட்டிருக்கிறது.

ஜீவனுடைய லோகாந்தரம் போகும் பிரகாரமும் சம்சாரப் பிரகாரமும் 3-வது அத்தியாயத்தின் முதல் பாதத்தில் 6 அதிகரணங்களில் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன.

2-வது பாதத்தில் 4-அதிகரணங்களால் ஸ்வப்நம் முதலிய அவஸ்தைகள் விசாரிக்கப்பட்டிருக்கின்றன. (அதிகரணமாலையைப் பார்க்க).

அர்த்:—வி-வி:—பரமாத்மா இருக்கிறார் என்றும், தேகத்தில் போக்தாவான ஜீவரூபமாகப் பிரவேசிக்கிறார் என்றும் நிரூபித்து, இனி போக்கியத்திரவ்வியாகாரமாகவும் பரிணமிக்கிறார் என்பதை சுருதி நிரூபிக்கிறது.

(20) तदनुप्रविश्य । தத³நுப்ரவிஶ்ய ।

(21) सच त्यच्चाभवत् । ஸச்ச த்யச்சாப⁴வத் ।

(22) निरुक्तं चानिरुक्तं च । நிருக்தஞ்சாநிருக்தஞ்ச ।

(23) निलयनं चानिलयनं च । நிலயநஞ்சாநிலயநஞ்ச ।

(24) विज्ञानं चाविज्ञानं च । விஜ்ஞாநஞ்சாவிஜ்ஞாநஞ்ச ।

(25) सत्यं चानृतं च सत्यमभवत् ॥7॥

(25) ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமப⁴வத் ॥7॥

பதவுரை :—

(20) तत् தத்=அதை
अनुप्रविश्य அநுப்ரவிஶ்ய=பிரவேசித்து

(21) सत् च ஸத்ச=மூர்த்தஸ்வரூபமாயும்
त्यत् च த்யத்ச=அமூர்த்த ஸ்வரூபமாயும்
अभवत् அப⁴வத்=ஆனார்

(22) निरुक्तं च நிருக்தஞ்ச=இன்னதென்று சொல்லக்கூடியதாயும்
अनिरुक्तं च அநிருக்தஞ்ச=சொல்லக்கூடாததாயும்

(23) निलयनं च நிலயநஞ்ச=ஆதாரமாயும்
अनिलयनं च அநிலயநஞ்ச=அநாதாரமாயும்

(24) विज्ञानं च விஜ்ஞாநஞ்ச=சேதனமாயும்
अविज्ञानं च அவிஜ்ஞாநஞ்ச=ஜடமாயும்

(25) सत्यं च ஸத்யஞ்ச=சத்திய ஸ்வரூபமாயும்
अनृतं च அந்ருதஞ்ச=அஸத்திய ஸ்வரூபமாயும்
सत्यं ஸத்யம்=பரமார்த்த ஸ்வரூபம்
अभवत् அப⁴வத்=ஆயிற்று

ச-பா:—

(20) அது காரியத்தைப் பிரவேசித்து என்னமாக ஆய்விட்டது.

---

வி:—(20) तत्अनुप्रविश्य தத்அநுப்ரவிஶ்ய=அதினுள்ளே நுழைந்து

---

து:—तत् தத்=அந்த ஜகத்தை
अनुप्रविश्य அநு-ப்ரவிஶ்ய=அனுப்பிரவேசித்து என்ன ஆயி

அர்:—(21) மூர்த்தமாகவும் அமூர்த்தமாகவும் ஆய்விட்டது. மூர்த்தாமூர்த்தங்கள் அவ்யாகிருத நாம ரூபங்கள் (பிரிக்கப்படாதவைகள்) ஆத்மாவுக்கு எந்த தேச காலமுண்டோ அவைகளையே உடையவைகள் ஆத்மாவுக்குள் இருக்கிறவைகள். ஆத்மாவால் பிரிக்கப்படுகிறவைகள் அப்படி பிரிக்கப்பட்டபின் மூர்த்தா மூர்த்த சப்தங்களால் கூறப்படுகின்றன. ஆத்மாவே அதாக ஆய்விட்டது என்று சொல்லப்படுகின்றது.

(22) சஜாதீய விஜாதீய வஸ்துக்களினின்றும் வேறு படுத்தப்பட்டு, தேசகாலத்தோடு கூடியிருந்து அது இது என்பதாக நிச்சயமாக எது சொல்லப்படுகின்றதோ அது நிருக்தம்; அதற்கு விபரீதமானது அநிருக்தம். நிருக்தம் அநிருக்தம் மூர்த்தா மூர்த்தங்களின் விசேஷங்களே.

---

வி:—(21) **सच्चत्यच्चाभवत्** ஸச்சத்யச்சாபவத்=சேதனா சேதனங்களின் நாம ரூபங்களோடு கூடினதாக ஆய்விட்டது என்று அர்த்தம். பிரம்மமே சர்வத்துக்கும் உபாதானகாரணமாகையால் சர்வமாக இருக்கிறது. அதினால் விகாரத்துக்கு ஆஸ்பதமாக ஆய்விடுமென்கிற ஆக்ஷேபத்துக்கு உத்தரம் கூறுகிறது.

(12) **निरुक्तं** நிருக்தம்=ஜாதிகுணத்தைக் கூறும் சப்தத்தால் சொல்லத்தகுந்த அசேதனமும்

**अनिरुक्तं** அநிருக்தம்=ஜாதிகுணங்களற்ற சேதனங்களாகவும்

---

து:—ற்றுஎனின் சத்வாதி குணங்களுடன்கூடினதால் சத் முதலிய பதங்களால் அவர் கூறப்பட்டவராகி, தன்னுடைய சம்பந்தத்தால் ஜகத்தும் சத்முதலிய சப்தங்களால் கூறப்படும்படி செய்தார் என்பதாய் இனிசொல்லுகிறார்.

**सत् च** ஸச்ச=சம்ஹாரம் செய்கிறவராயிருப்பதினால் சத் என்கிற பெயரை அடைந்து, சத் என்கிற ஜகத்தைப் பிரவேசித்தார் என்று அர்த்தம். இப்படியே பின்னும் அறியவும்.

**त्यत् च** த்யச்ச=ஜகத்தை நியமனம் செய்வதினால் த்யத் என்கிற பெயரை அடைந்து, த்யத் என்கிற ஜகத்தை அடைந்தார்.

**निरुक्तं** நிருக்தம்=ஜகத்துக்கு கடபட முதலிய சப்தங்களால் கூறப்படுந்தன்மையை கொடுத்தபடியால் நிருக்த என்று பெயரை அடைந்து நிருக்த வஸ்துவில் பிரவேசித்தார்

**अ-निरुक्तं च** அநிருக்தம் ச=அநந்தராயிருக்கிறபடியால் இப்படிப்பட்டவரென்று சொல்ல முடியாதபடியால் அநிருக்த என்கிற பெயரை அடைந்து அநிருக்த என்கிற ஜகத்தைப் பிரவேசித்தார்

அத்:—(23) எப்படி சத்தும், த்யத்தும் பிரத்தியக்ஷ பரோக்ஷங்களோ, அப்படி நிலயனமுமாம். நிலயனம் என்பது நாடியை ஆசிரயித்துக் கொண்டிருக்கிற மூர்த்தத்தினுடையதே தர்மம். அநிலயம் இதற்கு விபரீதமானது. அமூர்த்தத்தின் தர்மம் தியத், அநிருக்த அனிலயனங்கள் அமூர்த்தத்தின் தர்மங்கள். ஆயினும்வியாகிருத (பிரித்து, உண்டான) விஷயங்கள். ஏனெனின், சிருஷ்டிக்குப்பிறகு உண்டானதாக சுருதி சொல்லுகிறது. த்யத் என்பது பிராணுதிகளான அநிருக்தம். அதுவே அநிலயனமும்கூட. ஆகையால் அமூர்த்தங்களுக்கு விசேஷணங்கள் இவைகள் விகாரமடைந்தவைகள்,

(24) விஞ்ஞானம் சேதனம்.

அது இல்லாதது அசேதனம், அவிஞ்ஞானம்.

(25) சத்தியம் வியவஹாரத்துக்கு விஷயமாகக்கூடிய பாஷாணம் முதலியது. பாரமார்த்திகசத்தியமன்று. ஏனெனின் பாரமார்த்திக சத்தியமானது பிரம்மம் ஒன்றே. இந்த இடத்தில் வியவஹாரத்துக்கு விஷயமாகிறது. ஆபேக்ஷிக்க சத்தியம் கானல் ஜலம் சத்தியம் என்று சொல்லப்படுகின்றது.

---

வி:—(23) अनिलयनं அநிலயநம்=एता: भूतमात्रा: प्रज्ञामात्रासु अर्पिता: ஏதா: பூதமாத்ரா: ப்ரஜ்ஞாமாத்ராஸு அர்பிதா: என்கிற சுருதியிற் சொல்லியபடி அசேதனவர்க்கத்துக்கு ஆதாரமான சேதன சமூகமும்

निलयनं நிலயநம்=ஆசிருதமான அசேதன சமூகமும்

(24) विज्ञानञ्च விஜ்ஞாநஞ்ச=ஜடஸ்வரூபமற்றதாயும்

अविज्ञानञ्च அவிஜ்ஞாநஞ்ச=ஜடஸ்வரூபமாகவும

(25) सत्यंच ஸத்யஞ்ச=நிர்விகாரமாயிருப்பதால் சத்தியமான சேதனமாயும்

अनृतञ्च அந்ருதஞ்ச=அசத்தியமான அநிருதமாயும்

---

து:—निलयनं நிலயநம்=சர்வத்துக்கும் ஆதாரமாயிருப்பதால் (முன்போலவே

अनिलयनं அநிலயநம்=லக்ஷ்மி, பிரம்மதேவர், முக்கியப் பிராணன், இவர்களைத்தவிர மற்றவர்களை அசாதுக்களாகச் செய்கிறதினுல் முன்போலவே

विज्ञानं விஜ்ஞாநம்=சகலத்தையும் அறிவதினுல் (முன்போலவே)

अविज्ञानं அவிஜ்ஞாநம்=ஜகத்துக்கு அஞ்ஞானத்தைக்கொடுப்பதினுல் முன்போலவே

सत्यं ஸத்யம்=சாதுவான ஸ்வரூபமுள்ளவராகையால் (முன்போலவே

அத்:—அநிருதம்:—என்பது அதற்கு விபரீதமானது. இதுஎல்லாம் சத்தியம் ஞானம் அநந்தம் பிரம்மம் என்பதாய்ச்சொல்லிய பரமார்த்த சத்தியமான பிரம்மமே.

வி—வியாக்கியானம்.

(20) சிருஷ்டிக்கப்பட்ட தேக கூட்டத்தை போக்தா என்கிற ரூபமாக பிரவேசித்து பிறகு

(21) சத் முதலிய போக்கியவஸ்து ஆகாரமாக பிரம்மம் பரிணமித்தது.

சத்:—சப்தத்தால் பிரத்தியக்ஷமாய் அறியக்கூடிய பிருதிவி, அப்பு, தேஜஸ், ஆகிய மூன்று பூதங்கள் கூறப்படுகின்றன.

த்யத் சப்தத்தால் பரோக்ஷமான வாயு, ஆகாசம் ஆகிய இரண்டு பூதங்கள் கூறப்படுகின்றன. அப்படியேபிரஹதாரணியத்தில் சொல்லியிருக்கிறது.

ஆகவே கண்ணுக்கு விஷயமாயும் பரோக்ஷமாயும் யாதொரு ஜகத்து இருக்கிறதோ அதெல்லாம் இந்த இரண்டுபதங்களால் கூறப்படுகின்றது. ச வ காரங்களைக்கொண்டு இவைகளின் அபாவங்களையும் சேர்த்துக்கொள்ளவேண்டியது. இப்படி நான்கு ரூபமாய் பிரம்மம் பரிணாமத்தை அடைந்தது.

(22) நிசேஷமாய் சொல்லக்கூடியது நிருக்தம். எதிரிலிருப்பது கடம். நடுபாகம் பெருத்தும் வாய் குறுகலாயுமிருக்கிறது; மிருத்தால் உண்டானது, ஸ்தூலம், ஜலத்தைத் தரிக்கக்கூடியது, இப்படி நி:சேஷமாய் சொல்லமுடியும்.

இதற்கு விபரீதமான அநிருக்தம். கரும்பு, பால் முதலியவைகளின் மாதுரியத்திலுள்ள பேதம் மல்லிகை, முல்லை முதலிய புஷ்பங்களிலுள்ள கந்தத்தில் பேதம். இவை முதலியவைகள் சாமான்யமாய்ச் சொல்லப்படுகிறன்றன. இப்படிப்பட்டதென்பதாய் இதைச்சொல்ல முடியாது.

சகாரத்தை முன்போல் அறியவும்.

(23) புஷ்பாதிகள் போல் ஆதாரம் நிலயனம். அதற்கு விபரீதமானது அநிலயனம்; இது ஆதேயம் கந்தம் ரஸம் முதலியவை போலும்.

(24) விஞ்ஞானம்:—என்பது பசு, குதிரை முதலிய சேதனம் அதற்கு விபரீதமானது.

அவிஞ்ஞானம்:—அசேதனம், கட்டை, திண்ணை, கல் முதலியவை போலும்.

அத்:—(25) சத்தியம்:—உலக வியவஹாரத்தில் பாதிக்கப்படாதது. கிளிஞ்சல், கயிறு, கட்டை முதலியவைகள் போலும்,

அநிருதமோ:—வியவஹாரதசையில் இவைகளில் ஆரோபிக்கப் பட்ட வெள்ளி, சர்ப்பம், திருடன் முதலானவர்கள் போலும்

இந்த உதாஹரணங்களால், சீதம், உஷ்ணம், சுகம், துக்கம், மானம், அவமானம், முதலிய யாவற்றும் ஜகத் விபாகத்தில் சேர்ந் ததாக அறியவேண்டியது.

கடைசியில் வருகிற சத்திய சப்தத்தால் பிரம்மம் கூறப்படுகின்றது. சத்தியம் ஞானம் அநந்தம் என்கிற வாக்கியத்தில் சத்திய சப்தத்தால் பிரம்மத்தை அறிந்திருக்கிறோம். சத்ச த்யச்ச முதலிய ஜகத் விபாகரூபமாக பிரம்மமே பரிணமித்ததாக ஆய்விட்டது. பால் முதலியதுபோல் போக்கியாகாரமாக பரிணமித்திருக்கிறபடியால் பிரம்மம் சத்ரூபமாயிருக்கவேண்டுமென்பது சுருதியின் அபிப்பிராயம்,

(வி-வி:—பிரம்மம் இருக்கிறது என்பதை யுக்தியால் நிரூபித்து, வித்வானுடைய அனுபவத்தாலும் சுருதி நிரூபிக்கிறது.

---

வி:—நிருக்த சப்தமுதல் அநிருத சப்தம்வரையில் உள்ளசப்தங்களால் கூறப்படும் சேதனசேதனங்களின் நாமரூபங்களோடு கூடினதாக பிரம்மம் ஆனாலும்

सत्यमभवत् ஸத்யமபவத்= சத்தியமாகவே ஆகிவிட்டது நிர்விகார ஸ்வரூபத்தை விடாததாக ஆய்விட்டது என்று அர்த்தம்.

(27) சேதனசேதனமான பிரபஞ்சத்தில் அனுப்பிரவேசம் பண்ணியிருப்பதால் சத்தியசப்தத்தால் கூறப்படும் பிரம்மம் அந்த ஜகத்துக்கு ஆத்மாவாக இருப்பதால் சேதனசேதனமான சகலஜகத்தையும் பராசரர் முதலான ஞானிகள்

---

து:—अनृतं அந்ருதம்=ஜகத்துக்கு தௌர்பல்லியத்தைக் கொடுப்பதினால் (முன்போலவே)

இவைகளில் सच्च आनिरुक्तं, निलयनं विज्ञानं த்யச்ச, அநிருக்தம், நிலயநம், விஜ்ஞாநம்=என்கிற பதங்களால் பரப்பிரம்மம் கூறப்படுகிறது. सत्यं ஸத்யம்=என்பதால் ஸ்ரீயும் பிராணனும் ஆகிய ஜகத்து கூறப்படுகிறது. सत् निरुक्त, आनिलयन, अविज्ञान अनृत ஸத் நிருக்த அநிலயந, அவிஜ்ஞாந அந்ருத சப்தங்களால் பிரகிருதி (லக்ஷ்மி) பிராணன், பரப்பிரம்மம் இவைகளைத்தவிர மற்ற ஜகத்து கூறப்படுகிறதென்பதாய் அறியவேண்டியது.

அத்:— (26) यदिदं किञ्च । யதி₃த₃ம் கிஞ்ச ।

(27) तत्सत्यमित्याचक्षते ॥६॥ தத்ஸத்யமித்யாசக்ஷதே ॥6॥

பதவுரை.

(26) यत् इदं किंच யத் இத₃ம் கிம்ச=பார்க்கப்படுகிறது எதுவோ

(27) तत् தத்=அது

सत्यं ஸத்யம்=பரமார்த்த சத்தியம்

इति இதி=என்று

आचक्षते ஆசக்ஷதே=சொல்லுகிறார்கள்

ச-பா:—சத், த்யத், முதலிய மூர்த்தா மூர்த்த ஸ்வரூபமான சகல விகாரமுமாக, ஏகமாயும், சத் சப்தத்தால் கூறப்பட்டிருக்கிற பிரம்மம் ஆனபடியாலும், அதைவிட வேறாக நாமரூப விகாரங்களில்லாதபடியாலும், அந்த பிரம்மம் சத்தியம் என்பதாய் சொல்லுகிறார்கள்.

பிரம்மவித்துக்களுடைய அனுப்பிரச்னம் பிரம்மம் இருக்கிறதா இல்லையா என்பது. அதற்கு உத்தரமாக ஆத்மா இச்சித்தான் வெகுவாக வேண்டும் என்பதாய் சொல்லப்பட்டது. இச்சைப்படி சத், த்யத், முதலிய ரூபமான ஆகாசாதிகாரியங்களை சிருஷ்டித்து அதை அனுப்பிரவேசித்து பார்க்கிறவராயும், கேட்கிறவராயும், மனனம் செய்கிறவராயும், அறிகிறவராயும், இப்படி வெகு விதமாக ஆனார். ஆகையால், அதுவே இந்த ஆகாசாதிகளுக்குக்காரணம்; காரியத்திலிருப்பது, ஹ்ருதய குஹையிலிருக்கிற பரமாகாசத்திலிருப்பது; அதின் ஞானதேஜஸால் அடையத்தகுந்தது; அது இருக்கிறது என்று அறியப்படட்டும் என்பதாய்ச்சொன்னதாக ஆகிறது.

---

வி:—सत्यमित्याचक्षते ஸத்யமித்யாசக்ஷதே=விஷ்ணுவைவிட வேறு ஒன்றுமில்லை "சந்திரன் சூரியன் முதலிய ஜோதிஸ்களும் விஷ்ணுவே. பூலோகம் முதலிய புவனங்களும்விஷ்ணுவே" என்றுசொன்னபடி அதை பரமாத்ம ஸ்வரூபமாகச் சொல்லுகிறார்கள்.

அறுவது அனுவாகம்

முற்றிற்று:

---

து:—सत्य अभवत् ஸத்யம் அப₄வத்=சகலத்திலும் அனுப்பிரவேசம் செய்த பகவானுடைய ரூபம் அதினதின் தோஷத்தால் பற்றுதலடைகிறதா எனின் இல்லை என்பதாய் சொல்லுகிறார்.

सत् ஸத்=ஸாதுஸ்வரூபம், தோஷமற்ற ஸ்வரூபம்

अभवत् அப₄வத்=சத்தியம் என்கிற பெயரை அடைந்தார்.

यदिदं किञ्च யதி₃த₃ம் கிஞ்ச=அ-கை:—

அர்:—(வி-வி:—போக்திருபோக்கிய ரூபமாயும் பார்க்கப்பட்டும் யாதொரு ஜகத்து இருக்கிறதோ அது வாஸ்தவத்தில் ஜகத்து அன்று. பின்னேயாதெனில் சத்தியம் ஆதாவது பாதிக்கப்படாத பிரம்மம் என்று விவேகிகள் சொல்லுகிறார்கள். ஆகையால் வித்வானுடைய அனுபவத்தால் சித்தமான பிரம்மம் இல்லை என்பது அயுக்தம்.

28 तदप्येष श्लोको भवति ||9|| தத3ப்யேஷ ஶ்லோகோ ப4வதி ||௯

इति षष्ठोऽनुवाकः இதி ஷஷ்டோ2நுவாக:

பதவுரை.

तत् अपि தத் அபி= அந்த அர்த்தத்திலும்

एषः ஏஷ:= இந்த

श्लोकः ஶ்லோக:=சுலோகம்

भवति ப4வதி=இருக்கிறது.

ச-பா:—பிராமணத்தால் சொல்லப்பட்ட அர்த்தத்தில் இந்த மந்திர ரூபமான சுலோகமிருக்கிறது. எப்படி முன் அன்னமயம் முதலிய ஐந்து கோசங்களிலுள்ள ஆத்மாவை பிரகாசம் செய்கிற மந்திரங்கள் ஏற்பட்டனவோ, அப்படி சகலத்துக்கும் உள்ளேயிருக்கிற ஆத்மா இருக்கிறது என்பதாய் பிரகாசிப்பிக்கிற மந்திரம் காரிய ரூபத்தால் ஏற்படுகிறது (அதாவது மந்திரம் காரியத்தின் வழியாய் ஆத்மாவை பிரகாசிப்பிக்கிறது)

6 வது கண்டம் முற்றிற்று.

---

து:—ஸத், நிருக்த, அவிஞ்ஞான, அம்ருத, இந்த சப்தங்களா சம்ஹாரகர்த்தா, செவ்வையாகச் சொல்லப்பட்டவர் அஞ்ஞானத்தைக் கொடுத்தவர், தௌர்பலியத்தைக் கொடுக்கிறவர் என்பதாய் யாதொரு அமங்களமான பாவம் ஏற்படுகிறதாகத் தோன்றுகிறதோ அதற்குச் சமாதானம் சொல்லும்பொருட்டு இனி சொல்லுகிறார்.

यदिदं किंच யதி3த3ம்கிஞ்ச=ஸன்னிருக்தம் முதலிய சப்தங்களால் நாசம் செய்கிறவர் முதலிய யாதொரு விவரம் சொல்லப்பட்டதோ

तत् தத்=அதெல்லாம்

सत्यं ஸத்யம்=ஸாது-மங்களரூபம் தான்

इति आचक्षते இதி ஆசக்ஷதே என்பதாய் பெரியோர்கள் சொல்லுகிறார்கள்.

எல்லாம் அவருடைய ஆதீனத்திலிருப்பதால், நாசம் முதலிய

## 7-வது அநுவாகம்.

(1) असद्वा इदमग्र आसीत् । அஸத்³வா இத³மக்³ர ஆஸீத் ।

(2) ततो वै सदजायत । ததோ வை ஸத³ஜாயத ।

(3) तदात्मान॰ स्वयमकुरुत । தத³ாத்மான௦ ஸ்வயமகுருத ।

(4) तस्मात्तत्सुकृतमुच्यत इति ॥ 1 ॥ தஸ்மாத்தத்ஸுக்ருதமுச்யத இதி । 1 ॥

பதவுரை.—

(1) इदं இத³ம்=இந்த ஜகத்து
अग्रे அக்³ரே=சிருஷ்டிக்குமுன்
असत् वै அஸத் வை=அசத்தாகவே
आसीत् ஆஸீத்=இருந்தது.

(2) ततः ததஃ=அதினின்றும்
सत् ஸத்=சத்
अजायत அஜாயத=உண்டாயிற்று

(3) तत् தத்=அது
आत्मानं ஆத்மாநம்=தன்னை
स्वयं ஸ்வயம்=தானாகவே
अकुरुत அகுருத=செய்துகொண்டது

(4) तस्मात् தஸ்மாத்=ஆகையால்
तत् தத்=அது
सुकृतं ஸுக்ருதம்=சுகிருதம்
इति இதி=என்பதாய்
उच्यते உச்யதே=சொல்லப்படுகிறது
इति இதி=இது மந்திர சமாப்தியைக் கூறுகிறது.

---

து:—வைகள் மற்ற இடத்தில் பொருந்திருந்தாலும், அதை உத்தேசித்து இவருக்கு ஸ்வாதந்திரியம் இருப்பதால், அந்த சப்தங்களாலேயே அவரைச் சொல்லுவதில் யாதொரு தோஷமுமில்லை என்பது கருத்து.

பிரமாண வாக்கியம் 51-வது பக்கம் பார்க்க.

அ-கை:—बहुस्यां பஹுஸ்யாம்=என்பதினால், தன்னுடைய வெகு ரூபங்களாக ஆகவேண்டும் என்பதைச் சொல்லி, பிரத்யும்ந ரூபத்தால் ஜகத்தின் சிருஷ்டியைச்சொல்லி, சிருஷ்டிக்கப்பட்டவைகளுக்கு சக்தி முதலியவைக்கொடுக்கும்பொருட்டு இதர ரூபங்களால் பிரவேசத்தைச்சொல்லி, இப்போது ஸ்வரூபம் வெகுவானதை तदप्येषश्लोक தத³ப்யேஷஶ்லோக=என்கிற சுலோகத்தினால் விவரிக்கிறார்.

तदपि தத³பி=ஸ்வரூபம் வெகுவாக ஆகிற விஷயத்திலும்
एषः श्लोकः भवति ஏஷஃ ஶ்லோகஃ ப⁴வதி=சொல்லப்போகிற சுலோகம் இருக்கிறது.

ச-பா:—

(1) அசத் என்பது (விகிருத) பிரிவினை அடைந்த நாமரூப விசேஷங்களுக்கு விபரீதமான (அவிகிருத) பிரிவினை அடையாத பிரம்மத்தைக் கூறுகிறது. அத்தியந்தம் அசத் (சூத்தமாய் இல்லாதது) என்று அர்த்தமல்ல. அசத்தினின்றும் சத் உண்டாக மாட்டாது.

इदं இதம்=நாமரூப விசேஷங்களுடன்கூடி விகாரமடைந்த ஜகத்து

अग्रे அக்ரே=உற்பத்திக்குமுன் அசத் சப்தத்தால் பிரம்மமே இருந்தது.

(2) ततः ததஃ=அசத்தினின்றும்

सत् ஸத்=பிரிவினை அடைந்த நாமரூபவிசேஷங்கள்

अजायत அஜாயத=உண்டாயின.

---

7-வது அனுவாகம்.

வி:—(1) इदं= இதம்ஸ்தூலமான சேதனுசேதனத்தை சரீரமாக உடைய பிரம்மமானது

असद्वा அஸத்வா=நாமரூபங்களால் ஸ்பஷ்டமன்றியிலிருக்கிற பிரம்மமாக

अग्रे அக்ரே=சிருஷ்டிக்குமுன்

आसीत् ஆஸீத்=இருந்தது.

(2) ततोवै ததோவை=அந்த பிரம்மத்தினிடத்தினின்றும்

(इदं இதம்=இந்த ஜகத்தானது

सत् ஸத்=நாமரூபங்களால் ஸ்பஷ்டமாக

अजायत அஜாயத=உண்டாயிற்று.

---

து:—इदं இதம்=இது

अग्रे அக்ரே=இந்த ஜகத்துக்கு முன்

असत् அஸத்=அடையமுடியாத ரூபத்தை உடையவரானதால் அசத் என்று பெயருள்ள நாராயணன் ஆகிற மூலரூபம்

आसीत् ஆஸீத்=இருந்தது

वै வை = பிரசித்தம்

ततः ததஃ = நாராயணனிடமிருந்து

सत् ஸத்=ஞானிகளால் அடையக்கூடியதாகையால் ஸத் என்று பெயருள்ள வாசுதேவர்

अजायत அஜாயத=வெளிப்பட்டார்.

அத்:—(3) அதினின்றும் வேறாக உண்டான காரியம் என்ன? பிதாவினிடமிருந்து உண்டான புத்திரன்போலவா? அல்ல.

तत् தத=அசத்சப்த வாக்கியமானது
आत्मानंस्वयं ஆத்மாநம்ஸ்வயம்==தன்னையே
अकुरुत அகுருத=செய்துகொண்டது.

(4) இப்படியிருப்பதால் பிரம்மம் सुकृतं ஸுக்ருதம்=அதாவது ஸ்வயம் கர்த்தா என்று சொல்லப்படுகின்றது. பிரம்மம் சகலத்துக்கும் காரணமாயிருப்பதால் ஸ்வயம் கர்த்தா என்பது ஜகத்தில் பிரசித்தம். காரணமான பிரம்மம் சகலத்தையும் செய்ததினால், புண்ணியரூபமாயுமிருக்கிறது. ஆகையால் சுகிருதம் என்று சொல்லப்படுகின்றது. நித்தியமாயும் சேதனமாயுமிருக்கிற பிரம்மம் இருக்கிறபோது உலகத்தில் புண்ணியகர்மம் என்

வி:—அசத் என்கிற சப்தத்தால் கூறப்படும் பிரம்மமானது உபாதான காரணமாக இருக்கும் பக்ஷத்தில் உலகத்சில் உபாதானகாரணத்தை விட நிமித்தகாரணத்தை வேறாகக் கண்டிருப்பதால் பிரம்மத்தைவிட வேறு கர்த்தா வேண்டுமென்கிற ஆக்ஷேபத்திற்கு உத்திரம் சுருதி கூறுகிறது.

(3) आत्मानं ஆத்மாநம்=தன்னையே உபாதானமாக வைத்துக் கொண்டு

स्वयंअकुरुत ஸ்வயம்அகுருத=தானே சிருஷ்டித்தது

(4) तस्मात् தஸ்மாத=தனக்குத்தானே காரணமாக இருப்பதால்

तत् தத =அந்தபிரம்மம்

सुकृतंइति ஸுக்ருதம்இதி=சுகமாகப்பண்ணப்பட்ட காரியத்தை உடைத்தானதென்று

उच्यते உச்யதே=சொல்லப்படுகின்றது. தன்னைவிட வேறான

து:—तत्=தத=அந்த வாசுதேவர் என்கிற பெயருள்ள ரூபம்
आत्मानं ஆத்மாநம் = தன்னை
स्वयं ஸ்வயம் = சங்கர்ஷண பிரத்யும்ன முதலிய ரூபங்களாக
अकुरुत அகுருத=செய்து கொண்டது.

तस्मात् தஸ்மாத=தன்னை வேறு ரூபமாக செய்துகொண்ட காரணத்தால்

तत् தத=வாசுதேவர் என்கிற ரூபம்

सुकृतं उच्यते ஸுக்ருதம் உச்யதே=செவ்வையாக செய்கிறது என்று சொல்லப்படுகிறது.

அத்:—றும் பாபகர்மம் என்றும் விளங்குகிறது. இதற்கு எவ்விதத்திலும் பல சம்பந்தமுண்டு. இதற்குக்காரணம் சுகிருத சப்த வாச்சியமான பிரம்மம் என்பது உலகத்தில் பிரசித்தம். சுகிருத சப்த பிரசித்தியால் அந்த பிரம்மம் இருக்கவேயிருக்கிறது.

## வி-வியாக்கியானம்.

(1) நாமரூபங்களால் வியக்தமான ஜகத்து உற்பத்திக்கு முன் அசத் அதாவது அவ்வியக்தமாயிருந்தது.

(2) அப்படி வியக்தமாயிராத நாமரூபங்களிலுள்ள பிரம்மத்தினின்றும், வியக்தமான நாமரூபங்களுள்ள ஜகத்து உண்டாயிற்று.

(3) பிதாவை விட்டு விலகின புத்திரன்போல் பிரம்மத்தை விட்டு ஜகத்து விலகினதன்று. பின்னேயோவெனின், சச்சிதாநந்தமாயும் ஏகரஸமாயுமிருக்கிற பிரம்மம் வேறு கர்த்தாவை அபேக்ஷிக்காமல் ஜகதாகாரமாக செய்துகொண்டது. பிரம்மத்தைவிட வேறாக மிருத்போல் ஜகத்துக்கு உபாதானகாரணமுமில்லை. குயவன்போல் நிமித்தகாரணமுமில்லை. பிரம்மமே இரண்டு காரணமாக இருந்தது.

(4) இப்படியிருந்ததால் பிரம்மம் சுகிருத சப்தத்தால் கூறப்படுகிறது. ஸு என்கிற சப்தம் ஸ்வயம் என்கிற சப்தத்துக்குச் சமானம். कृत க்ருத சப்தம் கர்த்தா வென்கிற சப்தத்துக்குச் சமானம். ஆகையால் ஸுகிருதம் அதாவது ஸ்வயம் கர்த்தா வென்பதாய் சாஸ்திரஞ்ஞர்கள் சொல்லுகிறார்கள். ஜீவர்களோ ஸ்வயம் கர்த்தர்களன்று. பின்னேயோவெனின், அந்தர்யாமியால் பிரேரணை செய்யப்பட்டு காரியங்களைச் செய்கிறார்கள்.

பிரமாண வாக்கியங்கள்:—

(1) य आत्मान मन्तरो यमयति (बृ-III-7-22)

(1) ய ஆத்மாநமந்தரோ யமயதி (ப்ரு-III-7-22)

எவன் ஆத்மாவை உள்ளே நியமனஞ்செய்கிறானோ

வி:—காரியத்தைசிருஷ்டிப்பதில்சிரமமில்லை. இதற்குनिश्वसितमेतस्य महतो भूतस्य நிஸ்வஸிதமேதஸ்ய மஹதோ பூதஸ்ய முதலிய சுருதிகள் பிரமாணங்கள். அந்த பிரம்மம் சுகிருதமாயிருக்கட்டும். அது உபாஸ்யமாயும் அடையத்தகுந்ததாயுமிருக்கும் விஷயத்தில் என்ன பிரயோஜனம் எனின் உத்தரம் கூறுகிறார்.

து:—इति இதி=சப்தம் முன்போலவே श्लोकोभवति ஶ்லோகோ பவதி என்பதுடன் அன்வயிக்கவும். ஜகத் சிருஷ்டி, அதில் அநுபிரவேசம், தன்னுடைய வெகு ரூபங்கள் ஆகியபிரகரணம் முற்றிற்று.

அத்:—(2) एषतेआत्माऽन्तर्याम्यमृतः (बृ-III- 7)

(2) ஏஷதெ ஆத்மாऽந்தர்யாம்யம்ருத: (ப்ரு III 7.)

இந்த உன்னுடைய ஆத்மா அந்தர்யாமி

(3) एष एव साधुकर्मकारयति (कौ:III-8)

(3) ஏஷஏவ ஸாது கர்ம காரயதி (கௌ III-8)

இவனே நல்ல கர்மத்தைச் செய்துவைக்கிறான்.

(4) केनापिदेवेन हृदिस्थितेन यथानियुक्तोऽस्मितथाकरोमि ।

(4) கெநாபிதெவெந ஹ்ருதிஸ்திதெந யதாநியுக்தொऽஸ்மி ததாகரொமி

ஹிருதயத்திலிருக்கிற எந்த தேவதையால் எப்படி ஏவப்படுகிறேனோ அப்படிச் செய்கிறேன்.

முதலியவைகளாம்.

பிரம்மத்தின் ஆநந்தரூபம்.

2. (வி-வி:—பிரம்மம் ஸ்வயம் கர்த்தா என்கிற பிரசித்தியும் பிரம்மம் இருக்கிறதென்பதை சாதிக்கிறது.

(5) यद्वैतत्सुकृतम् । யத்வைதத்ஸுக்ருதம் ।

(6) रसो वै सः । ரஸொ வை ஸ: ।

(7) रसꣳ ह्येवायं लब्ध्वाऽनन्दी भवति ॥ 2 ॥ ரஸꣳஹ்யெவாயம் லப்த்வாऽநந்தீ பவதி ॥ 2 ॥

பதவுரை.

(5) यत्एतत् யதேதத்=எது

सुकृतं ஸுக்ருதம்=சுகிருதமோ

(6) सः ஸ:=அது

रसः ரஸ:=ரஸம்

(7) अयं அயம்=இவன்

रसं ரஸம்=ரஸத்தை

लब्ध्वा லப்த்வா=அடைந்து

आनन्दी भवति ஆநந்தீபவதி =ஆநந்தமுடையவனாக ஆகிறான்.

---

வி:—(5) ततसुकृतं தத்ஸுக்ருதம்=சுகிருதம் என்கிற சப்தத்தால் கூறப்படும் பிரம்மம்

---

து:—यद्वै...யத்வை...;—முக்தியின் இச்சையை தரிக்கிறவர்களால் அடையக்கூடியவர் என்கிறதற்குக் காரணத்தைச்சொல்லி பகவானுடைய சத் என்கிற பெயரை விவரிக்கிறார்.

ச-பா:—

அத்:—(5) அடியிற்கண்ட காரணத்தாலும் பிரம்மம் இருக்கிறது. எப்படி? ரஸமாயிருப்பதால் - அது ரஸம் என்பது எப்படி பிரசித்தம்? அது சுகிருதமாயிருப்பதால் என்று சுருதி சொல்லுகிறது.

(6) ரஸமென்பது திருப்திக்குக் காரணமானது.

ஆநந்தகரமான மதுரம், புளிப்பு முதலியவை என்பது உலகத்தில் பிரசித்தம்.

(7) ஒருவன் ரஸத்தையே அடைந்து சுகிக்கிறான். அசத்தினின்றும் ஆநந்தமுண்டாகிறதாக பிரபஞ்சத்தில் காணப்படுகிறதில்லை. ஆநந்தத்துக்கு வேண்டிய பாஹிய சாதனங்களற்ற, இச்சையில்லாத பிராமணர்கள், ஞானிகள் பாஹிய ஆநந்தத்தை அடைந்தால்போல் ஆநந்தர்களாகக் காணப்படுகிறார்கள். அவர்களுக்கு பிரம்மமே ரஸம் (ஆநந்தம்) நிச்சயம். ஆகையால் அவர்களுடைய ஆநந்தத்துக்குக் காரணமான ஆநந்தத்துடன் கூடின பிரம்மம் இருக்கவே இருக்கிறது.

வி-வி:—பிரம்ம மிருக்கிறதென்பதை வேறுவிதமாய் நிரூபிக்கும் பொருட்டு ஆநந்தரூபத்தைச் சுருதி கூறுகிறது.

---

வி:—(6) रसः ரஸঃ=ஆநந்தமாயிருக்கிறது

(7) अयं அயம்=இந்த உபாசகன்

रसं ரஸம்=பிரம்மாநந்தத்தை

लब्ध्वा லப்த்வா=அடைந்து

आनन्दीभवति ஆநந்தீபவதி=ஆநந்தத்தோடு கூடினவனாக ஆய்விடுகிறான். ஆகவே அந்த பிரம்மம் ஆநந்தமாயிருப்பதால் அடையத்தகுந்ததாயும் உபாசிக்கத்தகுந்ததாயும் இருக்கிறது யுக்தமென்பது கருத்து.

அதையே இனி ஸ்பஷ்டமாகக் கூறுகிறார்.

---

து:—यत् तत् सुकृतं யத் தத் ஸுக்ருதம்=சுகிருத என்கிற பெயருள்ள யாதொரு வாசுதேவ ஸ்வரூபம் உண்டோ அது

रसः ரஸঃ=பூர்ணாநந்த ரூபம்

वै வை=பிரசித்தம்

हि ஹி=ஆகையால்

अयं एव அயம் ஏவ=ஞானியானவன் தான்

रसं ரஸம்=பூர்ணாநந்தரான வாசுதேவரை

लब्ध्वा லப்த்வா= அடைந்து

आनन्दीभवति ஆநந்தீபவதி=ஆநந்தமுடையவனாக ஆகிறான். வேறு ஒருவனும் ஆகிறதில்லை என்பது அர்த்தம்.

அத்:—(5) சுகிருத சப்தத்தால் கூறப்பட்ட யாதொரு பிரம்மம் உண்டோ அந்த பிரம்ம பதார்த்தம்.

(6) இரஸமே; பிரபஞ்சத்தில் திருப்தி என்கிற ஆநந்தத்துக்குக் காரணமான மதுமுதலிய பதார்த்தம் இரஸமெனப்படுகிறது. பிரம்மமும் ஞானிகளின் ஆநந்தத்துக்கு ஹேதுவா யிருப்பதால் இரஸமா யிருக்கிறது. வேதாந்த வாக்கியத்தால் உண்டாகிற மனோவிருத்தி ஞானமானது ஆநந்தகரமானதாக இருப்பதால் பிரம்மம் இரஸமாகிறது. இரஸத்தைப் பிரீதியுடன் கிரகிப்பது போல் பிரம்மமும் ஞானத்தை இச்சிக்கிறவர்களால் பிரீதிபூர்வகமாகவேகிரகிக்கப்படுகிறது. பிரீதியும் ஆநந்தத்தைத்தவிரவேறல்ல. ஆகையால் ரஸசப்தத்தால் பிரம்மத்தின் ஆநந்தம் கூறப்படுகின்றது.

ஆக்ஷேபம் :—தர்மமானது ஆநந்தரூபமாக இராவிடினும் ஜிஞ்ஞாசுக்களால் பிரீதிபூர்வகமாகக் கிரகிக்கப்படுகிறதே (ஆகையால் ஜிஞ்ஞாசுவின் பிரீதிபூர்வமாக இருப்பதை ஆநந்த ரூபமாகச் சொல்லக்கூடாது.

உத்தரம் :—அப்படி யல்ல. தர்மம் முக்கிய பிரீதிரூபமன்று. ஸ்வர்க்கமாகிற சுகத்துக்குச் சாதனமா யிருப்பதால் தர்மமானது பிரீதியாயிருக்கிறது. பிரம்மமே தன்னைவிட உத்தமமான எந்த சுகத்திற்கும் சாதனமாயில்லை. ஆகையால் முக்கிய பிரீதிவிஷயமா யிருப்பதால் ஆநந்தரூபம் பிரம்மம்.

(7) தத்துவத்தை அறிந்த புருஷன் ரஸத்தை அடைந்து, ஸாக்ஷாத்கரித்து, தான் தன்னியன் என்பதாய் ஆநந்தமுடையவனாக ஆகிறான். தத்துவஞ்ஞானிக்கு புஷ்பம், சந்தனம், ஸ்திரீ முதலானவர்களின் லாபம் சந்தோஷத்துக்குக் காரணமாகிறதில்லை. ஆத்மலாபமே காரணமாகிறது. ஏனெனின் விரக்தனுக்கு புஷ்பம் முதலியவைகளை அடையவேண்டும் என்கிற புத்தி யில்லை.

आत्मलाभात् नपरं विद्यते ।

ஆத்மலாபாத் நபரம் வித்யதே

(ஆத்மலாபத்தைவிட மேற்பட்டது இல்லை) என்பது சாஸ்திர வசனம் ஆகையால் வித்வானுடைய சந்தோஷத்துக்குக் காரணமான ஆநந்தரூபமா யிருப்பதாலும் பிரம்மம் இருக்கிறதென்று தெரியவருகிறது. हि ஹி=சப்தம் வித்வானுடைய பிரசித்தியை கூறுகிறது.

(வி-வி :—தேகாதிகளின் சேஷ்டைகளுக்கும் விஷயாநந்தத்துக்கும் ஹேதுவாயிருப்பதாலும் பிரம்மம் இருக்கிறது என்கிற அபிப்பிராயத்தைக்கொண்டு இந்த இரண்டுக்கும் காரணமிருக்குகையை சுருதி கூறுகிறது.

அ,க்:—(8)को ह्येवान्यात्कः प्राण्यात्। கொஹ்யேவாந்யாத்க: ப்ராண்யாத்

(9) यदेष आकाश आनन्दो न स्यात् । யதேஷ ஆகாஶ ஆநந்தோ

ந ஸ்யாத்।

(10) एष ह्येवानन्दयाति ॥ 3 ॥ ஏஷ ஹ்யேவாநந்தயாதி ॥ 3 ॥

பதவுரை.

(9) आकाशे ஆகாஶே=ஹிருதயாகாசத்தில்
यत्एषः யத் ஏஷ:=இந்த
आनन्दः ஆநந்த:=ஆநந்தம்
नस्यात् நஸ்யாத்=இராவிடின்

(8) कःहि க:ஹி=எவன்
अन्यात् அந்யாத்=அபானகர்மத்தைச் செய்வான்.
कः க:=எவன்
प्राण्यात् ப்ராண்யாத்=பிராணகர்மத்தைச் செய்வான்

(10) एषः हि एव ஏஷ: ஹி ஏவ=இவனே
आनन्दयाति ஆநந்தயாதி

ச-பா :— அடியிற்கண்ட காரணத்தாலும் பிரம்மம் இருக்கிறது. பிராணனம் (சுவாசம் விடுதல்) முதலிய காரியங்களைப் பார்க்கிறோம். ஜீவித்துக்கொண்டிருக்கிற இந்த பிண்டமும் பிராணன் மூலமாக பிராணகிரியை செய்கிறது. அபானன் மூலமாக

---

வி:—(9) एषः आनन्दः ஏஷ:ஆநந்த:=இந்த ஆநந்தமானது

आकाशोनस्यात् यदि ஆகாஶோநஸ்யாத்யதி=பரமாத்மாவாக ஆகாத பக்ஷத்தில்

(8) कः க:=எவன்

---

து:—को கோ=இதனால் வாசுதேவன் பூர்ணாநந்தரூபர் என்று எப்படி தெரியவருகிறதெனின், உலகத்தைப் பிரேரணை செய்தல் வேறு விதமாக ஏற்படாததினால் பகவான் வாசுதேவர் பூர்ணாநந்தர் என்று சொல்லுகிறார்.

यत् (यदा) யத் (யதா)=எப்போது

आकाशः ஆகாஶ:= (आ=समंतात्+काशनात्) (ஆ=ஸமந்தாத் + காஶநாத்)=எங்கும் பிரகாசிக்கிறபடியால் ஆகாசம் என்று பெயருள்ள

एषः ஏஷ:= இந்த பகவான் வாசுதேவர்

आनन्दः नस्यात् ஆநந்த: நஸ்யாத்=பூர்ணாநந்த ஸ்வரூபமாக இராதபக்ஷத்தில்

அத்:—அபானகிரியை செய்கிறது. இப்படி வாயுவினுடையவும் இந்திரியங்களி னுடையவும் சேஷ்டைகள் காரிய் கரணங்களின் சேர்க்கையால் ஏற்படுகின்றதாய் காணப்படுகின்றன. ஒரு தனிமையான சேதன சம்பந்த மன்றியில் ஒரு பிரயோசனத்தின் பொருட்டு இவைகள் சேரமாட்டா. ஏனெனின் வேறு இடத்தில் நாம் பார்க்கவில்லை.

(9) ஹிருதய குஹையிலிருக்கிற பரமமான ஆகாசத்தில் இருக்கிற ஆநந்தம் இருக்காதபக்ஷத்தில்.

உலகத்தில் எவன்தான் அபானகாரியத்தைச் செய்வான், எவன் பிராணகாரியத்தைச் செய்வான்.

ஆகையால் பிரம்மம் இருக்கிறது.

(10) எதின்பொருட்டு காரியகரணங்கள் பிராணாதிகளின் சேஷ்டைகளைச் செய்கின்றனவோ, அதினால்தான் உலகத்தில் ஆநந்தம் ஏற்படுகின்றது. ஏனெனின் இந்த பர ஆத்மா லோகத்தை தர்

---

வி:—अन्यात् அந்யாத்=சாம்சாரிகமான ஜகத்தை அடைவான்

क: க:=எவன்

प्राण्यात् ப்ராண்யாத்=மோக்ஷத்தை அடைவான் ஆகையால்

(10) एषएव ஏஷ ஏவ=இவனே

आनन्दयाति ஆநந்தயாதி=ஆநந்தத்தை உண்டுபண்ணுகிறான்.

ஆகவே அந்த பரமாத்மாவானவர் அநேகவிதமான ஆநந்தத்துக்குக் காரணமாயிருப்பதால் அடையத்தகுந்தவராக இருக்கிறார் என்பது கருத்து.

---

து:—क: हि க: ஹி=எந்த புருஷன்

अन्यात् அந்யாத்=பிரேரணை செய்வான்.

क: க:=எவன்

प्राण्यात् ப்ராண்யாத்=பிரகிருஷ்ட சேஷ்டையை அதாவது யஞ்ஞதானாதிகளைச் செய்யும்படி பிரேரணை செய்வான். ஒருவனும் செய்யமாட்டான். அதினால் ஜகத்தின் சேஷ்டையே இல்லாமற் போய்விடும். காரியத்தை அனுசரித்து காரணமிருக்கவேண்டியதாகையால், அதின் பிரவிர்த்தியும் மஹத்தாயிருக்கவேண்டியது, ஆகையால் இவர் மஹாநந்த ரூபர் என்பது கருத்து.

एष: एव आनन्दयाति ஏஷ: ஏவ ஆநந்தயாதி=பிறருடையசுகத்துக்குக் காரணமாயிருப்பதினாலும் இவர் பூர்ணாநந்தர் சகலத்தையும் சுகப்படுத்துவதினால் தான் ஆநந்த ரூபமாயிருக்கிறார்.

(பிரம்மத்தின் பூர்ணாநந்தப் பிரகரணம் முற்றிற்று).

அத்:—மத்துக்குந் தக்கபடி சுகப்படுத்துகிறது. ஜனங்கள் இந்த ஆத்மாவையே அவித்தையால் மூடப்பட்ட ஆநந்தரூபமாக அறிகிறார்கள்.

வி-வி :—

(9) ஆகாசசப்தம் முதல்வேற்றுமையாக வாவது ஏழாவது வேற்றுமையாகவாவது இருக்கலாம். இரண்டாவது பக்ஷத்தில் गुहायां परमेव्योमन् குஹாயாம்பரமெவ்யொமந் என்பதற்கு (பக்கம் பார்க்க) என்ன அர்த்தம் சொல்லப்பட்டதோ அதுவே கிரகிக்கத் தக்கது. முதலாவது பக்ஷத்தில் आ (समन्तात्) + काशन्ते ஆ (ஸமந்தாத்) + காஶந்தெ=ஆகாசம் அதாவது ஸ்வப்பிரகாசத்தால் விளங்குகிறது என்று அர்த்தம்.

एष: ஏஷ:=அதாவது முந்தின வாக்கியத்தில் ரஸமாகச் சொல்லப்பட்ட ஆத்மாவாகிற ஆநந்தம் இராதபக்ஷத்தில்,

(8) எந்த கர்த்தா தேகத்துக்குள் अन्यात् அந்யாத்=வாக்கு முதலிய இந்திரியங்களால் சேஷ்டிப்பான். எவன் சுவாசகாரியத்தைச் செய்வான். ஆத்மா சக்ஷுஸ்முதலிய இந்திரியங்களின் சாதகத்தால் காரியங்களை செய்கிறான் என்பதாய் ஆதர்வணிகர்கள்

**एष हि द्रष्टास्पष्टा श्रोताघ्रातारस यितामन्ता बोद्धा । कर्त्ताविज्ञानात्मापुरुषः** (प्र-IV-9)

ஏஷ ஹி த்ரஷ்டா ஸ்ப்ரஷ்டா ஶ்ரோதாக்ராதாரஸயிதாமந்தா பொத்த ; கர்த்தாவிஜ்ஞாநாத்மா புருஷ: (ப்ர IV-9)

சொல்லுகிறார்கள்.

பிரபஞ்சத்தில் பிராணன் இருந்தால் ஜன்மம் பிராணனில்லாவிட்டால் மரணம் உண்டாகிறதினால் பிராணனே ஆத்மா வென்பதாய் மூடஜனங்கள் சொல்லுவதை அனுசரித்து பிரஹதராணியகத்தில் பாலாகி யானவன் அஜாதசத்துருவுடன் சம்வாதம் செய்தான் என்று சொல்லி யிருக்கிறது. ஆகையால் இந்த தர்சனம் முதலியவைகளுக்கு கர்த்தா பிராணன் என்கிற பிராந்தியை நிவிர்த்திக்கும் பொருட்டு कः प्राण्यात् க: ப்ராண்யாத் என்பதாய் தனியாகச்சொல்லியிருக்கிறது. ஆநந்தாத்மா இல்லாத பக்ஷத்தில் பிராணனாகிற சாதனத்தால் எவன் சுவாசகிரியைச் செய்வான். சுவாசகிரியையில் பிராணன் சாதகம்தான், ஆத்மாதான் கர்த்தா வென்பது உபஸ்திப்பிராம்மணத்திலும்,

**यःप्राणेनप्राणिति स आत्मा सर्वान्तरः** (बृ III-4-1)

ய: ப்ராணெநப்ராணிதி ஸ ஆத்மா ஸர்வாந்தர: (ப்ரு III-4-1)

அதாவது எவன் பிராணனால் கடைசிகாரியத்தைச் செ

அத்:—ய்கிறுனே அவன் சகலத்துக்கும் உள்ளே யிருக்கிற ஆத்மா என்பதாய் வியக்தமாய்ச் சொல்லியிருக்கிறது, அசங்கனை ஆநந்தரூப ஆத்மா இந்திரியாதிகளின் காரியங்களை ஸ்வயம் செய்யாவிட்டாலும், விஞ்ஞானமயகோசத்தை உபாதியாக உடைய ஆத்மா கர்த்தாவாகலாம். ஆகவே சேஷ்டைகளுக்குக் காரணமாக இருப்பதால் பிரம்மம் இருக்கிறது என்று சித்திக்கிறது.

(10) சேஷ்டைக்குக் காரணமாக யாதொரு ஆநந்தமிருக்கிறதோ அதுவே சகல பிராணிகளையும் சந்தோஷிப்பிக்கிறது. மனதானது இச்சித்த விஷயத்தை அடைந்தால், வேறு விஷயத்தை இச்சிக்குமுன் அந்தர்முகமாகி பிரத்தியகாத்மாநந்தத்தை அனுபவிக்கிறது. இது விஷயாநந்தமெனப்படும். இதற்கும் காரணமாயிருப்பதால் பிரம்மம் இருக்கிறதென்று ஒப்புக்கொள்ள வேண்டியது.

வி-வி :—இவ்விதமாக இச்சிக்கிறது முதலிய காரணங்களால் பிரம்மம் இருக்கிறதா- இல்லையா- என்கிற சம்சயம் நிவிர்த்திக்கப்பட்டது. இனி அவித்வானுக்கு உண்டாகக் கூடிய சம்சயத்துக்கு உத்தரம் விஸ்தாரமாகச் சொல்லவேண்டுமானதால் முதலில் வித்வானுடைய சம்சயத்தை சுருதி பரிஹரிக்கிறது.

(11) यदा ह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयनेऽभयं प्रतिष्ठां विन्दते ।

(11) யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நத்ருஶ்யே(அ)நாத்ம்யே(அ)நிருக்தே(அ)நிலயநே(அ)பயம் ப்ரதிஷ்டாம் விந்ததே।

(12) अथ सोऽभयं गतो भवति ॥ 4 ॥ அத ஸோ(அ)பயம் கதோ பவதி ॥ 4 ॥

பதவுரை.

(11) यदा யதா=எப்பொழுது

एषः ஏஷ꞉=ஞானவிச்சை யுள்ளவன்

अदृश्ये அத்ருஶ்யே=காணப்படாமலும்

अनात्म्ये அநாத்ம்யே=அசரீரமாயும்

अनिरुक्ते அநிருக்தே=அவாச்சியமாயும்

अनिलयने அநிலயநே=நிராதாரமாயுமிருக்கிற

एतस्मिन् ஏதஸ்மிந்=இந்த பரப்பிரம்மத்தினிடத்தில்

அத்:—अभयं அபயம் = பயமற்ற
प्रतिष्ठां ப்ரதிஷ்டாம்=ஸ்திதியை
विन्दते விந்ததே=அடைகிறானோ
(12) अथ அத=அப்போது
सः ஸ:=அவன்
अभयं அபயம்=அபயத்தை
गतःभवति கத:பவதி=அடைந்தவனாக ஆகிறான்.
ச-பா:—

பயத்துக்கும் அபயத்துக்கும் ஹேதுவாயிருப்பதால் வித்வானுக்கும் அவித்வானுக்கும் பிரம்மம் இருக்கிறது. சத்வஸ்துவை ஆசிரயிக்கிறதினால் அபயம் சித்திக்கிறது. அசத்வஸ்துவை ஆசிரயிக்கிறதினால் பயம் நிவிர்த்தியாகிறதில்லை. எப்படி அபயஹேதுவெனின் இனி சொல்லப்படுகிறது. அதிர்ச்யம் முதலியவைகள் பிரம்மத்துக்கு விசேஷணங்கள். अदृश्ये அத்ருச்யே எது பார்க்கப்படுகிறதோ அது விகாரம் (காரியம்) பிரம்மம் விகாரமன்று. ஆகையால் அதிர்ச்யம் எனப்படுகின்றது. இந்த பிரம்மம் விகாரமடையாதது, விஷயமாகாதது, சரீரமாகாதது.

---

வி:—(11) एषः ஏஷ:=இவன்

अदृश्ये அத்ருச்யே=சக்ஷுஸ் முதலிய இந்திரியங்களால் கிரகிக்கத்தகாததாயும்

अनात्म्ये அநாத்ம்யே=சரீரமற்றதாயும். ஆகவே

अनिरुक्ते அநிருக்தே=ஜாதி குணாதிகளைக்கூறும் தேவாதிசப்தத்தால் சொல்லத்தகாததாயும்

अनिलयने அநிலயநே= ஆதாரமற்றதாயுமிருக்கிற பரமாத்மாவினிடத்தில்

अभयं அபயம்=பயமன்றியில் இருப்பதற்காக

प्रतिष्ठां ப்ரதிஷ்டாம்=அதற்குச்சாதனமான இடைவிடாத ஸ்மரணையாகிற நிஷ்டையை

विन्दते விந்ததே=அடைகிறானோ

---

து:—அ-கை:—ஞானியே முக்தி அடைகிறான் வேறு ஒருவனும் அடைகிறதில்லை என்பதை உபசம்ஹாரம் செய்து பகவானை அடைவதற்கு ஸ்திரமான ஞானமே சாதகம் என்பதாய் यदाह्येवैष யதா ஹ்யேவைஷ என்பதினால் சொல்லுகிறார்.

हि ஹி=ஆநந்தத்தை அடைந்து ஆநந்த ரூபமாக ஆகிறான். அந்த லாபமும் பகவானுடைய மஹிமையை அறிவதாலேயே உண்டாகிறது ஆகையால்

एव एषः ஏவ ஏஷ:=இந்த அதிகாரி

அத்:—अनात्म्ये அநாத்ம்யே=சரீரமற்றது என்று அர்த்தம் अनिरुक्ते அநிருக்தே=பார்க்கப்படாததாக இருப்பதால் சரீரமற்றது. சரீரமற்றதாக இருப்பதால்வர்ணிக்கத்தகாதது. விசேஷமானது இன்னதென்பதாய் சொல்லமுடியும். விசேஷம்என்பது விகாரம். பிரம்மம் அவிகாரம். ஏனெனின் அது சகல விகாரங்களுக்கும் காரணமாயிருக்கிறது ஆகையால் அது அநிருக்தம்.

अनिलयने அநிலயநே= இப்படி யிருப்பதால் அநிலயனம் ஆதாரமற்றது. இப்படிப்பட்ட சகல காரியங்களுக்கும் அவைகளின் தர்மங்களுக்கும் விலக்ஷணமான பிரம்மத்தி னிடத்தில் अभयं அபயம் இந்த வினைச்சொல்லுக்கு விசெஷணமாக வைத்துக் கொள்ளலாம் அல்லது அபயாம் என்பதாய் பிரதிஷ்டைக்கு விசேஷணமாய் வைத்துக்கொள்ளலாம். பிரதிஷ்டை என்றால் ஸ்திதி ஆத்மபாவம்.

அப்போது அவித்தையால் ஏற்படும் பயத்துக்குக் காரணமான அநேகம் பார்க்கப்படாததினால் அபயத்தை அடைந்தவனாக ஆகிறான். ஸ்வரூபத்தில் ஸ்திரமாய் எப்போது இருக்கிறானோ அப்போது அவன் வேறு ஒன்றையும் பார்க்கிறதில்லை, கேட்

---

வி:—(12) सः ஸ:=அவன்

अभयं அபயம்=பயமன்றியிலிருப்பதை

गतोभवति கதோபவதி=அடைகிறான்.

---

து:—अदृश्ये அத்ருஶ்யே=முற்றிலும் ஞானத்துக்கு விஷயமாகாத

अनात्म्ये அநாத்ம்யே=(ஆத்மன: இதம்=ஆத்மயம்) ஜீவனுடைய குணங்களற்ற, அல்லது தனக்கு யஜமானற்ற

अनिरुक्ते அநிருக்தே=முற்றிலும் வேதத்தால் பிரதிபாதிக்கப்படாத

अनिलयने அநிலயநே=வேறு ஆசிரயமில்லாத

एतस्मिन् ஏதஸ்மிந்=ஹரியானவரிடத்தில்

अभयं அபயம்=பயமற்ற

प्रतिष्ठां ப்ரதிஷ்டாம்=ஞானமாகிற ஸ்திரமான ஸ்திதியை

यदाविन्दते யதாவிந்ததே=அடைகிறானோ

அத்:—கிறதில்லை, அறிகிறதில்லை ; ஒருவனுக்கு வேறு ஒருவனால் பயமுண்டாகக்கூடும். ஆத்மாவுக்கு ஆத்மாவினிடமிருந்து பயமுண்டாகமாட்டாது. ஆகையால் ஆத்மாவே ஆத்மாவின் அபயத்துக்குக்காரணம், நான்கு பக்கங்களிலும் பிராமணர்கள் பயமற்றவர்களாகக் காணப்படுகின்றார்கள். பயகாரணங்களிருந்தால் இப்படி காணப்படமாட்டாது. பயத்தினின்றும் இரக்ஷிக்கிற பிரம்மம் இராதபக்ஷத்தில் இப்படி காணப்படாது. ஆகையால் அவர்கள் அபயத்தைக் காட்டுகிறதினால், அந்த அபயத்துக்குக் காரணமான பிரம்மம் இருக்கிறது.

வி-வி:—ஜிஞ்ஞாஸுவானவன் எப்போது பிரம்மத்தைதன்னுடைய ஆத்மாவாக அறிகிறானோ அப்போது அந்தஅவித்வானானவன் அபயத்தை அதாவது ஜன்மமரணாதி பயமற்ற முக்கிய பதத்தை அடைகிறான். ஹி சப்தம்வித்வானுக்கு இது சம்மதம் என்பதைக் காட்டுகிறது. அதிர்ச்யத்வாதி குணங்களுள்ளது பிரம்மம். சக்ஷுஸ் முதலிய இந்திரியங்களால் அறியத்தகாததால் பிரம்மம் அதிர்ச்யம்.

अनात्म्ये அநாத்ம்யே=தன்னுடைய லிங்கமற்றது- அதாவது அனுமானத்தாலும் அறியத்தகாது என்று அர்த்தம்.

अनिरुक्ते அநிருக்தே=பிரம்ம தத்வத்தைச் சொல்லும்படியான யாதொரு சப்தமுமில்லை முதல் 3 விசேஷங்களும் பிரத்தியக்ஷத்தாலும் அனுமானத்தாலும், ஆகமத்தாலும் பிரம்மம் அறியப்படமாட்டாது என்பதை காட்டுகின்றன. இதனால் சமஸ்தகாரியங்களுக்கும் பிரம்மம் விலக்ஷணமானது என்பது சித்தித்தது.

---

வி:—இவ்விடத்தில் வியாசாரியர் अदृश्ये அத்ருச்யே என்கிற பதத்தால் அசித் அல்லவென்றும் அநாத்மேஎன்கிறபதத்தால் பத்தநாத்வர்களல்லவென்றும், அந்த பத்த ஜீவன் பரமாத்மாவால் வியாபிக்கப்பட்டவன் அல்லது

आत्म्यं ஆத்ம்யம்=கர்மாவால் உண்டாகிற சரீரம்

अनात्म्यं அநாத்ம்யம்=அப்படிப்பட்ட சரீரமற்றவன்

अनिरुक्ते அநிருக்தே=முக்தனல்லவென்றும் அவர் பத்தாவஸ்தையில் தேவாதி சப்தத்தால் சொல்லப்பட்டவர்

अनिलयने அநிலயநே=என்கிற நித்திய முக்தரல்ல வென்றும் அவர்களுக்கு பகவான் ஆதாரமாக இருக்கிறார் என்றும் சொல்லியிருக்கிறார்.

இப்படிப்பட்ட நிஷ்டைக்கு விச்சேதமுண்டானால் அநர்த்தமுண்டாகுமென்று சுருதி சொல்லுகிறது,

---

து:—अथ அத=பிறகு

सः ஸ:=அந்த உபாசகன்

अभयं அபயம்=பயமற்ற பகவானை

गतः கத:=அடைந்தவனாக ஆகிறான். அஞ்ஞன் ஆகிறதில்லை என்பது கருத்து.

அநிலயனம். இதற்கு யாதொரு ஆதாரமுமில்லை. அது அதன் மஹிமையாலே இருக்கிறது. மூலாஞ்ஞானம் பிரம்மத்தை ஆசிரயித்துக்கொண்டிருப்பதால் ஆதாரமற்றதன்று. பிரம்மமோ யாதொரு ஆதாரமுமற்றது. ஆகையால் அது அநிலயனம் என்று சொல்லியிருக்கிறது.

அபயம்:—துவைதமற்ற என்று அர்த்தம். பயம் என்பது பிரம்மத்தைத் தவிர வேறான வஸ்துவைக் கூறுகிறது.

(வி-வி:—வித்வானுக்கு பிரம்மம் நிச்சயமாகக் கிடைத்துப் போகுமானதால் சம்சயம் எப்படி நிவர்த்திக்கப்பட்டதாக ஆகிறதோ அப்படி அஞ்ஞானிக்கும் பிரம்மம் கிடைக்கமாட்டாது என்கிற நிச்சயத்தால், சம்சயம் நிவிர்த்திக்கப்படுகிறது.)

(13) यदा ह्येवैष एतस्मिन्नुदरमन्तरं कुरुते । யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நுதரமந்தரம் குருதே ।

(14) अथ तस्य भयं भवति ॥ 5 ॥ அத தஸ்ய பயம் பவதி ॥ 5 ॥

பதவுரை.

यदा யதா=எப்போது
एषः ஏஷ:=இந்த ஜிஞ்ஞாஸுவானவன்
एतस्मिन् ஏதஸ்மிந்=இந்த பிரம்மத்தினிடத்தில்
उदरमन्तरं உதரமந்தரம்=ஸ்வல்ப பேதத்தை
कुरुते குருதே=செய்கிறானோ
(14) अथ அத=அப்போது
तस्य தஸ்ய=அவனுக்கு
भयं பயம்=பயமானது
भवति பவதி=உண்டாகிறது

ச—பா:—

அவித்தியாவஸ்தையில் எந்த அஞ்ஞானியானவன் அவித்தையால் ஏற்படும் வஸ்துவை இரண்டாவது சந்திரன்போல் தன்னி

வி:—(13) यदा யதா=எந்த காலத்தில்
एषः ஏஷ:=இந்த உபாசகன்
एतस्मिन् ஏதஸ்மிந்=பரமாத்மாவினிடத்தில்
अन्तरं அந்தரம்=தியானவிச்சேதத்தை

து:—அ-கை:—செவ்வையான ஞானமில்லாதவரையில் பகவானை அடையாமை மட்டும் ஏற்படுகிறது என்பதில்லை. விபரீத ஞானத்தால் அநர்த்தமும் ஏற்படுகிறது என்பதாய் यदा ह्येवैष யதா ஹ்யேவைஷ என்பதால் சொல்லுகிறார்.

एषः, एवं ஏஷ: ஏவ=ஞானியோ அஞ்ஞானியோ எவனுகிலும்

டத்திலும் ஆத்மாவினிடத்திலும் பார்க்கிறானோ அவன் பேதத்தைப்பார்க்கிறான். இப்படி பேதம் பார்க்கிறவனுக்கு இப்படி பார்ப்பதினாலேயே ஆத்மாவினிடமிருந்து பயமுண்டாகிறது. ஆகையால் அஞ்ஞானி விஷயத்தில் ஆத்மாவே ஆத்மாவின் பயத்துக்குக் காரணமாயிருக்கிறது.

அத்:—(வி-வி:—லௌகிக புருஷன் எப்போது பிரம்மத்தைத்தன்னை விட வேறாக ஈஷத்தாகிலும் அறிகிறானோ அப்போதே அவனுக்கு ஜன்ம மரணாதிசம்சார பயம் ஏற்படுகின்றது. ஜீவனுக்கும் பிரம்மத்துக்கும் வாஸ்தவத்தில் பேதமில்லை என்கிற அபிப்பிராயத்தால் ஈஷத்தாகிலும் (கொஞ்சமாகிலும்) என்று சொல்லப்பட்டது. ஹி சப்தமானது பேதத்தைப் பார்க்கிறவனுக்கு சம்சாரம் பிராப்தமாகும் என்பது வேறு சுருதியிலும் சொல்லியிருக்கிற தென்பதைக் காட்டுகிறது.

(வி-வி:—எவன் கர்மகாண்டப்படி உபாசிய (சகுண) பிரம்மத்தை அறிகிறானோ அவனும் நிர்குண பிரம்ம ஞானிபோல் மோக்ஷத்தை அடைவான் என்பதாய் சங்கை உண்டாகலாம்; அதை நிராகரிக்கும்பொருட்டு சுருதியானது

(15) तत्त्वेव भयं विदुषोऽमन्वानस्य ॥ 6 ॥ தத்வேவ பயம் விதுஷோऽமந்வாநஸ்ய ॥ 6 ॥

என்று சொல்லுகிறது.

பதவுரை.

तु து=இது சங்கையை நிவாரணம் செய்கிறது.

---

வி:—अरं அரம்=கொஞ்சமாகிலும்

कुरुते குருதே=பண்ணுகிறானோ

(14) तस्य தஸ்ய=அவனுக்கு

भयं பயம்=பயத்தை

भवति பவதி=உண்டுபண்ணுகிறார் என்பது கருத்து.

---

து:—उदरं உதரம்=(உத்=உத்கிருஷ்டன், அ:—விஷ்ணு) எவர்களை விட விஷ்ணு உத்கிருஷ்டரோ அவர்கள் உதர: ஜீவர்கள் விஷ்ணுவைவிட நீசர்கள்; அந்த ஜீவர்களிடத்தில் ரமிக்கிறதினால் உதரம்= பகவானை अन्तरं कुरुते यदा அந்தரம் குருதே யதா=எப்போது பேதமுள்ளதாகச் செய்கிறானோ அதாவது பகவானுடைய மூலரூபத்துக்கும் மற்ற ரூபங்களுக்கும் பேதமிருக்கிறதாயும் இந்த மற்ற ரூபங்களிலேயே பேதமிருப்பதாயும் எப்போது அறிகிறானோ

अथ அத=பிறகு தான்

तस्य தஸ்ய=அவனுக்கு

भयं பயம்=பயமானது

भवति பவதி=உண்டாகிறது

अमन्वानस्य विदुष: அமன்வானஸ்ய விதுஷ:=பிரம்மத்தை அறியாத வித்வானுக்கு

तत् एव தத் ஏவ=அதுவே

भयं பயம்=பயமாகிறது

அத்:—ச-பா:—ஈசுவரன் வேறு, தான்வேறு, தான் சம்சாரி, என்று நினைக்கிறவனும், பிரம்மம் ஏகம் என்று நினைக்காதவனும், பிரம்ம விஷயத்தில் ஸ்வல்ப பேதமாகிலும் செய்கிறவனுமிருக்கிற வித்வானுக்கு பயமுண்டாகிறது ஆகையால் வித்வானும் அவித்வானே. எவன் ஏகமாயும் அபின்னமாயுமிருக்கிற ஆத்மதத்துவத்தைப் பார்க்கவில்லையோ, ஈசுவரன் சம்ஹார்த்தா என்னை சம்ஹரிப்பார் என்று எவன் பார்க்கிறானோ அவனுக்கு பயமுண்டாகிறது. ஸம்ஹார்த்தாவான ஈசுவரனே சம்ஹரிக்கத்தக்கவனல்ல. அப்படிப்பட்ட ஈசுவரனில்லாத பக்ஷத்தில், பேத ஞானத்தாலுண்டான பயம் கூடாது சகல ஜகத்தும் பயத்துடன் கூடினதாகக் காணப்படுகிறது. அப்படி காணப்படுவதால் நாச மற்றதாகவும், சம்ஹார்த்தாவாகவும் பயத்துக்குக் காரணமாகவும் பிரம்மிருக்கிறது. அது நிச்சயம்.

(வி-வி:—பிரம்ம தத்துவத்தை அறியாதவன் பேத தர்சியானதால், ஜன்மமரண ரூப சம்சாரபயம் உண்டாகிறது.

---

வி:—முந்தின வாக்கியத்தால் பிரதிஷ்டா சப்தத்தால கூறப்படும் தியானமானது இடைவிடாமல் செய்யவேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் இந்த வாக்கியத்திலிருக்கிற अन्तर அந்தர சப்தமும் இடைவிடாமல் செய்கிற தியானத்திற்கு விருத்தமான விச்சேதத்தை கூறுகிறதென்பதே உசிதம். பரன் சொல்லுகிற ரீதியாக பிரம்மத்தினிடத்தில் ஸ்வல்பபேதத்தை அறிகிறான் என்கிற அர்த்தம் உசிதமல்லவென்று அறியவும்.

வாஸ்தவத்தில் நாம் அநேக பிரம்மவாதத்தை ஒப்புக்கொள்ளாததினால் பிரம்மத்தினிடத்தில் பேதத்தை நிஷேதிப்பது பிரதிகூலமல்ல. அப்படி இருந்தாலும் பிரகரணத்தை அனுசரித்து பார்க்கும்போது மேற்சொன்ன அர்த்தமே உசிதம் என்று அறியவும். பயம் எப்படிப்பட்டதெனின் கூறுகிறார்.

---

து:—அ-கை:—तत्वेव தத்வேவ என்பதினால் பகவானுடைய வேறு மஹிமையைச் சொல்லுகிறார்.

तत् एव तु தத் ஏவ து=அந்த பிரம்மம்

विदुष: விதுஷ:=ஞானிக்கும்

अमन्वानस्य அமன்வானஸ்ய=அஞ்ஞானிக்கும், எல்லாருக்கும்

भयं பயம்=பயங்கரமாக

भवति பவதி=ஆகிறது. வித்தியாசம் என்னவெனின்; வித்வானுக்கு முக்தி கிடைக்கும் வரையில் ஸ்வல்பம் பயத்தைக் கொடுத்து பிறகு நிர்ப்பயனாக்குகிறான். அஞ்ஞானிக்கு சம்சார பயத்தை உண்டாக்குகிறான். விபரீதமாய் அறிந்தவனுக்கு மஹத்தானபயத்தை உண்டுபண்ணுகிறான்.

(16) तदप्येषश्लोको भवति ॥7॥ தத³ப்யேஷ ஶ்லோகோ ப⁴வதி ॥7॥

# इतिसप्तमोऽनुवाकः

இதி ஸப்தமோऽநுவாக:

பதவுரை.

तदपि தத³பி = அந்த அர்த்தத்திலும்

एषःश्लोकः ஏஷ: ஶ்லோக: = இந்த சுலோகம்

भवति ப⁴வதி = இருக்கிறது

ச-பா:—இந்த அர்த்தத்திலும் அடியிற்கண்ட சுலோகமிருக்கிறது.

வி-வி:—வேறு வித்தையுடன் கூடியிருந்தாலும் பிரம்மதத்வ ஞானமில்லாதவனுக்குப் பயமிருக்கிறது என்கிறவிஷயத்தில் சுருதி சுலோகத்தை உதாகரிக்கிறது.

7-வது கண்டம் முற்றிற்று.

## 8-வது அனுவாகம்.

(1) भीषाऽस्माद्वातः पवते । பீ⁴ஷாऽஸ்மாத்³வாத: பவதே ।

(2) भीषोदेति सूर्यः । பீ⁴ஷோதே³தி ஸூர்ய: ।

(3) भीषास्मादग्निश्चेन्द्रश्च । பீ⁴ஷாஸ்மாத³க்³நிஶ்சேந்த்³ரஶ்ச ।

(4) मृत्युर्धावति पञ्चमइति॥1॥ ம்ருத்யுர்தா⁴வதி பஞ்சம இதி ॥1॥

---

வி:—(15) अमन्वानस्य அமந்வாநஸ்ய = வேறு விஷயத்தில் இச்சையால் மனனம் செய்யாத

विदुषः விது³ஷ: = பிரம்மத்தை உபாசிக்கிறவனுக்கு

भयं ப⁴யம் = அமனனமாகிற பயமானது இருக்கிறது வேறுபயமில்லை.

எந்த க்ஷணமானது வாசுதேவருடைய ஸ்மரணை யன்றியிலிருக்கிறதோ அது நஷ்டம். ஆபத்துக்கு பெரியமார்க்கம். அது பெரிய பிராந்தி. அதுவே இந்திரியக்குறைவு. பகவத்தியானம் செய்யாத ஜனங்களுடைய சேர்க்கையைவிட நெருப்புக்கூட்டுக்குள் இருப்பது நலம், என்பதாய் மஹரிஷிகள் சொல்லுகிறார்கள்.

7-வது அனுவாகம் முற்றிற்று.

---

து:—तदपि தத³பி = வித்வானுக்கும் பயத்தை உண்டாக்குகிறான் என்கிற விஷயத்தில் சுலோகமிருக்கிறது.

அத்:—பதவுரை.

(1) वायुः வாயுঃ=வாயுவானவன்

अस्मात् அஸ்மாத்=இதின்

भीषा பீஷா=பயத்தால்

पवते பவதே=வீசுகிறான்

(2) सूर्यः ஸூர்ய:=சூரியன்

भीषा பீஷா=பயத்தால்

उदेति உதேதி=உதிக்கிறான்

(3) अग्निश्च அக்நிஶ்ச=அக்கினியும்

इन्द्रश्च இந்த்ரஶ்ச=இந்திரனும்

(4) पञ्चमः பஞ்சம:=ஐந்தாவதான

मृत्युः ம்ருத்யு:=மிருத்தியுவும்

(3) अस्मात् அஸ்மாத்=இதின்

भीषा பீஷா=பயத்தினால்

(4) धावति தாவதி=ஓடுகிறான்

த-பா:—

அரசனால் நியமிக்கப்பட்டவர்கள் அவனுடையபயத்தால் தங்கள் தங்களுடைய காரியங்களில் பிரவிர்த்திக்கிறதுபோல் மகாபூஜ்ஜியர்களாயும் சுவயம் ஈசுவரர்களாக இருக்கிறவர்களுமான வாயு, சூரியன், அக்கினி, இந்திரன், யமன், இவர்கள், தங்கள் தங்கள் வீசுதல் முதலிய அதிக சிரமமுள்ள காரியங்களில், பிரம்மத்தால் நியமிக்கப்பட்டவர்களாய் பிரம்மத்தின் பயத்தால் பிரவிர்த்திக்கிறார்கள்.

---

## 8-வது அனுவாகம்.

வி:—அக்கினி சூரியன் முதலான சகல தேவசிரேஷ்டர்களும் பரமாத்மாவினுடைய கட்டளையை மீறினால் என்னவருமோ என்கிற பயத்தினால் தங்கள் தங்கள் காரியத்தில் ஜாக்கிரதைபாக இருந்துகொண்டிருக்கிறார்கள். ஆகவே பிரம்மபதத்தைவிட மற்ற சகலபதமும் துக்

---

து:—(1)अस्मात् அஸ்மாத்=இந்த பிரம்மத்தின்

भीषा பீஷா=பயத்தினால்

वातः पवते வாத: பவதே=வாயு வீசுகிறான்.

(3) अग्निः அக்நி:=அக்கினியானவன் பசனாதி காரியங்களைச் செய்கிறான்.

வி–வியாக்கியானம்.

அத்:—1 (1&2) (எவன் முந்தின ஜன்மத்தில் ஞான கர்மங்களை விசேஷமாய் அனுஷ்டித்து இந்த ஜன்மத்தில் வாயு தேவதையாகப் பிறந்து, இப்படிப்பட்ட மஹிமையை அடைந்திருந்தாலும் தேவதையாக இருந்தாலும் அவன் அந்தர்யாமி ரூபமான பிரம்மத்தின் பயத்தால் நிரந்தரம் ஆலசியமன்றியில் சஞ்சரிக்கிறான். இப்படியே சூரியாதிகள் விஷயத்திலும் அறியவேண்டியது.

(3) அக்கினியும் இந்திரனும் தங்கள் வியாபாரங்களைச் செய்கிறார்கள் என்பதாய் சேர்த்துக்கொள்ளவும்.

(4) இந்த நான்கு தேவதைகளை உத்தேசித்துயமன் ஐந்தாவதாகச் சொல்லப்படுகிறான். அவன் எந்தஎந்த பிராணிகளுக்கு ஆயுள் குறைந்திருக்கிறதோ அவர்களைக் கொல்லும்பொருட்டு ஓடுகிறான். யாதொரு பற்றுதலன்றியில் நிர்குணமாயிருக்கிற பிரம்மம் பயகாரணமாக இருக்கமாட்டாதாயினும், மாயோபாதிகமான பிரம்மம் அந்தர்யாமியாக பயகாரணமாகலாம். இந்த அந்தர்யாமி பிரம்மம் தான். வேறு ஒன்றுமல்ல வென்பது பிரம்ம சூத்திரம் I-2 வது பாதத்தில் 5 வது அதிகரணத்தில் 18 வது சூத்திரத்தில் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

இவ்விதமாக சகலபிரச்னங்களுக்கும் உத்தரம்கூறப்பட்டது,

வி-வி:—முன், सोऽश्नुते सर्वान्कामान्सह ஸொऽश்நுதே ஸர்வான்காமான்ஸஹ அதாவது சகல காமங்களையும் அது அனுபவிக்கிறது என்பதாய் சொல்லப்பட்டிருக்கிறது (II - 1.)

रसो वै सः ரஸோவைஸ: என்பதாய் ஆநந்த ரூபமே சூசிப்பிக்கப்பட்டது. இவ்விரண்டையும் நிச்சயிக்கும்பொருட்டு சுருதியானது விசாரத்தை ஆரம்பிக்கிறது.

---

வி:—கத்தைக் கொடுக்குமானையால் அநர்த்தமாகவே இருக்கிறது. ஆனதால் அப்படிப்பட்ட பதத்தில் ஆசைவைத்து மனனத்தைவிட்டால் அதுமிகவும் பயமுள்ளது. ஆனபடியால் இதைவிட வேறுபயமில்லைஎன்று அர்த்தம்.

---

து:—इन्द्रः இந்த்ர:=இந்திரன் மூன்று லோகங்களையும் பாலனம்செய்தல், வர்ஷித்தல் முதலிய வியாபாரங்களைச் செய்கிறான்.

(4) पंचमो मृत्युः பஞ்சமோம்ருத்யு: யமனும் தன் வியாபாரத்தைச் செய்கிறான்.

பிரம்மத்தின் பயத்தால் என்பதை எங்கும் சேர்த்துக்கொள்ளவேண்டியது.

வி:—இந்தப்படி சர்வஞ்ஞமுதலிய குணங்களுடன் கூடிஜைகத்காரண வஸ்துவை விஷயமாக்கும் பிரம்ம ஞானத்தை இடைவிடாமல் அப்பியசிக்க வேண்டுமென்று விதித்து அந்த ஞானத்தால் அடையக்கூடிய ஆனந்தமய பிரம்மத்திற்கு, ஆநந்தமய சப்தபிரவிர்த்திக்குக் காரணமான அதிக ஆநந்தத்தை சுருதி காண்பிக்கிறது.

---

து:—வாயு முதலானவர்கள் உபலக்ஷணம். சகலதேவதை முதலானவர்கள் பிரம்மத்தின் பயத்தால் அவர் அவர்களுடைய வியாபாரத்தில் பிரவிர்த்திக்கிறார்கள் என்று தியானிக்கவேண்டியது.

இதி இதி=என்பதை சுலோகத்துடன் முன்போலவே சேர்த்துக்கொள்ளவேண்டியது.

பிரம்மத்தின் பய அபயகர்த்திருத்வம் பிரகரணம் முற்றிற்று.

(1) इत्युक्ते ब्रह्मणापूर्वं पप्रच्छवरुणविभुः ।
अविद्वानपियः कश्चिद्ब्रह्माप्नोति कथंचन ।
विद्वानेवोततत्रापि सर्वेवाथैवकेचन ।
यदि सर्वेथत त्रापि सर्वे सम्यक्समाप्नुयुः ।
केचिदेवोत सम्यक्त दसम्य गपरेजनाः ।
ज्ञाननो पीतिपृष्टस्सन्ब्रह्माप्राह चतुर्मुखः ।
अज्ञानप्राप्नुयुर्ब्रह्म प्राप्नयुर्ज्ञानिनोखिलाः ।
तत्रापि सम्यक्प्राप्तिस्तु विरिंचस्यैव सर्वदा ।
अन्येषां तारतम्येन प्राप्तिःसुख विशेषतः ।
इत्यभिप्रायवान्ब्रह्माद्युकारेण समासतः ।
उक्त्वा पृश्नोत्तरं पश्चाद्विस्तरेण जगादह ।
कश्चिदेवोत सम्यक्तदाप्नुयादिति वाक्यतः ।
अनन्तरं तथैवेति ब्रह्मोंकार मुवाचह ।
अज्ञोनैव तदाप्नोति ज्ञाने वैतदवाप्नुते ।
इति ज्ञापयितुं विष्णोः स्वातंत्र्यज्ञापनायतु ।
आह सृष्टिं प्रवेशंच माहात्म्य ज्ञानतोयतः ।
प्रीतिं यान्ति महांतस्तुतद्वशा एव चेश्वराः ।
अग्न्यादयोपि किमुत तदन्ये मुक्तिदस्ततः ।
स एवैकः सविज्ञेयः पूर्णैश्वर्यादि रूपवान् ।
इति तस्य महैश्वर्यमुच्यते सत्वकामयत् ।
सृष्ट्वा जगदिदं सर्वं नियामक तयास्यतु ।
बहुरूपो भवानीति स्याज्जगच्चेत्य चिंतयत् ।
स्यादित्यालोचनान्नान्यत्तपो विष्णोः कदाचन ।
अवतारेष्वनुकृतिर्बाह्य वृत्यातपस्विनां ।

து:—सृष्टिर्नाम स्वरूपात्तु बहिर्निष्क्रमणं स्मृतं ।
यद्यपीदं जगत्सर्वं स्वोदरस्थं महात्मनः ।
तथाप्येष द्वितीयेन रूपेण बहिराक्षिपेत् ।
रूपान्तरेणाविशाच्च जगत्सर्वं जनार्दनः ।
त्यच्चानिरुक्तं विज्ञानं तथा निलयनं महान् ।
सत्यं प्राणस्तथा श्रीश्च सन्निरुक्तं तथानृतं ।
अविज्ञानं चानिलयनं प्रकृतिप्राणयोः परम् ।
तद्विष्णोस्तु संबंधात्स्वतस्तन्नामको हरिः ।
ततोनियामकश्चेति त्यदानं त्यादवाच्यतः ।
अनिरुक्तं निलयनं सर्वाधारस्ततो हरिः ।
विज्ञानं सर्वविज्ञानात्सत्यं साधुस्वरूपतः ।
अवसाद सुवाच्यत्व दौर्बल्य ज्ञप्त्य साधुताः ।
प्रकृतिं प्रणतोन्यत्वकुर्वंस्त न्नामको हरिः ।
अतःसाधु स्वरूपःसन्सत्य नामानृतादिकं ।
नामानेन गतत्वाद्यदिदं किञ्चभाषितं ।
सन्निरुक्ता दिशब्देन तत्सर्वं साधुतैवहि ।
अवसादनादिहेतुत्वं साधुतैवहि सर्वशः ।
असाधुतावसादादिस्तत्कर्तृत्वंहिभाषितं ।

(तत्वनिर्णये)

(1) [illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

து:—सामान्यचेष्टाधर्माश्च कस्य स्युस्तमृते प्रभुं ।
सुखं लब्ध्वा हि कुरुते लोकचेष्टां जनार्दनः ।
अल्पात्सुखादल्पकर्मा पूर्णानन्दाद्धि सर्वकृत् ।
नह्याप्ताः कर्म कुर्वन्ति मुग्धा ह्येव विशेषतः ।
तस्माद्यादृक्सुखं तादृक्कर्मपूर्णं सुखस्ततः ।
सर्वकृत्त्वात्परो विष्णुराह तस्मात्सनातनी ।
सुखं लब्ध्वा करोतीति च्छंदोगानां श्रुतिः परा ।
अलब्ध्वा तु सुखं नैव करोतीत्यपि सादरं ।
तत्पूर्णानन्दत्वेन कारितः प्राणिति स्फुटं ।
स लोकः स एवैक आनन्दयति चाखिलं ।
तस्माद्दृश्ये जैवानां गुणानामस्य संगतेः ।
अनात्म्ये थ गुणानां स्यादनिरुक्ते निराश्रयात् ।
अनिलयने ऽभयत्वेन यज्ज्ञानेन तिष्ठति ।
तदभयं हरिं गच्छेन्नैवाज्ञानो कथंचन ।
यदैतस्मिन्परे विष्णावुदरं जीवगत्वतः ।
भेदं करोतीति नैव भयमस्य महद्भवेत् ।
अत्युक्तः परो विष्णुरेभ्य उच्चः स एव तु ।
तदुदा जीवसंघाः स्युरुदरं तद्गतांतरं ।
तदेव ब्रह्म भयकृद्विदुषोऽविदुषस्तथा ।
विदुषोऽल्प भयं कुर्याद्यावन्मुक्तिं व्रजत्यसौ ।
अथाभयं भवेद्ब्रह्म तस्य मुक्तस्य सर्वदा । (तत्वनिर्णये)
(2) तस्माद्भवाद्योदेवा विद्वांसोऽपि विशेषतः ।
भीताः स्वकर्म कुर्वन्ति विष्णोः प्रीत्यर्थमंजसा ।
अमन्वानस्य नु विष्णुः कुर्यान्नित्यं महद्भयं ।
तम आख्ययमनुत्थानं विदुषां नियमेन तु । (तत्वनिर्णये)
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌚𑍇𑌷𑍍𑌟𑌾𑌧𑌰𑍍𑌮𑌾𑌶𑍍𑌚 𑌕𑌸𑍍𑌯 𑌸𑍍𑌯𑍁𑌸𑍍𑌤𑌮𑍃𑌤𑍇 𑌪𑍍𑌰𑌭𑍁𑌂 ।
𑌸𑍁𑌖𑌂 𑌲𑌬𑍍𑌧𑍍𑌵𑌾 𑌹𑌿 𑌕𑍁𑌰𑍁𑌤𑍇 𑌲𑍋𑌕𑌚𑍇𑌷𑍍𑌟𑌾𑌂 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨𑌃 ।

அத்:—ஸ-பா:—இந்த ஆநந்தமய பிரம்ம விஷயத்தில் இந்த விசாரணை ஏற்படுகிறது. இந்த ஆநந்தத்தைப் பற்றி என்ன விசாரம் என்பது இனி சொல்லப்படும். இந்த ஆநந்தம் விஷய விஷயி (ஜீவன்) களுடைய சம்பந்தத்தால் உண்டாகிற லௌகிக ஆநந்தம் போலவா, அல்லது சுவாபாவிகமா? என்பதாய் விசாரிக்கப்படுகிறது. இவ்விடத்தில் பாஹ்ய ஆந்தர சாதனங்களால் ஏற்படும் ஆநந்தம் சிரேஷ்டம். பிரம்மாநந்தத்தை அறியவேண்டியதற்காக இந்த லௌகிகாநந்தம் கூறப்படுகிறது. இந்த ஆநந்தத்தால், விஷயத்தினின்றும் திரும்பின புத்தியால் அடையக்கூடிய ஆநந்தத்தை அறிய முடியும்.

(அ:—ஜீவப்பிரம்ம ஐக்கியத்தை அறிந்தவர்களின் புத்தியால் அறியக்கூடியது இந்த ஆநந்தம்).

(வி-வி:—ஆ ஸா:—இந்த தத் சப்தமானது இந்த மீமாம்சை வேறு சுருதியிலும் பிரசித்தம் என்பதைக் காட்டுகிறது. பிரஹதாரணயகத்தில் सयोमनुष्याणां ஸயோமநுஷ்யாணாம் முதலிய சுருதியானது ஆநந்தத்தை நிர்ணயம் செய்கிறது.

एषा ஏஷா=இந்த ஏதத் சப்தம் பின்வரும் கிரந்தத்திலுள்ள விஷயத்தைக் கூறுகிறது.

மீமாம்சா:—இந்த பிரம்மாநந்தமானது லௌகிக ஆநந்தம் போல் விஷய விஷயி சம்பந்தத்தால் ஏற்படுகிறதா, அல்லது இது ஸ்வாபாவிகமா?

---

வி:—(4) आनन्दस्य ஆநந்தஸ்ய=ஆநந்தத்தின்

(5) सैषामीमांसा ஸைஷாமீமாம்ஸா=அந்த விசாரமானது

भवति பவதி=உண்டாகிறது.

---

து:—सैषा ...ஸைஷ=...:—

அ—கை:—ஞானிகள் எல்லோரும் மோக்ஷத்தை அடைகிறார்கள், சதுர்முகர் மட்டும் செவ்வையாக (பூர்ணமாக,) மோக்ஷமடைகிறார் என்பதாய்முன் உகாரத்தால் சுருக்கமாய்ச்சொல்லப்பட்டது. ஞானிக்கு பயத்தை உண்டு பண்ணுகிறார் என்பதாய் முன் யாதொன்று சொல்லப்பட்டதோ அது முக்தி கிடைக்கும் வரையில் தான் என்று தெரிவிக்கும் பொருட்டு முன் சுருக்கமாய்ச் சொன்னதை இப்போது விவரிக்கிறார். (அல்லது) ஜகத்தைப் பிரேரணை செய்வதினால் பிரம்மம் பூர்ணாநந்தத்தை ஸ்வரூபம் என்று சொல்லப்பட்டது. இதை அறிந்த முக்தர்களுக்கும் சுகம் தாரதம்மியமாயிருக்கிறதென்பதை இனி விவரிக்கிறார்.

அத்:—(வி-வி:—இந்த பிரம்மாநந்தம் ஸ்வாபாவிகம் என்பதைக்காட்ட துவாரமாயிருக்கிற இதர விஷயாநந்தங்கள் கிரமமாகக் காட்டப்படுகின்றன. இவைகள் பிரம்மாநந்ததின் லேசமானதால், இவைகளால் நிச்சயமாய் அதைக்காட்டலாம். அந்த லேசம் என்பது இப்படிப்பட்டது:—அவித்தையால் விவேகமானது மறைபட்டவளவில், அவித்தை மேலிடுவதால், ஹிரணியகர்ப்பர் முதல் மனிதன் வரையில் சகல ஜீவர்களிடத்திலும் பிரம்மாநந்தமானது அவரவர்களின் கர்மவசத்தாலும், விஷயாதிகளாகிற சாதனங்களின் சம்பந்த வசத்தாலும் குறைவு அடைகிறது. அதுவே மனிதன் முதல் ஹிரணியகர்ப்பன் வரையில் உள்ள பேர்களுக்குள் காமத்தால் பீடிக்கப்படாதவர்களிடத்தில் நூறு நூறு மடங்கு அதிகமாக விளங்குகிறது. அவித்தையால் ஏற்பட்ட விஷய விஷயி பேதம் நீங்கினவளவில் சுவாபாவிகமான, பரிபூர்ண, ஏகமான ஆநந்தம் பிரசப்படுகிறது. இப்படி துவாரம் போல் இருக்கிற விஷயாநந்தங்களுக்குள் நமக்குப் பிரசித்தமாய் தெரிந்திருக்கும் ஆநந்தத்தை முதலில் சுருதி கூறுகிறது).

(6) युवा स्यात्साधुयुवाऽध्यायकः। யுவா ஸ்யாத்ஸாதுயுவா(அ)த்யாயக:।

(7) आशिष्ठो दृढिष्ठो बलिष्ठः। ஆஶிஷ்டோ த்ருடிஷ்டோ பலிஷ்ட:।

(8) तस्येयं पृथिवी सर्वा वित्तस्य पूर्णा स्यात्। தஸ்யேயம் ப்ருதிவீ ஸர்வா வித்தஸ்ய பூர்ணா ஸ்யாத்।

(9) स एको मानुष आनन्दः ॥ 3 ॥ ஸ ஏகோ மாநுஷ ஆநந்த: ॥ 3 ॥

---

து:—आनन्दस्य ஆநந்தஸ்ய = ஆநந்தத்தின்
सैषा ஸைஷா = சொல்லப்போகிற
मीमांसा மீமாம்ஸா = விசாரணை ஏற்படுகிறது.

एषह्येव आनन्दयाति ஏஷ ஹ்யேவாநந்தயாதி என்பதினால் ஆநந்தத்தை உண்டுபண்ணுகிறார் என்று சொல்லப்பட்டது. அது முக்தர்களிடத்தில்தான் முக்கியம். அது எல்லாருக்கும் ஒரே விதமாக இருக்கிறதா, அல்லது பலவிதமாக இருக்கிறதா, என்பதாய் விசாரிக்கப் படுகிறது. இது அனேகவிதம். உத்தமமான மனுஷியன் முதல் பிரம்மா வரையிலுள்ள ஆநந்தத்தின் தாரதம்மியத்தைச் சொல்லும் பொருட்டு மனுஷ்யோத்தமனான சக்கிரவர்த்தியின் ஆநந்தமாரம்பித்து முக்தி அடைந்த சக்கிரவர்த்தியின் விசேஷணத்தைச் युवा स्यात् யுவா ஸ்யாத் என்பது முதல் சொல்லுகிறார்.

பதவுரை.

அத்—(6) युवा யுவா=யௌவனத்திலிருக்கிறவனும்

(7) आशिष्ठः ஆசிஷ்டஃ=வெகு சீக்கிரத்தில் வேலைசெய்ய திறமையுள்ளவனும்

दृढिष्ठः த்ருடிஷ்டஃ=வெகு திடமுள்ளவனும்

बलिष्ठः பலிஷ்டஃ=வெகு பலமுள்லவனும்

(6) साधुयुवा ஸாதுயுவா=யோக்கியமான பூர்வவயதை யுடையவனும்

अध्यापकः அத்யாபகஃ=வேதாத்தியனம் செய்கிறவனும்

स्यात् ஸ்யாத்=ஆவான்

(8) तस्य தஸ்ய=அவனுக்கு

इयं இயம்=இந்த

सर्वा ஸர்வா=சமஸ்தமான

पृथिवी ப்ருதிவீ=பூமி

वित्तस्य வித்தஸ்ய=யோகசாதனமான தனத்தால்

पूर्णास्यात् பூர்ணா ஸ்யாத்=நிறைந்ததாக ஆகும்.

सः ஸஃ=அது

एकः मानुषआनन्दः ஏகஃ மாநுஷ ஆநந்தஃ=ஒரு மனுஷிய ஆநந்தம்.

ச-பா:—இந்த லௌகிகாநந்தம் பிரம்மாநந்தத்தின் லேசம். புத்தியானது அவித்தையால் மூடப்பட்டிருக்கும் போதும், அவித்தையானது மேலிட்டிருக்கும்போதும், கர்மத்துக்குத் தக்கபடிக்கும் ஞானத்துக்குத்தக்கபடிக்கும், விஷயம்முதலிய சாதனங்களுக்குத்தக்கபடிக்கும் பிரம்மாதிகளால் அறியப்பட்டதாயும், லோகத்தில் ஒரு ரீதியாக இராததுமான லௌகிகாநந்தம் ஏற்படுகிறது அவித்தியாகாமகர்மங்கள் குறையக்குறைய மனுஷிய கந்தர்வாதி பூமிகை முதல் ஹிரணியகர்ப்ப பூமிகைவிரையில் இச்சையற்ற வித்தானுக்கு இந்த லௌகிக ஆநந்தம் நூறு நூறு மடங்கு அதிகமாக விளங்குகிறது. அவித்தையால் ஏற்பட்ட விஷய விஷயி பாவம் வித்தையால் நிஃசேஷமாய் நிவிர்த்தியானபிறகு ஸ்வாபாவிக பரிபூர்ண ஏக அத்வைத ஆநந்தம் விளங்குகிறது என்பதை சுருதி சொல்லுகிறது.

அத்:—युवा साधुयुवा யூவா - ஸாதுயூவா=வாலிபன் ஸாதூ என்பது யுவாவுக்கு விசேஷணம். ஒருவன் யுவாவாயிருந்தும் கெட்டவனு யிருக்கலாம். ஒருவன் நல்லவனுயிருந்தும் யுவாவா யில்லாமலிருக்கலாம். ஆகையால் யுவா—ஸாதூயுவா என்பதாய் இரண்டு தடவை சொல்லப்பட்டது.

अध्यापक: அத்யாபக:=வேதாத்தியயனம் செய்தவன்

आशिष्ठ: ஆசிஷ்ட:=நல்ல சிக்ஷை யடைந்தவன்

दृढिष्ठ: த்ருடிஷ்ட:=நல்ல திடமுள்ளவன்

बलिष्ठ: பலிஷ்ட:=நல்ல பலமுள்ளவன்

---

வி:—(6) வியாசாரியர் சொல்லுகிறதாவது:—

(6) साधु ஸாது=நன்றாக குரும்மையாய் செயல், அடம் தவறுதல் அன்றியில்

युवाध्यायिन: யுவாத்யாயிந:=மறைக்காமலிருப்பதால்நித்தியம் புதுதாகவே அத்தியயனம் செய்கிறவன் என்று அர்த்தம். அல்லது தனக்குச் சமானவயதுள்ள வர்களுக்கு அத்தியயனம் சொல்லிவைக்கிறவர்கள். அப்படி சமானவயதுள்ளவரைக்காட்டிலும் மிகுந்த ஞானமுள்ளவரென்று அர்த்தம்.

(7) आशिष्ठ: ஆசிஷ்ட:=அதி சீக்கிரமாக கிரியைகளைச் செய்கிறவன் அல்லது சாப்பிடுவதில சமர்த்தன்; அல்லது ரோகமற்றவன் என்று அர்த்தம். அல்லது ஆசிர்வதிக்கத் தகுந்தவன் என்று அர்த்தம். எல்லாரையும் திருப்தி பண்ணிவைக்கிறவன் என்று அர்த்தம்.

बलिष्ठ: பலிஷ்ட:=மனோ பலத்தோடு கூடினவன்

दृढिष्ठ: த்ருடிஷ்ட:=சரீரபலத்தோடு, கூடினவன் அல்லது ஒரே மாதிரியான ஸ்வபாவமுள்ளவன்.

बलिष्ठ: பலிஷ்ட:=சரீரபலம், மனோபலம், முதலிய சகல பலங்களுடனும் கூடினவன் எவனோ அவனுடைய பூமி முழுவதும்

---

து:—युवा யுவா=(युञ्जातेच = युवा யுஞ்ஜாஸௌவா=யுவா) விஷ்ணுவுடன் கூடப்போகிற அதாவது விஷ்ணு சன்னிதானத்திலிருக்கிற, அல்லது, நல்ல குணங்களுடன் கூடின, அல்லது, அனுவியாக்கியானத்திற் சொல்லியபடி நித்திய தருணனானவன்.

साधुयुवा ஸாதுயுவா=விஷ்ணுவுடன் சேருகிறான் (அல்லது) துக்க சம்பந்தம், அநித்தியம் முதலிய தோஷங்களற்ற குணங்களுடன் கூடிவருகிறான்.

अध्यापक: அத்யாபக:=செவ்வையாக அத்தியயனம் செய்கிறவன். அத்தியயனத்தின் பூர்ணபலம் முக்திரூபம்.

आशिष्ठ: ஆசிஷ்ட:=(आ + शमस्य சு + ஸௌக்ய)आश: ஆச:) आति

அத்:—(8) இப்படிப்பட்ட சாதனங்களுள்ளவனுக்கு இந்த பூமியானது பிரத்தியக்ஷமான போகசாதனமாகிற தனத்தாலும் அப்பிரத்தியக்ஷமான பிரயோஜனத்தைக் கொடுக்கும் கர்மசாதனத்தாலும் பூர்ணமாயிருக்கிறது. அதாவது அவன் இராஜா, பிருதிவீபதி என்று அர்த்தம்.

(9) இவனுடைய ஆநந்தம் மனிதர்களால் அடையக்கூடிய மேன்மையான ஆநந்தமாம்.

---

வி:—1 वित्तस्यपूर्णस्यात् வித்தஸ்யபூர்ணாஸ்யாத்=தனத்தால் நிறைந்ததாக ஆகிவிடுகிறது.

இந்தப்படி குணங்களையும் விசேஷமான ஐச்வரியங்களையும் சொல்லி

(11) सएकोमानुषआनन्दः ஸஏகோமாநுஷஆநந்த:=என்கிற சுருதியால் அவனே ஆநந்தமென்று சொல்லப்படுகிறது.

ஞானத்தைவிட வேறான குணங்களும் ஐச்வரியங்களும் எப்படி ஆநந்தமாக இருக்கும் என்று சங்கிப்பாயோ, அந்த சங்கை வேண்டாம். ஏனென்றால் ஆநந்தத்தன்மை என்பது அநுகூலத்தன்மையே அது குணவிபூதிகளுக்கும் உண்டு. ஆகவே ஆநந்தமாக இருக்கலாம்.

(12) अकामहतस्य அகாமஹதஸ்ய=சம்சாரபோகத்தில் இச்சையுள்ளவனை

---

து:—शयेन + आश: அதிசயேந + ஆச:=आशिष्ठ: ஆசிஷ்ட:= நித்தியமாயும் பூர்ணமாயுமிருக்கிற சுகமுள்ளவன்.

द्रढिष्ठ: த்ருடிஷ்ட:=(अतिशयेनदृढ: அதிசயேநத்ருட:=யாதொரு விகாரமுமில்லாதவன்

वलिष्ठ: பலிஷ்ட:=விசேஷ பலமுள்ளவன்

स्यात् ஸ்யாத்=இப்படிப்பட்டவன் முக்தனானால்

तस्य தஸ்ய=இப்படிப்பட்ட ரூபம் முதலிய விசேஷணங்களுடன் கூடின முக்த சக்கிரவர்த்திக்கு திரேதாயுகத்தில் சம்சார தசையில்

इयं सर्वापृथिवी இயம் ஸர்வாப்ருதிவீ=இந்த பூமி முழுமையும்

वित्तस्यपूर्णास्यात् வித்தஸ்யபூர்ணாஸ்யாத்= தனத்தால் நிறைந்ததாயிருக்கும் அக்காலத்தில் அவனுக்கு எந்த சுகமோ

स: एक: मानुष आनन्द: ஸ: ஏக: மாநுஷ ஆநந்த:=தே தே= அது ஒரு மனுஷ்யாநந்தமாகும். அதாவது முக்தனான சக்கிறவர்த்தியின் யாதொரு ஆநந்தமுண்டோ அது பிறருடைய ஆநந்தத்தை அளவிடும் பொருட்டு பிரமாணமாகும்.

வி—வியாக்கியானம்.

அத்:—(6) மனிதன் பால்லியத்தில் விஷய குணங்களை அறியாதவனகையால், புஷ்பம், சந்தனம், ஸ்திரீ முதலான விஷயாநந்தம ஏற்படுகிறதில்லை. கிழத்தன்மை வந்த சமயத்தில் இவைகளை அறிந்திருந்தாலும், இவைகளை அனுபவிக்க சாமார்த்தியமில்லாதபடியால் இந்த விஷயாநந்தமில்லை. ஆகையால் யௌவனமே மிச்சப் படுகிறது என்கிற அபிப்பிராயத்துடன் युवास्यात् யுவாஸ்யாத்= என்று சுருதி சொல்லுகிறது.

யௌவனத்திலும், குரூபியாயும் குரோதம் முதலியவைகளுடன் கூடியும் ஒருவன் இருந்தால் அவனுக்கு துக்கமே விசேஷமாயிருக்கும். அது இல்லாதவனைக் குறிப்பிட साधुयुवा ஸாதுயுவா என்று சுருதி சொல்லுகிறது.

இப்படிப்பட்டவனுக்கும் 64 கலைகளுக்குள்ளும் 14 வித்தைகளுக்குள்ளும் ஏதாவது ஒன்று இல்லாவிட்டாலும் துக்கம் உண்டாகும். அது இல்லாமலிருக்கும் பொருட்டு अध्यापकः அத்யாபகஃ என்று சுருதி சொல்லுகிறது.

(7) आशिष्ठः ஆசிஷ்டஃ=வித்தையுள்ளவனுக்கும் காரியத்தில்மந்தப் பிரவிர்த்தியிருக்கக்கூடும். அல்லது அக்கினி மாந்தியம் முதலியவைகளில் போஜனுதிகளில் ருசியில்லாமலிருக்கக்கூடும். இப்படிப்பட்டவனுக்கு சுகம் உண்டாகமாட்டாது. ஆகையால் இவைகளை விளக்கும்பொருட்டு சுருதி சர்வகாரியங்களிலும் சீக்கிரப்பிரவிர்த்தியுள்ள ஆசிஷ்டனைக் கூறுகிறது.

---

வி:—श्रोत्रियस्य ஶ்ரோத்ரியஸ்ய=பிரம்ம நிஷ்டன் முக்தன் என்று சொல்லப்படுகிறுன் என்பதாய் வியாசாரியர் சொல்லியிருக்கிறுர். ஆனபடியால் யௌவனம், சரீரபலம், சௌந்தரியம், ஞானம், மனேபலம், ஐசுவரியம், இவைகள் எவ்விடத்தில் சேர்ந்திருக்கின்றனவோ அது ஒரு மானுஷ ஆநந்தம். இந்த ஆநந்தம் அகாமஹத சுரோத்திரியனை முக்தனுக்கும் இருக்கிறது. முக்தன் சர்வாநந்தத்தையும் அனுபவிப்பதால் அவனிடத்தில் மானுஷ ஆநந்தமும் அடங்கியிருக்கிறது. இந்த மானுஷ ஆநந்தம் நூறு கொண்டது மனுஷியகந்தர்வர்களின் ஒரு ஆநந்தம்.

இப்படியே பிந்தியும் பார்க்கவும். எவர்கள் மனுஷியர்களாகவே இருந்துகொண்டு விசேஷமான கர்மத்தினலாவது வித்தியா விசேஷத்தாலாவது, அந்தர்தானம் முதலிய சக்திகளுடன்கூடி கந்தர்வர்களாகிவிட்டவர்களோ அவர்கள் மனுஷிய கந்தர்வர்கள்,

அத்:—த்³ருடி⁴ஷ்ட:=இப்படிப்பட்டவனுக்கும் மனது திருடமாயிராத பக்ஷத்தில் யுத்தம் முதலியவைகளில் தைரியமிருக்கமாட்டாது. இப்படிப்பட்டவனையும் விலக்கும்பொருட்டு இந்த பதத்தை சுருதி கூறுகிறது.

ப³லிஷ்ட:=தைரியத்தோடு கூடியிருந்தாலும் சரீரத்தில் பலமில்லாவிட்டால் குதிரை ஏருதல் முதலியவைகளில் சமர்த்தனுகமாட்டான். இப்படிப்பட்டவனையும் நீக்கும் பொருட்டு பலிஷ்ட: என்கிற பதத்தை சுருதி பிரயோகிக்கிறது.

இவைகளால் அனுபவிக்கிறவன் இப்படிப்பட்டவனுயிருக்க வேண்டுமென்பதை சுருதி கூறிற்று.

(8) இனி போக்கிய சம்பத்தியை சுருதி கூறுகிறது. நாலு திக்குகளிலும் சமுத்திரத்தால் வளைக்கப்பட்ட பூமியானது போக்கியதிரவியங்களால் நிறைந்ததாக இருக்கிறது.

(9) எந்த அரசனுக்காவது இவையெல்லாமிருக்குமேயானல் அப்போது அவன் அனுபவிக்கும் ஆநந்தம் மாநுஷ ஆநந்தம் எனப்படும். இதற்குக் குறைந்த ஆநந்தங்களில் துக்கமிருப்பதால் அவைகள் ஆநந்தங்களாகா அரசனைத்தவிர வேறு எவனும் சர்வதிருப்தியையும் அடைந்தவனுகக் காணப்படவில்லை. ஆநந்தம் என்பது திருப்தி. ஒரு விஷயத்தைத்தேடி அதை அடையாதபக்ஷத்தில் திருப்தி உண்டாகமாட்டாது. சாதாரண மனிதர்களுக்கு இப்படிப்பட்ட அதிருப்தி சம்பவிக்கக்கூடும். அரசனுக்கோ மானிடலோகத்திலிருக்கிற சகல விஷயங்களும் சுவாதீனமாகையால் அவனுடைய திருப்திக்குத்தான் குறைவில்லை. அவன் விஷயத்தில்தான் நிர்விக்கினமான திருப்தி விளங்குகிறது,

(வி-வி:—இப்படியிருப்பதால் எவ்வளவுக்கு எவ்வளவு ஆசை குறைவாகிறதோ அவ்வளவுக்கு அவ்வளவு ஆநந்தமும் அதிகப்படுகின்றது. இந்த அபிப்பிராயத்துடன், சுருதியானது முன் சொன்ன ஆநந்தத்தைவிட அதிகமானதை நிரூபிக்கிறது.

(10) ते ये शत मानुषा आनन्दाः । தே யே ஶதம் மாநுஷா ஆநந்தா³:

(11) स एको मनुष्यगन्धर्वाणामानन्दः । ஸ ஏகோ மநுஷ்யக³ந்த⁴ர்வாணாம் ஆநந்த³: ।

(12) श्रोत्रियस्य चाकामहतस्य ॥ 4 ॥ ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய ॥ 4 ॥

பதவுரை.

அத்:—(10) शतं ஶதம்=நூறு

मानुषाः மாநுஷாஃ=மனுஷிய சம்பந்தமான

आनन्दाः ஆநந்தாஃ=ஆநந்தங்கள்

ये யே=எவைகளோ

ते தே=அவைகள்

(11) मनुष्यगन्धर्वाणां மநுஷ்யகந்தர்வாணாம்=மனுஷிய கந்தர்வர்களின்

एकः आनन्दः ஏகஃ ஆநந்தஃ=ஒரு ஆநந்தம்

सः ஸஃ=அது

(12) श्रोत्रियस्य ஶ்ரோத்ரியஸ்ய=வேதாத்தியயனம் செய்தவனுயும்

अकामहतस्य அகாமஹதஸ்ய=காமத்தால் அடிபடாதவனுயுமிருக்கிறவனுக்கு

( भवति பவதி=உண்டாகிறது)

ச—பா:—

(10) மனுஷியாநந்தத்துக்கு நூறு மடங்கு அதிகமானது மனுஷிய கந்தர்வர்களின் ஆநந்தம் மனிதர்களாக இருந்துகொண்டு விசேஷ கர்மத்தாலும் வித்தையாலும் கந்தர்வ பதவியை அடைந்தவர்கள் மனுஷிய கந்தர்வர்கள் எனப்படுகிறுர்கள். இவர்களுக்கு அந்தர்த்தானமாய் போகும் சக்தியுண்டு; இவர்கள் சூட்சும சரீர இந்திரியங்களுள்ளவர்கள். ஆகையால் அவர்களுத் தடங்கல்கள் ஸ்வல்பம். சீதோஷ்ணுதி துவந்தங்களை ஜயிப்பதில் அவர்களுக்கு சக்தியுண்டு. தங்குதடையற்ற சாதனங்களுடன் கூடின மனு

அர்:—ஷிய கந்தர்வனுக்கு சித்தம் நிர்மலமாயிருக்கும், அந்த நிர்மலத்தன்மையால் விசேஷமானசுகமும் விளங்கும். இவ்விதமாக முன்முன் இருக்கும் பூமிகையில் சித்தநைர்மல்யம் விசேஷமானதால் ஆநந்தமும் நூறு நூறு மடங்கு அதிகமாகத்தானிருக்கும்.

(12) अकामहत அகாமஹத=அதாவது காமத்தால் அடிபடாதவனை முதலில் சொல்லாததற்கு அபிப்பிராயம் என்னவெனின்:—மனிதர்களுடைய விஷய போகங்களில் இச்சையில்லாத அத்தியாபகனுக்கு மனுஷியாநந்தத்தைவிட நூறு மடங்கு அதிகமாயும் மனுஷிய கந்தர்வனுடைய ஆநந்தத்துக்குச் சமானமாயுமிருக்கிற ஆநந்தம் உண்டாகிறது என்பதைத் தெரிவிக்கவேண்டு மென்பதாம். (முதலில் சொல்லியிருந்தால் இகவகளை சொல்லவேயிடமில்லை)

साधुयुवाअध्यापकः ஸாது-யுவா அத்யாபக:=என்கிற பதங்கள் சுரோத்திரியனையும் பாபமற்றதன்மையையும் கூறுகின்றன இவைகள் எங்கும் சாதாரணம். (இவைகளை எங்கும் சேர்த்துக் கொள்ளவும்) காமத்தால் அடிபடாத தன்மையானது விஷயத்தின் மேன்மையாலும் தாழ்மையாலும் சுகத்தின் மேன்மைக்கும் தாழ்மைக்கும் காரணமாக ஏற்படுகிறது. ஆகையால் அகாமஹதத்தை கூறுகிறது. காமமற்றவனுக்குத் தான் நூறு மடங்கு சுகம் கிடைக்குமானதால் ப்ரமாநந்தப் பிராப்திக்கு இது சாதகமாகச் சொல்லப்பட்டது.

## வி—வியாக்கியானம்.

அரசனுடைய ஆநந்தத்தைவிட நூறு மடங்கு அதிகம் மனுஷிய கந்தர்வனுடைய ஆநந்தம். மனிதர்களாயிருந்துகொண்டு வித்தியாகர்ம விசேஷானுஷ்டானத்தால் கந்தர்வர்களாக ஆனவர்கள் மனுஷிய கந்தர்வர்கள் எனப்படுகிறார்கள். அவர்கள் நல்ல வாசனையுள்ளவர்கள், காம ரூபிகள், அந்தர்தான சக்தியுள்ளவர்கள், நாட்டியம் கானம் முதலியவைகளில் குசலர்கள். ஆகையால் மனுஷியர்களுக்குப்போல்அவர்களுக்குத்தடங்கல் ஏற்படமாட்டாது. அப்படி எப்போதாவது ஏற்பட்டாலும் அதை பரிஹரிப்பதற்கு சாதனங்களுண்டு. அதினாலும் சித்தப்பிரசாதத்தாலும் விசேஷ சுகம் அவர்களுக்குண்டு. அரசன் மனுஷியனாக இருப்பதால் அவனுடைய ஆநந்தத்தை நாம் அபேக்ஷிக்க முடியுமானதால் அவன் விஷயத்தில் சுரோத்திரிய பதம் உபயோகப்படுத்தப்படவில்லை. மனுஷிய கந்தர்வர்களோ அந்தரிக்ஷலோகவாசிகள். அவர்களுடைய ஆநந்தம் மனு

அர்:—ஷிய லோகத்தில் தெரியமாட்டாது. அதைதெரிவிக்கும் பொருட்டு ஶ்ரோத்ரிய ஶ்ரோத்ரிய பதம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. வேதாத்தியயனம் செய்தவன் சுரோத்திரியன். சகல லோகங்களிலுமிருக்கிற ஆநந்தத்துக்குக் காரணமான விஷய போகம் பிரயாசத்தால் கிடைக்கக்கூடியதாகையாலும், இதுவற்றம் குறைவுள்ளதாக இருப்பதாகவும் அநித்தியமாக இருப்பதாகவும் சாஸ்திரத்தால் நிச்சயித்து அவைகளில் காமமற்றவனுக இவன் ஆகிறுன். அவன் மனுஷிய கந்தர்வலோகங்களிலுள்ள விஷயங்களை அனுபவிப்பதினுல் எவ்வளவு ஆநந்தம் கிடைக்குமோ, அவ்வளவு ஆநந்தம் இச்சைபற்ற, வேதத்தை அறிந்தவனுக்கும் கிடைக்கிறது.

சுரோத்திரியனுயிராத அதாவது கந்தர்வலோகத்தை அறியாதவனுக்கு ஒருக்கால் அதை அறிந்தபிறகு அதின் சுகத்தில் ஆசை உண்டாகலாம். சுரோத்திரியனுக்கு இப்போதே அந்த லோகத்தின் தோஷம் தெரிந்திருப்பதால் ஒருக்காலும் ஆசை உண்டாகமாட்டாது.

ஆக்ஷேபம்:—கந்தர்வனுக்கு நாட்டியம் கானம் முதலியவைகளில் ஒருக்கால் விசேஷமான சந்தோஷம் உண்டாகக்கூடும். காமமற்ற சுரோத்திரியனுக்கு இப்படிப்பட்ட சந்தோஷம் உண்டாகமாட்டாதே. ஆகவே கந்தர்வாநந்தம்போலானது இவனுடைய ஆநந்தம் என்று எப்படிச் சொல்லலாம்.

உத்தரம்:—கந்தர்வனுக்கு சித்த விகாரத்தாலுண்டாகுமாநந்தம் க்ஷணிகம், அது முக்கியாநந்தமன்று. விஷயத்தில் இச்சை நிவிர்த்தியானவுடன் ஹர்ஷாதி விகாரங்களும் நிவிர்த்தியாய் விடுகின்றன. பிறகு திருப்தியாகிற முக்கியாநந்தமே இருக்கிறது. காமமற்ற சுரோத்திரியனுடைய திருப்தியாகிற ஆநந்தமே கந்தர்வனுடைய ஆநந்தத்துக்குச் சமானமானது.

இந்த இரண்டுவித ஆநந்த விஷயங்களிலும் எப்படி சித்தத்தின் சாந்திக்குத் தக்கபடி திருப்தியாகிற ஆநந்தமுண்டாகிறதோ அப்படியே இனிமேல் சொல்லும் விஷயங்களிலும் அறியத்தக்கது

## 3-வது வித ஆநந்தம்,

(13) ते ये शतं मनुष्यगन्धर्वाणामानन्दाः । தெ யெ ஶதம் மநுஷ்யகந்தர்வாணாமாநந்தா: ।

(14) स एको देव गन्धर्वाणामानन्दः । ஸ ஏகொ தெவ கந்தர்வாணாமாநந்த: ।

அத்:—(15) श्रोत्रियस्य चाकामहतस्य ॥5॥ ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹ தஸ்ய ॥ 5 ॥

பதவுரை:—முன்போலவே.

தேவகந்தர்வர்கள் ஜனனம்முதல் அந்தப்படியே இருக்கிறவர்கள்

4-வது வித ஆநந்தம்.

(16) ते ये शतं देवगन्धर्वाणा मानन्दाः । தே யே ஶதம் தேவகந்தர்வாணா மாநந்தா: ।

(17) स एको पितृणां चिरलोक लोकानामानन्दः । ஸ ஏகோ பித்ரூணாம் சிரலோகலோகாநாமாநந்த: ।

(18) श्रोत्रियस्य चाकामहतस्य ॥ 6॥ ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய ॥ 6 ॥

---

வி:—(14) தேவகந்தர்வர்கள்:—அந்தரிக்ஷ லோகத்திலிருக்கிற கந்தர்வர்கள்

---

து:—ते தே=பிரசித்தங்களான

येशतं मानुषआनन्दा: யேஶதம் மாநுஷா ஆநந்தா:=மேற் சொல்லியபடி மனுஷிய ஆநந்தங்களின் நூறு யாதொன்று உண்டோ (13) स मनुष्य गन्धर्वाणां ஸ மநுஷ்யகந்தர்வாணாம்=அது முக்தியடைந்த மனுஷிய கந்தர்வனுடைய ஒரு ஆநந்தம்.

श्रोत्रियस्य अकामहतस्य ஶ்ரோத்ரியஸ்ய அகாமஹதஸ்ய=இப்பதங்கள் மனுஷிய கந்தர்வனுக்கு விசேஷணங்கள். இப்படியே மேன்மேலும் அறியத்தக்கது. பிறர்கள் இப்பதங்கள் அமுக்தர்களைக் கூறுவதாகச் சொல்லுகிறார்கள். இது யுக்தமன்று. முக்தர்களைத்தான் இவைகள் கூறுகின்றன. பன்மைப் பதங்களை சம்சாரி பரமாயும் ஒருமைப் பதங்களை முக்தபரமாயும் அர்த்தம் செய்ய வேண்டியது.

சுருதி பலத்தை சம்பூர்ணமாய் அடைந்தவன் சுரோத்திரியன். இச்சை நிறைவேறாததினால் யாதொரு உபத்திரவ முண்டாகிறதோ அது அற்றவன் அகாமஹதன்.

(14) देवगन्धर्व தேவகந்தர்வ=எவர்கள் சாக்ஷாத்தாய் ஈசுவரனால் பிரேரணை செய்யப்படுகிறார்களோ அப்படிப்பட்ட தேவ சேவகர்கள் தேவகந்தர்வர்களெனப்படுகிறார்கள். மனுஷிய கந்தர்வர்களுடைய ஆநந்தத்தில் நூறு மடங்குள்ளவர்கள். இப்படியே இனியும் முன்னிருப்பதை விட பின்வருவது நூறு மடங்கு அதிகம் என்று தெரிந்துகொள்ளத் தக்கது.

பதவுரை.

அத்.—चिरलोक लोकानां சிரலோகலோகாநாம்=வெகுகாலம் ஸ்திரமாயிருக்கிற

पितॄणां பித்ரூணாம்=பிதர் தேவதைகளின் மற்ற பதங்களுக்கு முன்போலவே அர்த்தம். பிதுர்க்களுடைய லோகம் வெகு காலமிருப்பதால் அவர்கள் சிரலோகலோகர்கள் எனப்படுகிறார்கள்.

5-வது வித ஆநந்தம்.

(19) ते ये शतं पितॄणां चिरलोकलोकानामानन्दाः। தே யே ஶதம் பித்ரூணாம் சிரலோகலோகாநாமாநந்தா: ।

(20) स एक आजानजानां देवानामानन्दः । ஸ ஏக ஆஜாநஜாநாம் தேவாநாமாநந்த: ।

(21) श्रोत्रियस्य चाकामहतस्य ॥ 7 ॥ ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய ॥ 7 ॥

பதவுரை.

आजानजानां ஆஜாநஜாநாம்=தேவலோகத்தில் பிறந்த

देवानां தேவாநாம்=தேவதைகளின். மற்ற பதங்களுக்கும் அர்த்தம் முன்போலவே.

ச-பா அஜானமென்பது தேவலோகம் அவ்விடத்தில் பிறந்தவர்கள் ஆஜானஜர்கள், ஸ்மிருதியிற் சொல்லிய கர்மங்களை விசேஷமாய்ச் செய்ததினால் தேவலோகங்களில் பிறந்தவர்கள்.

வி-வி:—பிதிர் லோகத்துக்கு மேற்பட்ட ஒரு தேவலோக விசேஷம் அஜான மெனப்படும். அவ்விடத்தி லுண்டானவர்கள் ஆஜானர்கள்.

---

வி:—(17) சிரலோக:—வெகு காலம் ஸ்திரமான லோகத்தை வர்சஸ்தலமாக உடையவர்கள், பிதுர்க்கள்.

(20) அஜாநஜ:—தேவலோகத்தில் பிறந்தவர்கள். ஸ்மிருதியிற் சொல்லிய கர்மானுஷ்டானத்தால் தேவஸ்தானத்தில் பிறந்தவர்கள்

---

ஆ:—(17) चिरलोक சிரலோக பிதிருக்களுடைய லோகம் வெகு கால மிருக்கிற படியால், அந்த லோகத்திலிருக்கிறவர்கள் எனப்படுகிறார்கள்.

(20) अजानदेवा: அஜாநதேவா: தேவகுலத்தில் பிறந்தும் [illegible] பெயர்களையுடையாதவர்கள்:

## 6-வது வித ஆநந்தம்.

அத்:—(22) ते ये शतमाजानजानां देवानामानन्दाः। தே யே ஶதமாஜாநஜாநாம் தேவாநாமாநந்தா:।

(23) स एकः कर्मदेवानां देवानामानन्दः। ஸ ஏக: கர்மதேவாநாம் தேவாநாமாநந்த:।

(24) ये कर्मणा देवानपियन्ति। யே கர்மணா தேவாநபியந்தி।

(25) श्रोत्रियस्य चाकामहतस्य ॥ 8 ॥ ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய ॥ 8 ॥

பதவுரை:—
(24) य யே=எவர்கள்
कर्मणा கர்மணா=கர்மங்களால்
देवान् தேவாந்=தேவதைகளை
अपियन्ति அபியந்தி=அடைகிறார்களோ மற்ற பதங்களுக்கு முன் போலவே அர்த்தம்.

ச—பா:—அக்கினி ஹோத்திரம் முதலிய கேவல வைதிக கர்மங்களால் தேவதைகளை அடைந்தவர்கள் கர்ம தேவதைகள்.

(வி-வி:—அஜான தேவதைகளின் போகத்தை விட உத்தமமான போகத்தை அடைய எவர்கள் வைதிக கர்மத்தை விசேஷமாக அனுஷ்டித்து தேவதைகளை அடைகிறார்களோ அவர்கள் கர்மதேவ என்கிற தேவதைகள்.

## 7-வது வித ஆநந்தம்.

(26) ते ये शतं कर्मदेवानां देवानामानन्दाः।

(26) தே யே ஶதம் கர்மதேவாநாம் தேவாநாமாநந்தா:।

(27) स एको देवानामानन्दः। ஸ ஏகோ தேவாநாமாநந்த:।

(25) श्रोत्रियस्य चाकामहतस्य ॥ 9 ॥ ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய ॥ 9 ॥

---

வி:—(23) கர்மதேவ:—அக்கினி ஹோத்திரம் முதலான கர்மாவால் இந்திரன் முதலான தேவர்களுடைய சாயுஜ்ஜியத்தை அடைந்தவர்கள்.

து:—(23) कर्मदेव கர்மதேவ:—யஞ்ஞம் முதலிய கர்மங்களில் சிருஷ்டியில் எவர்களுக்கு தேவபதவி கிடைத்ததோ அவர்கள் கர்ம தேவர்கள்.

அத்:—பதவுரை:—देवानां தேவாநாம்= 33 ஹவிசை புஜிக்கிறவர்களுடைய.

8-வது வித ஆநந்தம்.

(29) ते ये शतं देवानामानन्दाः । தே யே ஶதம் தேவாநாமாநந்தா:

(30) स एक इन्द्रस्य ऽऽनन्दः । ஸ ஏக இந்த்ரஸ்யாऽऽநந்த: ।

(31) श्रोत्रियस्य चाकामहतस्य ॥ 10 ॥ ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய ॥ 10 ॥

பதவுரை:— முன்போலவே இந்திரன் தேவதைகளின் ஸ்வாமி.

9-வது வித ஆநந்தம்.

(32) ते ये शतमिन्द्रस्यानन्दाः । தே யே ஶதமிந்த்ரஸ்யாநந்தா:

(33) स एको बृहस्पतेरानन्दः । ஸ ஏகோ ப்ருஹஸ்பதேராநந்த: ।

(34) श्रोत्रियस्य चाकामहतस्य ॥ 11 ॥ ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய ॥ 12 ॥

பிரஹஸ்பதி இந்திரனுடைய குரு.

பதவுரை:—முன் போலவே

---

வி:—(27) தேவ:—வஸு ருத்திரன் முதலான 33 ஹவிஸுக்களை புஜிக்கிறவர்கள். அதாவது 8 வசுக்கள், 11 ருத்திரர்கள், 12 ஆதித்தியர்கள், இந்திரன், பிரஜாபதி ஆக 33 தேவர்கள்.

(30) इन्द्रस्य இந்த்ரஸ்ய=தேவராஜா.

(33) बृहस्पतेः ப்ருஹஸ்பதே:=தேவகுரு

(36) प्रजापतेः ப்ரஜாபதே:—நான்கு முகத்தோடு கூடினபிரம்மா; தக்ஷர் முதலான பிரஜாபதிகள் அல்ல. ஏனெனின், பிரஜாபதி ஒருமையாயிருக்கிறது.

---

து:—देवानां தேவாநாம்=சிருஷ்டியின் ஆரம்பத்திலேயே தேவபதவியை அடைந்து தத்துவாபிமானியாக இருக்கும் தேவர்கள்.

து:—(30) इन्द्रस्य இந்த்ரஸ்ய=(इदं + द्रावयतीति =इन्द्रः இதம்த்ராவயதீதி=இந்த்ர:) தக்ஷப்பிரஜாபதியின்

(33) बृहस्पतिः ப்ருஹஸ்பதி:—(बृहत्यासौ पतिश्च ப்ருஹத்யாஸௌ பதிஶ்ச=बृहस्पतिः ப்ருஹஸ்பதி:=இந்திரன்

(36) प्रजापति ப்ரஜாபதி=பிரஜோத்பத்தியை நியமனம் செய்கிற ருத்திரன்.

## 10-வது வித ஆநந்தம்.

அர்:—(35) ते ये शतं बृहस्पतेरानन्दाः । தெ யெ ஶதம் ப்³ருஹஸ்பதெ ராநந்தா³:।

(36) स एकः प्रजापते रानन्दः । ஸ ஏகொ ப்ரஜாபதெ ராநந்த³:।

(37) श्रोत्रियस्य चाकामहतस्य ॥ 12 ॥ ஶ்ரொத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய ॥ 13 ॥

பிரஜாபதி:—விராட்டு புருஷன். பதவுரை முன்போலவே.
ச:—பா:—பிரஜாபதி:—3

## 11-வது வித ஆநந்தம்.

(38) ते ये शतं प्रजापतेरानन्दाः । தெ யெ ஶதம் ப்ரஜாபதெ ராநந்தா³:।

(39) स एको ब्रह्मण आनन्दः । ஸ ஏகொ ப்³ரஹ்மண ஆநந்த³:।

(40) श्रोत्रियस्य चाकामहतस्य ॥ 13 ॥ ஶ்ரொத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய ॥ 13 ॥

பதவுரை.

ब्रह्मणः ப்³ரஹ்மண:=ஹிரண்யகர்ப்ப பிரம்மத்தின். மற்ற பதங்கள் முன் போலவே.

ச-பா:—எந்த இடத்தில் இந்த ஆநந்த பேதங்கள் ஒன்றாய் விடுகின்றனவோ, அதினாலுண்டாகும் தர்மமும், அதின் விஷய

---

(39) வி:—ब्रह्मणः ப்³ரஹ்மண:=பிரம்மத்தினுடைய. இவ்விடத்தில் பிரம்மசப்தமானது பிரம்ம விதாப்நோதி பரம் என்று பிரஸ்தாபிக்கப்பட்ட பிரம்மத்தைக் கூறுகிறது.

பிரம்மத்தின் ஆநந்தமானது தேயேசதம் என்கிற வாக்கியத்தால் கணக்கில் அகப்பட்டதென்று சங்கிக்கலாகாது. ஏனெனின், தேயேசதம் என்கிற வாக்கியத்தின் கருத்து அப்படியல்ல. அரைக்ஷணத்தில்

---

து:—(39) ब्रह्मणः ப்³ரஹ்மண:—சதுர்முக பிரம்மா.

இவ்விடத்தில் ஆநந்தத்தின் அதிகத்தையும் குறைவையும் சொல்லியதைக் கொண்டு ஞானபக்தி பலம் முதலியவைகளையும் அறிய வேண்டியது.

அத்:—மான ஞானமும், அதிசயமான காமமற்ற தன்மையும் எவ்விடத்திலிருக்கின்றனவோ எவ்விடத்தில் இந்த ஹிரண்ய கர்ப்பனிருக்கிறானோ, அவனுடையது இந்த ஆநந்தம். இந்த பிரம்மா 3 லோகங்களையும் சரீரமாயுடையவன். சமஷ்டி வியஷ்டி சம்சார மண்டலத்தில் வியாபிக்கிறவன். சுரோத்திரியனையும், பாபமற்றவனையும், காமமற்றவனையும், இருக்கிறவன் ஆநந்தத்தை பிரத்தியக்ஷமாய் அடைகிறான். ஆகையால் இம்மூன்றும் சாதனங்கள் என்று தெரியவருகிறது. இவைகளுக்குள் சுரோத்திரியனா யிருப்பதும் பாபமற்ற தன்மையும் சாதாரணம், காமமற்றிருப்பதுமிகவும் விசேஷமான சாதனம் என்று தெரியவருகிறது. காமமற்ற சுரோத்திரியனால் பிரத்தியக்ஷமாய் அறியக்கூடிய ஹிரணிய கர்ப்பாநந்தம் பரதாநந்தத்தின் ஸ்வல்பபாகம்

**एतस्यैवाऽऽनन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति**

ஏதஸ்யைவாऽऽநந்தஸ்யாந்யாநி பூதாநி மாத்ராமுபஜீவந்தி ।

அதாவது:—இந்த ஆநந்தத்தின் ஸ்வல்ப பாகத்தைக் கொண்டு இதர பூதங்கள் ஜீவித்துக் கொண்டிருக்கின்றனவென்பதாய் வேறு (த-வு) சுருதி சொல்லுகிறது.

---

வி:—வெகு யோஜனை தூரம் போகிற சூரியனைக் குறித்து அம்புபோல் போகிறான் என்று சொல்லுவதானது மெள்ள போகவில்லை என்கிற கருத்துடனே தவிர அம்புக்குச் சமானம் என்கிறது கருத்தல்ல. அப்படி தேயேசதம் என்கிற வாக்கியத்துக்கும் சதுர்முக பிரம்மாவின் ஆநந்தத்தைவிட அதிக ஆநந்தமுள்ளதென்பதே கருத்தே யொழிய கணக்கில் அகப்பட்டதென்பது கருத்தல்ல.

இப்படிப்பட்ட ஆநந்தமயன் **योवेदनिहितंगुहायां** யோவேத நிஹிதம்குஹாயாம் என்கிற வாக்கியத்தால் ஹிருதய குஹையில்வாஸம் பண்ணுகிறதாக உபாசிக்கத் தருந்தவனென்று சொல்லப்பட்டான், அவன் எப்படிப்பட்ட சரீரத்தை உடையவன், என்ன தேவதை என்கிற கேள்விகளுக்கு உத்தரம் கூறப்படுகிறது.

**सः यः चायंपुरुषे यश्चासावादित्ये एषोऽन्तरादित्ये ।**

ஸயஶ்சாயம் யஶ்சாஸௌ ஆதித்யே ஏஷோऽந்தராதித்யே ।

எவன் ஆதித்திய மண்டலத்தில் ஸ்வர்ணமயனான புருஷனைக் காணப்படுகிறானோ என்கிற வாக்கியத்தில் சொல்லியபடி ஆதித்தியமண்டல மத்தியில் இருக்கிறவனாகவும் திவ்விய சரீரத்தோடு கூடினவனாகவும் இருக்கிற புண்டரீகாக்ஷன் எவனோ அவனே ஹிருதயகுஹை

ப்ரமாண வாக்கியம்:—

तम आख्यमनुत्थानं विदुषां नियमेनतु ।
स्यादेवमोक्षस्तत्रापि ह्यानन्दस्यविचित्रता ।
यस्तुसाधुगुणैर्युक्त स्तस्यैवाप्यखिलामही ।
त्रेतायुगे चक्रवर्ती यदामुक्तस्तुसंसृतेः ।
अधीतिफलपूर्णत्वा दाध्यायकइतीरितः ॥
स एव विष्णुनायुक्तो गच्छतीतियुवास्मृतः ।
एकानन्दस्वरूपो सोमानुषोमुक्तइष्यते ।
तस्माच्छतगुणानंदा गन्धर्वामानुषात्मकाः ।
मुक्ताःश्रुतिफलंप्राप्तास्ततः कामाहतास्तथा ।
तेभ्यःशतगुणानन्दा देवप्रेष्यास्तुमुख्यतः ।
एतेहि देवगंधर्वामुक्तेभ्यस्तेभ्य एवच ।
शताधिकाहिपितरस्तेभ्य आजानदेवताः ।
अनाख्याता देवतास्तु जातादेवकुलेचयाः ।
अजानदेवतास्ताहि ताभ्योग्र्याःकर्मदेवताः ।
बाल्याद्याअंतराप्राप्त देवताःकर्मदेवताः ।
ताभ्यश्चतात्विकादेवाः सृष्ट्यादौदेवतांगताः ।
तेभ्योदक्षश्चेंद्रनामासहेन्द्रं रावयप्तुरा ।
तस्माद्बृहस्पतिर्नाम महेन्द्रत्वात्पुरंदरः ।
तस्मात्प्रजापतिर्मुक्तो रुद्रःप्रजनतेशिता ।
तस्माद्ब्रह्मा शतगुणाः क्रमेणोक्तेनतेखिलाः ।
अथवासहस्रगुणिताअनंत गुणितास्तथा ।
परिमाणेशतगुणे ष्यानंदस्फुटतावशात् ।
यथादीपाच्छतगुणाप्य ग्निज्वालानदीपवत् ।
स्फुटीभवेद्यथैवाग्नि र्बहुलैःपिनसूर्यवत् ।
यथैवसूर्याद्द्विगुणश्चंद्रोनैवस्फुटीभवेत् ।
उत्तरेषामुत्तरेषां गुणाएवमातस्फुटाः ।
प्रतिबिंबायतःपूर्वे ब्रह्मांतानानरादयः ।
अतोस्पष्टस्वरूपास्ते स्फुटरूपास्तथोत्तराः । (यजुःसंहिता)

தம ஆக்யமநுத்தாநம் விதுஷாம் நியமேநது ।
ஸ்யாதேவமோக்ஷஸ்தத்ராபி ஹ்யாநந்தஸ்யவிசித்ரதா ।
யஸ்துஸாதுகுணைர்யுக்த ஸ்தஸ்யைவாப்யகிலாமஹீ

வி-வி:—சாம்சாரிக ஆநந்தம் ஹிரண்யகர்ப்பாநந்தத்தில் முடிவு பெருகிறது. மேற்சொல்லியபடி சுரோத்திரியனிடத்தில் சகல ஆநந்தங்களும் ஏற்படுவதால்

**सोऽश्नुते सर्वान्कामान्सह**

𑌸𑍋𑌽𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌕𑌾𑌮𑌾𑌨𑍍𑌸𑌹

என்கிற முதலாவது அநுவாக்கியத்தின் வசனத்துக்கு அர்த்தம் வெளியாக்கப் பட்டதாக ஆகிறது.

பிரம்மா நந்தம்.

(வி-வி:—இவ்விதமாக ப்ரமாநந்தத்துக்குத் துவாரம்போலிருக்கிற சம்சாரிக ஆநந்தத்தின் ஆதிக்கியும் சுருதியாலும், சுரோத்திரியனுடைய பிரத்தியக்ஷானுபவத்தாலும் காட்டப்பட்டது. இனி போதிக்கவேண்டிய பிரம்மாநந்தத்தைக் காட்டுகிருர்.

---

து:—[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible]
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible]
[illegible]
[illegible] ।
[illegible] ।
[illegible] ॥

(𑌯𑌜𑍁𑌃𑌸𑌂𑌹𑌿𑌤𑌾)

அத்:—(41) स य श्चायं पुरुषे । ஸ யஶ்சாயம் புருஷே ।

(42) यश्चासावादित्ये । யஶ்சாஸாவாதித்யே ।

(43) सएकः ॥ 14 ॥ ஸ ஏக: ॥ 14 ॥

---

வி:—யில் வசிக்கிறவனுகவும் விஞ்ஞானமயகோசத்தைவிட ஆந்தரனுகவும் இருக்கிறன். ஆகவே செந்தாமரைப் பூபோன்ற கண் முதலிய அங்கங்களோடு கூடின நாராயணன் என்று அர்த்தம்.

ஹிருதய குஹையிலிருக்கிற நாராயணனை அப்படிப்பட்ட சரீரத்தோடு கூடினவரென்று தியானம் செய்யவேண்டுமென்பது முக்கிய கருத்து.

இவ்விடத்தில் सच्चत्यच्चाभवत् ஸச்சத்யச்சாபவத்= சத்தாகவும் தியத்தாகவும் ஆய்விட்டது என்கிற சுருதியினல் நாராயணனை சிதசித் சரீரகனுக அனுசந்தானம் (தியானம்) பண்ணவேண்டுமென்று சொல்லப்பட்டது. சத்தியம் ஞானம் என்கிற வாக்கியத்தால் நாராயணனுடைய ஸ்வரூபத்தை தியானம் பண்ணவேண்டுமென்றும் சொல்லப்பட்டது. அந்த ஸ்வரூப தியானமானது ஆதித்தியமண்டலத்தின் மத்தியில் இருக்கிறவராயும், புண்டரீகாக்ஷகராயும் இருக்கிறர் என்கிற தியானமாக ஆகிவிட்டது.

जीवमुख्यप्राणलिंगान्नेतिचेन्नोपासात्रैविध्यादाश्रितत्वादिहतद्योगात् ।

ஜீவமுக்யப்ராணலிங்காந்நேதிசேந்நோபாஸாத்ரைவித்யாதாஶ்ரிதத்வாதிஹதத்யோகாத்

என்கிற பிரம்மசூத்திரத்தில் பாஷ்யகாரர் இந்த மூன்று விதமான பிரம்மத்தியானமானது வேறு பிரகரணங்களிலும் ஒப்புக்கொள்ளப்பட்டது என்றும்,

சத்தியம் ஞானம் அநந்தம் பிரம்மம் என்கிற இடங்களில் ஸ்வரூப தியானத்தையும்,

தத்சிர்ஷ்ட்வாததேவ அனுப்பிராவிசத் ததனுபர்விச்யஸச்சதியச்சாபவத் என்கிற இடங்களில் போக்தாவை சரீரமாக உடையவராகவும் போக்கியங்கள் போகத்தின் உபகரணங்கள் இவைகளை சரீரமாக உடையவராகவும்இருக்கிறர் என்கிற தியானத்தையும், சொல்லியிருக்கிறர்.

இந்தப்படி இவரை அடைவதில் உபாயத்தைச் சொல்லி उताविद्वानमुंलोकप्रेत्य உதாவித்வாநமும் லோகம் ப்ரேத்ய=முதலிய வாக்கியத்தினல் கூறப்பட்ட பிரச்னங்களுக்கு உத்தரம் கூறுகிறர் இவ்விடத்தில்

அந் :—பதவுரை.—

(38) पुरुषे புருஷே=புருஷனிடத்தில்

अयं அயம்=இந்த (ஆநந்த ஸ்வரூப பரமாத்மா)

यः யஃ=எவனோ

सः च ஸஃ ச=அவனும்

(39) आदित्ये ஆதித்யே=சூரியனிடத்தில்

असौ அஸௌ=இவன்

यः च யஃ ச=எவனோ

(40) सः ஸஃ=அவன்

एकः ஏகஃ=ஒருவனே

ச-பா:—

சமுத்திரத்தின் ஜலம் போல் ஆநந்தம் பரவியும் ஒன்றாகியும் விடுகிறது. இந்த பரமாநந்தம் ஸ்வாபாவிகம், அத்வைதமாயிருப்பதால் (வேறு ஒன்றினாலும் ஏற்படாததினால்) ஆநந்தம், ஆநந்தத்தை அனுபவிக்கிறவன் என்கிற பேதமே யில்லை, இந்த மிமாம்சை (விசாரத்தின் பலம்) உபசம்ஹாரம் பண்ணப் படுகின்றது.

---

து:—(41)அ—கை:— இவ்விதமாக பிரம்மத்தின் லக்ஷணம் எந்த வாக்கியத்தில் சொல்லப்பட்டதோ அந்த வாக்கியத்திலுள்ளசத்திய, ஞான, அநந்த என்கிற பதங்களின் அர்த்தம் आत्मान आकाशः ஆத்மன ஆகாசஃ=முதல் ஆறு பிரகரணங்களில் விவரிக்கப்பட்டது.

योवेदनिहितंगुहायां யோவேத நிஹிதம் குஹாயாம்=என்கிற இடத்தில் எதை அறியவேண்டியதாகச் சொல்லப்பட்டிருந்ததோ அதை असत्ब्रह्म அஸத்ப்ரஹ்ம=என்கிற சுலோகத்தில் ஜீவனுடைய ஹிருதயத்திலிருக்கிற பரமேசுவரனை விட ஜீவன் வேறு என்பதாய்ச் சொல்லப்பட்டது.

பிறகு அனுப்ரசனங்களால் ஞானியின் சர்வ காமயோகம், सोऽश्नुते ஸோ஽ச்நுதே=என்பதினால் சொல்லப்பட்டது.

सैषानंदस्य ஸைஷாநந்தஸ்ய=என்பதினால் எல்லா ஞானிகளுக்கும் சுகம் ஒரே மாதிரியா, அல்லது அதில் தாரதம்மிய மிருக்கிறதா என்கிற கேள்விக்கு உத்தரம் கூறப்பட்டது.

उदरंअंतरंकुरुत உதரமந்தரம் குருத=என்பதினால் பிரம்ம ஞானமாவது பகவானுடைய ரூபம் முதலியவைகளில் பேதத்தைப் பார்ப்பதினால் ஏற்படுகிறது என்று சொல்லி யிருந்தது. ஜீவனைவிட பிரம்மம் வேறு என்று அறிவதினால்தான் புருஷார்த்தம் சித்திக்கும். வேறு விதமாகச்சித்திக்கமாட்டா தென்பதாய் सयश्च ஸயச்ச என்பதினால் இப்போது சொல்லுகிறார்.

எவன் ஹிருதயாகாசத்தில் இருந்து, ஆகாசாதி காரியங்களை சிருஷ்டித்து, அன்னமயம் வரையி லுள்ளவைகளை பிரவேசித் தானோ அவனே ஸ: ய: ஸ: ய: = என்பதால் கூறப்படுகிறான். இவன் யாரெனின் புருஷனிடத்திலும் ஆதித்தியனிடத்திலும் சுரோத்திரிய னுக்குப் பிரத்தியக்ஷமாகிற பரமாநந்த மிருக்கிறதோ எதினுடைய ஸ்வல்ப பாகத்தால் பிரம்மா முதலான பிராணிகள் ஜீவிக்கிறார்க ளோ, यश्चासौ आदित्ये யஶ்சாஸாவாதித்யே என்பதால் எவன் கூறப் படுகிறானோ அவன் வெவ்வேறு இடங்களி லிருக்கிற கடாகாச மும் மஹாகாசமும் ஒன்றா யிருப்பது போல் ஒருவனே.

ஆக்ஷேபம்:—இந்த பரமாத்துமாவை புருஷனிடத்திலிருக்கிற தாகச் சொல்லி யிருக்கிறது. இது சரியன்று. இன்ன விடத்திலி லிருக்கிறதாகக் குறிப்பிட்டுச் சொல்லவில்லை. வேறு சுருதியில் வல துகண்ணில் இருக்கிறதாகச் சொல்லியதே சரியானது. இதுவே பிரசித்தம்.

உத்தரம்:—இந்த ஆக்ஷேபம் யுக்த மன்று. பிரகிருத பிரகர ணம் பரமாத்மாவை கூறுகிறது (ஆ:—அத்தியாத்ம அதிதைவத உபாசனை உத்தேசிக்கப் பட்டிருந்தால் ஆக்ஷேபம் சங்கதமாயிருக் கும். ஆனால் அது உத்தேசிக்கப்படவில்லை). பிரகாணம் பரமாத் மாவைக் கூறுகிறதென்பது अदृश्ये அத்ருஶ்யே=(பார்க்கப்படாதது) अनात्म्ये அநாத்ம்யே ( ) भीषा ऽस्माद्वातः पवते பீஷாऽஸ்மாத்வாத: பவதே (இவனுடைய பயத்தால் வாயு வீசுகிறான்) सैषाऽऽनन्द स्य मीमांसा ஸைஷாऽऽநந்தஸ்ய மீமாம்ஸா (இதுவே ஆநந்தத்தின் விசாரம்) என்கிற சுருதிவசனங்களால் தெரியவருகிறது. பிரகிருத மா யிராததைப்பற்றிச்சொல்லுவதும் யுக்தமன்று. பரமாத்ம ஞான ந் தான் இவ்விடத்தில் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் பரமாத்மா सएकः ஸ ஏக: என்பதால் கூறப்பட்டிருக்கிறார்.

து:—(41)स: ஸ:=रसं ह्येवायं लब्ध्वानंदी भवति ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி=என்கிற இடத்தில் எவருடைய பிரசாதத்தால் பிரம்மாதிக ளுக்கு ஸ்வரூபாநந்தம் கிடைக்கிறதோ அப்படிப்பட்ட பிரசித்தமான

यः च अयं ய: ச அயம்=யாதொருவன்

पुरुषे புருஷே=சகலமான மனுஷிய ஜீவர்களுடைய சமூக த்தில் இருக்கிறானோ

(42) यःचासौ आदित्ये ய: சாஸாவாதித்யே=ஆதித்தியன் முத லான தேவதைகளில் எவனிருக்கிறானோ

(43) स एकः ஸ ஏக: = அவன் ஸ்வாதந்திரியம் முதலிய சகல குணங்களுடன் கூடினவன், சர்வோத்தமன்.

அத்:—ஆக்ஷேபம்:—ஆநந்தத்தின் விசாரம் பிரகிருதம். அதன் பலம் உபசம்ஹரிக்கத் தக்கது.

உத்தரம்:—அபின்னமாயும், ஸ்வாபாவிகமாயு மிருக்கிற ஆநந்தம் பரமாத்மாவே; விஷய விஷயீ (ஜீவன்) சம்பந்தத்தால் ஏற்படுவதன்று. புருஷனிடத்திலும் ஆதித்தியனிடத்திலும் இருக்கிறவன் ஒருவனே என்று சொன்னதும் அனுபவமான யுக்தியே. ஏனெனின் பல இடங்களில் இருகிக்கிறுர் என்கிற ரூபத்தை அது நீக்கிவிடுகின்றது.

ஆக்ஷேபம்:—சூரியனிடத்தி லிருக்கிறதாகக் குறிப்பிட்டுச் சொன்னது வியர்த்தம் தானே.

உத்தரம்—வியர்த்தமன்று; ஏனெனின் சிரேஷ்டம், சிரேஷ்டமில்லாமை இவைகள் இல்லை என்பதைக் காட்டுவது உத்தேசம் மூர்த்தா மூர்த்தஸ்வரூபமான துவைதத்தை உத்தேசித்து சூரியனிட மிருக்கிறவன் சிரேஷ்டன். புருஷனிட மிருக்கிற விசேஷத்தை விலக்கிப்பார்த்தால், பரமாநந்த ரூபமாய் எல்லாம் சமம். சிரேஷ்டமானதும் ஒன்றுமில்லை. அதை அடைந்தவன் அபயஸ்திதியை அடைகிறுன்.

## வி-வியாக்கியானம்.

(39) புருஷ வாராவஸ=சப்தம் அறியவேண்டும் என்பதாய் இச்சிக்கிற மனுஷியன்உத்தேசிக்கப்படுகிறுன். அவனிடத்தில் எந்த ஆநந்தமானது இருக்கும்.

ஸ: அய் ஸம்ஶயம்=அது இருக்கிறது என்பது யுக்தியாலும் அனுபவத்தாலும் பிரசித்த மென்பதை ஸ: அயம் இந்த பதங்கள் காட்டுகின்றன.

யுக்தியாவது:—யாஞ்ஞவல்கியர்மைத்திரேயரைப் பார்த்து சொல்லும்போது ஆத்மாவினிடத்தில் இருக்கிற பிரீதியால்தான் சகலமும் பிரியமாகிறது என்று சொல்லி யிருக்கிறுர். இதனுல் ஆத்மா ஆநந்த ரூபம் என்று தெரியவருகிறது.

அனுபவம்:—நான் எப்போது மிருக்கிறேன்; ஒருக் காலத்திலாவது "நான் இல்லை" என்பதாய் அறிகிறதில்லை.

ச்வ=இச்சிக்கிற புருஷனுக்கு ஸஜாதீயமானபிராணிகளிடத்திலிருக்கிற ஆநந்தத்தையும் இந்த சப்தம் சேர்த்துக் கொள்ளுகிறது இதனுல் ஆத்தியாத்மிக ஆதிபௌதிக சகல ஆநந்தமும் கிரகிக்கப்பட்டதாக ஆய்விட்டது.

(40) வேதத்தில் விசேஷமாய் இந்த அந்த சப்தங்கள் பிரத்தி அத்:—யக்ஷ அப்பிரத்தியக்ஷங்களைக் கூறுகின்றன. அப்படியே இவ் விடத்திலும் பரோக்ஷமான சூரிய தேகத்திலிரு கிற ஆநந்தத்தை அஸௌ என்கிற சப்தம் கூறுகிறது.

ஏவ=ஆதித்தியனுக்கு ஸஜாதீயமான தேவதைகளுக் குள்ளிருக்கும் ஆநந்தமும் காரத்தால் சேர்த்து அறியத்தக்கது. அதி தைவிக சர்வ ஆநந்தமும் கிரகிக்கப் பட்டதாக ஆகிறது.

(40) அத்தியாத்ம அதிபௌத. அதிதைவ சர்வ உபாதிகளிலும் யாதொரு ஆநந்தமுண்டோ. அதெல்லாம் ஸ்வரூபித்ததில் என்றே. வெவ்வேறென்று. மானுஷாநந்தம், தேவாநந்தம் என்பதெல் லாம் உபாதி பேதத்தால் பேதமாகத் தோன்றும் ஆநந்தம். கடா காசம், மடாகாசம், என்பதுபோல் உபாதி பேதத்தால் தாரதம்மி யம்ஏற்படுகிறது. அப்படியே அகண்டை கரசமான பிரம்மா நந்த மும் பிரம்மாமுதல் ஸ்தாவரம் வரையிலுள்ள உபாதி பேதத்தால் வெவ்வாறுகத் தோன்றுகிறது. சமுத்திரம்போ லிருக்கிற அகண் டை கரஸமான ஆநந்தத்துக்கு ஜலபிந்துக்கள் போல் ஹிரணிய கர்பபதாதிகளின் ஆநந்தங்க ளிருக்கின்றன இந்த ஒரே ஆநந்தம் அறிய இச்சையுள்ளவனுல் அறியத்தக்கது என்பது மீமாம்சையின் விசாரத்தின்) தீர்மாணம்.

## ஆநந்த பலன்.

வி-வி:—முன் சொன்ன ஆநந்தத்தின் பலனை சுருதி கூறு கிறது.

ச-பா:—இருக்கிறுரு இல்லையா என்கிற அனுப்பிரச்னத்துக்கு உத்தரம் கூறப்பட்டது. காரியத்தைச் செய்வதினுலும் (VI) ரஸ (ஆநந்த) ரூபமாயிருப்பதினுலும் (VII-2) ஸ்வாசமாகிற காரியத்தைச் செய்வதினுலும் (VII-3) அபயஸ்தானமாக இருப்பதினு லும் (VII-4) பயத்தைக் காட்டுகிறதினுலும் (VIII-1) ஆகிய இந்த உபபத்திகளால் ஆகாசாதிகளுக்குக் காரணமான பிரம்மம் இருக்கி றதென்றே முதலாவது கேள்விக்கு உத்தரம் தீர்மானிக்கப் பட்டது. வித்வானும் அஞ்ஞானியும் பிரம்மத்தை அடைகிறுரு, அடைய வில்லையா வென்பவை இரண்டு பிரச்னங்கள். வித் வான் அடைகிறுரு, அடையவில்லையா வென்பது கடைசியான கேள்வி. மத்தியிலிருக்கிற கேள்விக்கு கடைசியான கேள்விக்கு உத்தரம் கூறுவதாலேயே உத்தரம் சொல்லப்பட்டதாக ஆய்விடும். ஆகையால் இதன் விஷயமாய் உத்தரம் சொல்ல வேறு பிரயத்தினம் வேண்டியதில்லை.

தி:—(44) सयएवं वित् । ஸய ஏவம் வித் ।

(45) अस्मा ल्लोकात् प्रेत्य । அஸ்மால்லோகாத் ப்ரேத்ய ।

(46) एतमन्नमयमात्मानमुपसंक्रामति । ஏதமந்நமயமாத்மாநமுபஸங்க்ராமதி ।

(47) एतं प्राणमयमात्मानमुपसंक्रामति । ஏதம் ப்ராணமயமாத்மாநமுபஸங்க்ராமதி ।

(48) एतं मनोमयमात्मानमुपसंक्रामति । ஏதம் மநோமயமாத்மாநமுபஸங்க்ராமதி ।

(49) एतं विज्ञानमयमात्मानमुपसंक्रामति । ஏதம் விஜ்ஞாநமயமாத்மாநமுபஸங்க்ராமதி ।

(50) एतमानन्दमयमात्मानमुपसंक्रामति ॥15॥ ஏதமாநந்தமயமாத்மாநமுபஸங்க்ராமதி ॥ 15 ॥

பதவுரை:—

(44) यः யஃ=எவன்
एवं वित् ஏவம்வித்=இப்படி அறிகிறானோ
सः ஸஃ=அவன்
(45) अस्मात् அஸ்மாத்=இந்த
लोकात् லோகாத்=உலகத்தினின்றும்
प्रेत्य ப்ரேத்ய=வெளிச்சென்று (பிராணமடைந்தபின்)
(46) एतं ஏதம்=இந்த
अन्नमयं அந்நமயம்=அன்னமயமான
आत्मानं ஆத்மாநம்=ஆத்மாவை
उपसंक्रामति உபஸங்க்ராமதி=அடைகிறான்.

(47) இந்த பிராணமய ஆத்மாவை அடைகிறான்
(48) இந்த மனோமய ஆத்மாவை அடைகிறான்
(49) இந்த விஞ்ஞானமய ஆத்மாவை அடைகிறான்
(50) இந்த ஆனந்தமய ஆத்மாவை அடைகிறான்.

ச-புரா:—

(44) எவனொருவன் பிரம்மத்தை உயர்வு தாழ்வு என்கிற பேதத்தை விட்டு முன் சொன்னபடி அறிகிறானோ, "நான் சத்தியம், ஞானம், அநந்தம்" என்பதாயும் அறிகிறானோ

ஏவம் இந்த சப்தம் பிரகிருத விஷயத்தைக் கூறுகிறது.

ஸ: ஸஃ=அவன்

(45) இந்த லோகத்தை விட்டு வெளிப்பட்டு, இந்த லோகம் பார்க்கப் படும் பார்க்கப்படாமலுமிருக்கிற விஷயங்களின் சமுதாயம்.

(46) இந்த லோகத்தை விட்டு, மறுபடியும் வந்து, ஆசையற்றவனாகி, முன் கூறப்பட்ட அன்னமய ஆத்மாவை அடைகிறான். விஷயங்களை அன்னமயமான பிண்டஸ்வரூபத்தை விட வேறாக பார்க்கிறதில்லை. சகல ஸ்தூல பதார்த்தங்களும் அன்னமயமான ஆத்மா வென்றே பார்க்கிறான் என்பது அர்த்தம்.

(47) பிறகு சகல அன்னமயத்துக்குள் இருக்கிறதாயும், பிரிப்படாமலு மிருக்கிற, பிராணமயத்தைப் பார்க்கிறான்.

(48-50) பிறகு மனோமய, விஞ்ஞானமய, ஆநந்தமய ஆத்மாவைப் பார்க்கிறான்.

---

வி:—यः एवंवित् अस्माल्लोकात्प्रेत्य ।

யஃ ஏவம்வித் அஸ்மால்லோகாத்ப்ரேத்ய

என்கிற வாக்கியத்தினால் எல்லா பிரம்மவித்துக்களுக்கும் அர்ச்சிராதி மார்க்கம் சொல்லப்பட்டதாக ஆய்விட்டது.

---

து:—(44) यः एवंवित् யஃ ஏவம்வித்=அந்த அதிகாரி இப்படி அறிகிறானோ ஜீவர்களை தாரதம்மியமாக அறிகிறானோ

(45) ஸ ஸஃ=அவன்

अस्मात् लोकात् அஸ்மாத் லோகாத்=பஞ்ச பூதங்களால் ஏற்பட்ட தேகத்தினின்றும்

प्रेत्य ப்ரேத்ய=வெளிப்பட்டு.

(46) एतं अन्नमयं आत्मानं ஏதம் அன்னமயம் ஆத்மாநம்=இந்த அன்னமய னென்கிற அநிருத்த பரமாத்மாவை

उपसंक्रामति உபஸங்க்ராமதி=அடைகிறான். இப்படியே பிரத்யும்ன முதலிய, பிராணமய சப்தங்களால் கூறப்பட்ட ரூபங்களையும் அடைகிறான் என்று அர்த்தம்.

பிரமாண வாக்கியம்:—

பிறகு அதிர்சியமாகவும், அமூர்த்தமாயும், வர்ணிக்கத்தகாத தாயும், ஆதாரமற்றதாயு மிருக்கிற பரமாத்மாவினிடத்தில் அபயத் தையும், ஸ்திரமான ஆதாரத்தையும் அடைகிறான்.

வி-வியாக்கியானம்.

(44) य: யஃ=எந்த புருஷன்மேற்சொல்லிய கிரமப்படி நிஜ மான ஆநந்தத்தை அறிகிறானோ, அவன் அந்த கிரமப்படியே அந்த ஆநந்தத்தை அடைகிறான்.

சத்திய ஞானாதி ரூபமான பிரம்மம் தன்னுடைய மாயா சக்தி வசத்தால் ஆகாசம் முதல் நம்முடைய தேகம் வரையிலுள்ள ஜகத்தை சிருஷ்டித்து, தேகாதி பஞ்சகோசங்களாகிற குஹையில் பிரவேசித்தது போல் இருக்கிறது. உபாதியற்றதாக சாக்ஷாத் கரிக்கத்தக்கதாயு மிருக்கிறது. அது அகண்டைகரஸமான பர மாநந்த ரூபம். இதுதான் முன் சொன்ன கிரமம். இந்த பிரகா ரமாக அறிந்தவன் ஆநந்தத்தை அடைகிற விஷயத்தில் கிரமம் கூறப்படுகிறது.

போக்தா (ஜீவன்) போக்கியம் (வஸ்து) என்பதாய் இரண்டு விதமாக ஜகத்து பிரம்மாவால் சிருஷ்டிக்கப்பட்டது. போக்தா என்பது பிரத்தியக் சைதன்னிய ரூபமான ஆத்மா முதல் தேகம் வரையில் நான் என்கிற ஞானத்துக்கு விஷயமான ஜகத்தின் பாக மாம்.

---

வி:—आनन्दमयमात्मान मुपसंक्रामति ।

ஆநந்தமயமாத்மாந முபஸங்க்ராமதி

என்கிற வாக்கியத்தால் முக்திதசையில் உபாசகனான ஜீவன் போக்தா வென்றும் உபாஸியமான பிரம்மம் போக்கியமென்றும் கூறியிருப் பதால் முக்தியில் ஜீவனும் பிரம்மமும் ஒன்றாய்விடுகிற தென்கிற பக்ஷம் தள்ளப்பட்டதாக ஆய்விட்டது.

एतमन्नमयम् ஏதமந்நமயம்முதலிய ஐந்து பரியாயங்களிலும் இருக்கிற ஏதத் சப்தமானது பரமாத்மாவைக் கூறுகிறது.

---

து:—यत्प्रसादात्स्वरूपाप्तिः ब्रह्मादीनांसमंततः ।
सविष्णुःसर्वजीवेषुनृषुदेवेषुचस्थितः ।
एकएवमहायोगी निर्विशेषोऽखिलैर्गुणैः ।
सर्वोत्तमःसपूर्णश्च तमेवंवेदयःपुमान् ।
जीवांश्चतारतम्यस्था न्सगच्छेत्पंचरूपिणं ।
विष्णुंनपुण्यपापेच तस्यानिष्टंकदाचन ।
प्रियाप्रियेषुतज्ज्ञानो ह्यास्तृणोति यतोनृषु ॥ (यजुःसंहिता)

அர்த்:-தேகத்துக்கு வெளியே இது என்கிற ஞானத்துக்குவிஷயமான, புத்திரன் பாரியை முதலான ஜகத்தின்பாகம் போக்கியமாம். இவர்களுடைய சுகதுக்கங்களால் நான் சுகி துக்கி என்கிற அறிவினால் இவர்கள் விஷயத்தில் ஆத்ம சப்தத்தை உபயோகிக்கிறது வழக்கமானாலும், புத்திரன் முதலானவர்கள் தன்னைவிட வேறு என்பது ஸ்பஷ்டமாயிருப்பதால், ஆத்ம சப்த பிரயோகம் கௌணமே, முக்கியமன்று, என்று நினைத்து சுருதியானது அவர்களிடத்தில் தோன்றும் ஆத்ம புத்தியை நிவிர்த்திக்கும் பொருட்டு அன்னமய ஆத்மாவை உபதேசிக்கிறது.

(45) பிரம்மத்தை அறிய இச்சிக்கிறவனும் இதை அறிந்து இந்த லோகத்தினின்றும் அதாவது இது என்கிற ஞானத்துக்கு விஷயமான புத்திரன் முதலானவர்களிடமிருந்து வெளிச்சென்று, திரும்பி அவர்களிடம் ஆசையற்றவனாகி,

---

வி:—அன்னமய பிராணமய மனோமய விஞ்ஞானமய சப்தங்கள் அவைகளை சரீரமாக உடைய பரமாத்மாவைக் கூறுகின்றன.

இவ்விடத்தில் வியாசாரியர் எல்லா வித்வான்களும் இந்தலோகத்தினின்றும் லோகாந்திரம்போய் அன்னமய முதலிய சமஷ்டி வியஷ்டி விபூதிகளை உடையவராகவும் மிகுந்த ஆநந்தமுள்ளவராகவும் முக்தர்களால் அநுபவிக்கத் தகுந்தவராகவும் இருக்கிற பரமாத்மாவை போக்தாவாக இருந்துகொண்டு அநுபவிக்கிறபடியால் கேள்விக்கு உத்தரம் சொல்லப்பட்டதாக ஆய்விட்டது என்று சொல்லியிருக்கிறார்.

अभयंप्रतिष्ठांविन्दते अथसोभयं गतोभवति ।

அபயம்ப்ரதிஷ்டாம் விந்ததே அதஸோபயம் கதோபவதி।

என்று சொன்னவிஷயத்தில் சாக்ஷியாக இந்த சுலோகம் ஏற்பட்டிருக்கிறது.

8-வது அநுவாகம்

மூற்றிற்று.

---

து:—யஸ்ஸர்வஸாக்ஷஸ்ஸர்வவாக்ஷி: ஸர்வஹார்தீநாம்ஸ்ம்தத:।
ஸவிஷ்ணு:ஸர்வஜீவேஷு நீயேஷ்வேஷ்வஸ்தித:
வசகவசரஸ்மாயோகீநிஷு ஸேவேஷாவேஷேஷு ஸேஷ:
ஸர்வாத்மஸ்ஸர்வஜுஷ்டதஸேவஷ்வஷயஸ்வேஸ்ஸ। ।
ஜீவாம்ஸ்தாாதஸ்ருஷ்ய நஹவேஷு தம்ஸ்வாவிஷ்ணம்।
விஷ்ணும் நவம்ஸ்ஸ்வாஸேவதஸ்நிஷேகஸ்வந।
விப்ரவிப்ரேஷ்டஜ்ஞாநீஸ்ஸ்வஸ்ரேஷ்ணாதியதேஷ்வேஷ்ட। (யஜுஸ் ஸம்ஹிதா)

அர்:-(46) சுருதி கூறும் அன்னமயத்தை அடைகிறான். புத்திராதிகளின் சுகதுக்கங்கள் தன்னுடையவை என்கிற அபிமானத்தை விட்டு, எல்லாம் அன்னமயம் மட்டுமே என்பதாய் அறிகிறான் என்று அர்த்தம்.

(47-48) இப்படியே பிராணமயாதிகளை அடைகிறான் என்பதையும் அறிய வேண்டியது.

(50) ஆநந்தமயத்தை அடைந்து அவ்விடத்திலும் பிரியம் முதலிய நான்கையும் கிரமமாக விட்டு விட்டு, பிரம்மபுச்சம் என்பதாய் கூறப்பட்ட அகண்டைகரஸத்தில் முடிவு பெறுகிறான்.

ச-பா:—இவ்விடத்தில் கொஞ்சம் விசாரிக்கத் தக்கது.

ஆக்ஷேபம் (1) एवंवित् ஏவம்வித் என்பவன் யார்?

(2) எப்படி சங்கிரமணம் (அடைதல் போய் சேருதல்) ஏற்படும்?

சேருகிறவன் பரமாத்மாவை விட வேறான ஒருவனா? அல்லது பரமாத்மாதானா?

உத்தரம்:—பரமாத்மாவை விட வேறு என்று சொன்னால் சுருதி விரோதம் வரும். சுருதிகளாவன:—

(1) तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्

(1) தத்ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிசத்

அதாவது:—அதை சிருஷ்டித்து அதையே அனுப்பிரவேசித்தது என்று தைத்திரீய (VI-18 & 19) சுருதி சொல்லுகிறது.

(2) अन्योसावन्योहमस्मीति नसवेद (बृ-I-4-10)

(2) அந்யோஸாவந்யோஹமஸ்மீதி நஸவேத (ப்ரு I-4-10

அதாவது:—அவன் வேறு, நான் வேறு என்பதாய் அறிகிறவன் அறிந்தவனல்ல. என்பதாய் சுருதி சொல்லுகிறது.

(3) एकमेवाद्वितीयं (छा--VI-2-1) तत्वमसि (छा-VI-8-7)

(3) ஏகமேவாத்விதீயம் (சா VI-2.1) தத்வமஸி (சா VI (8-7)

அதாவது:—ஒன்றே இரண்டற்றது அது நீயாயிருக்கிறாய் என்பதாய் சாந்தோக்கிய சுருதி சொல்லுகிறது.

அவனே ஆநந்தமய ஆத்மாவை அடைகிறான் என்று சொன்னால், அவனே கர்த்தாவாக வேண்டும், அவனே கர்மமாக வேண்டும். இது பொருந்தாது. மேலும் பரமாத்மாவைசம்சாரியாக்கிறதாயிருக்கும். அல்லது பரமாத்மா இல்லை என்று முடியும்.

அவன் பரமாத்மாவே. ஏனெனின் பரமாத்மாவுடன் ஒன்றாய் விடுவதே உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

அத்-ब्रह्मविदाप्नोति परम् ப்ரஹ்மவித் ஆப்நோதிபரம் என்பதாய், பிரம்ம ஞானத்தால் பரமாத்ம பாவம் உத்தேசிக்கப் படுகிறது.

ஆக்ஷேபம்:—ஒருவன் வேறு ஒருவனாக ஆகமாட்டான்.

உத்தரம்:—இது சரியன்று. அவித்தையால் யாதொரு பேதம் ஏற்பட்டிருக்கிறதோ அது தான் வித்தையால் நீங்கி விடுகிறது. பிரம்ம ஞானத்தால் தன்னையே அடைதல் என்பதாய் யாதொன்று உபதேசிக்கப்பட்டதோ அதானது, அன்னாதி ஆத்மாவை ஆத்மாவாக பாவித்த பாவனையை நீக்கும் பொருட்டேயாம். இந்த அர்த்தம் எப்படி தெரிய வருகிறது. வித்தைமட்டும் உபதேசிக்கப்பட்டிருப்பதால் என்று சொல்லுகிறோம். வித்தையால் அவித்தை நிவிர்த்தியாவதைக் கண்டிருக்கிறோம். வித்தைமட்டுமே ஆத்மாவை அடைகிற விஷயத்தில் சாதானமாக இவ்விஷம் உபதேசிக்கப்பட்டிருக்கிறது.

ஆக்ஷேபம்:—மார்க்கத்தைச் சொல்லுவதுபோல் இது சொல்லப்பட்டிருக்கிறது.

உத்தரம்:—அப்படி இருந்தால் வித்தையை மட்டும் சாதனமாகச் சொன்னது ஹேதுவாக மாட்டாது. ஏனெனின், வேறு இடத்தை அடையும் பொருட்டு வழியைக் காட்டுவதைக் கண்டிருக்கிறோம். கிராமத்திலேயே போகிறான் என்று சொல்லக் கூடாது. இது பரஸ்பர விருத்தம். அவ்விடத்தில் கிராம விஷயமான ஞானம்போதிக்கப் படவில்லை. அதை அடைய மார்க்கத்தின் ஞானம்தான் உபதேசிக்கப் பட்டிருக்கிறது. அப்படி இவ்விடத்தில் பிரம்மஞானத்துக்கு வேறான வேறு சாதன விஷயமான ஞானம் உபதேசிக்கப் படவில்லை.

பரமானந்தை அடைவதற்கு கர்மாதி சாதனங்களை அபேக்ஷிக்கும் பிரம்ம ஞானமாவது சாதகமாகஉபதேசிக்கப் பட்டதாகச் சொல்லக்கூடாது. ஏனெனின் மோக்ஷம் நித்தியம் என்பதாய் முன்னமேயே சொல்லப்பட்டது.

तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् தத்ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிசத் என்கிற சுருதியும் காரியம் பிரம்ம ஸ்வரூபம் என்பதைக் காட்டுகிறது.

அபய பிரதிஷ்டையும் இப்படியானால்தான் பொருந்தும். ஞானியானவன் தன்னைவிட வேறான ஒன்றையும் பார்க்கவில்லை

அத்யானால், அப்போது அவன் பயமற்ற பிரதிஷ்டையை அடைகிறவனாகிறான். ஏனெனின் பயத்தைக் கொடுக்கக் கூடியதாய் பரத்தைவிட வேறானது ஒன்றுமில்லை.

அவித்தையால் ஏற்பட்டது அன்னியம் என்கிற ஞானம், அது வித்தையால் வாஸ்தவமல்லவென்பதாய் ஏற்படுகிறது. இரண்டாவது சந்திரன் இல்லை என்பது தோஷமற்ற கண்ணுடையவனால் கிரகிக்கப்படுகிறது. ஆத்மா இப்படி கிரகிக்கப்படவில்லை என்று சொன்னால், சுஷுப்தியிலும் சமாதியிலும் ஆத்மா கிரகிக்கப்படவில்லை. சுஷுப்தியில் கிரகிக்காமலிருந்ததற்குக் காரணம் வேறு இடத்தில் பற்றுதலடைந்திருத்தல் என்று சொல்லக்கூடாது. ஏனெனின் சுஷுப்தியில் ஒன்றும் கிரகிக்கப் படுகிறதில்லை. ஜாக்கிரத்திலும் ஸ்வப்நத்திலும் பரமாத்மாவைத் தவிர வேறு ஒன்றை கிரகிக்கிறதினால், அது இருக்கிறது என்று சொல்லக்கூடாது. ஏனெனின் ஜாக்கிரஸ்வப்நங்கள் அவித்தையால் ஏற்படுவதால் ஜாக்கிரத்திலும் சுஷுப்தியிலும் வேறு ஒன்றைக் கிரப்பது அவித்தையால்தான். ஏனெனின் அவித்தை இல்லாவிட்டால் அவைகளும் இல்லை. சுஷுப்தியிலும் துவைதத்தையும் கிரகிக்காததும் அவித்தையால்தான் என்று சொல்லக்கூடாது. ஏனெனின், சுஷுப்திஸ்வாபாவிகமே. திரவியத்தின் தத்துவம் விகாரமடையாமை, ஏனெனின். பராபேக்ஷையில்லை. விகாரம் தத்துவமன்று. ஏனெனின், அது பராபேக்ஷையுள்ளது. வஸ்துவின் தத்துவம் ஒரு காரகனை அபேக்ஷிக்கவில்லை. விகாரம் என்பது காரகனை அபேக்ஷிக்கிறது. விசேஷமாயுமிருக்கிறது. ஜாக்கிரஸ்ப்னங்களிற் கிரஹணம் விசேஷம். எவனுக்கு எந்த ஸ்வரூபமானது வேறு ஒன்றையும் அபேக்ஷிக்க வில்லையோ அது அவனது தத்துவம். எது வேறு ஒன்றை அபேக்ஷிக்கிறதோ, அது தத்துவமன்று. ஏனெனின் வேறு ஒன்று இராவிடின் இது இருக்க மாட்டாது. ஆகையில் சுஷுப்தியானது ஸ்வாபாவிகமானதால் ஜாக்கிரஸ்வப்னங்களில் போல் விகாரம் ஏற்படமாட்டாது.

எவர்கள் ஈசுவரனை ஆத்மாவை விட வேறாக பாவிக்கிறார்களோ, காரியத்தையும் அன்னியமாக பாவிக்கிறார்களோ, அவர்களுக்கு பயம் நீங்கமாட்டாது. ஏனெனின் பயத்துக்கு காரணமிருக்கிறது. வேறு காரணமென்பது சத்ரூபமாயிருந்தால், அது நாசமாக மாட்டாது. அசத்தானது ஆத்மாவை அடைய மாட்டாது. வேறு சிலரை அபேக்ஷித்து வேறு பதார்த்தம் பயகாரண

அத்:-மாயிருக்கிறது என்று சொன்னால், அதுவும் முன்போலவே யிருக்கிறது. பாபம் முதலிய, நித்தியம் அல்லது அநித்தியமான அதர்மத்துடன்சேர்ந்து வேறு என்பது பயத்துக்குக்காரணமாயிருந்தால் அப்படிப்பட்டதற்கும் நிவிர்த்தி ஏற்படமாட்டாது.

ஆத்மா பிரம்மத்தை விட வேறல்ல வென்கிற பக்ஷத்தில் நிமித்தங்களுடன் கூடின சம்சாரம் அவித்தையால் கல்பிக்கப் படுவதால், யாதொரு தோஷமும் ஏற்படவில்லை. தோஷமுள்ள நேத்திரத்தால் பார்க்கப்பட்ட இரண்டாவது சந்திரனுக்கு உற்பத்தியுமில்லை, நாசமுமில்லை. வித்தையும் அவித்தையும் அப்படியே என்றும் சொல்லக்கூடாது. ஏனெனின் உவைகள் பிரத்தியக்ஷம். அந்தக் கரணத்தி லிருக்கிற விவேகமும் அவிவேகமும் ரூபம் முதலியவைகள் போல் பிரத்தியக்ஷமாய் பார்க்கப்படுகின்றன. பிரத்தியக்ஷமாய் பார்க்கப்பட்ட ரூபம் திரஷ்டாவின் தர்மமன்று. நான் மூடன் என்னுடைய ஞானமானது சுத்தமாயில்லை என்பதாய் அவித்தையானது சுவானுபவத்தால் வியக்தமாயிருக்கிறது. அப்படியே வித்தையும் தெரியவருகிறது. ஞானிகள் பிறர்களுக்கு ஆத்ம வித்தையை உபதேசிக்கிறார்கள்.

அப்படியே பிறர்களும் தெரிந்து கொள்ளுகிறார்கள். ஆகையால் நாமரூபங்கள் போல் வித்தையும் அவித்தையும் ஆத்ம தர்மங்களன்று. பிரம்மத்துக்கு நாமமில்லை ரூபமில்லை என்பதாய் வேறு சுருதி சொல்லுகிறது.

பகலும் இரவும் சூரியனிடத்தில் கற்பிக்கப்படுவதுபோல் பிரமரூபங்களும் வாஸ்தவத்திலில்லை, கற்பிக்கப்படுகின்றன. பிரம்மமும் ஆத்மாவும் ஒன்றாயிருந்தால் एतमानंदमयमुपसंक्रामति ஏதமாநந்தமயமுபஸங்க்ராமதி என்பதால் ஒருவனே அடைகிறவனும் அடையப் பட்டவனாகவும் ஏற்பட மாட்டான் என்று ஆக்ஷேபித்தால், சங்கிரமண சப்தத்துக்கு ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்துக்கு போகுதல் என்கிற அர்த்தமல்ல, அறிதல்என்றுதான் அர்த்தம். அட்டைகளின் கமனம்போல் கமனம் இவ்விடத்தில் உபதேசிக்கப்படவில்லை. பின்னையோவெனின் ஞானம்மட்டும் தான் உபதேசிக்கப்பட்டிருக்கிறது என்பது சுருதியின் கருத்து. உபசங்கிராமதி என்பதால் முக்கியார்த்தம் தான் உத்தேசிக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லக்கூடாது. ஏனெனின், அன்னமய ஆத்மாவிஷயத்தில் அது காணப்படவில்லை. அன்னமயத்தை அடைகிறவன் அட்டை போலாவது வேறு விதமாகவாவது இந்த லோகத்

அத்தை விட்டு விட்டுப்போவதாகத் தெரியவில்லை. மனோமய விஞ்ஞானமயங்களின் விஷயத்தில் போல் ஆத்மாவுக்கு வெளியே போகுதலும் திரும்பி வருதலும் அர்த்தம் என்று சொல்லக் கூடாது. அன்னமய ஆத்மவிஷய சங்கிரமணத்துக்கு முக்கியார்த்தத்தை ஒப்புக்கொண்டால், மனோமயவிஞ்ஞானமய விஷயத்தில்ஆத்மாவுக்குவெளியே போய் திரும்புதல் அர்த்தம் என்று சொல்லமுடியாது. அப்போது விரோதம் சம்பவிக்கும். அப்படியே ஆநந்தமய ஆத்மா தன்னிடத்திலேயே திரும்பிவிடுகிறது என்றுசொல்ல முடியாது. ஆகையால் சங்கிரமண சப்தத்திற்கு ஸ்தூலபிராப்தி என்கிற அர்த்தமல்ல. அன்னமயாதிகளின் வேறு எந்த காரியமும் அர்த்தமல்ல. ஆகவே சங்கிரமண சப்தத்தால் அன்னமயம் முதல் ஆநந்தமயம் வரையிலுள்ள எந்த ஆத்மாவை விடவும் வேறானதால் செய்யப்படும் மானசிக காரியமே அர்த்தமென்று சித்திக்கிறது. சங்கிரமண சப்தம் ஞானத்தைமட்டும் கூறினால், ஆநந்தமயத்துக்குள்ளிருக்கிற, ஆகாசாதி அன்னமயம் வரையில் சகலத்தையும் சிருஷ்டிக்கிற காரியத்தை சிருஷ்டித்து, அதில் பிரவேசித்து இருக்கிறவனுக்கு ஹிருதய குஹை சம்பந்தத்தால் அன்னமயாதிகளே தான் என்பதாய் பிரமை உண்டாகி, ஆத்மவிவேக ஞானத்தால் அது நசித்துப்போகிறது. இந்த அவித்தையால் ஏற்பட்ட பிரமையின் நாசமே சங்கிரமண சப்தத்துக்கு அர்த்தம். சர்வஞ்ஞனை ஆத்மாவின் விஷயத்தில் வேறு விதமாய் அறியமுடியாது. அடையும்படியான வேறு வஸ்துவுமில்லை. தன்னையே அடைதல் ஏற்படமாட்டாது. அட்டை தன்னையே அடையவில்லை. ஆகையால் சங்கிரமண சப்தம் சத்தியம், ஞானம், அநந்தம் என்பதாகச் சொல்லப்பட்ட ஆத்மாவின் ஸ்வரூபவத்தையே கூறுகிறது. அநேகமாக ஆகுதல், சிருஷ்டித்ததைப் பிரவேசித்தல், ரஸலாபம், அபயம், சங்கிரமணம் முதலியவை பிரம்மத்தில் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. வாஸ்தவத்தில் இல்லை. நிர்விகற்பமான பிரம்மத்தினிடத்தில் யாதொரு விகற்பமும் ஏற்படமாட்டாது.

(இந்த விசாரத்தையே வித்தியாரணிய சுவாமிகள் சுருக்கமாய் அடியில் வருமாறு செய்திருக்கிறார்கள்:—

ஆக்ஷேபம்:—ஏவம்வித் என்கிற வித் சப்தத்தால் புகமாத்மா உத்தேசமா, அல்லது வேறு ஒன்றா? பரமாத்மாவாகவிருக்கமாட்டாது. அவர் அறியத்தக்கவராயிருப்பதால் அறிகிறவரன்று; இரண்டாவதும் பொருந்தாது. தத்துவமஸ்யாதி சுருதி விரோதம் வரும்.

**அத்:-உத்தரம்:**—இதில் தோஷமில்லை. பரமாத்மாவேதேக இந்திரியாதிஉபாதிகளுடன் கூடினவராய் அறிகிறவர் அகண்டைகரஸானந்தரூபமாக அறியப்பட்டவர்; இப்படி இரண்டும் பொருந்தும்.

ஆக்ஷேபம்:—இப்படி அறிகிறவன் उपसंक्रमति உபஸங்க்ரமதி என்று சுருதி சொல்லுகிறது. சங்கிரமணம் என்றால் திருடமாய் சம்பந்தப்படுதல் என்றும் அடைதல் என்றும் அர்த்தம். அட்டை விஷயத்தில் அப்படி அர்த்தமாகிறது. தேக இந்திரிய முதலிய உபாதியுடன் கூடின வேதிதாவுக்கு (அறிகிறவனுக்கு) அன்னமயாதிகளில் இப்படிப்பட்ட சங்கிரமணம் ஏற்படமாட்டாது.

உத்தரம்:—சங்கிரமண சப்தத்தால் இவ்விடத்தில் பிராந்திநாசமாகிற வித்தியாபலம் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. சங்கிரமண சப்தத்தின் முக்கியார்த்தம் உத்தேசிக்கப்பட்டிருந்தால் அதின் அறிவு மட்டும் சாதனமாகமாட்டாது. கண்மை என்று அறிதலினால் மட்டும் அதை அடைதல் ஏற்படவில்லை. अस्मात्लोकात् प्रेत्य அஸ்மால்லோகாத்ப்ரேத்ய என்கிற வாக்கியத்தினாலேயே பாஹ்ய புத்திராதி விஷய பிராந்தி நாசம் கூறப்பட்டிருக்கிறதென்றால், அப்படியானால் அன்னமயசங்கிரமணத்தால் புத்திராதி பிராந்தி மறுபடியும் உண்டாகிறதில்லை என்பதாய் அறியப்படட்டும். அப்படியே பிராணமய சங்கிரமணத்தால் அன்னமய பிராந்தி மறுபடியும் உண்டாகிறதில்லை என்பதாய் அறியப்படட்டும். இப்படியே பாக்கி விஷயங்களிலும் அறியவும். அன்னமயாதிகளில் ஆத்மாவுக்கு முக்கியார்த்தம் சம்பவிக்காவிட்டாலும் நான் என்கிற பிராந்தி ஞானமிருப்பதால் ஆத்ம சப்தம் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது. பிரியம் முதலிய நான்கு அவயவங்களுடன் கூடின ஆநந்தமய கோசத்திலிருக்கிற முக்கியாநந்த ரூபபிரம்மம் வாக்குக்கும்மனதிற்கும் எட்டாதது என்கிற அபிப்பிராயத்தைக் கொண்டு, அது இருந்தும் அதை அடைதல் என்பதை சுருதி சொல்லவில்லை.

இப்படி அவாங்மனச கோசரம் என்பதாய் அபிப்பிராயப்பட்டதை ஸ்பஷ்டமாக்கும் பொருட்டு சுருதியானது சொல்லுகிறதாவது:—

(51) तदप्येषश्लोको भवति ॥ 16 ॥ தத³ப்யேஷ ஶ்லோகோ ப⁴வதி ॥ 16 ॥

**इति अष्टमोनुवाकः**

இதி அஷ்டமோநுவாக:

அ-த்'—பதவுரை:—முன்போலவே.

ச-பா:—இந்த நிர்விகல்பமான ஆத்மா இந்த கிரமப்படி அறிந்து ஒருவனும் ஒன்றினலும் பயமடைகிறதில்லை, அபயமான ஸ்திரத்தன்மையை அடைகிருன் என்கிற அர்த்தத்தில் இந்த சுலோகம் ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆநந்தவல்லிபிரகிரணத்தின் அர்த்தத்தை சுருக்கமாய் பிரகாசிக்கும் பொருட்டு இந்த மந்திரம் ஏற்பட்டிருக்கிறது.

எட்டாவது கண்டம் முற்றிற்று.

## 9-அநுவாகம்.

(1) यतो वाचो निवर्तन्ते । யதோ வாசோ நிவர்தந்தே ।

(4) अप्राप्य मनसा सह । அப்ராப்ய மநஸா ஸஹ ।

(3) आनन्दं ब्रह्मणो विद्वान् । ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ।

(4) न बिभेति कुतश्चनेति ॥ 1 ॥ ந பிபேதி குதஶ்சநேதி ॥ ॥

பதவுரை.—

(1) यतः யத:=எதினின்றும்
वाचः வாச:=வாக்குகள்

(2) मनसासह மநஸாஸஹ=மனதுடன்
अप्राप्य அப்ராப்ய=அடையாமல்

(1) निवर्तन्ते நிவர்தந்தே=திரும்பி விடுகின்றனவோ
(तं தம்=அப்படிப்பட்ட)

(3) ब्रह्मणः ப்ரஹ்மண:=பிரம்மத்தின்
आनन्दं ஆநந்தம்=ஆநந்தத்தை
विद्वान् வித்வாந்=அறிந்தவன்

(4) कुतश्चन குதஶ்சந=எதினின்றும்
नबिभेति நபிபேதி=பயப்படுகிறதில்லை
इति இதி=இது சமாப்தியைக் காட்டுகிறது.

ச-பா:—

(1) यतः யத:=நிர்விகல்பமாயும், முன் சொன்ன லக்ஷணமுள்ள

வி:—9-வது அநுவாகம்.

(1) यतः...सह யத:...ஸஹ:—வாக்கும் மனதும் ஆநந்தம் இ

---

## 9-வது அநுவாகம்.

அ:—तदप्येषश्लोको भवति ததப்யேஷஶ்லோகோ பவதி=நாராயணனை அடைகிற விஷயத்தில் அவர் பூர்ணாநந்தர் என்று அறிவது அவசியம் என்பதாய் சொல்லுகிருர். இப்படி அறிந்தவனுக்கே அவர் கிடைப்பார் என்கிற விஷயத்தில் இந்த சுலோகமிருக்கிறது என்று அர்த்தம்.

தாயும், அத்வயமாயும் ஆநந்தமாயு மிருக்கிற ஆத்மாவினிட மிரு ந்து

**वाच:** வாவஃ=திரவ்வியம் முதலிய சவிகல்பவஸ்துக்களை விஷய மாக்கியும், வஸ்துவா யிருப்பதால் நிர்விகல்பமாயும், அத்வயமாயும் இருக்கிற பிரம்மத்தினிடத்திலும் புருஷனுல் உபயோகிக்கப்பட் டும் இருக்கிற வாக்கு

(2) **अप्राप्यनिवर्तन्ते** அவ்ராவ்ய நிவத்தெ=பிரகாசிக்காமல் திரு ம்பிவருகிறது. தன்னுடைய சாமர்த்தியத்தில் குறைவடைகிறது.

**मन:** மநஃ = விஞ்ஞானம்—அது இந்திரியத்துக்கு விஷயமாகா ததை பிரகாசம் செய்யும் பொருட்டு பிரவிர்த்திக்கிறது. எவ்வி டத்தில் ஞானமிருக்கிறதோ அவ்விடத்தில் வாக்கு பிரவிர்த்திக் கிறது. ஆகையால் வாக்குக்கும் மனதிற்கும் கூடவே நாமமும் ஞானமும் எங்கும் சேர்ந்தே இருக்கின்றன. ஆகையால் பிரம்மத் தை பிரகாசம் செய்யும் பொருட்டு வாக்கு பிரயோகிக்கப் பட்டிரு ந்தாலும், ஞானத்துக்கு விஷயமாகாத பெயரால் குறிப்பிடக்

---

வி:—ன் என்று அறியத்தலைப்பட்டன. அதை அறியமுடியாமல் தா னே திரும்பிவிட்டன.

(2) **आनन्द...कुतश्चनेति** ஆநந்தம்...குதஸ்சநெதி:—அப்படிப்பட்ட ஆநந்தகுணமுள்ள பிரம்மத்தை உபாசிப்பதால் சகலதுக்கங்களுக் கும் பயங்களுக்கும் ஆத்தியந்தக நிவிர்த்தி உண்டாகிறது என்று அர்த்தம்.

ஸ்வர்க்கத்துக்குச் சாதகமான சுகிருதத்தைப் பண்ணவில்லை நரகத்துக்குச் சாதகமான துஷ்கிருதத்தைப்பண்ணினேன் என்கிற சிந்தையானது

---

து:—(1)**यत:** யதஃ=எந்த பிரம்மாநந்தத்தினின்றும்

**वाच:** வாவஃ=ரிக்முதலிய வசனங்கள்

(3) **मनसासह** மநஸாஸஹ=மனது இந்திரியம் இவைகளுடன்

**अप्राप्य** அவ்ராவ்ய=முற்றிலும் அறியாமல்.

(1) **निवर्तन्ते** நிவத்தெ=திரும்பி விடுகின்றனவோ

(3) **ब्रह्मण:** ப்ரஹ்மணஃ=பிரம்மத்தின் (முடிவில்லாததால் வாக்குக் கும் மனதிற்கும் விஷயமாகாத)

**आनन्दं** ஆநந்தம்=ஆநந்த ஸ்வரூபத்தை

(4) **विद्वान्** விஷாநு=அறிகிறவன்

**कुतश्चननबिभेति** குதஸ்சநநவிலெஹதி=பயமற்றவனுகி முக்தனு கிறான்.

அத்:-கூடாத அதிர்ச்சியம் (காணப்படாமை) முதலிய விசேஷ ணங்களுள்ளதினின்றும், சகலத்தையும் பிரகாசம் செய்யக்கூடிய விஞ்ஞானமும் மனதும் திரும்பி விடுகின்றனவோ, அப்படிப்பட்ட பிரம்மத்தின் ஸ்வரூபமாயும், விஷய விஷயீ சம்பந்த மன்றியிலும், ஸ்வாபாவிகமாயும், நித்தியமாயும், பிரிவினை யன்றியிலு மிருக்கிற பரம் ஆநந்தத்தைச் சொன்னபடி அறிந்தவன்

(4) ஒன்றையும் பயப்படுகிறதில்லை. ஏனெனின் காரணமில்லை. பயப்படும்படியாக இப்படி அறிகிறவனைத் தவிர வேறு ஒரு வஸ்துவுமில்லை. அவித்தையால் பேதத்தை கிஞ்சித்தாகிலும் ஒருவன் பார்த்தானே யானால், அவனுக்கு பயம் உண்டாகும் என்று சொல்லப்பட்டது. தோஷமுள்ள கண்ணால் பார்க்கப்பட்ட இரண்டாவது சந்திரன் போல் அவித்தையால் ஏற்படும் பயகாரணம் நாசமாய் விடுவதினால் வித்வான் யாதொன்றாலும் பயமடைகிறதில்லை என்று சொன்னது யுக்தமே.

மனதானது பிரம்மத்தை அறிய சாதகமாயிருப்பதால் மனோமயத்தில் மந்திரம் உதாஹரிக்கப்பட்டது. அதில் பிரம்மத்தை அத்தியாரோபித்து (அதாவது அதை பிரம்மமாக பாவித்து அதை ஸ்துதிக்கும் பொருட்டு न बिभेति कदाचन நவிபேதி கதாசந என்பதாய் பயமாத்திரம் நிஷேதிக்கப்பட்டது. இவ்விடத்தில் அத்வைத விஷயத்தில் न बिभेति कुतश्चन நவிபேதி குதஶ்சந என்பதாய் பயநிமித்தமே நிஷேதிக்கப் படுகிறது.

வி—வியாக்கியானம்.

(1) மனோமயகோச பிரசக்தியில் சொல்லப்பட்ட சுலோகத்தின் வியாக்கியானத்தை இவ்விடத்தில் ஸ்மரித்துக் கொள்ளத் தக்கது.

वाच: வாசঃ=பதார்த்தங்களை குறிப்பிடும் சப்தங்கள். இவைகள் சவிகல்பவஸ்துக்களில்தான் பிரவிர்த்திக்கும். மற்ற வஸ்துக்கள் போல் பிரம்மமும் வஸ்துவென்கிற அபிப்பிராயத்துடன் நிர்விகல்பப் பிரம்மத்தினிடத்தில் இவைகள் பிரயோகிக்கப்பட்டாலும் அதை குறிப்பிடாமல் திரும்பி விடுகின்றன. குறிப்பிடுதல் என்கிற தங்களுடைய சாமர்த்தியத்தால் குறைவடைகின்றன.

(2) मन: மநঃ:—இந்திரியத்துக்கு விஷயமாகாத விஷயங்களில் சப்தங்களை அனுசரித்து மனதும் பிரவிர்த்திக்கிறது. சுவதந்திரமாகப் பிரவிர்த்திக்கிறதில்லை. ஆகையால் சப்தங்கள் திரும்பினவளவில் அவைகளுடன் தானும் திரும்பி விடுகின்றது. ஆகை

அத:-யால் ஹிரணிய கர்ப்பருடைய ஆநந்தத்தை விட பிரம்மா நந்தம் இவ்வளவு அதிகம் என்பதாய் அறிய முடியாது.

(3) ब्रह्मणःआनन्द ப்ரஹ்மண: ஆநந்தம் = இப்படிப்பட்ட பிரம்மத்தின் ஸ்வரூபாநந்தத்தை லக்ஷண விர்த்தியால் சப்தங்களாலும் மனதாலும் எவன் அறிகிறானோ அவனே

(4) எந்த காரணத்தாலும் பயப்படுகிறதில்லை. முன் பிரஸ்தாபத்தை அனுசரித்து மனோமய உபாதியுள்ள பிரம்மத்தை உபாசிக்கிறவனுக்கு இந்த ஜன்மத்திலாவது ஜன்மாந்திரத்திலாவது எக்காலத்திலும் பீதியில்லை. பீதிக்கு எதிரிடையானது இருப்பதால் இப்படி சொல்லப்பட்டது. அத்வதிய பிரம்மாநந்தத்தை பிரமாணத்தால் அறிகிறவனுக்கு பயகாரணமே இல்லை என்கிற அபிப்பிராயத்துடன் कुतश्चन குதஶ்சந என்பதாய் சுருதி சொல்லுகிறது. द्वितीयाद्वै भयंभवति த்விதீயாத்வை பயம்பவதி (பு. I-4-2) என்கிற சுருதிப்படி தன்னைவிட வேறான வஸ்து பயகாரணம். அது அத்விதீய பிரம்மத்தினிடத்தில் இல்லை என்பது அபிப்பிராயம்.

सत्यंज्ञानं अनन्तंब्रह्म ஸத்யம் ஜ்ஞானம் அநந்தம் ப்ரஹ்ம என்பது விதி வாக்கியம். இந்த விதிவாக்கியம் அறியப்பட்டதின், ஆநந்தம்.

யம் ஜோதிஸ் முதலிய குணங்கள் முன் கூறப்பட்டன.

यतोवाचो निवर्तन्ते யதோவாசோ நிவர்தந்தே என்பது மற்றவைகளினின்றும் பிரம்மத்தைப் பிரித்துக்காட்டுகிறது.

அஸ்தூலம், அனணு, அஹிர்ஸ்வயம் முதலியவைகள் இந்த ஸ்வப்ரவிர்த்தியை காட்டுகின்றன. இவைகள் பிரமசூத்திரம் III-3—வது பாதத்தில் விசாரிக்கப்பட்டிருக்கின்றன.

இல்லை என்பதாய் நிஷேதம் ஏற்பட்டாலும் ஒரு விசேஷமிருக்கிறது. அது 2-வது பாதத்தில் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

வி-வி:—எக்காரணத்தாலும் பயப்படுகிறதில்லை. என்று சொன்னது யுக்தமன்று. ஏனெனின் தர்மம் அதர்மம் இவைகளால் உண்டாக்கக்கூடிய சந்தாபம் பயத்துக்காரணம். இது இருக்கிறது. இந்த சங்கைக்கு சுருதி உத்தரம் கூறுகிறது.

(5) एतꣳह वाव न तपति । ஏதꣳ ஹவாவ ந தபதி ।

(6) किमहꣳसाधुनाकरवम् । கிமஹꣳ ஸாது நாகரவம் ।

(7) किमहं पाप मकरवमिति ॥ 2 ॥ கிமஹம் பாபமகரவமிதி ॥ 2 ॥

அ-த:—பதவுரை :—

(6) अहं அஹம்=நான்

किं கிம்=எந்த காரணத்தால்

साधु ஸாது=சுபகர்மத்தை

नाकरवं ந அகரவம்=செய்யாமல் போனேன்

(7) अहं அஹம்=நான்

किं கிம்=எந்த காரணத்தால்

पापं பாபம்=பாப கர்மத்தை

अकरवमिति அகரவம் இதி=செய்தேன் என்ற (தாபம்)

(5) एतं ஏதம்=இவனை

न तपति ந தபதி=தபிக்கச் செய்கிறதில்லை.

ச-பா:—

ஆ:—நல்ல காரியத்தைச் செய்யாமை, பாப கர்மத்தைச் செய்தல் ஆகிய பயகாரண மிருக்கிறது.

சி—இப்படி இல்லை. எப்படி யெனின், சொல்லப்படுகின்றது.

एतं ஏதம்=முன் சொன்னபடி அறிந்தவன்

ह वाव ஹ வாவ=இவைகள் நிச்சயத்தைக் கூறுகின்றன.

न तपति ந தபதி= சந்தாபம் உண்டாகும்படி செய்கிறதில்லை.

நல்ல தர்மம் செய்யாமையும் பாபகர்மம் செய்தலும் எப்படி சந்தாபத்தை உண்டுபண்ணவில்லை யென்று எப்படிச் சொல்லலாம்.

---

வி:—एतं ஏதம்=இந்த பிரம்மத்தை

न तपति ந தபதி=பாதிக்கமாட்டாது. ஏனெனின், ஸ்வர்க்காதி லோகங்களில் இச்சை உண்டாகிறதில்லை. மேலும், பிரம்ம ஞானத்தால் பாபம் நசித்துப்போயிருப்பதால் நரகாதிகளிலும் பயமில்லை.

இப்படிப்பட்ட பிரம்ம வித்தையால் உண்டான மகாத்மியத்தையும் தியானம் பண்ணவேண்டுமென்று கூறுகிறது.

---

து:—(5) एतं ...ஏதம்...=அ-கை:—முன் சம்பாதித்தபுண்ணிய பாபகர்மம் ஞானிக்கும் இருப்பதால் எப்படி பிரம்மப் பிராப்தி சித்திக்கும் எனின் சொல்லுகிறார்.

(6) अहं किंसाधु அஹம்கிம்ஸாது=நான் எந்த புண்ணிய கர்மத்தை அகரவம் அகரவம்=செய்யவில்லை.

அத்:-(6) மரணகாலம் வந்த சமயத்தில் எந்த காரணத்தால் நான் நல்ல கர்மத்தைச் செய்யவில்லை, எந்த காரணத்தால் பாபத்தைச் செய்தேன் என்பதாய் நரகத்தில் விழுதல் முதலிய துக்கத்தின் பயத்தால் தாபம் உண்டாகிறது. இந்த நல்ல காரியங்களும் பாப கர்மங்களும் அஞ்ஞானியை தபிக்கச் செய்வதுபோல் இவனை தபிக்கச் செய்கிறதில்லை.

(வி-வி:—மரண காலம் நெருங்கின சமயத்தில் சகல பிராணிகளுக்கும் மனதில் ஒரு சந்தாபம் உண்டாகிறது. அது எப்படிப்பட்டதென்று முன் யௌவன காலத்தில் தேகம் இந்திரியங்கள் முதலியவை திருடமாயிருக்கும்போதும் திரவ்வியம் முதலிய சாதனங்கள் கூடியிருக்கும்போதும், சுவர்க்கலோக சாதகமான யாகாதி புண்ணிய கர்மத்தை ஏன் நான் செய்யவில்லை. நரகசாதனமான திருட்டு முதலிய கர்மங்களை ஏன் நான் செய்தேன். இந்த சிந்தை எல்லாருக்கும் சந்தாபத்தைக் கொடுக்கிறதாயிருந்தாலும் இந்த பிரம்மஞானி ஒருவனைமட்டும் பாதிக்கிறதில்லை.

IX-3-வி-வி:—தாபமில்லாததற்குக் காரணத்தை சுருதி கூறுகிறது.

(8) स य एवं विद्वानेते आत्मानꣳस्पृणुते ॥ 3 ॥ ஸ ய ஏவம்விதாவாநேதே ஆத்மாநꣳஸ்ப்ருணுதே ॥ 3 ॥

பதவுரை.—

यः யஃ=எவன்

एवं ஏவம்=இவ்விதமாக

विद्वान् வித்வாந்=அறிகிறானோ

सः ஸः=அவன்

एते ஏதே=இவைகளை

आत्मानं ஆத்மாநம்=ஆத்மஸ்வரூபம் என்பதாக

स्पृणुते ஸ்ப்ருணுதே=சந்தோஷமடைகிறான்.

---

து:—(7) पापं नाकरवं பாபம்நாகரவம்=எந்த பாபத்தைச் செய்யவில்லை.

(5) इति இதி=என்பதாய்

एतं ஏதம்=ஞானியை

न तपति நதபதி=வருத்தப் படுத்துகிறதில்லை.

वाव வாவ=இவைகள் நிச்சயத்தைக் கூறுகின்றன.

ஆகையால் தான் முன் சுலோகத்தில் பயப்படுகிறதில்லை என்பதாய் சொல்லப்பட்டது.

அத்:-ச-பா:—

ஏன் வித்வானை தபிக்கச் செய்யவில்லை யெனின் இவன் தாப ஹேதுக்களான புண்ணிய பாபகர்மங்களை ப்ரத்தியகாத்ம ஸ்வரூபமாகப்பார்க்கிறான். இந்த பாவனையுடன் சந்தோஷமடைகிறான். ஆத்மாவை பலப்படுத்துகிறான்.

வி-வி:—எவன் சாஸ்திரங்களாலும் யுக்தியாலும் இந்த புண்ணிய பாப கர்மங்களை சந்தாபத்துக்குக் காரணங்களாக அறிகிறானோ அவன் அந்த சந்தாபத்தைப் போக்கடிக்கும் பொருட்டு ஆத்மாவை சந்தோஷப்படுத்துகிறான், அல்லது பலப்படுத்துகிறான். அதாவது இந்த ஆத்மா சாக்ஷீ, தர்மாதர்மங்களின் கர்த்தாவன்று, என்கிற நிச்சயத்தால் சந்தாபமற்று சந்தோஷமுள்ளவனாயிருக்கிறான். நான் பிரம்மம் என்கிற நிச்சயத்தால், தர்மம், அதர்மம், அவைகளின் பலன், இவை முதலியவைகளால் ஏற்படும் சகல சம்சாரத்துக்கும் காரணமான அவித்தை கூட நிவிர்த்தியாய் விடுவதால் இவன் பிரபலனாகிறான். தர்மாதர்மாதிகளால் இவனை ஒருவனும் ஜயிக்க முடியாது என்பது கருத்து.

:—(வி-வி:—ஆத்மா கர்த்தாவல்ல பிரம்மம் தான் என்று அறிந்திருந்தாலும், தேக இந்திரியங்கள் பிரவிர்த்திப்பதினால் புண்ணிய பாபங்கள் அவசியம் ஏற்படும். முன்னனுஷ்டித்தவைகளும் இருக்கும். என்பதாய் சங்கித்து சுருதி சொல்லுகிறதாவது:—

(9) उभे ह्येवैष एते आत्मानं स्पृणुते । உபே ஹ்யேவைஷ ஏதே ஆத்மானம் ஸ்ப்ருணுதே ।

(10) य एवं वेद ॥ 4 ॥ ய ஏவம் வேத ॥ 4 ॥

---

து:—(8) स्यः ஸ்ய:=ஏன் தபிக்கிறதில்லை எனின் சொல்லுகிறார்.

यः ய: =எவன்

आत्मानं ஆத்மானம்=பரமாத்மாவை

एवं ஏவம்=மேற் சொன்னபடி

विद्वान् வித்வான்=அறிந்து இருக்கிறானோ

सः ஸ:=அவன்

एते ஏதே =இந்த புண்ணிய பாபங்களை

स्पृणुते ஸ்ப்ருணுதே=உலகத்தில் விட்டு விடுகிறான்.

சிநேகிதனிடம் நல்ல செய்கையையும் சத்துருவினிடம் கெட்ட செய்கையையும் விட்டு விடுகிறான்.

பதவுரை.—

(10) यः யஃ=எவன்
एवं வஏவம்=இப்படி
वेद வெத=அறிகிருனே

(11) एषः வஏஷஃ=இவன்
उभे உபெ=இரண்டான
एते வஏதெ=இவைகளை
आत्मानं ஆத்மாநம்=ஆத்மஸ்வரூபமாக
स्पृणुते ஸ்ப்ருணுதெ=சந்தோஷமடைகிருன்.

ச-பா:—இந்த வித்வான் புண்ணிய பாபங்களை தன் ஸ்வரூப மாகப் பார்க்கிருன். அவைகளுக்குச் சொந்தமான விசேஷ ஸ்வரூப மிருக்கிறதாக பாவிக்கிறதில்லை; இப்படிச் செய்து சந்தோஷப்படுகி ருன்.

வி-வி:—எந்த புருஷன் புண்ணிய பாபங்களைத்தாப காரணங் களாயும், ஆத்ம ஞானத்தை தாப நிவாரகமாயும் அறிகிருனே அவன் இந்த இரண்டு புண்ணிய பாபங்களை ஆத்மாவாகவே பார்க் கிருன். சாஸ்திர திருஷ்டியால் அந்த புண்ணிய பாபங்கள் பரமாத்ம ஸ்வரூபமென்ற அநுசந்தானம் செய்கிருன். புண்ணிய பாபங் கள் மாயையால் கல்பிக்கப்பட்டவைகளாக அவன் பாவிக்கிற தில்லை.

हि ஹிசப்தம் இந்த அர்த்தம் ஞானிகளுக்குத் தெரியும் என்பதைக்காட்டுகிறது.

பிரம்மஞானிக்கு புண்ணிய பாபகர்மங்கள் தன்னைவிட வே ருக (வேறு ஸ்வரூபமுள்ளவர்களாக) இராதபக்ஷத்தில் அவைக ளால் உண்டாகக்கூடிய தாபம் அவனுக்கு இருக்கமாட்டாது. என்று சொல்லவேண்டும் பாபமற்ற தன்மை IV 2-வது பாதத்தி லும் புண்ணிய மற்றதன்மை அவ்விடத்திலேயும் விசாரிக்கப்பட் டிருக்கின்றன.

---

வி:-(10) एते வஏதெ=இந்த புண்ணியபாபங்களினின்றும் தன் னை இரக்ஷித்துக்கொள்ளுகிருன் என்று அர்த்தம். புண்ணிய பாப பலன்களின் அநுபவம் இல்லை என்று சொன்னதாக ஆய்விட்டது

उभे உபெஎன்று மறுபடியும் சொன்னதானது அநுவாகத் தின் முடிவைக்காட்டுகிறது.

---

து:-(10) उभे உபெ=இதையே மறுபடியும் சொல்லுகிருர்.

அல்லது ஞானிக்கு புண்ணிய பாபமில்லை என்று அறிகிறவ

உபசம்ஹாரம்.

(11) इत्युपनिषत् ॥ 5 ॥ இத்யுபநிஷத் ॥ 5 ।

பதவுரை.

उपनिषत् உபநிஷத்=உபநிஷத்து

इति இதி=சமாப்தம்.

வி-வி:—ब्रह्मविदाप्नोतिपरम् ப்ரஹ்மவிதாப்நோதி பரம் முதல் य एवं वेद ய ஏவம்வேத=என்பது வரையிலுள்ள கிரந்தத்தால் எது பிரதிபாதிக்கப்பட்டதோ அது இதி சப்தத்தால் கூறப்படுகின்றது. அது उपनिषत् உபநிஷத் இரஹஸியவித்தை அப்படிப்பட்ட வித்தை கூறப்பட்டது என்று சேர்த்து அறியவும்.

9 வது கண்டம் முற்றிற்று.

---

வி:-(12) इत्युपनिषत् இத்யுபநிஷத்=இந்தப்பிரகாரம் இரகசியத்தின் உபதேசமானது அப்படிப்பட உபதேசத்துக்கு யோக்கியனுக்கேசெய்யத்தக்கதென்பது கருத்து

9-வது அனுவாகம் முற்றிற்று.

ஆநந்தவல்லி முற்றிற்று:

---

து:—னும் புண்ணிய பாபத்தினின்றும் விடுபடுகிறான் என்று அர்த் அப்போது आत्मानं ஆத்மாநம்=என்பதற்கு ஆத்மன: தன்னுடைய என்று அர்த்தம்.

பிரமாண வாக்கியம்:—

अगोचरंवाङ्मनसोरानंत्यापुरुषोत्तमं ।
ज्ञात्वामुक्तस्यभीनैपकुतश्चनभविष्यति ॥ यजुःसंहिता ॥

அகோசரம்வாங்மநஸோராநந்த்யாபுருஷோத்தமம் ।
ஜ்ஞாத்வாமுக்தஸ்யபீநைபகுதஶ்சநபவிஷ்யதி ॥

யஜுஃஸம்ஹிதா॥

(12) इत्युपनिषत् இத்யுபநிஷத்=இது உபசம்காரம். இப்படி இரஹஸியம் சொல்லப்பட்டது.

सहनाववतु ஸஹநாவவது=எந்த சாந்தியுடன் பிரம்ம வித்தையானது ஆரம்பிக்கப்பட்டு சமாப்தி அடைந்ததோ அதை முடிவிலும் அபிவிர்த்தியின் பொருட்டு கூறுகிறார்.

() ब्रह्मविदिदमेकत्रिंशतिः । ப்³ரஹ்மவிதி³த³மேகத்ரிம்ஶதி: ।

(2) अन्नादन्नरसमयात्प्राणो व्यानोऽपानआकाशः पृथिवी पुच्छ षड्विंशतिः ।

(2) அன்னாத³ன்னரஸமயாத்ப்ராணோ வ்யானோऽபான ஆகாஶ: ப்ருதி²வீ புச்ச²ம் ஷட்³விம்ஶதி: ।

(3) प्राणं यजुर्ऋक्सामाऽऽदेशोऽथर्वाङ्गिरसः पुच्छंद्वाविंशतिः ।

(3) ப்ராணம் யஜுர்ருக்ஸாமாऽऽதே³ஶோऽத²ர்வாங்கி³ரஸ: புச்ச²ம் த்³வாவிம்ஶதி: ।

(4) यतः श्रद्धर्तंसत्यंयोगोमहोऽष्टादश । யத: ஶ்ரத்³த⁴ர்தம் ஸத்யம் யோகோ³மஹோऽஷ்டாத³ஶ ।

(5) विज्ञानं प्रियं मोदः प्रमोदआनन्दो ब्रह्मपुच्छं द्वाविंशतिः ।

(5) விஜ்ஞானம் ப்ரியம் மோத³: ப்ரமோத³ ஆனந்தோ³ ப்³ரஹ்ம புச்ச²ம் த்³வாவிம்ஶதி: ।

(6) असन्नेवाष्टा विंशतिः । அஸன்னேவாஷ்டாவிம்ஶதி: ।

(7) असत्षोडश । அஸத்ஷோட³ஶ ।

(8) भीषास्मादेकपञ्चाशत् । பீ⁴ஷாஸ்மாதே³கபஞ்சாஶத் ।

(9) यतःकुतश्चैकादश । யத: குதஶ்சைகாத³ஶ ।

सहनाववतुसहनौ भुनक्तु सहवीर्यं करवावहै । तेजस्वि नावधीतमस्तु मा विद्विषावहै ॥

ஸஹ நாவவது ஸஹ நௌ பு⁴னக்து ஸஹவீர்யம் கரவாவஹை । தேஜஸ்வி நாவதீ⁴தமஸ்து மா வித்³விஷாவஹை ॥

ओं शान्तिः शान्तिः शान्तिः

ஓம் ஶாந்தி: ஶாந்தி: ஶாந்தி:

हरिः ओं ॥ ஹரி: ஓம் ॥

## பிருகு வல்லி.

हरिः ओं.

ஹரிஃ ஓம் |

सह नाववतु । सह नौ भुनक्तु । सहवीर्यं करवावहै । तेजस्वि नावधीतमस्तु मा विद्विषावहै ॥

ओं शान्तिः शान्तिः शान्तिः ॥

ஸஹ நாவவது | ஸஹ நௌ புநக்து | ஸஹவீர்யம் கரவாவஹை | தேஜஸ்வி நாவதீதமஸ்து மா வித்விஷாவஹை |

ஓம் சாந்திஃ சாந்திஃ சாந்திஃ |

பதவுரை:—

237-வது பக்கம் பார்க்க.

### முதலாவது அனுவாகம்.

(1) भृगुर्वै वारुणिः । ப்ருகுர்வை வாருணிஃ |

(2) वरुणं पितरमुपससार । வருணம் பிதரமுபஸஸார |

(3) अधीहि भगवो ब्रह्मेति ॥ 1 ॥ அதீஹி பகவோ ப்ரஹ்மேதி ॥ 1 ॥

பதவுரை:—

(1) वारुणिः வாருணிஃ=வருண புத்திரனை
वै வை=பிரசித்தமான
भृगुः ப்ருகுஃ = பிருகுவானவன்

(2) पितरं பிதரம்=பிதாவான
वरुणं வருணம்=வருணனை

(3) भगवः பகவஃ=பூஜ்யரானவரே
ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மத்தை

---

பிருகுவல்லி.

அ-கை:—முந்தின வல்லியில் சில அடையாளங்களால் பிரம்மம் கூறப்பட்டது, இப்போது வேறு லக்ஷணம் சொல்லி

---

பிருகுவல்லி.

து:-சாந்தி மந்திரம்:—அ—கை:—பிரம்ம வல்லியிற் சொன்ன விஷயமாய் ஒரு கதையை முன் சொன்ன சாந்தி மந்திரத்துடன் சொல்லுகிறார்.

अधीहि அதீஹி=அத்தியயனம் செய்துவையும் (உபதேசியும்)

इति இதி = என்று

(2) उपससार உபஸஸார=அடைந்தான்.

ச—பா:—சத்தியம் ஞானம், அநந்தம் இப்படிப்பட்ட பிரம்மம் ஆகாசம் முதல் அன்னமயம் வரையிலுள்ள காரியங்களை சிருஷ்டித்து, அவைகளையே அனுப்பிரவேசித்து, விசேஷ ஸ்வரூபங்களுடன் கூடினதுபோல் காணப்படுகிற படியால், இப்படி சகல காரியங்களுக்கும் விலக்ஷணமாயும் அதிர்சியம் (பார்க்கப்படாமை) முதலிய தர்மங்களுடன் கூடினதாயும் ஆநந்த ஸ்வரூபமாயுமிருக்கிற பிரம்மமே நான் என்பதாய் ஒருவன் அறிய வேண்டியது. ஏனெனின் அனுப்பிரவேசம் என்பதற்கு இது தான் அர்த்தம். இப்படி அறிகிறவனுக்கு சுபாசுப கர்மங்கள் ஜன்மாந்தரத்தைக் கொடுக்கிறவைகளாக ஏற்படுகிறதில்லை. இப்படி இந்த விதமாய் ஆநந்தவல்லியில் கூறப்பட்டிருக்கிறது. பிரம்ம வித்தை அதாவது பிரம்மத்தை அறியும் மார்க்கம் முடிவாகச் சொல்லப் பட்டது. இனி பிரம்ம வித்தைக்குச் சாதனமான தபஸ்ஸைச் சொல்லவேண்டு மென்பதாயும், அன்னம் முதலியவைகளை விஷயமாக்கும் உபாசனைகளைச் சொல்லவேண்டு மென்பதாயும் இது ஆரம்பிக்கப்படுகின்றது.

भृगुर्वै वारुणिः ப்ருகுர்வை வாருணி:—பிரியமான புத்திரனுக்குப் பிதாசொன்னார் என்கிற கதையானது பிரம்ம வித்தையை ஸ்துதிக்கும் பொருட்டாம். வை சப்தம் பிரசித்தியை ஞாபகப் படுத்துகிறது. பிருகு என்கிற பெயர் பிரசித்தம் என்பதாய் நாம் ஞாபகப்படுத்துகிறோம்.

வி:—அதின் வழியாயும் பிரம்மத்தைக்கூறுவதற்காகவும், தபஸினால் கலக்கமற்ற அந்தக்கரணமானது பிரம்ம ஞானத்துக்குச் சாதகமாயிருக்கின்றதென்பதைச் சொல்லும் பொருட்டும் இந்த வல்லி ஆரம்பிக்கப்படுகின்றது.

(1-3) பதவுரை அத்வைதத்தில் போலவே.

து:—1 वारुणिः வாருணி:=வருணனுடைய புத்திரனை

1 भृगुः ப்ருகு:=பிருகுவானவன்

7 वरुणं வருணம்=வருணனாகிற

6 पितरं பிதரம்=பிதாவை

8 उपससार உபஸஸார=அடைந்தான். பிரம்மத்தை உபதேசியும் என்று கேட்டான்.

2 भगवः பகவ:=ஸ்வாமியே

3 ब्रह्म ப்ரஹ்ம=பிரம்மத்தை

4 अधीहि அதீஹி=சொல்லும்

5 इति இதி=என்பதாய்

அத்:-வாருணி: வாருணி:—வருணனுடைய புத்திரன்.

वरुणंउपससार வருணம் உபஸஸார=வருணன் என்கிற பிதாவை பிரம்மத்தை அறிய இச்சிக்கிறவனுய் அடைந்தான்.

(3) अधीहि ... அதீஹி...சுவாமின் பிரம்மத்தைச் சொல்லும் என்கிற மந்திரத்துடன் அடைந்தான்,

வி—வி:—இந்த வல்லியையும் ஒரே அனுவாகமாகப் பாவிக்கவேண்டியதற்குக் காரணத்தை முகவுரையின் 7 - வது பக்கத்தில் பார்த்துக் கொள்ளவும். இரண்டாவது அனுவாகத்தில் பிரம்ம வித்தை நிரூபிக்கப்பட்டது. மூன்றுவது அனுவாகத்தில் அதின் சாதனங்கள் நிரூபிக்கப்படுகின்றன. சாம்ஹித்திய உபநிஷத்தில் (சிக்ஷாவல்லியில்) பஹிரங்க சாதனங்களான கர்மங்களும் உபாசனைகளும் கூறப்பட்டிருந்தாலும், விசாரமாகிற அந்தரங்க சாதனம் கூறப்படவில்லை. ஆகையால் அது இவ்விடத்தில் சொல்லப்படுகின்றது. அது சொல்லப்பட்ட வளவில் அதற்கு அங்கங்களான மனனம் முதலியவைகளும் சொல்லப்பட்டவைகளாக ஆகின்றன.

இப்போது முதலில் வித்தையை ஸ்துதிக்கும் பொருட்டு ஒரு கதையைச் சொல்லுகிறார்:

भृगु: ப்ருகு:—பிருகு என்கிற கோத்திரப் பிரவர்த்தகரான ஒரு மஹர்ஷி இருந்தார்.

वै வை:—இந்த சப்தம் மந்திரத்திலும் பிராமணத்திலும் அவர் பிரசித்தம் என்பதை ஞாபகப்படுத்துகிறது.

(2)वरुणं...வாருணம்...:—அந்த பிருகுவானவர் பிதாவான வருணனைக் குருவாக அடைந்தார்.

(3) अधीहि...அதீஹி...இது குருவை அடையும் மந்திரம், பூஜ்ஜிய குருவே அதீஹி. மனதினால் விசேஷமாய் ஸ்மரித்து உபதேசியும்.

இப்படிப்பட்ட கதைகள் வித்தையின் ஸ்துதிக்காக ஏற்பட்டிருக்கின்றனவென்பதுபிரம்மசூத்திரம் 3-வது அத்தியாயம் 4-வது பாதத்தில் 4 வது அதிகரணம் 23-வது சூத்திரத்தில் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

## 2—உபதேசக்கிரமம்.

வி-வி:—பிரம்மத்தை அறிய த்வாரமான உபதேசத்தை சுருதி கூறுகிறது.

(4) तस्मा एतत्प्रोवाच । தஸ்மா ஏதத்ப்ரோவாச ।

(5) अन्नं प्राणं चक्षुः श्रोत्रं मनो वाचमिति ॥ 2 ॥ அந்நம் ப்ராணம் சக்ஷு: ச்ரோத்ரம் மநோ வாசமிதி ॥2॥

பதவுரை:—

(5) अन्नं அந்நம்=அன்னத்தையும்
प्राणं ப்ராணம்=பிராணனையும்
चक्षुः சக்ஷு:=கண்ணையும்
श्रोत्रं ச்ரோத்ரம்=காதையும்
मनः மந:=மனதையும்
वाचं வாசம்=வாக்கையும்
इति இதி=(சாதனங்கள்) என்பதாய்

(1) तस्मै தஸ்மை=அவருக்கு (பிருகுவுக்கு)
एतत् ஏதத்=இதை
प्रोवाच ப்ரோவாச-(பிதா) சொன்னார்.

ச-பா:—அந்த பிதாவானவர் சாஸ்திர விதிப்படி வந்து அடைந்திருக்கிற அந்த புத்திரனுக்கு அன்னம், பிராணன்,— முதலிய வசனத்தைச் சொன்னார். அன்னம் என்பது சரீரம் அதற்குள்ளிருக்கிற பிராணன் சாப்பிடுகிறவன். பிரம்மத்தை அறிய சாதகங்கள் சக்ஷுஸ், சுரோத்திரம், மனது, வாக்கு. இவைகளை பிரம்மத்தை அறிய துவாரங்களாக அவர் சொன்னார்.

---

வி:—(5) அன்னம் முதலியவைகளை பிரம்மமாக, சிஷ்யனுடைய மனதை சோதிக்கும் பொருட்டு உபதேசம் செய்தார்.

(4) மேற்சொன்ன அன்னம் முதலியவைகளெல்லாம் பிரம்மா-அல்லது அவைகளில் ஒன்றுதான் பிரம்மா; அப்படி ஒன்றானல் எது பிரம்மம் என்று சந்தேகித்த புத்திரனைப் பார்த்து.

एतत् ஏதத்=அடியில் வரும் விஷயத்தை
प्रोवाच ப்ரோவாச=சொன்னார்.

---

து:—तस्मै தஸ்மை=அவனுக்கு
(वरुणः வாருண:=வருணன்)
अन्नं அந்நம்=அன்னமயனையும்
प्राणं ப்ராணம்=பிராணமயனையும்
चक्षुः சக்ஷு:=சக்ஷுமயனையும்
श्रोत्रं ச்ரோத்ரம்=சுரோத்திரமயனையும்
मनः மந:=மனோமயனையும்
वाचं வாசம்=வாங்மயனையும், இவைகளுடன் விஞ்ஞானமயனையும் ஆநந்தமயனையும் சேர்த்துக்கொள்ள வேண்டியது.
इति, एतत् இதி ஏதத்=என்பதாய் இதை
प्रोवाच ப்ரோவாச=சொன்னன்.

வி—வி:—

(4) तस्मै கடுசெஷ :—மந்திர சகிதமாய் வந்து அடைந்திருக்கிற பிருகுவுக்கு

एतत् வச தகஜ=அன்னம் முதலிய அறிய சாதனங்களை
प्रोवाच வெ_ாவாவ=சொன்னார்.

(5) அன்னமய பிராணமய மனோமய கோசங்களுக்கு அன்னம், பிராணன், மனது உபாதான காரணங்கள். சக்ஷுஸ், சுரோத்திரம், வாக்கு இவைகளும் மனதுபோல் துவாரங்கள்.

इति ஐதி இந்தசப்தம் கூறப்படாத துவக்குமுதலிய ஞானேந்திரியங்களையும், பாணிபாதம் முதலிய கர்மேந்திரியங்களையும் கூறுகிறது. மரத்தின் நுனியில் சந்திரன் என்று சொல்லுமிடத்தில் சந்திரனைப்பார்க்கிற விஷயத்தில் சமீபத்திலிருக்கிற மரத்தின் கிளையானது அதை குறிப்பிடுவதினால் துவாரமா யிருப்பதுபோல் குஹையில் மறைந்திருக்கிற பிரம்மத்தை அறிவதில் அன்னாதிகள் துவாரங்கள் போலிருக்கின்றன. பிராணாதிகளின் கற்பனைக்கு அதிஷ்டானமா யிருப்பதால் பிராணாதி ரூபமாயிருக்கிற பிரம்மத்தை பிராணாதித் துவாரமாக அறிவது சுலபம். நான் என்பதாய் பாவிக்கப்படும் பிராணாதிகளில் பிரம்மம் தேடத்தக்கது என்பது அபிப்பிராயம்

3 - பிரம்ம லக்ஷணம்—விசாரம்.

வி—வி:—இனி பிரம்ம லக்ஷணம்: அதை அறியும் சாதகமான விசாரம், இவைகள் விஷயமாய் உபதேசத்தை சுருதி கூறுகிறது.

---

து:—இவ்விடத்திற் சொல்லிய சக்ஷுர்மயசுரோத்திரியமய்,வாங்மயங்களைக்கொண்டு பிரம்மவல்லியில் சொல்லிய அன்னமயாதி ஐந்துரூபங்களை உபலக்ஷணமாகவைத்துக்கொள்ளவேண்டியது. அதாவது இவைகளையும் அவ்விடத்தில் சொன்னதாகவே கிரகிக்க வேண்டியது.

சக்ஷுர்மயாதி சப்தங்களால் பூர்ணதர்சன சக்தி, பூர்ணசிரவண சக்தி, பூர்ணவசன சக்தி இவைகளை உடையவன் என்று அர்த்தம் செய்து கொள்ள வேண்டியது.

இன்னும்—பிராணன் வாக்கு-சக்ஷு—சுரோத்திரிய-மனது—விஞ்ஞான-ஆநந்த-இந்த வரிசையாக முன் அந்த வல்லியிற் சொல்லிய பிரகாரம் அர்த்தம் செய்து கொள்ளவேண்டியது.

(6) तꣳ होवाच । தꣳஹோவாச ।

(7) यतो वा इमानि भूतानि जायन्ते । யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே ।

(8) येन जातानि जीवन्ति । யேந ஜாதாநி ஜீவந்தி ।

(9) यत्प्रयन्त्यभिसंविशन्ति । யத்ப்ரயந்த்யபிஸம் விஶந்தி ।

(10) तद्विजिज्ञासस्व । தத்விஜிஜ்ஞாஸஸ்வ ।

(11) तद्ब्रह्मेति ॥ 3 ॥ தத் ப்ரஹ்மேதி ॥ 3 ॥

பதவுரை.—

(7) यतः वै யத: வை = பிரசித்தமான எதினின்றும்
इमानि இமாநி = இந்த
भूतानि பூதாநி = பிராணிகள்
जायन्ते ஜாயந்தே = உண்டாகிறார்களோ

(8) येन யேந = எதினால்
जातानि ஜாதாநி = உண்டானவைகள்
जीवन्ति ஜீவந்தி = ஜீவித்திருக்கிறார்களோ

(9) यत् யத் = எதை
प्रयन्ति ப்ரயந்தி = அடைகிறார்களோ
अभिसंविशन्ति அபிஸம்விஶந்தி = பிரவேசிக்கிறார்களோ
तत् தத் = அதை
विजिज्ञासस्व விஜிஜ்ஞாஸஸ்வ = அறி

(11) तत् தத் = அது
ब्रह्म ப்ரஹ்ம = பிரம்மம்
इति இதி = என்பதாய்
तं தம் = அவரை (அவருக்கு)
उवाच ह உவாச ஹ = (பிதா) சொன்னார்.

ச—பா—:—துவாரங்களாகிற அன்னம் முதலியவைகளைச் சொல்லி அந்த பிருகுவைப் பார்த்து பிரம்மத்தின் லக்ஷணத்தைக் கூறுகிறார். அது என்ன,?

(7) எதினின்றும் பிரம்மாதி ஸ்தம்ப பரியந்த முள்ள பிராணிகள் உண்டாகின்றனவோ

(8) உண்டானவைகள் எதனால் பிராணனைத் தரித்து, விர்த்தியடைகின்றனவோ

வி:—(8) जीवन्ति ஜீவந்தி = ஆத்மபூதத்தால் பிழைத்திருக்கின்றனவோ

அ:—तं होवाच தꣳஹோவாச:—எட்டு ரூபங்களில் பிரம்மம் இன்னது என்று சொல்லியிருந்தாலும், பிரம்மம் என்பதில் பிரம்மத்வம் (பிரம்மத்தன்மை) இருக்கிறது என்று இனிசொல்லுகிறார்.

அர்த் :-(9) நாசகாலத்தில் எதை அடைகிறார்களோ, பிரவேசிக்கிறார்களோ அதாவது எத்துடன் ஒன்றாய் விடுகிறார்களோ,

(7—9) உற்பத்தி ஸ்திதி பிரளய காலங்களில் எந்த வஸ்துவை பிராணிகள் விட்டுவிட வில்லையோ இது பிரம்ம லக்ஷணம்.

(10) இந்த பிரம்மத்தை விசேஷமாய் அறிய இச்சி. இப்படிப்பட்ட பிரம்மத்தை அன்னம் முதலியவைகள் மூலமாக அடை என்பது கருத்து. வேறு சுருதி (பிரஹதாரணியம் IV-4-18).

**प्राणस्य प्राणमुत चक्षुषश्चक्षुरुत श्रोत्रस्य श्रोत्रमन्नस्यान्नं मनसो येमनो विदुस्ते निचिक्युर्ब्रह्मपुराणमग्र्यम्**

ப்ராணஸ்ய ப்ராணமுத சக்ஷுஷஶ்சக்ஷுருத ஶ்ரோத்ரஸ்ய ஶ்ரோத்ரமந்நஸ்யாந்நம் மநஸோ யே மநோ விதுஸ்தே நிசிக்யுர் ப்ரஹ்ம புராணமக்ர்யம் ।

அதாவது—பிராணனுடைய பிராணனையும், கண்ணின் கண்ணையும், காதின் காதையும், அன்னத்தின் அன்னத்தையும், மனதின் மனதையும் எவர்கள் அறிகிறார்களோ அவர்கள் பிரம்மத்தைப்புராதனமென்றும் முதலாவது என்றும் அறிந்தவர்கள் என்பதாய்சொல்லுகிறது.

பிரம்மத்தை அறிவதில் இவைகள் துவாரங்கள் என்று காட்டுகிறார்.

---

வி:—(9) प्रयन्ति ப்ரயந்தி=மரணத்தை அடையப்போகிறவைகளாக இருந்து கொண்டு

यत् யத்=யாதொன்றில்

अभिसंविशन्ति அபிஸம்விஶந்தி=லயத்தை அடைகின்றனவோ (அல்லது)

यत् யத்=யாதொரு வஸ்துவை, பிரம்மத்தை

---

து:—यत्प्रयन्ति யத்ப்ரயந்தி=எதை பிரளயத்தில் அடைகின்றனவோ.

अभि அபி=சுவேச்சையால்

संविशन्ति ஸம்விஶந்தி=முக்தியில் பிரவேசிக்கின்றனவோ

तद्विजिज्ञासस्व தத்விஜிஜ்ஞாஸஸ்வ=அதின் விஷயமாய் சிரவண, மனன, நிதித்தியாசன ரூபவிகாரத்தைச் செய், ஏனெனின்;

तद्ब्रह्म தத் ப்ரஹ்ம=அது பிரம்மம்

इति இதி=இந்த சப்தத்தை முன் வந்திருக்கிற உவாச என்பதுடன் அன்வயித்துக் கொள்க. ஜகத்தின் ஜன்மாதிகளுக்குக்காரணம் என்பதே பிரம்மலக்ஷணம்

வி—விः—

(6) त उवाच தம் உவாச:—துவாரத்தைக் கேட்டு அதை அறிய மிகவும் ஆசக்தனுயிருக்கிற அந்த பிருகுவைப்பார்த்து, விசேஷ பிரீதியால் வருணன் தானுகவே பிருகுவின் கேள்வியன் றியில் சொல்லுகிறுர். ஹ—சப்தம் இஷ்டமான விஷயத்தைச் சொல்லப்போகிறுர் என்பதைக் காட்டுகிறது.

(7) इमानि இமானி:—ஆகாசாதி பஞ்ச மஹாபூதங்கள் இவைகளால் ஏற்பட்ட தேகங்களுடன் கூடின ஹிரணிய கர்ப்பர் முதல் ஸ்தம்பா பரியந்தமுள்ள சகல பிராணிகள் இவைகள்

यतोजायन्ते யதோஜாயந்தே=எந்த வஸ்துவினிடமிருந்து உண் டாகிறுர்களோ

वै வை=சப்தம் सइमा ल्लोकानसृजत ஸஇமாம்ல்லோகாநஸ்ருஜ த இதி=முதலிய வேறு சுருதிகளால் பிரசித்தியைக்காட்டுகிறது.

(8) உண்டானவைகள் எந்த வஸ்துவால் ஸ்திதியை அடைகி றுர்களோ

(9) நாசமடைந்த பிராணிகள் எந்த வஸ்துவை முழுமையுங் பிரவேசிக்கிறுர்களோ, நுரை அலை, குமிழ் இவை முதலிய வைக ளின் உற்பத்தி ஸ்திதிலயங்கள் எப்படி சமுத்திரத்தில் ஏற்படுகின் றனவோ, அப்படிப்போலும்.

(10) ஜகத்தின் உற்பத்தி ஸ்திதிலய காரணமான வஸ்துவை விசாரி.

(11) அந்த வஸ்துவே உன்னுல் கேட்கப்பட்ட பிரம்மம்,

इति இதி சப்தம் உத்தரம் முடிவானதைக் காட்டுகிறது.

விசாரம் செய்யவேண்டியது என்பது I-1-1லும், லக்ஷண த்தாலும் பிராமணத்தாலும் வஸ்து தத்துவத்தை நிர்ணயம் செய்வ தேவிசாரம் என்பது I-1-2லும் அந்த லக்ஷணம் I-1-3லும். வே தம் பிரம்மத்துக்குப் பிராமணம் என்பது I-1-4லும், வேதாந் தம் விதிபரம்அல்ல வென்பதும் I-1-1-4லும், புத்தியின் நைர்மல் லியம்III-4-15-50லும், மௌனம் III-4-14-47லும், சிரவணுதிகளி ன ஆவிர்த்தி IV-1-1லும் விசாரிக்கப்பட்டிருக்கின்றன. (அதிகரண மாலையில் சுருக்கத்தைப் பார்த்துக் கொள்ளலாம்.)

வி— प्रयन्ति ப்ரயந்தி=முக்தியில் அடைகின்றனவோ

यत् யத்=யாதொரு பிரம்மத்தை

अभिसंविशन्ति அபிஸம்விசந்தி=பிரளயகாலத்தில் அடைகின்றனவோ அதாவது பிரளயகாலத்தில் பிரம்மத்துடன் ஒன்றாய் சேர்ந்துவிடுகின்றனவோ.

யதோவா இமானி பூதானி ஜாயந்தே யேன ஜாதானி ஜீவந்தி யத் பிரயச்சந்தி அபிஸம்விசந்தி என்கிற வாக்கியங்கள்தோறும் அது பிரம்மம் என்று சொல்லாததால் ஜகத்தின் உற்பத்தி முதலியவைகளை குறித்துக் காரணமாயிருக்கும் தன்மையானது பிரம்மத்திற்கு (அவைகள்) தனித்தனியே லக்ஷணமல்ல. அப்படிச்சொன்னாலும்பிரம்மத்தை அறிய ஒரு லக்ஷணம் போதுமானது மற்றவை வியர்த்தமாய்விடும். ஆகையால் இவைகள் ஒரே லக்ஷணமாக இருக்க வேண்டும்.

அப்படி லக்ஷணம் ஒன்று என்று சொன்னால், இதனால் விலக்கக்கூடிய விஷயமில்லாததினால் இந்த லக்ஷணம் வியர்த்தமாய் விடுமே என்று ஆக்ஷேபித்தால், அது சரியன்று. ஏனெனின், இலக்ஷியமான பிரம்மத்தின் விபரீத தோற்றத்தை இது நிவிர்த்தி செய்வதால் இந்த லக்ஷணம் பிரயோசன முள்ளதே.

உற்பத்திக்குக் காரணம் என்கிற லக்ஷணத்தைமட்டும் சொன்னால், அந்த பிரம்மம் ஸ்திதிகாரணமான வஸ்துவை விடவும், லயகாரணமான வஸ்துவை விடவும் வேறாக இருக்கிறது என்கிற சங்கை வரும். உற்பத்திக்கு மட்டும் காரணமான பிரம்மத்துக்கு வியாபகத்தன்மை சித்திக்கமாட்டாது. அப்படியே லயகாரணத் தன்மையை சொல்லாவிடின் ஆத்தியந்திகலயமான மோக்ஷத்தைக் கொடுக்கிறவன் வேறாக இருக்கிறான் என்கிற சங்கை ஏற்படும். ஆகவே, மோக்ஷத்தைக் கொடுக்கும் தன்மைக்கும் அடையத் தகுந்த தன்மைக்கும் அனுகூலமான வியாபகத்தன்மை சித்திக்க

லிமாட்டாது. ஆனதால், ஜகத்தின் உற்பத்தி காரணத்தன்மை மட்டும் சகல வஸ்துக்களை விலக்க சமர்த்தமாக இருந்தாலும், உற்பத்தி முதலியவைகளுக்குக் காரணமாயிருக்கும் தன்மை வியாபிக்கும் தன்மைக்குக் காரணமாயிருப்பதால் ஸ்ருஷ்டி ஸ்திதி லயம் இவைகளின் சமுதாயத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மையே லக்ஷணமென்று தெரியப்படுத்தப்பட்டது.

யத: யேன யத் என்கிற பதங்களால் ஜகத்காரணமானது சொல்லப்பட்டது. தத் பிரம்ம என்கிற வாக்கியமானது அந்த ஜகத்காரணத்தை பிரம்மமென்று விதிக்கிறது. ஆனதால் ஜகத்காரணத்தன்மையானது பிரம்மத்துக்கு லக்ஷணம் என்று சித்தித்தது.

(10) விஜிஜ்ஞாஸஸ்வ விஜிஜ்ஞாஸஸ்வ என்கிற பதத்தால் விசாரமாவது உபாசனையாவது விதிக்கப்படவில்லை. ஏனெனின், விசாரமாகிற ஞானமானது அடையப்பட்டிருப்பதால் அது விதிக்கத்தக்கதல்ல. உபாசனையாகிற ஞானமோ ब्रह्म विदा प्नोति ப்ரஹ்ம விதாப்நோதி என்கிற பிரகரணத்தில் இருக்கிற வாக்கியத்தால் பிராப்தமாகவே இருக்கிறது. மேலும் ஆரம்பத்தில்

अधीहि भगवो ब्रह्म அதீஹி பகவோ ப்ரஹ்ம என்கிற கேள்வியானது தத்துவத்தைச் சொல்லுகிறதாகையால் பிரம்மத்துக்குச் சாதனத்தைச் சொல்லவில்லை. ஆகவே உபாசனையானது விதிக்கத் தகுந்ததல்ல. ஆனதால் விஜிஞ்ஞாஸஸ்வ என்று சொன்னதானது சாவதானமாயிருக்கும் பொருட்டும் சந்தேக நிவிர்த்தியின் பொருட்டும் ஏற்பட்டது. எது கந்தத்தோடு கூடியிருக்கிறதோ அது பிருதிவீ என்று அது என்பதாய்ச் சொல்லுவது போலும், தேவதத்தனுடைய வயலானது சாரஸ பக்ஷியுடன் கூடிக்கொண்டிருக்கிறது என்று சொல்லும்போது சாரஸ பக்ஷியுடன் கூடிக்கொண்டிருக்கும் தனிமையானது தேவதத்தனுடைய வயலுக்கு லக்ஷணமாகச் சொல்லப்பட்டது போலும், பிரம்மத்துக்கு ஜகத்காரணத்வமானது லக்ஷணமாக விதிக்கப்பட்டதென்று வியாசாரியர் சொல்லியிருக்கிறார்.

ஆக்ஷேப:—ஈசுவரனுக்கு லக்ஷணம் சொல்லும்போது ஈசுவரனிடத்திலிருக்கிற சர்வஞ்ஞத்தன்மைமுதலியவைகளைக்கூறும் சத்தியம் ஞானம் அநந்தம் என்கிற வாக்கியத்தைவிட்டு யதோவா இமானி என்கிற வாக்கியத்தால் கூறப்படும் ஜகத்தின் ஜன்மாதிகளுக்குக் காரணமாயிருக்கும் தன்மையை லக்ஷணமென்று சொல்லுவதில் பிரயோசனமென்ன ?

உத்தரம்:—சர்வஞ்ஞத் தன்மை முதலிய குணங்கள் லக்ஷணமென்று சொன்னால் ஸ்வரூபம் லக்ஷியமாக ஏற்படுகிறது அதைவிட வேறாக இருக்கிற விபூதியானது உபாஸியத்துக்குள் அடங்கினதாகக் காணப்படவில்லை. ஜகத்காரணத் தன்மை லக்ஷணமென்று சொன்னால் லக்ஷியமான ஸ்வரூபத்தில் சிருஷ்டி முதலானவைகளுக்குச் சாதனமான சர்வஞ்ஞத் தன்மை முதலிய குணங்களும் உபாஸியத்துக்குள் அடங்கினதாக ஏற்படுகிறது. ஆகவே, உபாதியும் உபாஸியத்துக்குள் அகப்பட்டதாக

உபாஸாத்ரைவித்தியாத் என்கிற (I-1-31) பிரம்ம சூத்திரத்தில் சொல்லியிருக்கிறது.

ஆக்ஷேபம்:—மேற் சொன்னபடியிருந்தாலும் எல்லா விபூதிகளும் (மஹிமை) ஜிஞ்ஞாஸியத்துக்குள் அகப்பட்டதாக சித்திக்கவில்லை. ஏனெனின், त्रिपाद் த்ரிபாத்=விபூதியானது அதாவது

पादोऽस्य विश्वा भूतानि त्रिपादस्यामृतं दिवि

பாதோஸ்ய விச்வா பூதாநி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி

அதாவது பிரம்மத்துக்குச் சகல பூதங்களும் ஒருபாதம் (அம்சம்) நித்தியமான மற்ற மூன்று அம்சங்களும் உத்தமலோகத்தி லிருக்கின்றன வென்கிற சுருதியிற் சொல்லிய விபூதியானது ஜகத்தின் ஜன்மாதி சம்பந்தமற்றது.

உத்தரம்:—

यत्प्रयन्त्यभिसंविशन्ति

யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி

என்கிற லவவாக்கியத்திலிருக்கிற யத் சப்தமானது முக்தர்களால் பிரம்மம் அடையத்தகுந்தது என்று கூறுகிறது. ஆகவே நித்திய விபூதியுடன் கூடினபிரம்மமே முக்தர்களால் அடையத்தகுந்தது. ஆனதால் நித்திய விபூதியும் ஜிஞ்ஞாஸ்யத்துக்குள் அகப்பட்டதாக சித்தித்தது.

இப்படிப்பட்ட சர்வ சக்தி ஸ்வரூப பிரம்மத்துக்கு ஜகஜ்ஜன் மாதி காரணத்வம் லக்ஷணம். ஜன்மாதிகள் ஜகத்திலிருந்த போதிலும் பிரம்மம் காரணமாக இருப்பதால் இவைகள் லக்ஷணமாகச் சொல்லப்பட்டன.

### 4. பிரம்மத்தின் தபஸ்.

(12) स तपोऽतप्यत । ஸ தபோऽதப்யத ।

(13) स तपस्तप्त्वा ॥ ४ ॥ ஸ தபஸ்தப்த்வா ॥ 4 ॥

इति प्रथमानुवाकः ।

இதி ப்ரதமோऽநுவாகः ।

பதவுரை:—

(12) सः ஸः=அவன் (பிருகு)

तपः தபः=தபஸை

अतप्यत அதப்யத=செய்தான்

(13) सः ஸः=அவன்

तपः தபः=தபஸை

तप्त्वा தப்த்வா=செய்து

---

வி:—ஜகத் காரணத்வ லக்ஷணமானது விசிஷ்டத்தி லிருக்கிறதென்றும் சத்திய ஞானத்வ லக்ஷணமானது விசேஷியத்திலிருக்கிறதென்றும் பேதம் ஏற்பட்டது. இப்படியே வியாசாசாரியரும் சொல்லியிருக்கிறார். இவ்விடத்தில் யத் என்கிற ஐந்தாம் விபக்தியானது ஹேதுவைக்கூறுகிறது. யத என்கிற சப்தமானது அனுவாதமாக இருக்கிறது. அனுவாதம் முந்தின வாக்கியத்தை அபேக்ஷிக்கிறபடியால் அதற்கு விருத்தமான அர்த்தத்தைக் கூறமாட்டாது.

एकमेवाद्वितीयं तदैक्षत बहुस्यां तत्तेजोऽसृजत

ஏகமேவாத்விதீயம் ததைக்ஷத பஹுஸ்யாம் தத்தேஜோऽஸ்ருஜத

என்கிற வாக்கியங்கள் பிரம்மத்திற்கு நிமித்தியமாயிருக்கும் தன்மையையும் உபாதானமாயிருக்கும் தன்மையையும் கூறுகின்றன. அவைகளை அனுசரித்து பின் கூறப்படும் லக்ஷணவாக்கியத்திலுள்ள யதः என்கிற பதமும் இரண்டையும் கூறுகிறதென்று வியாசாரியர் சொல்லியிருக்கிறார்.

யதः என்கிற ஐந்தாம் வேற்றுமையானது ஹேதுவைக்கூறுகிறதென்று வியாகரணத்தில் சொல்லவில்லையே யெனின், विभाषागुणेऽस्त्रियां விபாஷாகுணேऽஸ்த்ரியாம் என்கிற இடத்தில் ஐந்தாம் விபக்திக்கு ஹேது அர்த்தம் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

1-வது அனுவாகம்
முற்றிற்று.

சு—பா:—அந்த பிருகுவானவன் பிரம்மத்தை அறிய த்வாரங்களையும்பிரம்ம லக்ஷணத்தையும்பிதாவிடமிருந்து கேட்டு பிரம்மத்தை அறிய சாதனமான தபஸைச் செய்தான். தபஸை உபதேசிக்காமலிருக்கும்போது அதைச் சாதனமாக பிருகு எப்படி அறிந்தான்? உபதேசம் பூர்த்தியாக இராததால் அறிந்தான். यतो वा इमानि भूतानि யதோ வா இமாநி பூதாநி என்பதை அன்னாதி பிரம்மத்தை அறிவதில் சாதகமாயும் லக்ஷணமாயும் பிதா சொன்னார். சாக்ஷாத் பிரம்மம் சொல்லப்படாததினால் இந்த உபதேசம் பூர்ணமாக வில்லை. இல்லாவிடின் பிரம்மம் இப்படிப்பட்டதென்பதாய் அதின் ஸ்வரூபத்தை அறிய இச்சிக்கும் புத்திரனுக்கு உபதேசித்திருக்க வேண்டியது. இப்படி உபதேசிக்க வில்லை. பின்னை என்னசெய்தார்? உபதேசத்தை பூர்த்தியாக இராமலே செய்தார். ஆகையால் பிரம்மத்தை அறியவேண்டியதற்கு வேறு சாதனத்தையும் பிதா அபேக்ஷிக்கிறார் என்பதாய் தெரியவருகிறது. தபஸ் சர்வ சாதனங்களிலும் மிகவும் சிரேஷ்டமாயிருப்பதால் தபஸை கிரகிக்கப்பட்டது. பாஹ்ய விஷயங்களையுடைய சாதகங்களுக்குள் தபஸ் சிரேஷ்டம் என்பது ஜகத் பிரசித்தம். ஆகையால் பிதாவால் உபதேசிக்கப்படாவிட்டாலும் பிருகு தபஸை பிரம்மத்தை அறிய சாதனமாகக்கிரகித்தான். இந்த தபஸ் பாஹ்ய இந்திரியங்களுடையவும் அந்தரிந்திரியங்களுடையவும் சமாதானமாம். ஏனெனின், அது பிரம்மத்தை அடைய த்வாரமாயிருக்கிறது மனதையும் இந்திரியங்களையும் ஏகாக்கிரப்படுத்தலே பரம தபஸ்.

तज्ज्यायः सर्वधर्मेभ्यः सधर्मःपरःउच्यते ।

தஜ்ஜ்யாய: ஸர்வதர்மேப்ய: ஸதர்ம:பர:உச்யதே

அதாவது, அது சகல தர்மங்களிலும் சிரேஷ்டமானது என்கிற ஸ்மிருதி (யதிதர்மம்) சொல்லுகிறது.

---

து:—सतप: ஸ தப:=அ—கை:—பிறகு என்ன நடந்தது எனின் சொல்லுகிறார்.

स: ஸ: =அந்த பிருகுவானவன், பிதாவால் உபதேசிக்கப்பட்ட பிறகு பகவானுடைய எட்டு ரூபங்களின் ஞானம் ஒரே காலத்தில் உண்டாவது அசக்கியம் என்பதாய் மனதில் நினைத்து, அவைகளில் அன்னம் என்கிற ரூபத்தின் ஞானத்தை அடையும் பொருட்டு

तप: தப:=மனன நிதித்யாஸன ரூப விசாரத்தை

अतप्यत அதப்யத=செய்தான்

அத் :—(13) அவன் தபஸைச் செய்து

வி—வி:—

(12) பிரம்மத்தை அறிவதில் விசாரம் சாதனம் என்று கேட்ட பிருகுவின் முதலாவது நிச்சயத்தை சுருதி காட்டுகிறது.

तप: தப: சப்தத்தால் நான்கு ஆசிரமங்களின் தர்மங்களையும் அறியவேண்டியது. ஏனெனின், அவைகள் பிரம்ம ஞானத்துக்கு ஹேதுக்கள். ஒரு ஆசிரமத்திலும் சேராத ஜபாதிகளும் ஹேதுவாயிருந்தாலும், ஆசிரமிகளின் தர்மங்கள் நிரம்பவும் விசேஷங்கள். வியாசர் III-4-39-வது சூத்திரத்தில் அப்படியே சொல்லியிருக்கிறார். சுருதி ஸ்மிருதிகளிலும் அப்படியே சொல்லப்பட்டிருக்கிறது.

(1) तपोहिस्वाध्यायः।

(1) தபோஹி ஸ்வாத்யாய꞉ ।

(அத்தியயனம் செய்தல் தபஸ்) என்பது பிரம்மசரிய தர்மம்.

(2) एतत्खलुवावतप इत्याहुर्यः स्वंददाति ।

(2) ஏதத்கல்வாவதப இத்யாஹுர்ய꞉ ஸ்வம்ததாதி ।

(அதாவது எவன் சொத்தைக் கொடுக்கிறானோ அவன் தபஸைச் செய்கிறான்) என்பது கிரஹஸ்த தர்மம்.

(3) तपोनानशनात्परम् ।

(3) தபோ நாநஶநாத்பரம் ।

(உபவாசத்தைவிட தபஸ் சிரேஷ்டம்) என்பது வானபிரஸ்த தர்மம்

(4) मनसश्च ।

(4) மநஸஶ்ச

என்று முன் கூறப்பட்டது யதிதர்மம்.

இவைகளுக்குள் அத்தியயனம் பிரம்மத்தை அறிவதின் பிரமாணம். தானம் அறியவேண்டுமென்கிற இச்சையை உண்டுபண்ணுகிறது. உபவாஸம் இந்திரியங்களின் பிராபல்லியத்தை அடக்குமென்பது பிரசித்தம். ஐக்காக்கிரியம் சாக்ஷாத்தான ஞான சாதகம். ஆகையால் அந்த பிருகுவானவர் அத்தியயனம், ஐக்காக்கிரியம் என்கிற தபஸைச் செய்தார்.

---

து:—स:तप:तप्त्वा ஸ꞉ தப꞉ தப்த்வா=அவர் விசாரம் செய்து

## 2-வது அனுவாகம்.

(1) अन्नं ब्रह्मेति व्यजानात् । அன்நம் ப்ரஹ்மேதி வ்யஜாநாத் ।

(2) अन्नाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते । அந்நாத்த்யேவ கல்விமாநி பூதாநி ஜாயந்தே ।

(3) अन्नेन जातानि जीवन्ति । அந்நேந ஜாதாநி ஜீவந்தி ।

(4) अन्नं प्रयन्त्यभिसंविशन्तीति ॥ 1 ॥ அந்நம் ப்ரயந்த்யபிஸம்விசந்தீதி ॥ 1 ॥

பதவுரை:...

अन्नं அந்நம்=அன்னம்
ब्रह्मेति ப்ரஹ்மேதி=பிரம்மம் என்று
व्यजानात् வ்யஜாநாத்=அறிந்தான்.

மற்ற பதங்களுக்கு முன்போலவே அர்த்தம் செய்துகொள்ளவும்.

ச—பா:—அன்னத்தை பிரம்மம் என்று அவன் அறிந்தான். ஏனெனின், அது முன் சொன்ன லக்ஷணத்துடன் கூடியிருக்கிறது. எப்படி? அன்னத்தினின்றுமே இந்த பிராணிகள் உண்டாகிறார்கள். உண்டானவர்கள் அன்னத்தால் ஜீவிக்கிறார்கள். அன்னத்தை அடைந்து, அன்னத்துடன் ஒன்றாய் விடுகிறார்கள். ஆகையால் அன்னம் பிரம்மம் என்று சொன்னது யுக்தம்தான் என்பது கருத்து.

வி—வி:—இந்த ஐகாக்கிரியத்துடன் கூடி விசாரம் செய்து அன்னத்தை ஜகத்தின் உற்பத்தி லயங்களுக்குக் காரணமாயிருப்பதால் பிரம்மம் என்று நிச்சயம் செய்தான்.

भूत பூத சப்தத்தால் ஸ்தூல தேகங்களை அறிய வேண்டியது.

हि ஹி அவைகள் அன்னத்தினின்றும் உண்டாகின்றனவென்பது உலகப் பிரசித்தமென்பதை இந்த சப்தம் காட்டுகிறது.

---

## 2 வது அனுவாகம்.

வி:—(1) அன்னமானது சர்வபூதங்களின் உற்பத்தி முதலியவைகளுக்குக் காரணமாக இருப்பதால் அன்னத்தை பிரம்மமென்று முதலில் தெரிந்துகொண்டார் என்று அர்த்தம்.

---

## 2-வது அனுவாகம்.

து:—अन्नं அந்நம்=அன்னமயனை அநிருத்தனை
ब्रह्म इति ப்ரஹ்ம இதி=பிரம்மம் என்பதாய்
व्यजानात् வ்யஜாநாத்=அறிந்தார், சக்ஷாத்தாய் பார்த்தார்.

அத்:—एत्र ஏத்ர=கர்ப்ப பையிலிருக்கிற அன்னரஸ ஸ்வரூபமான சுக்கில சுரோணிதத்தைவிட வேறு காரணமில்லை என்பதை இந்த சப்தம் கூறுகிறது.

खलु ஸ்லு—अन्नपुरुष: அன்னபுருஷ:= (அன்னத்தினின்றாம் புருஷன்) முதலிய சுருதி பிரஸித்தியை இந்த சப்தம் கூறுகிறது.

ஆகாசாதி பூதங்களால் அன்னம் ஏற்பட்டாலும், தேகாகாரமாகப் பரிணமித்த அவைகளின் உற்பத்தியானது அன்னாதீனமாயிருப்பதால் அன்னம் ஜகத்துக்கு ஹேதுவாயிருக்கிற தென்பது அபிப்பிராயம்.

## 2-வது நிச்சயம்.

(5) तद्विज्ञाय । தத்³விஜ்ஞாய ।

(6) पुनरेव वरुणं पितरमुपससार । புநரேவ வருணம் பிதரமுபஸஸார ।

(7) अधीहि भगवो ब्रह्मेति । அதீ⁴ஹி ப⁴க³வோ ப்³ரஹ்மேதி ।

(8) त ँहोवाच । தம்ஹோவாச ।

(9) तपसाब्रह्मविजिज्ञासस्व । தபஸா ப்³ரஹ்ம விஜிஜ்ஞாஸஸ்வ ।

(10) तपो ब्रह्मेति । தபோ ப்³ரஹ்மேதி ।

(11) स तपोऽतप्यत । ஸ தபோ(அ)தப்யத ।

(12) स तपस्तप्त्वा ॥ 2 ॥ ஸ தபஸ்தப்த்வா ॥ 2 ॥

## इतिद्वितीयोनुवाकः

இதி த்³விதீயோநுவாக꞉ ।

பதவுரை.—முன்போலவே யிருப்பதால் மறுபடியும் எழுதப் படவில்லை.

---

வி:—(5) तत् தத்=அந்த அன்னத்தை

विज्ञाय விஜ்ஞாய=பிரம்மம் என்று அறிந்த பிறகு அன்னத்துக்கு உற்பத்தி முதலியவைகளிருப்பதால் இது எப்படி பிரம்மமாக இருக்கக்கூடும் என்கிற சந்தேகத்துடன்

(6) மறுபடியும் பிதாவான வருணனை அடைந்தார்.

---

து:—अन्नात् அன்னாத்=அ—கை:—எப்படி பிரத்தியக்ஷமாய்ப் பார்த்தார் எனின், குருவானவர் உபதேசித்தபடி பிரம்மம் ஜகத்தின் ஜன்மாதிகளுக்குக் காரணமாயிருக்கிறது. இதுவே அதின் லக்ஷணம். இப்படி பார்த்தார்.

अन्नात् அன்னாத்=அன்னமயனிடமிருந்து

